ஓம் தத் சத்.

பரப் பிரஹ்மணே நம:

# சர்வ சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி.

(நூற்றைம்பது புகழ்ப் பா சுவைப் பூங் கொத்து.)

அகம் பிரஹ்மாஸ்மி.

அயம் ஆத்மா பிரஹ்மம்.



ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம.

தத் த்வ மஸி.

இயற்றியவர்:

திருப்பூவணம், வேதாந்த மடம்,

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

விலை ரூ. 1-50.

## அச் சாக வேண்டியன.

1. யுக் திப் காசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. பேத தி. ரம் சத் கிரியை உரை வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
3. பிரபோத சுதாகரம் பத உரை (வேதாந்தம்) ,, ,,
4. விவேக சூடாமணி பத உரை (வேதாந்தம்) ,, ,,
5. சித்தாந்த லேச சார சங்கிரகம். வசநம் (56 மத விசாரம்) சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
6. தர்க்க சங்கிரகம். தீபிகை உரை (தர்க்கம்) ,, ,,
7. சப்த பதார்த்தீ வசநம் (தர்க்கம்) ,, ,,
8. காளுத சித்தாந்த சந்திரிகை வசநம் (தர்க்கம்) ,, ,,
9. சங்கர விஜய விலாசம் வசநம ,, ,,
10. நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும், சக்தி விவேசநமும் வசநம்.
11. கணேச கவசம் பத உரை சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 12. கணேச கவசம் தமிழ் கவி உரை.
13. சசி வர்ண போதம் பதார்த்த பாஸ்கரன் உரை. 14. வேதாந்த சூடாமணி சந்தோஷ தாயாதி உரை.
15. கைவல்ய நவநீதம், கோவிலூர் அருணைசல ஞாந தேசிகர் பத. சார உரை.
16. வீர சேகர ஞாந தேசிகர் சரிதம். கவி 1500. 17. சமாதி விதி வசநம்.
18. சிவ சங்காராவதாரம். கைலாசம் உரை, வசநம். 19. சந்யாச விதி வசநம்.
20. ஸ்திரீ புருஷ ஜநந மரண ரஹஸ்யம் வசநம். 21. மாகாத்ம சரிதாமிருதம் வசநம்.
22. சுவாநுபவத் திருவாக்கு கவி. பாக்கட் சைஸ். 23. பட்டிநத்தார் பாடல் உரை.
24. மகாத்ம சரித்ராமிருத சாரம். கவி 270. 25. தாயும், தநயனும், வசநம் வேதாந்தம்.
26. உண்மைக் கடவுள் வசநம். 27. இரண்டு விநாயக ஸ்தோத்திரம் கவி 20 உரையுடன்.
28. நியாய சங்கிரகம் வசநம் (400) நியாயம் மொழி பெயர்ப்பு. 29. ஈசுவர கீதை கவி உரை.
30. பக்தி சதக உதாரணக் கவி உரை. 31. வைராக்ய தீப உதாரணக் கவி உரை.
32. கைவல்ய நவநீத உதாரணக் கவி

உ சிவ மயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

திருப்பூவணம், வேதாந்த மட ஸ்தாபகர்
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்
அவர்கள் இயற்றிய,

# சார்த்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி.

## (பஞ்ச தச ஸ்தோத்ர ரச மஞ்சரி.)

அகம் பிரஹ்மாஸ்மி.

அயம் ஆத்மா பிரஹ்மம்.



பிரஜ்ஞாநம் பிரஹ்மம்.

தத் த்வமசி.

இருந்த, சிதம்பரம். கோ. சித. மடம்,
ஸ்ரீ நீலகண்ட சுவாமிகளவர்கள் மாணாக்கரும்,
குடியாத்தம், வேதாந்தத் தமிழ் வாசக சாலைப்
போதகாச்சாரியரும் ஆகிய,

ஸ்ரீ ஷண்முகாநந்த சுவாமிகள் அவர்கள்
இயற்றிய

**பரிமள தீப பத உரை - விசேட உரை.**

இவை இரண்டும்,

மதுரை, V. சுப்பராயலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றன.

 1959 [விலை ரூ. 1-50

# பதினைந்து தோத்திரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | தேவ கோட்டை - தண்டாயுத பாணி | கவி | 10 |
| 2. | பழநி - தண்டாயுத பாணி | ,, | 11 |
| 3. | மதுரை - தண்டாயுத பாணி | ,, | 10 |
| 4. | குன்றக் குடி - குமர வேள் | ,, | 10 |
| 5. | திருச் செந்தூர் - குமர வேள் | ,, | 10 |
| 6. | திருப் பூ வண நாதர் | ,, | 10 |
| 7. | மதுரை - சொக்க லிங்கேசர் | ,, | 10 |
| 8. | தில்லை - நட ராஜர் | ,, | 10 |
| 9. | கோவில் ஊர் - கொற்ற வாள் ஈசர் | ,, | 10 |
| 10. | திருப் பூ வணம் - சௌந்தரிய நாயகி | ,, | 10 |
| 11. | மதுரை - மீநாக்ஷி அம்பிகை | ,, | 10 |
| 12. | திரு அண்ணா மலை - உண்ணா முலை அம்மை | | 10 |
| 13. | சிக்கல் - உகந்த லிங்க ஞாந தேசிகர் | | 10 |
| 14. | கோவில் ஊர் - முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் | | 10 |
| 15. | திருக் களர் - வீர சேகர ஞாந தேசிகர் | | 10 |

தண்ட பாணி, சிவன், தேவி, ஆசாரியர் என்னும் நால் வகையாகத் தோத்திரம் 15க்குக் கவி 155.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

சிவமயம்.

# பரிமள தீப உரை பாயிரம்.

## ஷண்முகாநந்த சுவாமிகள் இயற்றியது.

திருவளர் மார்பத் துருவளர் கோவும்
குருவளர் தாமரை குலவுநல் தேவும்
இந்திரன் முதலாய் இமையவர் குழுவும்
நண்ணுதற் கரிசெங் கண்ணுதல் கடவுள்
திருஅருள் அதனால் குருவருள் நெறியே 5

கருவரு நெறியைக் கடந்தோன் முற்றத்
துறந்தோன் வேதத் தூநெறி கண்டோன்
தீம்தமிழ்க் கலையைத் தெளிவுற ஆய்ந்தோன்
பூவண மதனில் பொலிந்தினி துறைவோன்
ஞானா சாரிய நற்றவக் குரிசில் 10

காசிகா நந்தக் கனிதரும் உளத்தோன்
மொழிபெயர்த் தனவும் உஞற்றிய நூலும்
எண்ணிறந் தனவே இறைஅருள் பெற்றே
பத்திகொண் டருளிய பாமிகும் அவையில்
கோவிலூர் மேவிய கொற்றவாள் ஈசனும் 15

பூவண நாதரும் பொருவில்நா யகியும்
ஆலவாய் அமரும் அங்கயல் கண்ணியும்
மூலமாம் சோம சுந்தரத் தண்ணலும்
தில்லையில் ஆடிய திங்கள்ஆர் சடையனும்
திகந்த ஆசையை உகந்தலிங் கேசனும் 20

முத்திரா மேச முழுமுதற் பொருளும்
வீரசே கரனும் விடண் மறைப் பொருளும்
செந்தூர் அதனில் திகழ்முரு கேசனும்
அண்ணா மலையில் உண்ணா முலையும்
குன்றக் குடிஅருட் கொற்றவே லியவனும் 25

கூடல் தேவை குலவுநல் பழநி
மாடக் கோயில் வளர்தண் டாயுதர்
ஆகிய பதினேர் தருளிறை யவர்க்குச்

சாத்திரப் பொருளால் சார்ந்தால் பதிகத்
தோத்திர ரசமஞ் சரியெனும் தொடையல் 30

பாரினில் பண்புறு பரிமள தீப
உரையால் கமழ உகந்தவப் பெரியோன்
எளியனை இப்பணி இயற்றுக எனவே
கருவில் கண்ணிலி கையிலி ஒருவன்
முந்நீர் கடந்திட முற்படும் முறைபோல் 35

இயல்செயல் ஆகிய ஈரறி வின்றிய
ஏழையன் இவ்வுரை எழிற்குரு அருளால்
மழலையில் விருப்புடை மதியமர் பெற்றோர்
குழவியின் குதலையில் கூர்பொருள் நோக்கார்
உரைத்திடும் உரையால் உகந்திடல் ஒத்தே 40

முதுநூல் அறிந்த முத்தமிழ்ப் புலவோர்
உளமகிழ் வாரென உரைத்தனன் மன்னோ 42

"ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையுமெம் மாதியே."

திரு. நீ. ஷண்முகானந்தன், மதுரை.

செந் தூர், குன்றக் குடி, கூடல், தேவை, பழநி ஆகமை.

உ

சிவமயம்.

## ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசாரிய சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்.

### கோவில் ஊர் மடம், மகா-சோமசுந்தர ஐயா அவர்கள் இயற்றியது.

நிலை மண்டில ஆசிரியப் பா.

சீரார் திங்கள் தேங்கமழ் கடுக்கை
யோரார் கங்கை யெழில்பெறப் புனைந்த
வண்ணமார் நீண்முடிக் A. கண்ணுதற் பெருமான்
றண்ணிலா நிறைந்த சங்கப் பலகையிற்
சந்தனப் பொதியத் தந்தணன் முதலாய்ச்

செந்தமிழ்ப் புலவர் சேரவீற் றிருந்து
கண்டெனை வினிகுருந் தண்டமி ழாய்ந்த
தெண்டிரை வைகைத் திருவால வாய்முதற்
சிற்பரன் றிகழும் பொற்புமிக் குயர்ந்து
பற்பல தலஞ்சூழ் பாண்டிநன் னாட்டிற் 10

றேட்டுக் கடங்காச் செல்வ மிகுந்து
நாட்டுக் கோட்டை நல்லை யெயர்நகர்
தொண்ணூற் றாறெனு மெண்ணிடைக் B. கிடந்து
விண்ணூர்க் கொக்கு மேன்மை சிறந்து
காவிரி நிகர்நதி மீவிரி பொங்கர் 15

பூவிரி நந்தனம் யாவு நிறைந்து
நாமகள் கல்வியும் பூமகள் பொருளுங்
கோமக ளம்பிகை கொடுக்கு ஞானமும்
பாற்கடல் போலப் பரவி விளங்கி
நாற்கடல் வையத்து நானில மென்னுங் 20

கோடார் குறிஞ்சி நாடார் மருதங்
காடார் முல்லை சேடார் நெய்தலுண்
முல்லையு மருதமு மொய்த்த வளஞ்சேர்த்
தெல்லையி லாதழ கெய்திப் புவியோர்.
இந்திர புரியோ $. ஏக பிங்கல 25

மந்திரி புரமோ வழுத்துதற் கரிதென
மாட்சிமை யோங்கி வானவர் விழைதரு
காட்சியு நிறைந்த காமர் பழம்பதி

N. B:— எண்கள் அடிகளைக் குறிப்பன வாகும்.

எச்ச முடிபுகள்:— A. 3. கண்ணுதற் பெருமான் 4. சங்கப் பலகையில் 6. வீற்றிருந்து 7. தமி ழாய்ந்த 8. திரு வாலவாய் முதல் 10. பற் பல தலஞ் சூழ் பாண்டி நன் னாட்டில் என்க.

B. 13. கிடந்து 14. சிறந்து 16. நிறைந்து 19. விளங்கி 23. சேர்ந்து 24. எய்தி 27. ஓங்கி 28. நிறைந்த காமர் பழம் பதி (ஆகிய) 30. தேவி கோட்டையில் என்க.

---

$. ஏக பிங்கல மந்திரி — குபேரன்; இரு பெயரொட்டுப் பண்புத் தொகை.

தூவி யன்னம்வாழ் வாவி வாய்மரை
காவி பூத்திடுங் தேவி கோட்டையிற் 30

றாவிலவ் வணிகர் தங்குலம் வணங்குஞ்
சேவிடைப் பொலிவோன் செதிம மொண்பதுஞ்
மாற்றூர்க் கோவில் மணலூர் வகுப்பினற்
பேற்றினைப் பெற்ற பெரியண்ணை யையார்
பண்டு புரிதவப் பயனிது வென்னாக் 35

§ கொண்டு வளர்த்த குமார சீலன்
மன்னும் இராம சாமி வள்ளலும்
அன்னார் மனையுமை யம்பிகை யம்மையும்
கற்பக தருவுங் காமர் வல்லியும்
பொற்புற விணைந்து போலொருமித்து 40

வள்ளுவர் குறளில் வகுத்த நெறியேய
யெள்ளள வுங்குறை வில்லா தொழுகிச்
சொல்லருந் துறவோர் நல்லருள் பெற்றே
யில்லற நடாத்தி யினிதுற வாழ்நாள்
தக்கார் தகவில ரென்ப தவரவ 45

ரெச்ச மதனா விசைத்திடற் கேற்பச்
சலஞ்சல மீன்ற தாளங்க ளென்ன
நலஞ்செறி புதல்வர் நால்வரோ டொரு
பெண்மக வீன்று பெருமகிழ் வாகி
விண்மக வான்சசி போலவீ றுற்றார் 50

சைவ பூதி சாதகம் வேட்குமவ்
வைவர் பேரு மறைகுதுங் கேண்மின்
பண்பார் ‡ பெரியணன் பழனி யப்பன்
நண்பார் காசி நல்ல சிதம்பரம்
சரதந் தகைமாண் சார்ந்து நற்பதி 55

---

§. கொண்டு வளர்த்த குமாரன் = சுவீகார புத்திரன்.

c. 40. ஒருமித்து 42. ஒழுகி 43. பெற்று 44. நடாத்தி யினி துற வாழ் நாள் எனக.

‡ சுவாமிகளது தமையனார். முன்னே 34 வது அடியில் வந்துள்ள பெரியண்ணன் என்பார் பிதா மகன் ஆவர்.

விரத மமைந்த விசாலாட்சி யாகும்
இன்னவர் தம்முள் விசாலாட்சி யென்னும்
பொன்மணம் புரிந்து புனிதவாழ் வேற்க
ஆண்டகை நால்வரு மன்றுதொட் டென்றுங்
காண்டகு பிரம சாரங் கடைப்பிடித் 60

திருந்துவந் தனரே யிவருளு மூன்றும்
அருந்தவப் புதல்வர் பெருந்துற வினராய்க்
குருவரு ளாலுங் குளிர்பிறை யணிசிவன்
திருவரு ளாலுஞ் சிறந்துவாழ் கின்றார்
இம்மகான் பெருமைகள் யாமறி யளவிற் 65

செம்மையாய் மொழிந்திச் செய்யுளை முடிக்குதும்
நற்கலி யாண்டுநா லாயிரத் தின்மேற்
சொற்கொள் நிகழுந் தொளாயிரத் தெண்பத்
தேழ்விய வருட மாவிசித் திரையி
னேழ்மிசை யோரிரண் டெய்து தேதியின் 70

மங்கள வாரம் வந்த திரிதியை
தங்குவி சாகந் தநுர்லக்கி னஞ்சேர்
சிறந்த சுபதினந் திசைகட லுலகிற்
பிறந்து வளர்ந்த பெருந்தகை யாளன்
ஐந்திரு வயதினு ளருந்தமிழ் மொழியைச் 75

சிந்தை யுள்ளுறத் திறமுறப் பயின்றோன்
நுண்மதி யாளன் நோக்கற் கெளியன்
றண்மதி போன்ற சாந்த வடிவன்
வாக்கு வல்லவன் வன்காத் திரத்தான்
ஆக்க நிறைந்தோன் ஆனந் தாகரன் 80

மக்களை வணக்கும் வசிய ரேகை
தக்கநற் குருவாந் தன்மை ரேகை
சமய கண்டன ரேகை சதுர்மறைச்
சமய தாபக ரேகை சாற்றருந்
துறவு ரேகை சொற்கலை ரேகை 85

பிறவுஞ் சார்ந்த பீடுறுங் கரத்தான்
முனிவரு மன்னரு மூன்றுவ வொன்றல்
நனிமுடி வுறுமெனு நமதுமுன் னோர்சொற்

D. கொண்டுமிக் கரும்பொருள் கொணரும் வண்ணம்
பண்டுதொட் டுறுதம் பழங்குடி வழக்காய் 90
இந்நாட் பர்மா வென்னுங் கடார
நன்னாட் டெய்தி நன்கு வைகுநாள்
P. ஐரா வதிசூ ழாங்குறு பெருவளம்
O. ஐரா ணியைநிக ரன்னைய ராடவர்
நடையுடை பாவனை நற்செயல் தெரிந்தும் 95
எடையுடை வெள்ளிபொன் னினமிகு நவமணி
† நாட்டுத் திரவியம் நகர்படு திரவியங்
காட்டுத் திரவியங் கடல்படு திரவியம்
மலைபடு திரவிய வாணிபத் துறையும்
நிலைபெற வெல்லா நேர்மையா யுணர்ந்தே 100
யெழின்மிகும் பர்மா இந்துஸ் தானி
மொழிகளுங் கற்ற மூதறி வாளன்
ஒன்பதாண் டிருந்துபத் தொன்பதாம் வயதின்
மின்புரை யுலக வாழ்வினில் வெறுப்பும்
பரசிவ பக்தியும் பாங்கா E யுதிப்பத் 105
தரயிக மீண்டுந் தாய்நா டணுகி
யிருபதாம் வயதில் "எனையாள வல்ல
குருபிரா னெவரெங் குளர்" எனக் குறித்துச்
சங்க நிதியுந் தாமரை நிதியும்
மங்க ளங்கொள் சிந்தா மணியுங் 110
காம தேனுவுங் கமழ்தரு வைந்தும்
பூமி வந்து பொலிந்தவை F. போல
எண்கொளா வளமு மெழிலும் பொருந்திக்
கண்கொளாக் காட்சிசேர் காரைக் குடியின்

---

D. 89, கொண்டு 92, எய்தி 95, தெரிந்தும் 100 உணர்ந்தே 102, கற்ற மூதறிவாளன் என்க.

P. ஐராவதி = இரங்கூன் பிரதேசத்தில் ஓடிக்கொண்டிருக்கும் நதி.

O. ஐராணி = இந்திராணி.

† நாட்டுத் திரவியம் முதல் ஐந்திலும் ஒவ்வொன்றிலும் ஐந்து உள்ளன. சூடாமணி நிகண்டு முதலியவைகளிற் காண்க.

E. 105, உதிப்ப 106, அணுகி 108. குறித்து

F. 112. போல 113. பொருந்தி 114. சேர் காரைக் குடி என்க.

மேற்றிசை வயலும் விரிமலர்ப் பொழிலும் 115
காற்றிசை G. சூழ்ந்து நறுந்தேன் ஆறும்
மடுவா கியகுளிர் மதுபுட் கரணியும்
நடுவா யமைந்து நானில முழுவதும்
பெற்ற தாயாம் நெல்லையம் பிகையுங்
கொற்ற வாண்மறைக் கொழுந்துங் குடிகொண் 120
டருண்மழை பொழிந்தே யருள்விரும் படியரை
யருள்மய மாக்குய ரருணக ராகிப்
பூவுளா ரெவரும புகழ்பதி யாய
கோவிலூர் தனில்வாழ் குருமூர்த் திகளாம்
ஆதி யாண்டவ ஞூமுத்தி ராம 125
சோதி லிங்க சொரூபனுந் துறவிறை
அருணா சலஞா னாசிரி யனுந் திருக்
கருணா நிதியாஞ் சிதம்பர குரவனுஞ்
சிகரங் கொண் டொளிர் திருமடஞ் சேர்ந்தே
யகரா யங்கா ளாந்தாங் குருவாய் 130
வீற்றிருந் தருளு மேதகு ஞானியாஞ்
சாற்றரும் புகழ்சேர் தவராச மூர்த்தி
தீர விராக சிரோமணி யாய
வீர சேகர விமலதே சிகனைக்
குருவடி வாகக் கொண்டுளங் குளிர்ந்து 135
திருவடி மலர்களைச் சிரமிசைச் சூடி
யைந்தெழுத் துபதே சம்பெற் றறிவுநூல்
பங்கம தொருவப் படித்தபா ரங்கதன்
மற்றொரு சமையம் மதுரையம் பதிபோய்க்
கற்றவர் நிறைந்த தமிழ்ச்சங் கத்திற் 140
பெருநா வலரா யன்று பிறங்கிய
திருநா ராயண திவ்விய நாம
ஐயங் காரிட மருந்தமிழ் நூற்களின்

---

G. 116 சூழ்ந்து 118. அமைந்து 121. ஆதி 123. ஆய 124. கோவி லூர் எனக.

129, சேர்ந்து 135, கொண்டு குளிர்ந்து 136, சூடி 137. பெற்று 138, படித்த பாரங்கதன் என்க.

ஐயங் காணா தகன்றுபோம் வண்ணம்
நன்னூற் காண்டிகை நன்னூல் விருத்தியுமுற் 145
பன்னூல் பயின்ற பான்மை யாளன்
பின்புதங் குருபரன் றிருவடி பேணிவந்
தன்புமீக் கொள்ள வார்வமுற் றுறைநாட்
பரிபாக காலம் H. பார்த்து நங்கள்
திருவீர சேகர தேசிகன் மகிழ்ந்து 150
தக்க நான்மறை சாற்றிய முறையின்
மிக்க சந்யாச வேடங் கொடுக்கப்
பாங்கா யேற்றுப் பரமா னந்தத்
தேங் P. கார் கலியிற் றிளைத்த சீலன்
இவ்வா றொழுகி யிருந்தபோ தொருநாட் 155
செவ்வாய் திறந்து தேசிகர் திருமுன்
வாசிப் பதுதன் மனத்தெணி () வார
ணாசிப் பயண நன்கெடுத் துரைப்ப
அன்னவர் I. மகிழ்ந்துநாட் டரசன் கோட்டைப்
பன்னரும பெரியார் பஞ்சாட்ச ரையா 160
அவர்கண் முன்னி லாசீர் வதித்து
நவமிகக் கற்றிவ ணண்ணுக வென்று
திருவாய் மலர்ந்தருள் செய்யச் சௌமிய
வருட மைப்பசி மாதத்தி பாவளி
முன்னாட் புறப்பட முற்றுணர் பெரியார் 165
யந்நா ளிருந்த வடியவர் தம்முன்
தர்க்கசந் திரவே தாந்த பாஸ்கர
சிற்குண சுப்பைய ஞானதே சிகனும்
ஒள்ளிய சமயெலா முருவாய் வந்த
வெள்ளியங் கிரியெனும் விமல ஞானியும் 170
ஆசிகள் J கூறி யனுப்பச் சென்று

H. 149 பார்த்து 150. மகிழ்ந்து 152. கொடுக்க 153. ஏற்று 154. திளைத்த சீலன் என்க.

I. 159. மகிழ்ந்து 161. ஆசீர்வதித்து 162. கற்று அண்ணுக என்று 163. அருள் செய்ய என்க.

P. ஆர்கலி = சமுத்திரம்   (). வாரணாசி = காசி.

J. 171. கூறியனுப்பச் சென்று

காசியை யடைந்து காவியந் தர்க்கம்
ஊடகங் கொடுக்கு முயர்வியா கரணம்
யோகஞ் சாங்கிய மொண்லைசமி நீயம்
உத்தர மீமாம்சை யோரேழ் கடலுஞ் 175
சித்தவெளி தேக்கித் திரும்பிய தீரன்
பின்னருங் கோவிலூர்ப் பெரும்பதி K. தங்கித்
தன்னரும் பிரயத் தநத்தா லிப்பான்
மருப்பூ வனஞ்சூழ் மாபெரும் பதியாந்
திருப்பூ வணத்தே திருமட மமைத்துத் 180
தபோநிதி யாகியந் தாமிசை விளங்கும்
நபோமணி யென்ன நன்களம் வாழ்நாள்
தர்க்க மியோகம்வே தாந்தஞ் சரிதந்
தர்க்க கண்டநஞ் சமைய விடயம்
இயம்புறு நீதி யறிவிப் பிதநூல் 185
நயம்படப் பலவித L. நன்கமைந் தனவாய்
மூந்து வடநூன் மொழிபெயர்ப் போடே
யிந்தி மொழிநூ லெழின்மொழி பெயர்ப்பும்
பதிப்பித் திடாதன பரிசோ தித்துப்
பதிப்பித் தனவும் பண்டே யுளவைக் 190
குறைசெய் தனவுந் தானுரைத் தனவும்
வரைசெய் தொகையாய் மனத்துட் கொண்டு
தக்கவே தாந்தசித் தாந்தமுக் தாவலி
மிக்கவே தாந்த பரிபாஷை மேலாப்
பகரும் வியாசதாற் பரிய நிர்ணயம் 195
நகுவே தாந்தசஞ் ஞானைஷ் கர்மிய
சித்தி சுவாராஜ்ய சித்திசித் தாந்த
தத்துவ லேச சாரசங் கிரகமாம்
இங்கெழு வசநமு மீசா வாசிய
சங்கர பாடியஞ் சாற்றரு மறையாம் 200

---

172. அடைந்து 176. தேக்கித் திரும்பிய தீரன் என்க.

K. 177. தங்கி 180. அமைத்து 182. வாழ் நாள் என்க.

L. 186. நன்கு அமைந்தனவாய் 192. தொகையாய் மனத்துட் கொண்டு என்க. (மறு பக்க முள்ள M. டிப்பணியையும் சேர்த்துப் படித்துப் பொருள் கொள்க.)

மண்ட லப்பிரா மணவுப நிடதப்
பண்டுளை ராஜ யோக பாடியம்
திருப்பிரம சூத்திர ஸ்ரீகண்ட பாடியம்
விருப்புறு ஞான விவேகசூ டாமணி
அரிமீ டேயரி தத்வமுக் தாவலி 205
அரிகீ தாபதி னைந்தாமத் யாயம்
போதந் தருபிர போத சுதாகரம்
பேதநிக் காரம் பேசுசற் கிரியையிப்
பதவுரை யறிவுநூல் பலவு மூர்க்க
சதகமு நியாய சங்க்ரக முஞ்சிவ 210
சங்க ராவ தாரஞ் சுலோகுரை
சங்கர விஜய விலாச சற்கதை
கதாசரித் சாகர கதைவச நங்களும்
மதாவள கணேச கவசமா வுரையும்
தர்க்க சங்க்ரக தீபிகை தமிழுரை 215
வர்க்க சப்த பதார்த்தி வசநம்
நந்து போதகா ளுதசித் தாந்த
சந்த்ரிகை வசனமாந் தர்க்கநூன் மூன்றும்
மந்த்ரோப தேச மொன்றும் M. வடமொழி
வந்த நூல்களின் வருமொழி பெயர்ப்பாய் 220
பரமவே தாந்த பதார்த்தமஞ் சூஷா
தரமிகு விசார சாகர வசநம
புத்திக் குகந்த யுக்திப்ர காசம்
எத்திக் கும்புக ழிந்தியின் பெயர்ப்பாம்
சேடாத் திரிசிவன் றிருவாய் மலர்ந்த 225
வாடா மலராய் மலர்தலை யுலகினை
மன்னுநா நாஜீவ வாதக் கட்டளை
தன்னிகர் கீதைத தாலாட் டுடனே
தத்துவ ராயர் சசிவன்ன போதம்
சுத்தமா ராஜன் றுரவும பக்திச் 230
சதகம்வை ராக்கிய தீபந் தமிழ்க்கவி
விதமா ரிலட்சண விருத்திவே தாந்த

---

M. 219. வடமொழி 220. நூல்களின் மொழிபெயர்ப்பாம்
224. இந்தியின் பெயர்ப்பாம்

சூடா மணிகை வல்லியம் விவேக
சூடா மணிசா துரியச் சந்தம்
வந்துய ரஞ்ஞு வதைப்பர ணிப்பிர 235
பந்தமு நற்றமிழ்ப் பஞ்ச தசியுங்
கீதையு மீசுர கீதையும் பகவற்
கீதையும் பிரம கீதையு மன்றி
மாதவர் வீரை மாநகர் வந்த
மாதவப் பட்டர் திருவாய் மலர்ந்தருண் 240
மோநவா நந்த முத்திவீ டருளும்
ஞாநவா சிட்டமு மாகநன் ஞென்னும்
S. தாண்டவ ராயர் தந்தநூற் குத்துற
வாண்டவர் வாய்மலர்ந் தருள்பத சாரமும்
O. இருக்கினைத் தமிழ்செய் சிவாநந் தேசர்சொல் 245
திருக்கள ராண்டவர் X. செய்யுட் சரிதமுங்
கருத்திற் றேர்ந்து காண்வழூஉக் களைந்து
திருத்திப் பரிசோ தித்துப் பதித்தவாம்
கட்டளைச் சத்தியார்த் தப்பிர காசிகை
சிட்ட கீதா சாரசங் கிரிகை 250
சசிவன்ன போதப தார்த்த பாஸ்கரன்
வசிடன் துறவு மநப்பிர சாதிநி
சதகம்வை ராக்கிய தீபந் தனித்தனிப்
பதவுரை யிரண்டு பன்னுவே தாந்த
சூடா மணிச்சந் தோஷ தாயிநி 255
டீகா ரீசுர கீதைப் பேருரை
சாந்தலிங் கேசர் சதகதீ பங்களில்
வாய்ந்தபாக் கட்கு வரைந்தபொன் னுரையுட்
சீர்த்திகொள் போரூர்ச் சிதம்பர முநிவர்
சாதிய மேற்கோட் சற்கவிக் குறைகள் 260
முடியாப் பிறவி முடியமெய்ஞ் ஞாநம்

---

S. தாண்டவ ராயர் தந்த நூல் = கைவல்லிய நவநீதம்.

O. இருக்கு = வேதம்.

X. மேல் 275-வது அடியில் (சுவாமிகள் இயற்றிய) வசனச் சரிதம் ஒன்று வருவதால் இங்கே செய்யுட் சரிதம் எனக் கூறப் பட்டது. 248. திருத்திப் பரிசோதித்துப் பதிப்பித்தவாம்.

அடியார்க் கருள்பொன் னம்பல தேசிகர்
மைவல் லிருதய மறதியை மாற்றிக்
கைவல் லியமருண் கைவல்ய நூற்குத்
தீட்டுதத் வார்த்த தீபிகை யுரையிற் 265
காட்டு மூதாரணக் கவிகட் கோருரை
சீடா சார பாலபோ திநியுரை
கீதா சாரக் கிளர்சிறு குறிப்புரை
பட்டினத் தார்நூறு பாடற் கோருரை
பட்டணூர் தமிழ்க்கவிப் பகவற் கீதைப் 270
பதினெண் தாமத் தியாயப் பதவுரை
கதியங் கணேச கவசக் கவியுரை
யின்னன மிசைத்த விலையுஞ் சிலவுந்
தன்னுரை யாக்கித் தந்தன வாமால்
மகான்வீ ரேசர் வசனச் சரிதம் 275
மகாத்ம சரிதா மிருதம் வசநம்
சத்தி விவேசநந் தாயுந் தனயனுங்
கத்தனு முண்மைக் கடவுள் வசநம்
சந்யாச விதிநற் சமாதி விதிகள்
S. கந்யா புருடர் பவவிர கசியம் 280
சூட்டுக் கோலொடு சூட்டுக்கோற் புச்சங்
காட்டுகட் டாரிகா மாரி நூற்களும்
மதுரையம் பொற்றா மரைக்கரைக் கணபதி
விதுமுடிச் சொக்கர் மீநாட்சி யம்பிகை
சிதம்பர நடேசர் திருப்பூ வணேசர் 285
வதிந்திடும் பூவண மடத்து விநாயகர்
கருணை மாதுசௌந் தரிய நாயகி
முருகார் கடம்பணி செந்தூர் முருகவேள்
பழனி வாழ்தண் டாயுத பாணி
அழகுறாஉங் கண்ணனு ளகிய பதின்மர் 290
வருமருட் பிறவியை மாற்றிவீ டருளுந்
திருவருட் செல்வர் சிக்க ணகர்வாழ்
மூவா மருந்தா முதுமறைக் கொழுந்தாங்

---

274. தன் னுரையாக்கித் தந்தனவாம்
S. ஸ்திரீ புருஷ ஜநந மரண ரகசியம் என்னும் நூல்.

தேவா மூகந்த லிங்க தேசிகர்
பழனமுந் தடமும் பைம்பொழி லுஞ்சூழ் 295
கழனியம் பதியாங் காண்டகு கோவிலூர்
நித்தியா நந்த நிமல சொரூப
முத்திரா மேச மோந தேசிகர்
முருக்கவிழ்ந் தொழுகுதேன் முளரித் தடம்பணைத்
திருக்களர் வீர சேகர தேசிகர் 300
மூவரா கப்பதின் மூவர்கண் மேலுந்
தேவரா மின்னுஞ் சில்லோர் மேலுந்
துதியா யியற்றிய தோத்தி ரங்களும்
புதிதாய் விடுத்த X. போதனை மடல்களும்
இன்னவை யெல்லா மிவ்வுல கறியத் 305
தன்னரு நூல்களாத் தானுரைத் தனவாம்
ஆகவை வகையா வரும்பெரு முயல்வாற்
சோக மோகஞ் சோம்பல்சற் றின்றி
எறுபுகழ் நூலசற் றேறக் குறைய
நூறுவெளி யிட்ட நுண்மாண் புலத்தான் 310
வடவேங் கடந்தென் குமரி வாரிதி
யிடமாந் தமிழ்நாட் டெல்லையில் புகழான்
சாதநஞ் செய்யுஞ் சாதகர் தமக்குப்
போதநஞ் செய்யும் புண்ணிய மூர்த்தி
மூன்னிய S. மும்மொழி முற்றறி வரச 315
U. பொன்னுரை யமுதம் பொழிந்திடு மேகம்
இதயாம் பாத்தே யெழும்விழு முகிலெலாஞ்
சிதைவாம் வண்ணஞ் செய்சண்ட மாருதம்
குருபிரா னன்பு கொண்மனக் களஞ்சியம்
வருபிரா ரப்த மதியாப் போதகம் 320
பேதங் கூறிப் பிதற்றும் பிராந்த

---

306. தன்னரு நூல்களாத் தானுரைத்தனவாம் 307 ஆக று வகையாய்
309. நூல் 310 நூறு வெளியிட்ட நுண்மாண் புலத்தான் எனக.

X. போதனை மடல்கள் = அறிவிப்பிதழ்க ளாகிய "ஹரித்துவார வட நாட்டு மேளாவும் தென்னாட்டு மேளாவும்" "மடங்கட்கு அறிக்கை" இவை முதலாய பல நூல்கள்.

S. மும் மொழி = தமிழ், சம்ஸ்க்ருதம், ஹிந்தி.

U. இவ்வடி, சொற் பொழி வாற்றும் வன்மையைக் குறிக்கிறது.

வாதங்க ளாம்பர மதகயக் கோளரி
துன்பமாம் வெம்மை சூழ்ந்திடா மதியம்
இன்பமாங் கதிர்க ளிலங்கிடு மிரவி
பெருங்குண சாகரம் பேதியாப் பூதரம் 325
அருங்கலைச் செல்வம் அறிஞர் சிகாமணி
வாழி நீடூழி! வாழி நீடூழி!!
ஆழிசூ ழுலகில் வாழி நீடூழி!!!
மாசிலா ஞான மன்பதைக் கருளுங்
காசிகா நந்த தேசிக மணியே. 330

பொருள் கோள்:— 10. பாண்டி நன் னாட்டில் 30. மீதவி கோட்டையில் 33. மாற்றார்க் கோவில் மணலூர் வகுப்பில் நல் 34. பேற்றினைப் பெற்ற பெரியண்ணன் என்பார் 36. கொண்டு வளர்த்த குமார சீலன் 37. இராம சாமி வள்ளலும் 38. உமை யம் பிகை யம்மையும் 44. இல்லற நடாத்தி யினிது உற வாழ்நாள் 48. புதல்வர் நால்வரோடு ஒரு 49. பெண் மக வீன்று பெரு மகிழ் வாகி 50. விண் மகவான் சசி போல வீற்றிருந்தார் 51. அவ் 52. நுவர் பெரும் அறைகுதங் கேண்மின் 53. பெரியணன் பழனியப்பன் 54. காசி சிதம்பரம் 56. விசாலாட்சியாகும் 57. இன்னவர் தம்முள் விசாலாட்சி யென்னும் 58. பொன், மணம் புரிந்து புனித வாழ்வு எற்க 59. ஆண்டகை நால்வரும் 60. பிரமசாரங் கடைப் பிடித்து 61. இருந்து வந்தனர்; மூன்றும் 62. அருந் தவப் புதல் வர் பெருந் துறவினராய் 64. சிறந்து வாழ்கின்றார். 65. இம் மகான் பெருமைகள் யா மறி அளவில் 66. செம்மையாய் மொழிந்து இச் செய்யுளை முடிக்குவாம்; 74. பெருந் தகையாளன் 76. திறமுறப் பயின்றோன் 77. நுண் மதியாளன் நோக்கற் கெளியன் 78. சாந்த வடிவன் 79. வாக்கு வல்லவன் வன்காத்திரதரான் 80. ஆக்க நிறைந்தோன் ஆநந்தாகரன் 86 பீறங் கரத்தான் 102. மூதறி வாளன் 138. படித்த பாரங்கதன் 146. பயின்ற பான்மையாளன் 154. திளைத்த சீலன் 176. திரும்பிய தீரன் 310. நுண்மாண் புலத்தான் 312. எல்லையில் புகழான் 314. புண்ணிய மூர்த்தி 315. முற் றறி வாசு 316 பொழிந்திடு மேகம் 318. சண்ட மாருதம் 319 மனைக் களஞ்சியம் 320. மதியாப் போதகம் 322. பரமத கயக் கோளரி 323. சூழ்ந்திடா மதியம் 324. இலங்கிடும் இரவி 325. பெருங் குண சாகரம் பேதியாப் பூதரம் 326. அருங் கலைச் செல்வம் அறிஞர் சிகாமணி 330. காசிகாநந்த தேசிக மணி 328. ஆழி சூழ் உலகில் நீடூழி வாழி எனக் கொண்டு கூட்டி முடித் துக் கொள்க.

श्री नट राजः ।



ஸ்ரீ நட ராஜா.

मुक्ति राम लिंग ज्ञान देशिक स्वामिकळ्,

कोविलूर् मठम् ।



முக்தி ராம லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள்

கோவிலூர் மடம்.

काशिकानन्द - ज्ञानाचार्य - स्वामिनः,

वेदान्त मठः, तिरुप्पूवणम्.



Kasikananda Gnanacharya Swamigal,

Vedanta Matam, Tiruppuvanam

काशिकानन्द ज्ञानाचार्य स्वामिकल् । तिरुप्पूवणम् मठम् ।



Kasikananda Gnanacharya Swamigal,
Tiruppuvanam Matam.



# ஸ்தோத்திர ரச மஞ்சரியும், பரிமள தீப உரையும்.

## தேவை (தேவி கோட்டை)
## *தண்டாயுத பாணி தோத்திரம்.*

### எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. பாவினுல் போற்றும் பக்தருக் கிடுக்கண்
 பறிந்திடக் கருணைநன் கருள,
மாவின்மேற் றோன்றி மதுரைமா நகரின்
 மானுட வடிவுடன் வந்த,
ஆவின்வா கநத்தர்க் கருளுநல் வடிவம்
 ஆகவே வையகம் போற்றும்,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
 திருவடி களைத்திநம் பணிவாம்.

(பத வுரை) மா - பெருமை பொருந்திய, மதுரை நகரில் - மதுரை என்னும் திருப்பதியின்கண், பாவினுல்- திரு வாசகம் என்னும் மணி வாசகத்தால், போற்றும்- துதித்தருளிய, பக்தருக்கு-திரு வாதவூரடிகட் குண்டா கிய, இடுக்கண்-பிறவித் துன்பமானது, பறிந்திட-நீங்கும் பொருட்டும், நன்கு-மிகுதியும், கருணை அருள-திரு வருள் பாலிக்கும்பொருட்டும், மானுட வடிவுடன் - மானுடத் திருக் கோலங் கொண்டு, மாவின் மேல்-(வேத மாகிய) குதிரையின் மேல், தோன்றி வந்த-எழுந்தருளி வந்த, ஆவின் வாகந-நந்தி வாகநத்தை யுடைய, அத்தர்க்கு-சிவ பெருமானுக்கு, அருளும்-உபதேசித்தருளிய, நல்-சிறந்த, வடிவ மாகவே-ஞாநாசாரியத் திருக் கோலத்தோடு, வையகம்-உலகத்தி லுள்ள அன்பர்க ளனைவரும், போற் றும்-புகழ்கின்ற, தேவையில்-தேவி கோட்டை யென்னுந் திருத் தலத்தின்கண், வாழ்-எழுந்தருளி யுள்ள, தண்டாயுத

பாணி-தண்டாயுத பாணி யென்னுந் திருப் பெயர் பெற்ற தேவரீ ருடைய, திரு வடிகளை-திரு வடித் தாமரைகளை, திநம்-நா டோறும், பணிவாம்-முக் கரணங்களாலும் வழி படுகின்றோம். (எ-று)

(விரிவு உரை) பரிந்திட, அருள, தோன்றி, வந்து, எனவும், வடிவ மாகவே, வாழ் வெனவும், கூட்டிப் பொருள் காண்க. பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், "நல் வடிவம்" என்றார். பூக்களிற் சிறந்த பொறி வாழ் பூவை யொத்துப், பாக்களிற் சிறந்த மணி வாசகத்தால் துதித்து, அல்லும் பகலும் அழுது, அடி யடைந்த அன்பர் என்பார். "பாவினாற் போற்றும் பக்தர்" எனவும், சிவ பிரான் தம் பக்தருக் குற்ற பிறவித் துன்ப நீக்கத்தின் பொருட்டும், பேரின்ப அடைவின் பொருட்டும், எழுந்தருளுவன் என்பார். "இடுக்கண்......தோன்றி" எனவும், பெரியன்பர் பலரும், பல் வேறு இன்ன லுற்று, மதுரைப் பிரான் திரு வடி அடைந்திருக்கவும், அப் பிரான் வாத வூரடிகளை யாட்கொள்வான் கருதி இன்னல் பல அடைந்தமையாலும், தாம் ஆடிய ஆடல்கள் பலவற்றுள்ளும் அடிகள் பொருட் டாடிய ஆடலே சிறந்தன வாகையாலும், அவ்வாறே மதுரை யம் பதியின் சிறப் பிற்கு அறிகுறி யென்பார், "மதுரை மா நகரில்" எனவும் கூறினார்.

மதுரை மா நகரில் வாத வூ ரடிகள் தென்னவன் பிரம ராயன் எனச் சிறப்புப் பெயர் பூண்டு பாண்டியர்க்கு அமைச்ச ரான வாறும், இரு வினை யொப்பு மல பரிபாகம் பெற்றுச் சிவ பிரானுக்கு அடிய ரான வாறும், பெருந் துறையிற் பே ருபதேசம் பெற்ற வாறும், அவர் பொருட் டிறைவன் நரியைப் பரி யாக்கிய வாறும், மண் சுமந்த வாறும், மாற் றடிபட்ட வாறும், சிவனால் மணி வாசக ரென்னுந் திரு நாமம் பெற்ற வாறும், தில்லையிற் றிரு வடியிற் கலந்த வாறும், பிறவும், புராணங்களிற் கண்டு தெளிக. இதனை, "நரியைக் குதிரைப் பரியாக்கி ஞால

மெல்லாம் நிகழ்வித்துப், பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்ச தேற்றும் பெருந்துறையாய்'' என வரும் (ஆநந்த மாலை 7) அவ் வடிகளார் திரு வாக்கா னுணர்க.

பாலின், மாலின், ஆலின், என்ற விடங்களி லுள்ள, இன் சாரியை ஆகும். வாகுபந்தர் - அகரம் தொகுத்தல் விகாரம். வாழ் தண்ட பாணி-முக் கால வினைத் தொகை. 1

2. தேவரிற் சிறந்தே திகடரும் நின்றன்
   சேவடி பரவுதற் பொருட்டுத்,
தேவிமா ரிருவ ருடனமர் கின்ற
   தேசுறு நல்வடி வினையும்,
தேவனற் குருவாய் வந்தபே ரின்பந்
   திகழ்வடி வதனையும் விளக்கத்,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
   திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை.) தேவரில்-தேவர்களுக் கெல்லாரினும், சிறந்து-மேம்பட்டு, திகழ்தரும்-விளங்குகின்ற, நின் தன்-தேவரீருடைய, செம்மை அடி-செந் தாமரையாகிய திரு வடிகளை, பரவுதல் பொருட்டு-(அடியார்கள்) துதித் துய்ய வண்ணம், தேவிமார் இருவருடன்-அன்னையார் இருவரோடும், அமர்கின்ற-எழுந்தருளி யிருக்கின்ற, தேசுறு-ஞான வொளி மிக்க, நல்-அழகிய, வடிவினையும்-திருக் கோலத்தையும், தேவன்-சிவ பிரானுக் குபதேசித்தற் பொருட்டு, நல் குருவாய்-ஞானாசாரிய னாய், வந்த-எழுந்தருளி வந்த, திகழ்-விளங்குகின்ற, பெருமை இன்பம்-பெருமை மிக்க சச்சிதானந்த மாகிய, வடிவு அதனையும்-திருக் கோலத்தை யும், விளக்க - (அவர்கட்கு) அறிவுறுத்தும் வண்ணம், தேவையில் - தேவி கோட்டை யென்னுந் திருத் தலத்தில், வாழ்-எழுந்தருளியிருக்கின்ற, தண்டாயுத பாணி-தண்டா யுத பாணி யென்னும் திருப் பெயர் பெற்ற தேவரது, திரு வடிகளை-திரு வடித் தாமரைகளை, நிதம்-நாடோறும், பணிவாம்-முக் கரணங்களாலும் வழிபடுகின்றோம். (எ-று)

(வி-ரை.) பரவுதற் பொருட்டு, விளக்க. வாழ்வெனக் கூட்டுக. பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், நல் வழி யெனவும், பிறவிக் கடலுக்குப் புணையாகலின், நற் குரு வெனவும் கூறினார். சூரன் அரி முகன், கயமுகன் முதலியோராய் புவனங்க ளனைத்தும் தலைதடுமாறி, அவற்றிற் கதிபராய் வீற்றிருந்த இந்திராதி தேவர்க ளனைவரும் இடுக்கணுற்ற காலத்து, படைத்த லாதி முத் தொழிலும், துட்ட நிக்கிரக சிட்ட பரிபாலனமுஞ், செய்யும் வலி பெற்றோன் தேவ சேனாபதி யாகிய முருக வேளே என்பார், "தேவரிற் சிறந்தே திகழ் தரும்" எனவும், இறைவன் தாளைத் தொழுது பிறவி யறுத்தலே வேதாகம உணர்வின் பயனாம் என்பார். "சே வடி பரவுதற் பொருட்டு" எனவும், சீவர்களின் கால கன் மங்கள் பரிபாக மான போது, மாயா வுபாதி ரகிதனா மாகிய இறைவனே சிருட்டி திதி லய காரண முதன்மை யாகிய தடத்த விலக்கணங் கொண்டு காரியோன்முக மாகிய தனது சத்தியால் சர்வ சராசர பிரபஞ்ச மாய்ப் பக்குவான் மாக்க ளாகிய பக்தர்களைத் தன்னோ டைக்கியமுஞ் செய்து கொள்ளு மாறு கொள்ளும் திருக் கோல மென்பார், "தேவிமார்......வடிவினை" எனவும், விவேகாதி சாதன நான்கும் அவதிபரியந்தம் பெற்ற முமுட்சுக்கட்கு ஞானோ பதேசஞ் செய்து, பிறவா நெறி யருளும் பொருட்டுக் கொள்ளுந் திருக் கோல மென்பார். "தேவன்......... வடிவதனை" எனவுங் கூறினார். இவற்றை "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅ ரெனின்" என வரும், (1-2) பொய்யா மொழியானும்:

"காலமுங் கன்மந் தானும் பரிபாக மான வாற்றால், ஞாலமுண் டாக நல்ல குணத்தினைச் சார்ந்து நிற்கும், பால தொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக, ஏலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து பார்த்தான்" என வரும் (5 சாந்தோக்கிய உபநிஷதம் 36) பிரமகீதையா னும் கண்டு கொள்க.

திகழ்+தரும் என்னும் இருமொழியும், திகடரும், எனப் புணர்ந்தன. இதனை ஸ்ரீ கந்த புராணக் காப்புச் செய்யுளில், "திகடசக்கரம்" என்ற விடத்துங் காண்க. இதற்கு விதி:- வீர சோழியத்துச் சந்திப் படலத்திற் பதினைந்தாம் செய்யுளான் உணர்க. சேவடி, பேரின்பம். என்பவற்றுள், செம்மை, பெருமை, என்னும் பண்புப் பெயர்கள் விகாரப் பட்டன. 2

3. சேவையு மருளுந் திகழ்ந்தநல் லடியார்
திருசியத் துன்புறு தகற்றிப்,
பாவையிற் புலனை யடக்கியங் கமரும்
பத்தருக் கின்பம தளித்தே,
பூவையர் அறுவர் போற்றுநின் வடிவைப்
புகழுநல் லன்பருக் கருளி,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
திருவடி களைத்தினம் பணிவாம்.

(ப-ரை.) சேவையும்-திருத் தொண்டும், அருளும்-சீவ கருணையும், திகழ்ந்த-விளங்குகின்ற. நல் அடியார்-நற்குணம் நற் செய்கைகளை யுடைய அடியார்கள். திருசியத் துன்பு உறுது-பிரபஞ்ச மயலால் உண்டாகிய பிறவித் துன்பத்தை யடையாது, அகற்றி-நீக்கி, புலனை அடக்கி-அகக் கரணம் புறக் கரணம் அனைத்தையும் விஷயாதிகளில் செல்லாமல் தடுத்து, பாவையில்-சித்திரப் பிரதிமை போல, அங்கு-தமது சொரூபத்தின்கண்ணே, அமரும்-நிலைபெற்ற, பத்தருக்கு - யோகிகட்கு, இன்பமது-பேரின்பத்தை, அளித்து - கொடுத்து, பூவையர் அறுவர் - கார்த்திகைப் பெண்கள் அறுவரும், போற்றும் - வழிபடுகின்ற, நின்-தேவரீருடைய, வடிவை - திருக் கோலத்தை, புகழும்-துதிக்கின்ற, நல் அன்பருக்கு - சிறந்த அடியார்களுக்கு, அருளி-(மெய் யுணர்வை) அநுக்கிரகஞ் செய்து, தேவையில்-தேவி கோட்டை யென்னுந் தலத்தின்கண், வாழ்-எழுந்தருளி யுள்ள, தண்டாயுத பாணி-தண்டாயுத பாணி

யென்னுந் திருப் பெயர் பெற்ற தேவரீர் உடைய, திரு வடிகளை-திரு வடித் தாமரைகளை, நாம் - நா மோரும். பணிவாம்-முக் கரணங்களாலும் வழிபடுகின்றோம். எ - று.

(வி-ரை.) அகற்றி, அளித்து, அருளி, வாழ், எனக் கூட்டுக. தன் னலம் பேணாது பிறர் நலம் பேணும் பெற்றித் தாகிய, சீவர்கட்குச் செய்கின்ற சேவையே இறைவனுக்குச் செய்யுந் திருத் தொண் டாகு மென்பார். "சேவையும்" எனவும், அறி வுடையார் எல்லா முடையா ராகவே கருதப் படினும், பிறிதின் னோய் தந் நோய் போற் போற்றுக்கலை அவ் வறிவாற் பெறும் பயன் யாது மில்லை யாதலால், அங்ஙனம் போற்றுதற்கு ஏது வாக வுள்ள அருட் செல் வமே செல்வத்து ளெல்லாம் சிறந்த செல்வ மாதும் மற்றைய பொருட் செல்வம் அற்பர்களிடத்திலும் இருக்கும் என்பார். "அருளும்" எனவும், காரிய மாகிய சேவையும், காரண மாகிய அருளும், ஒருங்கே யுடையார் என்பார், "சிறந்த நல் லடியார்" எனவும், இருவிய வினைப் பயனாகிய பிரவிர்த்தி மார்க்கம் பந்த காரண மாகலின், அதனை யொழித்துத் திருவிய மறப் பாகிய நிவிர்த்தி மார்க்கம் மோட்ச காரண மாகலின், அதனை அளித்து இன் புறச் செய்வான் என்பார், "இருவினைத் துன்புறு தகற்றி" எனவும், அனாத்மாகார விருத்தியின் மறைப் பின்றிய ஆத்மாகார விருத்தியின் நிலைபெறுமுடைய நிருவிகற்ப சமாதி யுடையார் என்பார். "பாவை......பக்கு ருக்கு" எனவும், முருகப் பிரான் சரவணத்துத் தாமரையிற் குழவியாய் வீற்றிருப்பத் திரு மாலாதியரின் கட்டளைப் படிக் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் பாலூட்டிப் போற்றினர் என்பார், "பூவையர் அறுவர் போற்றும்" எனவுங் கூறினர். இவற்றை:- "அருட்செல்வம் செல்வத் துட் செல்வம் பொருட்செல்வம், பூரியார் கண்ணுமுள" என வரும் (25 அருளுடைமை) பொய்யா மொழியானும், "வினைவிற்ப ரத்தையறி வுறுதற்க வத்தைபுலன் வினைமாறி யே, நனைவிற்சு ழுத்திநிலை வினைப்பொ ருட்டிகழும் நலமா கவே" என வரும் (8) சசிவங்க போதத்தானும், "மறுவறு

மார லாகு மாதர்மூ விருவர் தாமும், நிறைதரு சரவ ணத்தி
னிமலனை யடைந்து போற்ற'' (1 உத்பத்தி காண்டம்,
11 திரு அவதாரப் படலம், 116) என வருங் கந்த புராணத்
தானும் உணர்ந்து கொள்க. 3

4. ஆவல்செய் தென்று மாண்டுகொண் டருள
வடியனைக் கோவிலூ ரிழுத்தே,
பாவனை மநத்தின் படிவமே யுலகம்
பழுதறப் பிறிதிலை யென்றே,
ஓவற வுணர உணர்த்திய குருவே
யுயர்ந்தநல் வீரசே கரனே,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை.) அடியனை-(ஒன்றற்கும் பற்றாத) எளியேனை, ஆண்டு கொண்டு-தடுத்தாட் கொண்டு, அருள-அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, ஆவல் செய்து-திரு உளத்தில் விரும்பி, கோவிலூர்-கோவிலூர் மடாலயத்திற்கு, இழுத்து-வருவித்து, உலகம்-தேகாதிப் பிரபஞ்சம், மநத்தின்-மநத்தினுடைய, பாவனை வடிவமே-சங்கற்ப வடிவமே யாகும், பிறிது இலை-பரமார்த்த மாக இல்லை, என்றே-என்பதாக, பழுது அற-சந்தேக விபரீத மின்றி, ஓவற-நீக்க மில்லாமல், உணர-(அடியேன்) அறியும் வண்ணம், உணர்த்திய-உபதேசித் தருளிய, குருவே-ஞானாசாரியனே, நல்-மைத்திரி யாதி ஞான குணங்களமைந்த, வீர சேகரனே-வீர சேகர ஞான தேசிகனே, தேவையில்-தேவி கோட்டை யென்னுந் திருத்தலத்தில், என்றும்-எந்நாளும், வாழ்-வாழ்ந்தருளி யிருக்கின்ற, தண்டாயுத பாணி-தண்டாயுத பாணி யென்னுந் திருப்பெயர் பெற்ற தேவரீருடைய, திருவடிகளை-திருவடித் தாமரைகளை, திநம்-நாடோறும், பணிவாம்-முக்கரணங்களாலும் வழிபடுகின்றோம். (எ-று).

(வி-ரை.) சிவகாருண்யம், ஈசுவர பக்தி, பாச வைராக்கியம், பிரம ஞாநம், என்னும் நான்குமே திரு மேனியாக வுடைய முற்றத் துறந்த முனிவர்கள் எழுந்தருளியிருந்து தம்மைச் சரணாகதி யடைந்த சாதந நான்கினையும் அவதி பரியந்தம் பெற்ற அதிகாரிகட்குக், கீதை, பிரம்ம சூத்திரம், உபநிஷத், ஆதிய சாத்திர பாடம் போதித்தலோடு பிரம்மாத்ம ஐக்கிய ஞானோபதேசத்தையுஞ் செய்தற்குரிய திரு மடாலயம் அமையப் பெற்றதும், அம்மையப்பர் எழுந்தருளி யுள்ள தேவாலயம் விளங்கப் பெற்றதும், எல்லா வளங்களும் நிறையப் பெற்றதும் என்பார், "கோயி லூர்" எனவும், காந்தம் இரும்பைத் தன்கணே இழுத்தல் போலத், தம்மை வலிந்து ஆட் கொள்ளுட கருணையுடையன் என்பார், "இழுத்து" எனவும், ஞாந சம காலத்துப் பிரபஞ்சத் தோற்றம வுண்டா மாகலானும், பூர்வ ஜந்ம சமஸ்கார ஜந்நிய ஸ்மிருதியே உத்தர ஜந்மத் தோற்ற வாகலானும், "ஈண்டு நாநா வென்பவை சிறிதும் இல்லை" என்பது சுருதி யாகலின், அத் தோற்றம் பரமார்த்த மாக வில்லை யாகலானும், என்றும் யாண்டும் உள்ளது பிரமமே என்பார், "பாவனை......பிறிதிலை" எனவும், திட வபரோக்ஷ ஞாந முண்டாகும் வண்ணம் என்பார், "ஓவற வுணர" எனவும், முருகப் பிரானே ஞாநாசாரியராக எழுந்தருளி வந்தான் என்பார், "வீரசேகரனே" எனவுங் கூறினார். இதனை, "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என வரும் (36 மெய் உணர்வு 5) பொய்யா மொழியானும்,

"திருத்தகு கோடி நூலால் தெரித்திடு பொருள்க ளெல்லாம்,
அரைச்செயுள் தன்னி லியானும் அறைகுவன் சார மாகப்,
பெருத்ததோர் பிரம மெய்யே பேசிடும் உலகு பொய்யாம்,
அருத்தியில் சிவனே சீவன் அந்நிய மில்லை சற்றும்"

என வரும் ஆதி சங்கரர் அருள் வாக்கானும், உணர்ந்து கொள்க. 4

5. மாவலி போன்று விளக்கினைத் தூண்டி
மன்னிய திருவடி பெறவே,
தாவிலா முயற்சி யின்மைய னாகித்
தரணியில் வீணிலே வாணாள்,
போவது தெரிந்தே தத்துவப் பொருள்மா
வாக்கியம் புகன்றிடப் புரிந்து,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை.) மாவலி போன்று-மாவலிச் சக்கிரவர்த்தியைப் போல, விளக்கினை-தீபத்தை, தூண்டி-தூண்டுதல் செய்து, மன்னிய-நிலைபெற்ற, திருவடி-(சிவபிரான்) திருவடிகளை, பெற-பெறுதற்குரிய, தாவு இலா-கெடாத, முயற்சி இன்மையன் ஆகி-முயற்சி இல்லாதவன் ஆகி, தரணியில்-இவ்வுலகில், வீணிலே-பயனின்றி, வாழ் நாள்-ஆயுள் நாட்கள், போவது-கழிகின்றதை, தெரிந்து-திருவுளத்திற் கருதி, தத்துவப் பொருள்-சீவப் பிரமைக்கிய மாகிய பொருளைத் (தன்னகத்தே கொண்ட), மா-சிறந்த, வாக்கியம்-(தத்துவமசி) வாக்கியத்தை, புகன்றிட-உபதேசித்தருளும் வண்ணம், புரிந்து-விரும்பி, தேவையில்-தேவி கோட்டை யென்னுந் திருத்தலத்தில், வாழ்-எழுந்தருளியிருக்கின்ற, தண்டாயுத பாணி-தண்டாயுத பாணி யென்னுந் திருப்பெயர் பெற்ற தேவரீருடைய, திருவடி-திருவடித் தாமரைகளை, திநம்-நாடோறும், பணிவாம்-முக் கரணங்களாலும் வழிபடுகின்றோம். (எ-று)

(வி-ரை.) திருக்கோயிற் றிருவிளக்கை நெய் பருகச் சென்ற எலியொன்று தன் வாலாற் றூண்டி அப் புண்ணியப் பேற்றால், மாவலிச் சக்கரவர்த்தியாய்ப் பிறந்து உலகெலாஞ் செங்கோலாட்சி புரிந்து திருமாலின் றிருவடி பெற்றதென்பார், "மாவலி...பெற" எனவும், அவ்வெலிக்குக் கிட்டியதாகிய தெய்வாதீனமாகிய முயற்சி தனக்குக் கிட்டிலதென்பார், "தாவிலா முயற்சியின்மைய

னகி" எனவும், கிடைப்பதற் கரிய மக்கட் பிறவியின் பயன் வீடு பேறு அடைதலா யிருக்க அதன் பொருட்டு வா ணாள் அனைத்துங் கழிதல் வேண்டு மென்பார், "காமனி யில் ... போவது" எனவும், அங்ஙனம், வா ணாளை வீ ண் ணாக்காத தன் மீது முருகப் பிரான் கருணை கொண்டு மகா வாக்கிய உபதேசஞ் செய்து மெய்ஞ் ஞான மளித்து வீடுபே றடைவிக்க விரும்பினான் என்பார், "தெரிந்தே... புரிந்து" எனவுங் கூறினார். இதனை:-

எறியுங் கடலி னகத்துளையி லாமைக் கழுத்துப் புகுவதுபோற், பொறியைம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப்பிறந்து, முறியும் பிறவிப் பாசமெனும் மோக மமையுஞ் செய்தொழிலாற், செறிவை தெள்ளென் றறிவாற் றருலே திடங்க ளெல்லாஞ் சென்றிடுமால்". என வரும் (ஶ நிருவாணப் பிரகரணம் 9.) ஞான வாசிட்டத்தாலும்,

"எய்தற் கரிய யாக்கைதனைக் கெய்தி னென்றா லதுவு கொண்டு, செய்தற் கரிய வறங்கள்பல செய்து துயர்செய் பிறவியினின், றுய்தற் கொருமை பெறவேண்டா துழல்வோ னுடம்பு பொற்கலத்திற், பெய்தற் கரிய பாற் கமரிற் பெய்வ தொக்கு மென்பரால்' என வரும் பிரபு லிங்க லீலையானும்,

"சனித்திடுஞ் சராச ரத்தின் றன்மிக வரிய தென்றோ, மனித்தரா யறிவுண் டாகை மற்றதி னரிய தென்பம் அனித்தமில் தன்னை யாயு மறிவதி னரிய தையா, வினித்தமா மின்பாங் காண்பா ரியாரினு மரிய ரன்றோ" என வரும் அநந்த போதத்தாலும்,

"இக்கா யம்நீக்கி யினியொரு காயத்திற்,
புக்குப் பிறவாமற் போம்வழி தேடுமின்,
எக்கா லத்திவ்வுடல் வந்தெமக் கானதென்,
றக்காலே யுன்ன வருள்பெற லாமே"

என வரும் (7-5-2016) திருமந்திரத்தாலுங் கண்டு கொள்க.

6. பாவங்கள் யாவும் பறிந்திடச் செய்தே
பக்குவம் இலாதவென் றனையும்,
கோவமில் லாமற் சாந்தனாய் இருத்திக்
கூறுமுத் தளையினைக் களைந்து,
ஆவலோ டாக்கை யழியுமவ் வளவு
மாண்டுநல் லருடனை யீயத்,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை.) பக்குவம் இலாத - விவேகாதி சாதந நான்கினையும் அவதி பரியந்தம் பெறாத, என்றனையும் - அடியேனையும், பாவங்கள் - அஞ்ஞானமும் அஞ்ஞான தற் காரியத் தேகாதிப் பிரபஞ்சத் தோற்றமும், யாவும் - ஆகிய வனைத்தும், பறிந்திடச் செய்து - நீங்கும் வண்ணம் செய்து, கூறு - (ஜீவன் முக்தி விலக்ஷணானந்தத்திற்குத் தடை யாகப் பெரியோர்களாற்) கூறப்பெற்ற, மூன்று தளையினை - மூவாசை யாகிய விலங்கை, களைந்து - அறத் தெறிந்து, கோவம் இல்லாமல் - விருப்பு வெறுப் பின்றி, சாந்தனாய் இருத்தி - சித்த விஸ்ராந்தி யுடையோனாய் நிருவிகற்ப சமாதி யின்கண் நிலைபெறச் செய்து, ஆக்கை அழியும் அளவும் - விதேக முத்தி அடையும் வரையும், ஆவலோடு - அன் போடு, ஆண்டு - ஆட்கொண்டு, நல் அருள்தனை - திரு வருட் பேற்றை, ஈய - ஈந்தருளும் வண்ணம், தேவையில் - தேவி கோட்டை யென்னுந் திருத்தலத்தில், வாழ் - வாழுந் தன்மையி லிருக்கின்ற, தண்டாயுத பாணி - தண்டாயுத பாணி யென்னுந் திருப் பெயர் பெற்ற தேவரது, திரு அடிகளை - திரு வடித் தாமரைகளை, நிதம் - நாடோறும், பணிவாம் - முக் கரணங்களாலும் வழிபடுகின்றோம். (எ-று)

(வி-ரை) என்றனையும், பறிந்திடச் செய்து, களைந்து, இருத்தி, ஈய, வாழ் தண்டாயுத பாணி, எனக் கூட்டுக. சதசத் விலக்ஷண இருள் வடிவாகிய அவித்தையும், அதன் காரியமாகிய தேகாதிப் பிரபஞ்சத் தோற்றமும், நீங்கிய

போதே, வித்தையும், அதன் காரிய மாகிய ஆத்மந் தோற்ற முமும் உண்டாகும் என்பார், "பாவங்கள்...செய்து" எனவும், மெய்ஞ் ஞானங் கேட்டு மெய்ப் பொருளை யாதற் கதிகாரிகட்கு வேண்டப்படும் சாதந மொன்றுந் தன்னிடத் தில்லை யென்பதையும், அஃதின்மையின் உண்டாகும் இழிவின் சிறப்பையும் வலியுறுத்துவார், "பக்தவம்... என்றனையும்" எனவும், விருப்பு வெறுப் பின்றிய முருகப் பிரானின் றிரு வடி யடைவார்க்கும் அவ் விரண்டும் வேண்டப்படும் என்பார், "கோப மில்லாமல்" எனவும், வாசனா க்ஷயம். மநோ நாச மாகிய இரண்டையும் தன்னிடத்தே கொண்டு விளங்குவது நிருவிகற்ப சமாதி யென்பார், "சாந்தனுய்"எனவும், அச் சமாதி முருகவேளின் திரு வருட் டுணையாற் கிட்டிற் றென்பார், "இருத்தி" எனவும், சிறைக் கூடத்துற்றோர் விலங்கிடப் பெற்று வேற்றிடம் பெயர முடியாது வருந்துதல் போல, சம்சாரத் தகப்பட் டோர் மூ வாசையாற் கட்டுண்டு விடுபே றடையார் என்பார், "முத் தளை" என்றும், அத் தளை நீக்கமும் அவன் றுணையாற் பெற்ற தென்பார், "களைந்து" என்றும், உயிர் விதேக கைவல்யம் அடையும் வரையும் அதனோடு ஒன்றி யிருந்து அநுக்கிரகம் புரிவது இறைப் பொருள் என்பார், "ஆண்டு......யிய" எனவுங் கூறினர், இவற்றை, "பற்றிவிடாஅ விடும்பைகள் பற்றினைப், பற்றிவிடாஅ தவர்க்கு" என வரும் (35. துறவு) பொய்யா மொழியா னும், "குடும்ப பாரந்த லைக்கொண்ட வர்க்கல்லால், விடும்பரி சின்மையா லுந்திபற, மெய்யுணர் வெய்யுற லுந்திபற." என வரும் அவிரோத வுந்தியாராலுங் கண்டு கொள்க.

7. மூவரும் போற்றும் முதற்பொரு ளாய
முக்கணற் களித்தநற் குருவாய்,
ஏவரும் போற்ற விலகுநற் கரத்தில்
இணையிலாத் தண்டதைத் தாங்கிப்,
பாவவேர் அறுத்தே பத்தருக் கருளும்
பதமலர் காட்டுவான் நாளும்,
தேவையில் வாழ்தண் டாயுத பாணி
திருவடி களைநிதம் பணிவாம்.

(ப-ரை.) முக்கணற்கு அளித்த-சிவ பெருமானுக்கு உபதேசித்தருளிய, மூவரும் போற்றும்-(தாணு மால் அயனாகிய) மூவரும் புகழ்கின்ற, முதல் பொருளாய - சுத்த சைதந்ய வடிவமாகிய, குருவாய்-ஞானாசாரியனாய், ஏவரும் போற்ற-மூன்றுலகத்தவரும் துதிக்க, இலகும்-விளங்குகின்ற, நல்-நன்மை வாய்ந்த, கரத்தில்-திருக் கையின்கண். இணையிலா-ஒப்புயர்வில்லாத, தண்டதை-தண்டாயுதத்தை, தாங்கி-தரித்து, பாவவேர்-அஞ்ஞான மாகிய வேரை, அறுத்து-சேதித்து, பத்தருக்கு - அடியார்கட்கு, அருளும்-(பிறவா நெறியை) அளிக்கின்ற, பத மலர்-திருவடித் தாமரைகளை, காட்டுவான்-காட்டும்பொருட்டு, நாளும்-எந்நாளும், தேவையில் - தேவி கோட்டை யென்னுந் தலத்தின்கண், வாழ் - எழுந்தருளியிருக்கின்ற, தண்டாயுத பாணி-தண்டாயுத பாணி யென்னுந் திருப் பெயரை யுடைய தேவரது, திரு வடிகளை-திரு வடித்தாமரைகளை. நிதம்-நாடோறும், பணிவாம்-முக்கரணங்களாலும் வழிபாடு செய்கின்றோம். (எ-று)

(வி-ரை.) முதற்பொருளாய குருவாய், தாங்கி, காட்டுவான், வாழ், தண்டபாணி, யெனக் கூட்டிப் பொருள் கண்டு கொள்க. மாயையோடு கூடி நின்ற தத்பத வாச்சியார்த்த மாகிய ஈசுவரனிடத்தில் ஏக தேச பாகம் விட்டுவிட்டு எஞ்சி நின்ற தத்பத லக்ஷியார்த்த மாகிய சுத்த சைதந்யமே ஞானாசாரியத் திருக்கோல மென்பார், "மூவ

ரும் போற்றுங் குருவாய்" எனவும், தோற்றக் கேடு களின்றி நித்தமாயும், தன்னை யொன்றுங் கலத்த லின்றித் தூய்தாயும், தான் எங்குங் கலந்து நின்று அவிகாரமாயும், எஞ் ஞான்று மொரு தன்மைத் தாய்ச் செம்பொருளாயும், உள்ள மெய்ப் பொருளென்பார், "முதற் பொருள்" என் றும், ஆசகல முத்தி யருள் விசித்த குரு வென்பார், "[illegible] வாய்" எனவும், வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய் எல்லாமாய் அல்லதுமா யிருந்ததனை இருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லாமற் சொல்லுந் திருக் கோல மென்பார், "தண்டதைத் தாங்கி" யெனவும், அடியார்களின் [illegible] ருத்தும் அபயகர மென்பார், "நற் காம்" எனவும், அவித் தையைப் பிறப்பிற்கு முதற் காரண மென்பார் "பாசவேர்" எனவும், அவ் வேரை யறுத்துப் பிறவா நெறி யளிக்குந் திரு வடித் தாமரையை, வரத கரங் காட்டுமென் றென்பார், "பத மலர் காட்டுவான்" எனவுங் கூறினர். ஏகனும், என்ற விடத் தும்மை:- இனைத் தென் றறிபொருளின் வந் தது. இவற்றை:- "அரவு புனைதரு புனிதரும் வழிபட, மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ், அறிவை யறிவது பொருளென வருளிய பெருமாளே" எனவும், "குருவா யரர்க்கு முபதேசம் வைத்த, குகனே குறத்தி மணவாளா" என்றும் வரும் திருப் புகழாலும்,

"எவர்தமக்கும் ஞானகுரு ஏகாம்பரேசர்
அவர்தமக்கு ஞானகுரு யாரோ — உவரியிலே,
கட்டினோன் பார்த்திருக்கக் காதலவன் என்றுரையிற்.
குட்டினோன் றானேகுரு"

என வரும் காளமேகப் புலவர் கவின் வாக்காலும், "இதழ்ப் பொதிய விழ்ந்த தாமரையின், மணவறை புகுந்த நான்முக னும், எறிதிரை யலம்புபா லுததி, நஞ்சராமேல், இருவிழி துயின்ற நாரணனும், உமைமருவு சந்த்ர சேகரனும், இமையவர் வணங்கு வாசவனும், நின்று தொழும் முதல்வ" என வரும் அருணகிரி நாதர் திரு வாக்கானு முணர்க.

8. மாவயில் கொண்டு சூரனைக் காய்ந்த
மாட்சிமை விளங்குசஷ் டியிலே,
பாவைபோல் நின்றே பார்த்துநிற் றுதித்தேன்
பாவங்கள் பறிந்திடச் செய்து,
நாவலர் போற்றும் நலங்கிளர் ஞானத்
தலமிசை யடியனை யிருத்தத்,
தேவையில் வாழ்தெண் டாயுத பாணி,
திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை.) மா-சிறந்த, அயில் கொண்டு-வேலாயுதத்தால், சூரனை-சூரன் முதலிய அரக்கர்களை, காய்ந்த-அழித்த, மாட்சிமை - பெருமையானது, விளங்கு - விளங்குகின்ற, சஷ்டியில்-கந்தர் சஷ்டித் திரு நாளிலே, பாவை போல்-பிரதிமை போல, நின்று - (அசையாது) நின்று, நின்-தேவரீரை, பார்த்து-தெரிசித்து, துதித்தேன்-தோத்தரித்தேன், பாவங்கள்-அஞ்ஞானமும் அஞ்ஞான தற் காரியப் பிரபஞ்சத் தோற்றரவும், பறிந்திட-நீங்கும் வண்ணம், செய்து-செய்தருளி, நா வலர்-கல்வி யறிவு ஒழுக்க முடைய சான்றோர்கள், போற்றும்-புகழ்கின்ற, ஞானம்-மெய் யுணர்வா லடையத் தக்க, நலம் கிளர்-பேரின்ப வடி வாகத் திகழ்கின்ற, தல மிசை-முத்தி வீட்டின்கண், அடியனை-அடியேனை, இருத்த-இருக்கும் வண்ணம் செய்ய, தேவையில்-தேவி கோட்டை யென்னுந் திருத் தலத்தின்கண், வாழ் - எழுந்தருளியிருக் கின்ற, தண்டாயுத பாணி-தண்டாயுத பாணி யென்னும் திருப் பெயரை யுடைய தேவரீரது, திரு வடிகளை-திரு வடித் தாமரைகளை, திநம் - நாடோறும், பணிவாம்-முக் கரணங்களாலும் வழிபாடு செய்கின்றோம். (எ-று)

(வி-ரை.) காசிப முனிவர் மாயை ஆகிய இருவரும் கூடியவழி அவரிடத்தினின்றும் சூரன் தோன்றியதும், அவர்கள் வியர்வையினின்றும், முப்ப தாயிரம் வெள்ளம் அசுரர்களும், பின்னர் சிங்க முகன் தோன்றியதும், வியர்வை யினின்றும் நாற்ப தாயிரம் வெள்ளம் அசுரர்களும், மூன்று

வது தாருகன் தோன்றியதும், வியர்வையில் நாற்பத் தோ ராயிரம் வெள்ளம் அசுரர்களும், நான்காவது அசமுகி தோன்றியதும், வியர்வையில் முப்பதாயிரம் வெள்ளம் அசுரர்களும், ஐந் தாவது முதலாக அவ் விருவரும் பல் வேறு விலங்கு வடிவங்கள் கொண்டு கூடினமையால் அறுபதாயிர வெள்ளம் அசுரர்களும் தோன்றி, கூறிய சிங்க முகன் முதலாக வுள்ளா ரனைவரையும் துணை யாகக் கொண்டு ஆயிரத் தெட் டண்டங்களையும் நூற் றெட்டுச் சதுர் யுகம் ஆட்சி புரிந்த செயற் கரிய தவப் பேறுடைய சூர னாதியோரைக் குலத்தோ டழித்துத் தேவ சேனாபதி யாய்த் தேவர் இடுக்கண் களைந்த வேல் என்பார், "மா அயில்" எனவும், முருகப் பிரானின் திரு வடிவ மாகிய ஆறெழுத்தும், முறையே, பரகதியினையும், வச்சிர வுடம் பையும், நவ நிதிகளையும், சிவ ஞானத்தையும், திரு வருளை யும், திரு வடிகளையும், தரு மாகலின், அவற்றை யடையும் பொருட்டு அவனைக் குறித்து ஆறெழுத்தைச் செபித்துத் தவங் கிடக்கும் நா ளென்பார், "விளங்கு சஷ்டியிலே" எனவும் கூறினார், இவற்றை: "அலகி லவுணரைக் கொன்ற தோளென, மலைதொளை யுருவச் சென்ற வேலென" என வரும் திருப் புகழானும், "பருத்த முலை சிறுத்த விடை" என வரும் திரு வகுப்பானும்,

"கதிகாட்டு மோரெழுத் தோரெழுத் தேவஜ்ர காயந்தரும்,
நிதிகாட்டு மோரெழுத் தோரெழுத் தேயுள்ளி ரப்புமருள்,
மதிகாட்டு மோரெழுத் தோரெழுத் தேயென்னுள் வைத்த பொற்றாள்
துதிகாட்டு மே குக நின்னாறெ ழுத்துள்ள சூத்திரமே"

என வரும் ஆறெழுத் தந்தாதியானும், உணர்ந்து கொள்க.

9. பாவைமார் இருவர் பதம்பணிந் தமரப்
பாலஷண் முகனெனப் பெயராய்க்,
கோவம தாருஞ் சிகியின்மீ தமருங்
கோலமே கண்டுநான் வழுத்தச்,

சேவலங் கொடியைத் திருக்கரந் தாங்கிச்
சிந்மய வுடிவமாய் இலங்கித்,
தேவையில் வாழ்தெண் டாயுத பாணி
திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) பாவைமார் இருவர் - வள்ளி யன்னையார் தெய்வ யானையார் ஆகிய இருவரும், பதம் பணிந்து-தேவரீருடைய திரு வடிகளை வணங்கி, அமர - இரு மருங்கும் எழுந்தருளியிருக்கவும், பால ஷண்முகன் எனப் பெய ராய்-இளம் பூரணன் என்னும் திருப் பெயரை யுடையோனாய், கோவமது ஆரும் - மிக்க கோபத்தை யுடைய, சிகியின் மீது - மயிலின் மேல், அமரும் - எழுந்தருளியிருக்கின்ற, கோலமே - அத் திருக் கோலத்தை, கண்டு - அடியேன் தரிசித்து, வழுத்த-துதிக்கும் வண்ணம், சேவல் அம் கொடியை-அழகிய சேவற் கொடியை, திருக் கரம் தாங்கி-அழகிய-கையின்கண் ஏந்தி, சிந் மய வடிவாய் - ஒளிப் பிழம்பாய், இலங்கி - விளங்கி, தேவையில் - தேவி கோட்டை யென்னும் திருத் தலத்தின்கண், வாழ் - எழுந்தருளியிருக்கின்ற, தண்டாயுத பாணி, தண்டாயுத பாணி யென்னும் திருப் பெயரை யுடைய தேவரீரது, திரு வடிகளை - திருவடித் தாமரைகளை, திநம் - நா டோறும், பணிவாம் - வழிபாடு செய்கின்றோம். (எ-று)

(வி-ரை) அமர, பெயராய், அமரும், கோலமே கண்டு, வழுத்த, தாங்கி, இலங்கி, வாழ் தண்ட பாணி, யெனக் கூட்டுக. பல் வேறு வகை யாய சத்திக ளனைத்தையும் தம் முளே கொண்ட கிரியா சத்தியும், ஞான சத்தியும் ஆகிய, தெய்வ யானையாரும், வள்ளி யன்னையாரும், சத்த ஞகிய முருக வேளை வணங்கி, அவன் திரு வுளப்பாங்கிற் கிசைய

ஒழுகுவார் என்பார், "பாவைமார்...அமர" எனவும், பிரம தேவன், சிவ தரிசநப் பொருட்டுத் திருக் கைலாயஞ் சென்றக்கால் ஆங் கொரு புறம் இலக்கத் தொன்பான் வீரர் நடுவே விளங்கிய சண் முக னாகிய இளம் பூரணனைக் கண்டுங் காணுதவன் போற் செல்ல, அவனை அழைப் பித்துப் பிரணவப் பொருள் கேட்டுக் குட்டிச் சிறையிட்டு எண் ணில் காலம் படைத்த லாதித் தொழில்களைச் செய்த பெருமை யுடையான் என்பார், "பால சண் முகன் எனப் பெய ராய்" எனவும், தம் அடியார்கள் வாத சூலை முதலிய உடல் நோய்களும், இராகத் துவேஷ முதலிய வுள நோய் களும், பிறப் பிறப் பாகிய உயிர் நோய்களும், நீங்கப் பெற்று, ஆருதாரமுங் கடந்து, மேலைப் பெரு வெளியிற் சென்று, திரு வடிச் சிலம் போசையும், வீர கண்டையின் ஓசையும், விந்து நாத வோசையும், கேட்கும் வண்ணம், மயில் மீது ஆடி வந்து அவர் முன் காட்சி யளிப்பான் என் பார், "சிகியின் மீது அமருங் கோலம்" எனவும், ஞாந சூரியனை யழைத்து ஆணவ இருளை யொழித்துத் திருவருளை அடியார்கட்குக் காட்டுவது, சேவற் கொடி யென்பார், சேவலம்...... தாங்கி எனவும் கூறினர். இவற்றை, "அம்பொனுரு மங்கைமண முண்ட பாலா" எனவும், "கொஞ்சிய, சிலம்பு கழல் - விந்து நாதம், கொஞ்ச மயி லின்புற மெல்வந்தருளி யென்கவலை, கொன்றருள் நிறைந்த கழல், இன்று தாராய்," எனவும், "சென்றே யிடங்கள் கந்தா யெனும்பொ, செஞ்சேவல் கொண்டு வரவேணும்" எனவும் வரும் திருப் புகழாலும், "கொள்ளித் தலையி லெறும்பது போலக் குலையுமென்றன், உள்ளத் துயரை யொழித்தரு ளாய்ஒரு கோடி முத்தம், தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே, வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே." என வரும் (106) கந்தர் அலங்காரத்தாலும் கண்டு கொள்க. 9.

10. நாவலர் அருண கிரிமுதற் பெரியோர்
நாத்தழும் பேறவே துதித்துப்,

பாவம தகற்றப் பாரினிற் புகழும்
பாக்கள்பற் பலவிதம் இயற்றித்,
தேவரும் புகழும் வாக்கினைப் பெற்ற
திறத்தினை நினைந்துபோற் றுதற்குத்,
தேவையில் வாழ்தெண் டாயுத பாணி
திருவடி களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) பாரினில் - இப் பரத கண்டத்தில், நாவலர் - நாவில் வல்லவர்க ளாகிய, அருண கிரி முதல் பெரியோர் - அருண கிரி நாதர் முதலிய பெரியோர்கள், பாவம்- பண்டை வினைகள் யாவையும், அகற்ற - நீக்கிப் பேரின்பத்தை அடையும் வண்ணம், நா தழும்பு ஏற-நாவின் கண் தழும்பு உண்டாகும் வண்ணம், துதித்து புகழும்- தோத்தரித்துப் புகழ்கின்ற, பாக்கள் - பாடல்களை, பல் பல விதம் - நாநா வித மாக. இயற்றி - பாடியருளி, தேவரும்- இந்திராதி தேவர்களும், புகழும் - புகழுகின்ற, வாக்கினைப் பெற்ற - வாக்கின் செல்வத்தைப் பெற்ற, திறத்தினை- ஆற்றலை, நினைந்து-(அடியேனும்) நினைத்து (அவ்வாற்றலைப் பெறு மாறு), போற்றுதற்கு-வழிபாடு செய்தற்கு, தேவையில் - தேவி கோட்டை யென்னுந் தலத்தின்கண், வாழ்- எழுந்தருளியிருக்கின்ற, தண்டாயுத பாணி - தண்டாயுத பாணி யென்னும் திருப் பெய ருடைய தேவரீரது, திரு அடிகளை - திரு வடித் தாமரைகளை, திநம் - நா டோறும், பணிவாம் - முக் கரணங்களாலும் வழிபாடு செய்கின்றோம். (எ-று)

(வி-ரை) முருகப் பெருமானையே முழு முதற் கடவுளாகக் கொண்டு வழிபாடு செய்து, அவனால் தடுத் தாளப் பெற்று, அவன் புகழைப் பாடும் வாயி லாகப் பிற தேவதைகளின் புகழையும் பாடி. "வாக்கிற்கு அருண கிரி" எனப்

பிற சான்ரேராால் புகழ்ந் தோதப் பெற்ற பெருமை யுடையார் என்பார், "நாவலர் அருண கிரி" எனவும், நாவினுற் பெறும் பயன் முருகப் பிரான் புகழ் பாடுதலே யெனத் துணிந்து அவன் புகழை யன்றிப் பிறி தொன்றனை யும் பேசாமையாற் பெருமை பெற்ற நா வென்பார், "நா தழும் பேற" எனவும், பண்டை வினைகள் நீங்கப் பெற்றுப் பே ரின் படைதற்குக் காரணம் முருகப் பிரான் புகழ் பாடுதலேயாம் என்பார், "பாவமது அகற்ற" என வும், முருகப் பிரான் புகழைப் பாடத் தொடங்கும் அடியா ருடைய வாக்கின்கண், செஞ் சொல்லும், பொருளும் தாமே வந் தமையும் என்பார், "வாக்கினைப் பெற்ற" எனவும், அங்ஙன் பாடும் பேற்றினை அடைதற்கு அப் பிரானை வழி பாடுசெய்தலே கருவி யாகும் என்பார், "திறத்தினை நினைந்து போற்றுதற்கு" எனவும் கூறினர். இவற்றை, "இருள்சேர் இருவினையும் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என வரும் (1-57) பொய்யா மொழி யா லும்,

"கடியேறு மலரோனைக் கடுஞ்சிறையில் வைத்துப்
படியாதி யெவ்வுலகும் படைத்தருளும் பிரானை
முடியாத முதலோனை மூவர் பெருமானை
வடிவேலன் றனைப்பேசா வாயென்ன வாயே
வள்ளிம ணாளனைப் பேசாவா யென்னவாயே"

என வரும் மாயூரப் புராணத்தானும், "எந்தைதனை வாழ்த் தாத பேயர்வாய் கூழுக்கும், ஏக்கற்றிருக்கும் வெறுவாய்" என வரும், இராம லிங்க வடிகளார் திரு வாக்கானும் உணர்க.

தேவை தண்டாயுத பாணி தோத்திரமும்,
பரிமள தீப உரையும் முற்றுப் பெற்றது. 10.

# பழநி - தண்டாயுத பாணி தோத்திரம்.

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

---

1. நிழலென இருந்தே யவன்றனை நோக்கா
   நிலைமையார் மநத்தினைப் பொருந்தி,
விழல்தனக் கிறைத்த நீரினைப் போல,
   வீணிலே காலங்கள் கடந்தேம்,
உழைகளும் களிறு மஞ்ஞையு முழன்றே
   யுவப்புடன் றொழுதுவாழ்ந் திருக்கும்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி,
   பாததா மரையினைப் பணிவாம்.

இதன் பொருள் - நிழல் என இருந்து - பற்றுக் கோடு என்ப தாகக் கருதி ஏகாந்த விடத்தி லிருந்து, அவன் தனை நோக்கா நிலைமை ஆர் - அப் பழநி நாதனைத் தியாநி யாத நிலையோடு கூடிய, மநத்தினைப் பொருந்தி - மநத்தை யுடையோமாய், விழல்தனக்கு இறைத்த நீரினை போல-பய னின்றிய விழலுக்கு இறைத் துள்ள நீரைப் போல, வீணிலே காலங்கள் கடந்தேம் - வீ ணுக அவப் பொழுது போக்கி னேம் (இனி), உழைகளும் களிறும் மஞ்ஞையும் உழன்று-மான்களும் யானைகளும் மயில்களும் திரிந்து, உவப்புடன் தொழுது வாழ்ந்திருக்கும் - மகிழ்ச்சியோடு வழிபா டியற்றி வாழ்கின்ற, பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி - பழநி யம்பதியி லெழுந்தருளியிருக்கின்ற தண்டாயுத பாணியின், பாத தாமரையினை பணிவாம் - திரு வடித் தாமரைகளை முக் கரணங்களாலும் வழிபாடு செய்வோம். எ-று.

(வி-ரை) "வாழ் தண்ட பாணி" என்பது, முக் கால வினைத் தொகையாய் நின்று, விரியுங் கால், அப் பெருமான், கால பரிச்சேத மின்றிய நித்தியன் என்பதையும், உபலக் கணத்தால் தேச பரிச்சேத மின்றிய வியாபகன் என்பதை யும், வஸ்து பரிச்சேத மின்றிய சர்வாத்மகன் என்பதை யும் உணர்த்தி நின்றது.

வேண்டியாங்கு வேண்டினர்க்கு ஈந் தருளும் அருளிறையும், வீடுபேற்றின் நெறியினைக் காட்டும் ஞானாசாரினும், ஆன்மாக்களின் உயிர்க் குயிராய் நின்று உள் இருள் நீக்கி பே ரொளி காட்டும் சிற் சொரூபனு மாய பெருமானை நிரந்தரம் நெடுங் காலம் நேயத்தோடும் இடைவிடாது சிந்தித்துத் துதித்து வீடுபே றடையத் தகுதி யின்றிய அசுத்த மநத்தினைப் பெற்றமைக்கு இரங்கி,' 'நிழல் என......... பொருந்தி'' என்றும். கால மெல்லாம் அவனைச் சிந்திக்கப் படைத்தனவா யிருக்க, அது செய்யாது அவற்றை அவமே கழித்துப் பய னிழத்தல், அறியாமை என்பது தோன்ற, ''விழலுக் கிறைத்த நீரினைப் போல'' என்றும் கூறினர். இவற்றை, ''கேட்டதெல்லாம் பாலிக்கும் கேடிலாத் தாதாவும், வீட்டுநெறி காட்டும் வியன்குருவும்-நாட்டமென, வுண்ணின்று நாயேற் கொளிகாட்டுஞ் சிற்பரனும், எண்ணின்ற போரூரி றை.'' என வரும் போரூர் சந்நிதி முறையாற் காண்க.

நாரத முனிவர் பிரமன் அவைக்கண் சென்று அவனாற் கொடுக்கப் பெற்ற மாதுளம் பழ மொன்றைக் கைலைப் பிரான் திரு முன் வைத் திறைஞ்ச, அப் பிரா னதனை யெடுத்து ஆங்கு நின்ற பிள்ளையா ரிருவரையும் நோக்கி. ''ஒரு கணப் போதில் இப் பூமியை வலம் வருவானுக்கு இப் பழம் உரியது'' எனக் கூற, உடனே இளைய பிள்ளையார் பூமியை வலம் வருவான் மயில் மீ தேறிச் செல்ல, மூத்த பிள்ளையார் இறைவனையும், இறைவியையும், வலம் வந்து ''எல்லா அண்டங்களும் தேவரீரை யல்லாமல் வேறுளவோ'' எனக் கூறித் துதிக்க, பிரான் அவர் கைக்கண் கனியைக் கொடுக்க, பூமியை வலம் வந்த இளைய பிள்ளையார், தமையன் கைக்கண் கனி யிருத்தல் கண்டு, அத் தமையன் திரு விளையாடலுக் குள மகிழ்ந்து, தா மொரு திரு விளையாடல் காரண மாக, அக் கைலையை நீங்கித் துறவு பூண்டுத் திரு வாவினன் குடி யடைந்து, வீற்றிருக்க. அம்மை அப்பர் ஆண் டடைந்து ''மா துளம் பழமும் ஒரு

பழ மாமோ, ஞானக் குழந்தை யாகும் நீயே பழம்" என்று கூறி அவனை மகிழ்வித்தனர். ஆகையால், அத் தலம் பழநி யெனப் பெயர் பெற்றது. இதனைப் பழநித் தல புராணத் துக் கண்டு கொள்க. பூ தேவி, ஸ்ரீ தேவி, சூரியன், அக்கினி, என்னும் இவர்கள் பூசித்துப் பேறு பெற்றது மன்றிக், காம தேனுவும் பூசித்துப் பேறு பெற்றமையின், அதற் கின மாகிய உமை முதலியனவும் அங்ஙன் பூசித்துப் பேறு பெறக் கருதின என்னும் குறிப்பால் அப் பெரு மானின் கருணைத் திறனை விளக்கிய வா றுயிற்று. 11.

2. கழனிகள் சாலி கமுகுநல் லரம்பை
கவின்றரு பலாமுதற் றருக்கள்
பழமுதிர் சோலை மலைகளு முயர்ந்து,
பார்ப்பவர் மநங்கவர்ந் திலங்கும்
அழகெலாங் குடிகொள் பூதியும் மணியும்
அணிந்திடர் களைந்திட விளங்கிப்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

இ-ள். சாலி கழனிகள் நல் கமுகு அரம்பை - நெற் பயிர் நிறைந்த வயல்களும், அழகிய கமுகுகளையும் வாழை களையும், கவின்தரு பலா முதல் தருக்கள் - அழகு மிக்க பலா முத லாகிய மரங்களையு முடைய, பழம் உதிர் சோலை மலைகளும் - பழங்கள் உதிர்கின்ற சோலைகளும் மலைகளும், உயர்ந்து பார்ப்பவர் மநம் கவர்ந்து இலங்கும் - ஆகிய இவற்றால் மேம்பட்டு கண்டாரது உளத்தைக் கொள்ளை கொண்டு விளங்குகின்ற, அழகு எலாம் குடி கொள் - அழகு அனைத்தையும் தம் மிடத்தே கொண் டுள்ள, பூதியும் மணியும் அணிந்து இடர் களைந்திட விளங்கி - திரு நீற்றை யும் கண்மணியினையும் அணிந்து (அடியார்களுடைய) பிறவித் துயரை நீக்கும்படி விளங்கி, பழநியில் வாழ் தண்ட

ஆயுத பாணி-பழநி யம்பதியில் எழுந் தருளியுள்ள தண்டா யுத பாணியின், பாத தாமரையினை பணிவாம் - திரு வடித் தாமரைகளை முக் கரணங்களாலும் வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) மநங் கவர்ந்து இலங்கும் பழநி, எனவும், இடர் களைந்திட விளங்கிப் பழநி வாழ் தண்ட பாணி யெனவுங் கூட்டிப் பொருள் கண்டு கொள்க. கழனிகளும், சோலைகளும், மலைகளுங் கூறினமையின், மருதமுங் குறிஞ் சியும் மயங்கியவா றாயிற்று. இதனானே, இவ் விரு நிலப் பொருள்களும் ஒன் றோடொன்று தொடர்புற்றுக் கிடக்கும் வளப்ப மிகுதி பெறப்படும். இதனை, "கன்றொ டுங்களி வண்டுவாய் நக்கவிர்ங் கரும்பு, மென்று பொன் சொறி வேங்கைவா யுறங்குவ மேதி,குன்றி ளாந்தினை மேய்ந்துபூங் கொழுநிழல் மருதம், சென்று றங்குவ சேவக மெனமுறச் செவிமா" என வரும் திரு விளையாடற் புராணத்தாற் கண்டு கொள்க.

துன்பத்திற்குக் காரண மாய தீ வினைக்கு மூல மாய ஆணவ மலத்தையும், உடற் பிணியையும், பிறவிப் பிணி யையும், ஒருங்கே அறுப்பன வாய, மணி மந்திர மருந்தாக வுள்ளன, உருத்திராக்கமும், ஐந் தெழுத்தும், திரு நீறுமே யாகலானும், அச் சாதநங்களைக் கொண்டே காயன்மா ராதியோர் பிறவிப் பிணி முதலியவற்றை நீக்கிச் சிவ சாயுச்சியம் அடைந்தனர் ஆகலானும், அதர்வண வேதத்து எண்பத் தேழாவ தாக வுள்ள, பஸ்ம சாபால வுபநிடதம் முதலியன திரு நீற்றின் பெருமையை விளங்க வுணர்த்துவதாலும், சாம வேதத்து எண் பத் தெட்டாவ தாக வுள்ள உருத்திராக்க சாபால வுபநிடதம் முதலியன, வுருத்திராக்க ஜப மாலை முதலியவற்றின் பெருமையை யுணர்த்துவதாலும், அவற்றைப் பழநி நாத னணிந்து சிவ வேடப் பொலி வழகால் இலங்குவதாலும், "அழ கொளாங் குடி கொள் பூதியும் மணியும் அணிந்து" என்றும்; அங்

நீறு மணிகளை யணிந்து தன்னை இடையறுது வழிபடும் அன்பர்கட்குப் பிறவித் துயரை நீக்கிப் பேரின்ப வீடளித்தலின், "இடர் களைந்திட விளங்கி" என்றுங் கூறினார். இவற்றை, "'வெள்ளொளி யொளித்திரு நீற்றினு லாவிலை மேலோன், கள்ள மாயைபோய்க் கண்ணுதற் காண்குறப் பெற்றேன், பிள்ளை யாமென மலரயற் பயந்தனன் பெரியோர், உள்ள மோர்வது திருவெண்ணீ றல்லதொன் றுதளதோ" என வரும் உபதேச காண்டத்தாலும், "ஆதி பகவன் ஞானவடி வழலிற் பூத்து நித்தியமாய், அணிந்தோர் தமக்கு வசிகரமா யருந்தி னோர்கட் காரமுதாய், நீதி யறியும் பசுமலத்தை நீக்கு மொருநாற் குறிகாட்டி, நின்ற புகழ்வெண் டிருநீறே" என வருந் திருப் போரூர் சந்நிதி முறையானும், "பரசிவன்கண் மலர்போலப் பரித்த வரைப் பவமாற்றி, யருளுருவிற் செயலானக் கழுமாசொ டாரரந்தை, யொருவுறக்கண் டித்தலினற் கண்டி கண்டி கையெவற்றும், பெருமைமிக லான்மணியென் றொருவேதம் பேசிற்றால்" என வரும், தேவிகாலோத்திரத்தாலுங் கண்டு கொள்க. 2.

3. குழைத்ததண் சினைமா கதலியும் பலாவும்
கூடியே விளங்கிடு மலையில்,
தழைத்திடு மகவைத் தன்றிரு வடியிற்
றகைத்திடா திருந்தபா வியையும்,
மழைக்கையால் எடுத்து மார்புட னணைத்து
மாண்புறு போதத்தை யருளப்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

இ—ள். தண் குழைத்த சினை மா-குளிர்ச்சி பொருந்திய செழித்த கிளைகளோடு கூடிய மாமரங்களும், கதலியும் பலாவும் கூடி விளங்கிடும்-வாழைகளும்-பலா மரங்களும்

நிறைந்து விளங்குகின்ற, மலையில்-திரு மலையின்கண், தழைத்திடும் மாதைக் தன் திரு அடியில் - (விடயங்களிற்) பரவுகின்ற மனதைத் தன்னுடைய அழகிய பாதங்களில், தகைத்திடாது இருந்த பாவியையும்-நிறுத்தாது (ஆணவத்தோடு) இருந்த பாவி யாகிய அடியேனையும், மழை கையால் எடுத்து மார்புடன் அணைத்து - மேகம் போன்ற திருக்கையால் எடுத்து தம் திரு மார்போடணைத்து, மாண்புறு போதத்தை அருள - மாட்சிமைப்பட்ட ஞானோபதேசத்தைச் செய்தருள, பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி - பழநி யம் பதியி லெழுந்தருளி யுள்ள தண்டாயுத பாணியின், பாத தாமரையினை பணிவாம் - திருவடித் தாமரைகளை முக்கரணங்களாலும் வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை.) பழநியில் மலையில் வாழ் தண்ட பாணி, யெனக் கூட்டுக. தலம் உணர்த்துவான் வேண்டி இடைப்பிற வரலாகப் "பழநியில்" என்றார். என்னை? பழநியின் கண்ணுள்ள மலை யென்பது. மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பொறிகளின் வழியாய், சுவை யொளி ஊறு ஓசை நாற்ற மென்னும் புலங்களை நுகரும் பொருட்டு அவற்றில் விரிந்து சுழலுதல் மனதிற் கியல்பாகலான், "தழைத்திடு மாதை" என்றும், அம் மனதைப் பொறி வழி சென்று புலங்களை நுகர விடாது ஆண்டவன் திருவடியில் நிறுத்தி வீடுபே றடையாதிருத்தற் கிரங்கி, "பாவி" என்றும், அன்பு மிக்க அன்னையானவள் தம் மக்களிற் சிலர் கொடியராயினும் அவர் கொடுமை கருதி, புறக்கணியாது அவர் திருந்தி நல்லோராம் முறையில் ஆவனவற்றைச் செய்வது போலும், கற்றா வானது தன் கன்று தன்னை நினைத் தழைத்த துணையானே விரைந்து வந்து பா லுதவி, யதனைப் பாது காத்தற் போலும், தன்னாற் படைக்கப்பட்ட கொடியரையும், அவர் கொடுமை கருதி புறக்கணியாது, அவர் திருந்தி நல்லோராம் முறையில் தனது அந்தர்யாமித் தன்மையா லவரைத் திருத்திக் குணவான்களாக்கும் பொறுப் புடையான் ஆக

லாலும், அக் கொடியார் அறியாமையாற் செய்த, தீங்குகளை நினைந்து அவற்றால் வருந்தி அவ் வருத்தம் நீங்கு வண்ணம், தன்னை நினைந் தழைத்த துணையானே விரைந்து வந்து அவர் துன்பங் களைந்து இன்பம் தருதலாலும், "மழைக்கையால் ...அருள" என்றும் கூறினர். உடையானும் உடைமைப் பொருளுந் தா னாகையால், தனக் கன்னியமாகக் கைம் மாறு செய்வா ரில்லையாகலின், கைம் மாறு வேண்டாக் கடப்பா டுடையான் எனக் கூறுதல் மிகையாயினும், கைம் மாறு வேண்டாக் கடப்பாடு செய்தலே கைக் கிலக்கணமா மென்ப துணர்த்த, அதற்கு மழை யென் றடை கொடுத் தார், எனவே, அதற்கு அது இயற்கை யடையாயிற்று. இவற்றை, "புலனைந்து மேயும் பொறி யைந்து நீங்கி, நலமந்த மில்லதோர் நாடு புகுவீர், அலமந்து வீய வசுரரைச் செற் றான், பலமுந்து சீரிற் படிமினோ வாதே." என வரும் (நம் மாழ்வார் 2. பத்து 8-4) திரு வாய் மொழியானும், "தாயாமெ னக்குரிய தாதையாஞ் சற்குருவாம், தேயாக்க ருணைமொழி தெய்வமாம்,-மாயப், - பொருணீக்கு மன்பர் புனிதவீ டேற, இருணீக்கும் போரூரி றை" எனவும்.
"கன் றழைக்கு முன்னே கருதிவரு மாப்போல,
நின் றழைக்கு நாயேற்கு நேர்தோன் றி-யொன் றினுக்கு,
மஞ்சாதே வாவென் றழைப்பாய்தென் போரூரா,
எஞ்சாத பேரருளா லின்று" எனவும் வரும் திருப் போரூர் சன்னிதி முறையானு முணர்க. 3.

4\. இழைத்தன் னருளா லென்றனை யழைத்தே
இயற்புவி யாதிய வனைத்தும் ,
தொழத்தகு தன்பே ருருவினில் ஒடுக்கித்
தூசிலா நிலைமையை யுணர்த்தி,
விழுத்தகு போக மியாவுமே கைக்க
விரும்புபெண் ணாசையை நீங்கப்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

இ—ள். இழைத்த தன் அருளால்-(அடியேன் மீது) செய்துள்ள தன்னுடைய கருணையால், என்தனை அழைத்து-அடியேனை அண்மையில் அழைத்து, விழு தகு போகம் யாவையும் கைக்க-(யாவராலும் விரும்பப்படுகின்ற) சிறந்த போகங்களனைத்தையும் வெறுக்கவும். விரும்பு வெ ப ஏ ஆசையை நீங்க-யாவரும் விரும்புகின்ற மாதராசை நீங்கவும், தூசு இலா நிலைமையை உணர்த்தி - குற்றமற்ற துறவு நிலையை உபதேசித்தருளி, இபல் புவி ஆதிய அனைத்தும்-பல பகுதிகளோடு கூடிய அண்டங்கள் அனைத்தும், தொழ தகு தன் பேர் உருவினில் ஒடுக்கி - வணங்கத் தக்க தனது சிறந்த வடிவத்தில் ஐக்கியம் செய்து, பழநியில் வாழ் தண்ட-ஆயுத பாணி-பழநி யம் பதியில் எழுந் தருளியுள்ள தண்டாயுத பாணியின், பாத தாமரையினை பணிவாம் - திரு வடித் தாமரைகளை முக் கரணங்களாலும் வழிபாடு செய்வாம் (எ-று)

(வி—ரை.) அழைத்து, கைக்க, நீங்க உணர்த்தி, ஒடுக்கி, வாழ் தண்ட பாணி என க் கூ ட் டி ப் பொருள் காண்க. கைக்க, நீங்க. என்னும் செய வென் னெச்சங்கள் காரியப் பொருளில் வந்தன. தூ சிலா நிலை யுபதே சித்தமை காரணம். விராட் வடிவ மாகிய விசுவ ரூபத்தில் பிருதிவி முத லாய அண்டங்க ளனைத்தையும் ஒடுக்கி நிற்ற லானும், அவ் வண்டத் துயிர்களை ஐந் தொழிற்படுத்தி அவைகளால் வழிபடத் தக்க பரமாத்மா வா யிலகலானும், "பேர் உரு" என்றும், உலகியற் பொருள்கள் காரண மாக மாமொழி மெய்கள் அலையாது நிற்றலும், அவை நன்னெறிக்கண் சேறலும், ஆகிய இவற்றால் வருவன வாய இம்மைக்கண்ணுள்ள இன்பங்க ளெல்லாம், எல்லாப் பொருள்களையும் முற்றத் துறந்த முனிவர்கட்கே எய்துமாகலானும், அவற்றை நெடுங் காலம் அநுபவிக்க வேண்டின் இளமைக்கண்ணேயே துறத்தல் இன்றி யமையாது வேண்டப்படு மாகலானும், அத் துறவு நிலையே வீடு பேற்றிற்குக் காரண மாய ஞான யோகத்திற்கு அந்தரங்க

சாதந மாகையானும், அந் நிலையை உத்தமாதிகாரிகள் உணர்ந்து தன் றிரு வடி யடையக் கருதியே ஆண்டவன் துறவு நிலை பூண்டு உடை கோவண ரைய்க் காட்சி யளித் துத் தனக்கு அந் நிலையை யுபதேசித் தருளினுன் என் பார், "தூசிலா நிலைமையை யுணர்த்தி" என்றும், பெண் ணுசை தக்காரையும் வயப்படுத்தித் தகவிலராய்ச் செய்யுந் தன்மை யதாகலானும், அதுவே, மற்றைய மண் ணுசை பொன் னுசைகட்குக் காரண மாகலானும், "பெண் ணுசையை நீங்க" என்றும், மநுட வின்ப முதல் இரணிய கர்ப்பாந்த முள்ள பதி னெரு இன்பங்களும் பேரின்பத்தின் துளிக ளாகலின், அவற்றை யுவர்த்து விடுதல் வேண்டு மென்பார், "போகம் யாவையுமே கைக்க" என்றுங் கூறினுர். இவற்றை, "வேண்டினுண் டாகத் துறக்கத் துறந்தபின், ஈண்டியற் பாலப ல" என்னும் (15 துறவு 2) பொய்யா மொழியானும், "சராசர மனைத்து மாகிச் சராசரத் தன்மை நீங்கும், பராபர வியற்கை யாகிப் பரவுவா ருள்ளந் தோறும், விராவிய கருணை யாகி விளங்குநின் மெய்யின் ருேற்றம், மராமலர்த் தொடையல் சூடு மயூரவா கநத்தாய் போற்றி" என்னும் திருச் செந்தூர்த் தல புராணத்தானும், "பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்ருல்" என்னும் கம்ப ராமாயணத்தானும், "தையலார் மதியிற் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ" என்னும் திரு விளையாடற் புராணத்தானும் கண்டு கொள்க. 4.

5. குழல்மொழி மடவார் மயலினுல் மருளும்
குணமுடைப் புந்தியார் எந்தம்,
மழலையார் மதத்தை மாய்வுறு மாறு
மாநுட னுகியே வந்து,
கழைமொழி ஞானக் கருத்தினை மொழிந்து
கதியுற வருள்புரி பெருமான்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

இ-ள். குழல் மொழி மடவார்-குழலிசை போன்ற மொழியினைப் பேசுகின்ற மடவாருடைய, மயலினால் மருளும் குணம் உடை புந்தி ஆர்-மயக்கத்தால் மயங்குகின்ற பண்பு பொருந்திய புத்தியோடு கூடிய, எம் தம் மழலை ஆர் மதத்தை-அடியேங்களுடைய இளம் பிராயத்திற் பொருந்திய விரக வேதனையை, மாய்வுறும் ஆறு-அழியும் வண்ணம், மாநுடன் ஆகியே வந்து-மாநுட வுடல் கொண்டு ஞானாசாரிய ருய் வந்து, கழை மொழி ஞானக் கருத்தினை-கரும்பின் சுவை போன்ற மொழிகளால் ஞானார்த்தங்களை, மொழிந்து கதி உற அருள் புரி பெருமான்-உபதேசித்து வீடு பேற்றை அடையு மாறு அநுக்கிரகம் செய்யும் இறைவனாகிய, பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி - பழநி யம் பதியில் எழுந்தருளி யுள்ள தண்டாயுத பாணியின், பாத தாமரையினை பணிவாம் - திரு வடித் தாமரைகளை முக் கரணங்களாலும் வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை.) மாய்வுறு மாறு பழநியில் வாழ் தண்ட பாணி, யெனக் கூட்டுக; என்னை ? டம்ப முறைசை யாதிய மூ வாசையினையும், முற்றத் துறந்த முனிவர் கோலத்தோடு காட்சி யளிக்கின்ற பெருமான், தன்னை வழிபடும் அடியார்கட்கும் அவற்றை யொழித்து வீடுபே றடைவிப்பன் என்ப தாம். குழல், கழை, என்பன, ஈண்டும் ஆகு பெய ராய் முறையே இசையினையும், சுவையினையும் உணர்த்தி நின்றன. ஆடவர் மயங்குதற்குக் காரணம், மடவாரது வஞ்சங் கலந்த இன் மொழியும், பொய்ப்படு மெய்க் காட்சியு மாகலானும், அவற்றை யுள்ளவா றுணர மாட்டாதார் மெய் யென மயங்கி அவ ரடித் தொண்டு செய்யும் பான்மைய ராவர் ஆகலானும், "குழல்மொழி மடவார் மயலினால் மருளும்" என்றும், சமண் சமயந் தலை தூக்கிப், பசு பதி பாச மென்னும் மூன்றன் பகுப்பு நிலை யுணர்ந்து, பாசந் தவிர்த்துப் பசுவாகிய சீவாத்மா பதி யாகிய பரமாத்மாவோ டிரண்டறக் கலத்த லாகிய உய்யும் நெறி காணவொட்டாது மக்கள்

உளத்தே அஞ்ஞான இருள் மூடிய காலத்துச், சீர் காழிப் பதியில் திரு ஞான சம்பந்த மூர்த்தியாய்த் திரு வவதாரஞ் செய்து, தேவாரப் பாசுரங்க ளாகிய ஞான வொளியைக் கொண்டு, அவ ருளத் திருளை நீக்கிக் கதியுறச் செய்த கருணை தோன்ற, மா நுட ளுகியே......பெருமான்', என்றுங் கூறினர். இவற்றை, "பஞ்சாய வடிமடவார் கடைக்கண்ணு லிடர்பட்டு, நஞ்சாய துயர்கூர நடுங்கு வேன் நின்னருளால், உய்ஞ்சேனெம் பெருமானே யுடை யானே யடியேனை, அஞ்சேலென் றுண்டவா றன்றேயம் பலத்தமுதே" என வரும் (திரு வாசகம் ஏ சறவு 6) மணி வாசகத்தானும், "என்னை கண்டுநீ மாதரார் வடிவமீ திச்சைவைத் துழல்கின்றுய், பொன்னை யுந்துகி லையும் பிரித் திடின்வெறும் புழுமலக் கூடல்லால், பின்னை யுண்டு கொல் கண்டுநீ மயங்குதல் பிராந்திசங் கரன்பாதம், தன்னை நாடுதி நெஞ்சமே பரசுதோ ததியுறப் பெறலாமே" என வரும் (42) வைராக்கிய சதாத்தாலும், "குடருங் கொழுவுங் குருதியு மென்பும், தொடரு நரம்பொடு தோலும்—இடையிடையே, வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள், எத்திறத்தா ளீரிங்கோதை யாள்-என வரும் (5 துற வியல் 46) நா லடியானும், "கலைதெரி புகலி ளமுற மருவு கவுணிய வருக வருகவே" என வரும் திருச் செந் தூர்ப் பிள்ளைத் தமிழானும் உணர்க. 5.

6. குழவிகொள் நிலையார் குணங்களை யகற்றிக்
கோதறு சதுட்டசா தநங்கள்,
வழுவிலா தளித்துத் தனையுணர் ஞான
வகையினைச் செவியினிற் புகட்டி,
அழகுடன் தன்பேர் உருவினைக் காணும்
ஆறுநன் பதியினை யருளப்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

இ-ள். குழவி கொள் நிலை ஆர் குணங்களை அகற்றி- குழந்தை கொண் டுள்ள அறியாத் தன்மை பொருந்திய

பண்புகளை, கோது அறு சதுட்ட சாதங்கள் - குற்ற மற்ற சாதந நான்கினையும், வழுவு இலாது அளித்து- செவ்வை யாக அநுக்கிரகஞ் செய்து, தனை உணர் ஞாந வகையினை- தன்னை யறிதற் கேது வாகிய ஞானக் கூறுபாடுகளை, செவி யினில் புகட்டி - (அதிகாரிகளின்) காதிலே உபதேசம் செய்தருளி, தன் பேர் உருவினை அழகுடன்-தன் னுடைய பெருமை பொருந்திய வடிவத்தை (ஐயந் திரிபு இன்றி), காணும் ஆறு நல் மதியினை அருள - காணும் வண்ணம் மெய் யுணர்வை அநுக்கிரகஞ் செய்தருள, பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி- பழநி யம் பதியி லெழுந்தருளி யுள்ள தண்டாயுத பாணியினது, பாத தாமரையினை பணிவாம்- திரு வடித் தாமரைகளை முக் கரணங்களாலும் வழிபாடு செய்வோம். எ-று.

(வி-ரை.) - அகற்றி, அளித்து, புகட்டி., அருள, வாழ் தண்ட பாணி யெனக் கூட்டுக. காணு மாறு அருள, எனக் கூட்டி முறையே காரிய காரணப் பொரு ளாமாறுங் காண்க. குழவியானது, காரியாகாரிய குண தோஷ மாகிய வற்றைப் பகுத் துணரு மறிவிலதாய், அவற்றைப் பிறழ வுணர்ந்து பல் வேறு வகையாய இன்னல்களை அடைவது போன்று, அஞ்ஞாநியர் சச்சிதாநந்த நித்திய பூரண வடிவ மாகிய ஆன்மாவையும், அசத்துச் சட துக்க அநித்திய கண்ட வடி வாகிய தேகாதிகளையும் பகுத்துணரும் வலியிலே ராய்ப் பிறவிப் படுகுழியில் வீழ்ந்து வருந்துவ ராகலின், "குழவி கொள் நிலையார் குணங்களை" என்றும், அங்ஙன் துன்புறுகின்றாரைத் தடுத் தாட் கொள்ளுவான் கருணை கொண்டு உத்தமாதிகாரிகட் குரிய அவதிபரியந்த பயிற்சி வலியோடு கூடிய சதுட்ட சாதநங்களை அளிக்கும் பரம தயாளு என்பார், "வழுவிலா தளித்து" என்றும், தன துண்மை வடிவினை யுணர்ந்து வீடுபே றடைய, அபரோக்ஷ பரஞாந வடி வாகிய மெய் யுணர்வே கருவியாகலானும், அத் தகைய சீவப் பிரம ஐக்கிய வடிவ மெய்யுணர்வு பெறுக்

கருவி யாகிய விசார பூர்வமாக வுள்ளன, பரோக்ஷ அபர ஞாந முதலியன வாகையாலும்; இவ் விரு வகைக்குங் கருவியாக வுள்ளன, அங்க அங்கி,வடி வாகிய இரு வகைச் சிரவணங்க ளாகையாலும்; இவற்றிற்குக் கருவியாக வுள்ளன, ஞாந வாசானும், பெரு நூல்களு மாகையாலும்; இக் கருவிகள் வடிவா யிருந் துபதேசிக்கும் ஞாந பண்டிதன் பழநி யாண்டவன் ஆகையாலும், "தனை யுணர் ஞாந வகையினைச் செவியினில் புகட்டி" என்றும், பின் குதர்க்க வாதிகளின் கூட்டுறவா லுண்டாகும் ஐயந் திரிவுகள் நீக்கப் பெற்றுத் தத் பத லக்ஷியார்த்தமே துவம் பத லக்ஷியார்த்தம் எனக் காணுதற் கேது வாகிய மெய் யுணர்வை யளித்தருளுபவன் என்பார். "உருவினைக் காணு மாறு நன் மதியினை அருள" என்றுங் கூறினர். இவற்றை.

"ஆதலால் பிரம மொன்றே நித்திய மலகைத் தேரில், பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்சம் மருண்டு தோன்றும், நீதுறு மனத்தர் திய பிரபஞ்சம் பிரமம்வே றென்று, ஓதுவர் ஒக்க நோக்கும் யோகியர் ஒன்றாய்க் காண்பர்" என்னும் கூர்ம புராணத்தாலும்; "அபர வுணர் வருமறைகள் முதலகில கலையும், உபரமம தறவுதவும் உணர்வுபர வுணர்வே" என வரும் (30) சசி வன்ன போதத்தாலும், "பகர்ந்தசத்த ஞாநம் பரோக்ஷம் அநுபவத்தால், அகம் பிரமம் எனும்ஞாநம் அபரோக்ஷம் என்றவரோ". என வரும் (46) கீதா சாரத் தாலாட்டாலுங் கண்டு கொள்க. 6

7\. வழுவுறு மநதை வழுவுறு தியற்றி
மாட்சிமிக் குடையதன் னடியார்,
குழுவினைச் சிரமேற் கூப்பிய கரத்தாற்
குரைகழற் றெழுதிடப் பணித்தே,
பழுதிலா ஞாந வாரிதி படியப்
பண்ணுநற் கருணைவா ரிதியாம்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

(இ-ன்) வழுவு உறும் மநதை-(பொறி வழி செல்லுத லதாகிய) குற்றம் பொருந்திய மநத்தை, வழுவுறாது இயற்றி -அங்ஙன் செல்லாது தடுத்து, மாட்சி மிக்கு உடைய தன் அடியார் குழுவினை—(அதனால்) மாட்சிமை மிகுந்த தன் அடியார் கூட்டத்தை, சிரமேல்—தலையின் மேல், கூப்பிய கரத்தால்-குவித்துள்ள கைகளினால்,குரைகழல் தொழுதிடப் பணித்து-ஒலிக்கின்ற வீர கண்டை யணிந்த திரு வடிகளை வணங்கு மாறு செய்து, பழுது இலா ஞாந வாரிதி படியப் பண்ணும்—குற்ற மற்ற ஞாந சாகரத்தில் மூழ்கு மாறு செய்யும், நல் கருணை வாரிதியாய்-நல்ல கருணை சாகரம் ஆகிய, பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி-பழநி யம் பதியில் எழுந்தருளி யுள்ள தண்டாயுத பாணியினது, பாத தாமரையினை பணிவாம்- திரு வடித் தாமரைகளை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) பணித்து. பண்ணும் வாரிதி யாம் தண்டாயுத பாணி யெனக் கூட்டுக. இயற்கையாய ஐம் பொறி யுணர்ச் சிக்குக் காரணம் மநமே யாகலின், பொறி வழிச் சென்றுத் தன்னை யுடையானைப் பே ரின்பம் நுகர வொட்டாது சிற் றின்ப நுகர்ச்சியால் துன் புறுத்தல் அதற்கு இயல்பாகலா னும், செயற்கையாய விசேட வுணர்வு பற்றி ஒருவன் நல்ல னென்றுவது தீய னென்றுவது நிகழ்தற்குக் காரணம் நல் லினந் தீ யின மென்பற்றின் கூட்டுறவே யல்லது மநங் காரண மன்றாகலானும், "வழுவுறு மநதை" என்றும், நல் லினக் கூட் டுறவால் அம் மனத்தின் இயற்கை யாய சாமாந்ய வுணர்வு நீங்கிச் செயற்கை யாய நல் லறிவு புலப் பட்டு, அதனால் சொல்லுஞ் செயலுந் தூயன வாகு மாதலா னும் "வழுவுறுதியற்றி" என்றும், "தவமும் தவ முடை யார்க் காகும்" என்ற வண்ணம் முற் பிறவியிற் செய்துள்ள நல் வினைப் பயனால் சுத்த சத்துவாந்தக்கரண முடையா ராயினும். மற்றை ரஜோ தமோ குணங்களோடு கலப் புற்றுப் பழுதுறுதிருக்கநல் லினக் கூட்டுறவை என்ஞான் றும் போற்றி முக் கரணங்களுந் தூயன வாகப் பெற்றுப்

பெருமையடைய வேண்டுமாகலின்,"மாட்சிமிக்குடைய" என்றும், அத் தகையோரே இறைவனடித் தொண்டு செய்து வீடுபேறடையத் தகுதியுடையோராகலின், "தன்னடியார் குழுவினை" என்றும், அவனருள் கொண்டே அவனடி வணக்கங் கூடுமாகலின்."தொழுதிடப் பணித்து" என்றும். அவ் வழிபாட்டின் முதிர்ச்சியால் சிவ ஞானமளித்துப் பேரின்பம் நுகருமாறு செய்வனாகலின், "ஞானவாரிதி படியப் பண்ணும்" என்றும், கடல் எந் நீரையுந் தன்னீராக்குதல் போல, இறைவனும் எவ்வுயிரையுந் தன்னுயிராக்கி, அருட்டிருமேனி கொண்டு ஆட்கொள்ளும் பெற்றியனாகலின், "நற் கருணை வாரிதி" என்றுங் கூறினார். இவற்றை.

"வாயு மனத்தைச் சங்கற்ப வாளாலறுக்கில் நிறைந்தெங்கும், யாவு மதுவாம் பொருள்தோன்றும் இந்த வழியின் றறிவாலே. மேவு மனதை விழுங்கியதின் மேலா மாயா விகற்பமெலாம், ஓவு மறியா லறிவுடன் துளத்தை விழுங்கும் பொருளுணர்வாய்".(3-உதபத்தி இதோ 5) என வரும் ஞான வாசிட்டத்தானும், "வாங்கி யைம்பொறி நின்றமனத்தினை, நீங்கி டாவகை நின்னுளிருத்தியே, தீங்கி யாவையுஞ் சிந்தைசெயாமையாம், பாங்கி யாதது வேடயில் வாயரோ." என்னும் (5-19) பகவத் கீதையானும். "மனத்தானாமாந்தர்க் குணர்ச்சி யினத்தானாம், இன்னானெனப்படுஞ் சொல்"(46-5)எனவும் "மனந்தூய்மை செய்வினை தூய்மையிரண்டும், இனந்தூய்மை தூவா வரும்" (46-5) எனவும், "நல்லினத்தி னூங்கு துணையில்லை தீயினத்தின்,அல்லற் படுப்பதூஉ மில்" (46-10) எனவும் வரும் திருக் குறளானும் உணர்க.

8. அழலிடை மெழுகா யுருகிடு மன்பர்
அகத்தினில் விளங்கிடு மொளியாய்,
நிழலென வவரை நீங்குறு தவரும்
நினைந்துவந் தடையுமா றருளத்,

தொழவரு மறைவாக் கியமதா லுலகத்
துயரெலாம் நீக்கிவீ டருளப்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

(இ-ள்) அழல் இடை மெழுகு ஆய் -அக்கினிவாய்ப் பட்ட மெழுகு போன்று, உருகிடும் அன்பர் அகத்தினில்-மன முருகுகின்ற அடியார் உளத் தாமரையில், விளங்கிடும் ஒளி ஆய்-விளங்குகின்ற சித் சொரூபனாய், அவரை நிழல் என நீங்குருது-அவ் வடியார்களை நிழல் போன்று விட்டு நீங்காது, அவரும் நினைந்து வந்து அடையும் ஆறு-அவ் வடியார்களும் தன்னைத் தியானித்து மகிழ்ந்து அடையும் வண்ணம், அருள-அநுக்கிரகஞ் செய்யவும், தொழ வரும் மறை வாக்கியமதால்-வணங்கத் தக்க தத் துவமசி மாவாக் கிய உபதேசத்தால், உலகத் துயர் எலாம் நீக்கி வீ டருள-அநர்த்த நிவிர்த்திப் பரமாநந்தப் பிராப்தியை அநுக்கிரகஞ் செய்யவும், பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி-பழநி யம் பதியில் எழுந்தருளியுள்ள தண்டாயுத பாணியினது, பாத தாமரையினை பணிவாம்—திரு வடித் தாமரைகளை (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று) 8

(வி-ரை) ஒளியாய், நீங்குருது, அருள, அருள, வாழ் தண்ட பாணி, எனக் கூட்டுக. ஒளி, என்றது ஈண்டு ஆகு பெய ராய் சொரூபத்தை யுணர்த்திற்று. அன்பர் மாயாப் பிரபஞ்சத்தைக் கானல் நீர் போல மித்தையாகக் கண்டு அதன் மீது பழைய பயிற்சி வயத்தாற் செல்லுந் தூல மாகிய அசுத்த மநத்தைத் தடுத்துச் சூக்கும மாகிய சுத்த மன தாக்கி, அதனால் இறைவனைத் தம்மில் அபேத மாக வறிந்து புற நாட்ட மின்றி யக நாட்டத்தோடு இறை மயமாகவே நிற்பவ ராகலின், "அழலிடை மெழுகா யுருகிடும் அன்பர்" என்றும், அன்பால் நினைவார் து உள்ளக் கமலத்தின்கண் இறைவன் அவர் நினைந்த வடிவொடு விரைந்து தோன்றி யக் கமலத் திருளை நீக்கி யொளி வடிவின னாகக் காட்சி

யளிப்ப ஞகலின், "அகத்தினில் விளங்கிடும் ஒளியாய்," என்றும், நிழலானது உருச் செல்லுமிடந் தோறும் அதனை விடாது பற்றிச் செல்லுதல் போன்று, இறைவனும் அன்பர் செல்லு மிடந் தோறும் அவரை விடாது பற்றிச் சென்று இடர் நீக்கி யின்பம் அருளுபவன் ஆதலின், "நிழ லென வவரை நீங்குருது" என்றும், சித்த தோடங்க ளாய, மல விட்சேப ஆவரண மாகிய மூன்றனுள், மலத்தை நிஷ்காம கர்மத்தாலும். விட்சேபத்தை ஈசுவர தியாநத்தாலும், ஒழித்து ஆவரணத்தை யொழிக்கும் வகை யறியாது, சாதந நான்கும் அவதிபரியந்தம் கைவரப் பெற்றவராய தீவிரதர அதிகாரியே ஜீவன் முக்தி பெறுவதற்குத் தகுதியுடையோ ராகலின், இறைவனே ஞாநாசாரிய ஞய் எழுந்தருளி வந்து தத் துவ மசி மாவாக்கிய உபதேசஞ் செய்து வீடுபேற்றை யருளுதல் மரபாகலின், "மறை வாக்கியமதால் உலகத் துய ரெலாம் நீக்கி வீ டருள," என்றுங் கூறினர். இவற்றை.

"கற்போலும் நெஞ்சம் கசிந்துருகக் கருணையினுல், நிற்பானைப் போலவென் னெஞ்சினுள்ளே புகுந்தருளி, நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்ஙன், சொற்பால தானவா தோணேக்க மாடாமோ". (தோள் நோக்கம் 4) எனவும், "புறம்புறந் திரிந்த செல்வமே சிவபெரு மானே." (பிடித்த பத்து 9) எனவும், வரும் மணி வாசகத்தாலும்,

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி, குருவே சிவ மென் பதுகுறித் தோரார், குருவே சிவனுமாய்க் கோனு மாய் நிற்கும், குருவே யுரையுணர் வற்றதோர் கோவே." (6-தந்திரம் (1581) என வரும் திரு மந்திரத்தாலும், "மலர் மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்." (1-3) என வ்ரும் பொய்யா மொழியானுங் கண்டு கொள்க. 8

9. மழகளி றெனவே மதங்கொளு மநதை
மாற்றியே கருணைநற் றவமாம்,
அழகினை யுடைய வடியவர்க் கருளு
மாழியா மருட்குரு பரஞய்,

கழனியும் காவும் காண்பவர் மநதைக்
கவர்ந்துமேல் விளங்குறு தலமாம்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

(இ-ள்) மழ களிறு எனவே இளமையோடு கூடிய ஆண் யானை போன்று, மதம் கொளும் மநத்தை மாற்றி செருக்கோடு கூடிய மநதை அழித்து, கருணை நல் தவம் ஆம்—அருளும் நல்ல தவமும் ஆகிய, அழகினை உடைய அடியவர்க்கு அருளும்—அழகை யுடைய அன்பர்கட்கு அநுக்கிரகஞ் செய்கின்ற, ஆழியாம் அருட் குரு பரராய்— கருணைக் கட லாகிய ஞாநாசாரியனாய், கழனியும் காவும் காண்பவர் மநதை—கழனிகளும் சோலைகளும் கண்டா ருடைய உளத்தை, கவர்ந்து மேல் விளங்குறு தலம் ஆம் கொள்ளை கொண்டு மேம்பட்டு விளங்கும் பதி யாகிய, பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி —பழநி யம் பதியில் எழுந்தருளியுள்ள தண்டாயுத பாணியினது, பாத தாமரை யினை பணிவாம்— திரு வடித் தாமரைகளை (முக் கரணங்க ளாலும்) வழிபாடு செய்வாம். (எ-று) 9

(வி-ரை) அருளும், குருபரனாய் வாழ் தண்டாயுத பாணி, எனக் கூட்டுக. பாகன் வழிப்படா மதங் கொண்ட யானை அம் மத மயக்கால் தனது ஆக்கத்தை விழையாது. அழிவையே விழைந்து அடக்குவா ரின்றி யப் பாகனையும் வருத்தித் தானும் வருந்துவது போன்று,தன்னை யுடை யானது வழிப்படா ரசோ குணத்தாற் பிணிப் புண்ட மனமும், உய் வகை யறியாது உலகியற் பொருளிலே பொறி வழிச் சென் றலைந்து உடையானையும் வருந்தித் தானும் வருந்து மாகலின், "மழ களி றெனவே மதங் கொளும் மனம்," என்றும், சகல துன்பங்கட்கும் காரண மாய சங்கற்பமே மனத்தின் சொரூப மாகலானும், அச் சங்கற்ப நாசமே மநோ நாசத்திற் கேது வாகலானும்,அந் நாசத்தால் மநோ விருத்திக ளொழிந்து சரற் காலத்து ஆகாயம்

போன்று, ஆன்மப் பிரகாசம் உண்டாகி,வீடு பேற்றி னடைவு கூடு மாகலானும்,"மனதை மாற்றியே" என்றும், அளவை முகத்தா னளந்து நோக்குங் கால் எல்லாச் சமயத் தாராலும் உயிர்க்கு இம்மை மறுமைகளில் உறுதி தருவ தாக விரும்பி யொப்புக் கொள்ளப்படுவது அருளே ஆத லாலும்.மேற்கதி வீடுபேறுகட்குக் காரணமாகலின்.இம் மைகண் ணறிவுடையோரால் முயலப்படுவது தவமே யாக லானும், அடியார்கள் அவ் விரண்டையும் தமக் கணியாகக் கொண்டு போற்றி யொழுகுவார் என்பார்,"கருணை நல்த வமாம் அழகினை யுடைய அடியவர்க்கு" என்றும், அக் கருணையுந் தவமு மாய கடல்க ளிரண்டும் ஒரு வடி வாக முற்றத் துறந்த முனிவ னுய்க் காட்சி யளித்து ஞானோப தேசஞ் செய்வ னுகலின், "ஆழியாம் அருட் குருபர னுய்" என்றுங் கூறினுர். இவற்றை.

"எங்கே எங்கே மனமோடி யினையோ ரென்ன வீழ்ந் தழுந்தும், அங்கே யங்கே நின்றெழுப்பி யகண்ட வறிவி லடைவிப்பாய், சங்கே தமதா யிவ்வாறு சாதித் துளமா மதகரியை, வெங்கே தமறத் தளைத்தெல்லா விசாரத் தாலும் வீடணைவாய்." எனவும், (5-3 மாவலி கதை 54) "சோக முறுஞ் சங்கற்ப நாசத்தால் மனமாறி னென்று தொட்ட, மோக மெனு மூடுபனி விட்டலுஞ்ச ரற்கால முதிர வந்தால், மாகம் விளங் குவதென்ன நல்லறிவு மாத்திரமாய் மாயா தாகி, போகமாய் வடிவின்றிப் பிறப்பிறப்பி லாப்பிரம மிலங்கு நொய்தாய்," (3 உத்பத்தி பிரகரணம் இதோப தேசம் 7) எனவும் வரும் ஞான வாசிட்டத்தாலும்,

"நல்லாற்ரு னடி யருளாள்க பல்லாற்ருற், றேரினு மஃதே துணை" (25 அரு ளுடைமை 2) எனவும்,

"உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற் குரு," (27-தவம் 1) எனவும் வரும் பொய்யா மொழிகளாலும் உணர்க.

10. உழன்மன வாய்கண் ஓய்ந்துகண் டிருக்கு
முண்மையைத் யுரைத்தருள் செய்ய,
நிழறனை யுருவென் னினைவினை மாற்றி
நிரந்தரம் அடியர்கள் போற்ற,
அழல்வடி வாகு முருவினைக் காணு
தாரண மடங்கிச்சொற் சோரப்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பாததா மரையினைப் பணிவாம்.

(இ-ள்) நிழல்தனை உரு என் னினைவினை மாற்றி மித்தையா வுலகைச் சத்திய மென்று கருதுகின்ற மயக்க உணர்வை நீக்கி, உழல் மனம் வாய் கண் ஓய்ந்து கண்டு இருக்கும்—சுழல்கின்ற மன வாய் விழிகள் ஓய்வுற்றுக் காணத் தக்க, உண்மையை வுரைத்தருள் செய்ய—பிரம்மோ பதேசஞ் செய்தருளவும், நிரந்தரம் அடியர்கள் போற்றி நா டோறும் அன்பர்கள் வழிபாடு செய்யவும், அழல் வடி வாகும் உருவினைக் காணுது—அக்கினி சொரூப மாகிய திரு மேனியைக் காண வியலாது, ஆரணம் மடங்கிச் சொல் சோர—வேதங்கள் திரும்பிக் கூ றெருணுது சோர்வடையவும், பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி—பழனி யம் பதியி லெழுந்தருளி யுள்ள தண்டாயுத பாணியினது, பாத தாமரையினை பணிவாம்—திரு வடித் தாமரைகளை (முக் காணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) மாற்றி, அருள் செய்ய, போற்ற, சோர, பழனியில் வாழ் தண்ட பாணி யெனக் கூட்டுக. 'மனம்' என்றதால், உள்ளம், புத்தி, சித்தம், அகங்காரங்களையும். 'வாய்' என்றதனுல் பாணி பாதம், பாயுரு, உபத்தங்களையும், 'கண்' என்றதனுல், சுரோத்திரந்,துவக்கு, சிங்குவை ஆக் கிராணங்களையும், உபலக்கண மாகக் கொள்ளுதலோடு இவற்றை இயக்குவிக்கும், பிராணுதி வாயுக்களையுங் கொள்ளுக.

மேற் கூறிய தத்துவக் கூட்டங்க ளனைத்தும் வெளி முக நாட்டத்திற்குக் காரண மாகையாலும், அவற்றை ஞாந யோகப் பயிற்சி வாயி லாக ஒடுக்கியே ஆந்ம வடிவ மாக நிலைத்திருத்தல் வேண்டுமாகலானும், அந் நிலைக்குத் தத் துவ மசி மாவாக்கிய வுபதேச மாய பிரம்மோபதேசமே நேர் சாதந மாகையாலும், "உண்மையை உரைத்தருள் செய்ய,"என்றும், முக் காலத்து முள்ள சத்திய மாகிய பிம் பத்திற் கற்பித மாக வுள்ள அசத்திய மாகிய பிரதிபிம்பத் தைப் பிம்ப மென மயக்குறுதல் போல, ஆந்மாவிற் கற்பித மாகிய தேகாதிகளை ஆந்மா வெனக் கருதும் மயக்க வுணர்ச்சி நீங்கினு லன்றிப் பிரம்மோபதேசம் பயன்படா தாகலின், "மாற்றி" என்றும், இறைவன் மாற்றம் மநங் கழிய நின்ற மறைப் பொருளாகலின், வேதாகம புராணங்க ளெல்லாம், வியாவகாரிக நிலையில், அவன் இலக்கணங்களை யும். கரும, பக்தி, ஞாந. யோக நெறிகளையும் ஓ ரளவு கூறி யமைந்தனவே யன்றிப் பாரமார்த்திக நிலையில் அவற்றிற் கெல்லாம் அப்பாலாய் யுள்ளான் ஆகலின், "ஆரணம் காணுது மடங்கிச் சொல் சோர" என்றுங் கூறினுர். இவற்றை. "நித்திரையும் பராக்கினையும் நீக்கிச் சித்த மொரு நிலையு நீங்காமல் நிறுத்திக் கொண்டாற், சித்தமொரு பொரு ளினையுஞ் சேரா தாகிச் சேரும்வகை சேராமற் செல்ல நின்று, மத்தமந முதலாய வவத்தை யொன்று மருவாத வகை நிற்கு மதுவே யாகும், முத்திநெறி யென்றுமறை யிடை விடாது முறையிடவு மாகமங்கள் மொழியுங் காணே." என வரும், தேவிகாலோத்திரத்தாலும், "வானாதிக ராமனைத் துங் கற்பனைமாத் திரம்வாளா வளரா நிற்கும், ஆனசக நனவுதனிற் கனவுபோ லிராகவனே யறிதி யன்றே.யினை முறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன்று மென்றும், ஞாநபர மார்த்தத்தா லிவையெல்லாம் பொய் யாக நண்ணு மன்றே", (4-4 தாசூரன் கதை 42) என வரும் ஞாந வாசிட்டத்தானும், "ஒழிவிலாப் பரம யோகிய ரநுபவம் உள்ளவா றுரைத்திட வெனக்கோர், வழிபெறே னெனமால் மகேசன்மா முனிவர் வானவ

ருரைத்திட மாட்டார், விழிமிகுஞ் சிவஞுள் விஞ்சையாஞ் சிவையால் விளம்பவும் படாதது விளம்பு, மொழியெலாம் வந்து மூகபா வத்தே முடியுமந் நிலமதே முடிவு." என வரும் பிரம கீதையானு முணர்க. 10

11 அழகொடு தோன்று மகளிரை விரும்பி
யழிவுரு தருட்குரு மொழியின்,
வழியிலே முயன்று பராபர மடைய
வழுக்கிலா தொழுகநல் வாக்கால்,
கழிபெருங் காய மநமதாற் பணியைக்
களைப்புரு தியற்றவெற் கருள்வான்,
பழநியில் வாழ்தண் டாயுத பாணி
பதாதா மரையினைப் பணிவாம்.

(இ-ன்) அழகு ஒடு தோன்றும் மகளிரை-(செயற்கை) யழகோடு விளங்கும் மடவார்களை, விரும்பி அழிவு உருது அருள் குரு மொழியின்—விரும்பி நாசத்தை யடையாது ஞானாசாரியனது உபதேசத்தின், வழியிலே முயன்று பரா பரம் அடைய—நெறியிலே முயற்சித்துப் பரம் பொருளை யடையவும், வழுக்கு இலாது ஒழுக நல் வாக்கால்—சதா சாரத்தைக் கடைப்பிடிக்கவும் நல் வாக்கிஞலும், கழி பெரு காய மநமதால் பணியை—அழிகின்ற பெரிய உட லாலும் மநத்தாலும் திருத் தொண்டை, களைப்பு இன்றி இயற்ற எற்கு அருள்வான்—சோர்வு இன்றிச் செய்யு மாறு அடியேற்கு அநுக்கிரகஞ் செய்யும் வண்ணம், பழநியில் வாழ் தண்ட ஆயுத பாணி—பழநி யம் பதியி லெழுந்தருளி யுள்ள தண்டாயுத பாணியினது, பாத தாமரையினை பணி வாம்—திருவடித் தாமரைகளை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம், (எ-று)

(வி-ரை) அழிவுருது, அடைய, ஒழுக, இயற்ற, அருள் வான், பழநியில் வாழ் தண்டபாணி யெனக் கூட்டிப் பொருள் காணுக. இயற்கை "அழகு சிறிது மின்றி ஆடை

அணி ஆதியவற்ருற் செயற்கை யழகை மேற்கொண்டு ஆடவரை மயக்கு மியல்பின ராகலின்,' அழகொடு தோன் றும் மகளிரை" என்றும், வீட்டு நெறி செல்லப் பெருந் தடையாக வுள்ள மகளிர், விரும்புவதற் குரிய பொரு ளல் லாதாரா யிருந்தும் அறியாமையினுல் அவர் கண் வலைப் பட்டுக் கருத் தழிந்து அந் நெறி செல்ல வறியாது பிறவிப் பெருங் குழியில் வீழ்கின்றமையின், "விரும்பி அழிவுருது" என்றும், மகளி ராசையினையும் அது காரணமாக வருகின்ற பிற வாசைகளையு மொழித்துச் சாதந சதுட்ட சம்பந்ந அதிகாரியாய் ஞாந வாசனைச் சரணுகதி யடைந்து அவன் திரு வுள மகிழ, ஆப்தம் அங்கம், தாநம், சத்பாவ மென்னும் பணிவிடை நான்கினையும் செய்து அவனுல் உபதேசிக்கப் பெற்று வீடுபே றடைய வேண்டு மாகலின், "அருட் குரு மொழியின் வழியே முயன்று" என்றும், அஞ் ஞாந காலத் துயர்ந்தன வாகக் கருதப்படுகின்ற வியாவகாரி கப் பொருள்களை யெல்லாம், ஞாந காலத்து இழிந்தனவாகச் செய்து அவற்றிற் கெல்லாம் அதிட்டாந மாக விளங்கும் பரம்பொருளே தா ஞக விளங்க வேண்டு மாகலின், "பரா பரம் அடைய" என்றும், மேற் கூறிய உயர் நெறி யடைய மந வாக்குக் காயங்களை ஒழுக்க நெறியிலே செலுத்த வேண்டு மாகலின், "வழுக்கிலா தொழுக" என்றும், அவை அந் நெறியிலே செல்லுங் கால் உலக சங்கிரகத்தின் பொருட்டே நினைத்தலும், துதித்தலும், பணிதலும், செய்து இறைவனை இடையருது வழிபட வேண்டு மாகலின், "பணி யைக் களைப்புருது இயற்ற" என்றுங் கூறினுர். இவற்றை.

"மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பி டிக்கக். காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர், தீமனச் சேருர் சன்மச் சிறுகுக மீனு மாந்தர்க், கேமவா தனைக்க யிற்றுத் தூண்டி லுக் கிரையும் ஒப்பார்." (1 வைராக்ய பிரகரணம் 82) என வரும் ஞாந வாசிட்டத் தாலும், "குருபர னுக்கவன் நெஞ்சகம் போலநு கூலந்த னுய், கரசர ணுகதியி னேவல்செய் தேதினங் கட்டிமைபோல்,

உரியம னேமுதல்யா வையுங்காத் துண்மையா யொருதற்,
பரமிவ னேயெனக் காண்பான்சற் சீடன்ப கர்ந்திடினே.''
என வரும் அருட் பிரகாசத்தா லும், ''அறிவிஞ லென்னை
யாக வறிந்துகொண் டமைதி யாலே, பொறிவழி யடைத்
தெப் போது மென்னையே போற்றி செய்து, நெறியினுல்
வழுத்தி வாயா லென்னையே நினைந்து நெஞ்சால், செறிதரும்
இவர்கள் கண்டாய் தேவரிற் றெரியப் பட்டார்'', (9 மாயா
விகாரம் 10) என வரும் பகவத் கீதையா னும் உணர்க.

பழநி தண்டாயுத பாணி தோத்திரமும்,
பரி மள தீப உரையும் முற்றுப்பெற்றது.

---

உ சிவமயம்

## மதுரை-தண்டாயுத பாணி தோத்திரம்.

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

---

1. சதுர்ம றைப்பொரு ளாகிய வொருசிவ
 சங்கரன் குமரனு யுதித்துச்,
 சதுர்மு கற்குமந் திரப்பொரு ளீந்தித்
 தரணியைச் செய்யென வருளி,
 விதுரனு யமர்ந்து விண்ணவர் போற்ற
 விருப்புடன் துறவியாய் நாளும்,
 மதுரைசொக் கேசர் கோபுர வடபால்

இதன் பொருள்,- சதுர் மறை பொருள் ஆகிய-நான்கு வேதங்களிலும் சொல்லப்பட்ட (முதற்) பொரு ளாகிய, ஒரு சிவ சங்கரன் குமரன் ஆய் உதித்து-ஒப் பற்ற சிவபிரானுடைய புதல்வ ஞய்த் தோன்றி, சதுர் முகற்கு மந்திரப் பொருள் ஈந்து-நான் முகனுக்குப் பிரணவார்த்தத்தை யுபதேசித்து, இந்த தரணியை செய் என அருளி-இவ் வுலகைப்

படைப்பா யாக வென்று கட்டளையிட்டு, விதுரன் ஆய் அமர்ந்து—ஞான பண்டிதனாய் எழுந்தருளியிருந்து, நாளும் விருப்புடன்—நா டோறும் பக்தியோடு, விண் ண வர் போற்றத் துறவி ஆய்—தேவர்கள் துதிக்கத் துற வறக் கோலத்தை யுடைய னாக, மதுரை சொக்கேசர்—மதுரை யின்கண் ணுள்ள சோம சுந்தர னுடைய ஆலயத்தின், கோபுர வடபால் வாழ்—கோபுரத்தினது வட திசைக்கண் ணெழுந்தருளி யுள்ள, தண்ட பாணியை பணிவாம்-தண்ட பாணியை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று.

(வி-வுரை) விண்ணவர் போற்றத் துறவி யாய் வாழ் தண்ட பாணி யெனக் கூட்டுக. வாழ் தண்ட பாணி, என்பது முக் கால வினைத் தொகை யாய்க் கால பரிச்சேத மின்றிப் பால் நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிவுடை யனாய், மெய் யடியார்கட் கநுக்கிரகஞ் செய்யும் பொருட் டவர் வருகை நோக்கி நிற்கின்றா னென்ப துணர்த்தி நின்றது. சிவ சங்கரன் குமரனா யுதித் தென்றமையின், அக் குமரனு மப்பொரு ளாகியோ னென்பது பெற்றாம். சிவ சங்கரன், என்பது இரு பெய ரொட்டாக, மங்கல வடிவ மாகிய சங்கரன், தன்னை வழிபடு மடியார்கட்கு ஞானாசாரியத் திரு வுருக் கொண்டு தோன்றி யுபதேசித்துத் தன்மய மாக்குவன் எனப் பொருள் படுமாறு நின்றது. மந்திரம், என்ற திண்டுப் பிரணவத்தை, என்னை; பல் வேறு வகை யாய மந்திரங்கட்கும் மூல மாகிய சிறப்புடையது அதுவே யாகலின், ஈ யென்பது இழிந்தோ ரிரப் புரை யாகலின், உயர்வுடைச் சண்முகன் ஈய, இழிவுடைச் சதுர் முகன் பெற்றமை தோன்ற, "மந்திரப் பொருளை ஈந்து" என்றும், முருகப் பிரான், கருத்திருத்துவம், அகருத்திருத் வம்,அந்நியதா கருத்திருத்துவம் ஆகிய பிரபுத்துவ சாமர்த் தியமுடைய னாகலின், தானே ஏவுதற் கருத்தா என்பது தோன்ற, "தரணியைச் செய் யென வருளி" யெனவும். அகம் புற மாகிய பற் றிரண்டனையும் விட்டார்க்கே வீ டுள

தாகையாலும், காரண மாகிய பற்றுல் விளைவது காரிய மாகிய பிறப் பாகலானும், அவ் விரு வகைப் பற்று மறுதலே துற வாகையாலும், அதனைத் தம் மடியார் மேற் கொண் டொழுகித் தம் அடிசேரும் வண்ணம் கருணையோடு மேற் கொண்ட துற வறத் திரு நெறிக் கோல மாகலின், "துறவி யாய்" என்றும் கூறினர். குல சேகர பாண்டியன் மதுரைத் திரு நகரங் கண்டு சாந்தி செய்யக் கருதுங் கால், அதனை யிறைவ னுணர்ந்து, தம் சடை மதிக் கலையி னமுதை யுகுக்க. அது பரவி மதுர மய மாகச் செய்தமையால், அந் நகரம் மதுரா எனப் பெயர் பெற்று, அம் மொழி ஆ விறு ஐ யி ருகத் திரிந்து மதுரை யென நின்றது. இவற்றை. "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று, நிலையாமை காணப் படும்". (35 துறவு 9) என வரும் பொய்யா மொழியானும், "அற்றது பற்றெனில் உற்றது வீடு" (2 கோயில் 5) என வரும் திரு வாய் மொழியானும், "பொன்மய மான சடை மதிக் கலையின் புத்தமு துகுத்தன ரதுபோய்ச், சின்மய மான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போல், தன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர, நன்மய மான தன்மையான் மதுரா நகரென வுரைத்தனர் நாமம்." என வருந் திரு விளையாடற் புராணத்தானுங் கண்டு கொள்க.

2\. அதுலமா தவனு மரியினற் றங்கை
யாருயிர்க் குமரனுய்ப் பிறந்து.

சழக்கனும் பதுமன் றுடலே,
கதுமெனப் போழ்ந்த கதிர்வடி வேலாற்
கடையனேன் றிரிமலங் களைய,
மதுரைசொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) அதுல மாதவன் ஆம் அரியின் ஒப்பற்ற திரு மகள் கணவ னுகிய திரு மாலின், நல் தங்கை ஆர் உயிர்

குமரன் ஆய் பிறந்து-சிறந்த தங்கை யாகிய உமா தேவியின் அரிய உயிர் வடிவக் குழந்தை யாகப் பிறந்து, சதுர ஞய் உலகை கருதி இருந்த—பே ராசை யுடையா ஞய் உலகை (மெய் யென்று) எண்ணி வாழ்ந்த, சழக்க ஞம் பதுமனது உடலை—அறிவிலி யாகிய சூரன துடம்பை, கதும் எனப் போழ்ந்த கதிர் வடி வேலால்-விரைவிலே பிளந்த ஒள்ளிய கூரிய வேலாயுதத்தால், கடையனேன் திரி மலம்—கீழோ ஞகிய அடியேனது மும் மலங்களையும், களைய—அழித்து அநுக்கிரகஞ் செய்ய, மதுரை சொக்கேசர் கோபுர வட பால்—மதுரையின்கண் ணுள்ள சோம சுந்தர ருடைய ஆலயத்தின் கோபுரத்தி னுடைய வட திசைக்கண்ணே, வாழ் தண் ட பாணியை பணிவாம்—எழுந்திருளி யுள்ள தண்ட பாணியினை (முக் கரணங்களா லும்) வழிபாடு செய் வாம். (எ-று)

(வி-ரை) பிறந்து திரி மலங் களைய வாழ் தண்ட பாணி யெனக் கூட்டுக. "மாதவ னும் அரி" என்பது, இரு பெய ரொட்டாக நின்று, தன் திரு வருட் சத்தியால் சிட்டர் கட்கு அநுக்கிரகஞ் செய்பவன் என்பதையும், துட்டர்களை நிக்கிரகஞ் செய்பவன் என்பதையு முணர்த்தியது. "தங்கை யா ருயிர்க் குமர ஞய் பிறந்து" என்றமையின், சத்தியும் சிவமு மாகிய மாயா விசிட்ட சைதந்ய ஜகத் காரண னென்பது பெற்ரும். செயற் கரிய வருந் தவஞ் செய்து, சிவபிரானிடத்துப் பெறக் கரிய வரங்களைப் பெற்ரு யினும், சீவ போத மேலீட்டால், பிருகற் பதியாற் கூறப் பெற்ற: புறப் புறச் சமய மாகிய லோகாயதத்தைப் பின் பற்றித், திரி புணர்ச்சி யுடையா ஞய் வாழ்ந்தா ஞகலின், "உலகைக் கருதியே யிருந்த சழக்கனும் பதுமன்" என்ருர். லோகாயத மாவது: தேகாந்ம வாதம், இந்திரியாந்ம வாதம். பிரா ணாந்ம வாதம், கர ணாந்ம வாதம், எனப் பல திறப்படும். காண்ட லளவை யொன்றே பிரமாணம்; பிருதிவி, அப்பு தேயு, வாயு, எனப் பூதங்கள் நான்கே; இவை நித்தியப் பொருள்கள்: இவற்றின் கூட்டமே உடம்பு.

பா கடையுஞ் சுண்ணும்புங் கூடிச் செவ் வண்ணம் பிறக்கு மாறு போல, இவற்றின் கூட்டரவின் உணர் வுண்டாம்; அவ் வுணர்வு உடம்பு வளர வளரும்; தேயத் தேயும்: ஆகலின், உடம்பிற்கு வேறே வுயி ரென்பதும் பொய்; உடம்பிற்கு இன்பத் துன்பங்க ளியல்பா யுள்ளன; இவற் றிற்குக் காரணம் வினை யென்பதும் பொய்; மயிலைச் சித்தி ரித்தாரையும், குயிலைக் கூவிவித்தாரையுங், காணாமையின், கடவு ளுண் டென்பதும் பொய்; இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரோடு மணந்து உண் டுடுத்து வாழ்வதே துறக்க வின்பம்; அது பெறாது, பகைவரால்,நோயால், வறு மையால், பிறவாற்றால், வருந்துவதே நிரயத் துன்பம்: இவற்றிற்கு வேறே, துறக்க நிரய முள தென்பதும் பொய்: நான்கு பூதக் கூட்டரவிற் பிராண வாயு ஒன்று நீங்கில் உணர் விழந் துடம்பு நாச மாம். அதுவே வீடு பேறு: வேறே வீடு பே றுண் டென்பதும் பொய்; ஆகலான், உழவு, பசுக் காவல், வாணிபம், செங்கோன் முறைமை முதலிய நெறியினின்று இம்மை யின்பங்களை நுகர்ந்து வாழ்தலே உறுதிப் பயன் என்ப தாம், அஞ்ஞாந காரிய மாகிய உலகியல் வேல் போலாது; மலங் களையும் தெய்வீக ஞாந வே லாகலின்; அதற்குக் 'கதி'ரென் னும் பிறிதி னியைபு நீக்கிய வடை கொடுத் துரைத்தனர். வடி யென்ப தியற்கை யடை. ஆணவ மாயை கந்ம மாகிய மலங்கண் மூன்றும் மெய் யுணர்ந்து நிட்டை கூடினர் மாட்டும், யாதானு மோ ராற்ற னுழைந்து அவர் தம் மெய் யுணர்வைக் கீழ்ப்படுத் துப் பிறவிக்கு வித் தாகிய பண்டை விபரீத வுணர்வை மேற்படுத்துவனவா மாகலின், அவையே களையத் தக்கன என்பார். ''திரி மலங் களைய'' என்றார், இவற்றை-''பரமேது வினைசெயும் பயனேது'' என்று தொடங்கும் அருட் பிரகாச வள்ளலார் தெய்வ மணி மாலையாலும்; ''செம்மலர் நோன் றாள் சேர லொட்டா, வம்மலங் கழீஇ.'' என வரும் சிவ ஞாந போதத்தாலும் கண்டு கொள்க. 12

3. மதுரமார் மொழிசொல் லுமையினற் கேள்வன்
னுருவமே யுரைமந மிறந்த,
சதுர்மறை வடிவாய்ச் சச்சிதா நந்த
சகுணநிர்க் குணப்பொரு ளதுவாய்,
பதுமனுக் கருளும் பழம்பொரு ளறியாப்
பாலனெற் குரைத்தருள் செய்ய,
மதுரைசொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) மதுரம் ஆர் மொழி சொல்—இனிமை பொருந்திய சொற்களைப் பேசுகின்ற, உமையின் நல் கேள்வன்—உமா தேவியாரின் நல்ல நாயகராகிய சிவ பெருமானுடைய, உருவமே உரை மநம் இறந்த வடி வாய்—திரு வுருவமே வாக்கு மநங்களைக் கடந்த வடிவ மாகியும், சதுர் மறை வடி வாய்—நான்கு வேதங்களின் வடிவ மாகியும், சச்சிதா நந்த வடி வாய்—இருப்பு ஒளி இன்ப வடிவம் ஆகியும், சகுண நிர்க்குணப் பொருளாய்—சாகார நிராகார வடிவ மாகியும், பதுமனுக்கு அருளும் பழம் பொருள்-பிரமனுக் குபதேசித்த பிரணவப் பொருளை, அறியாப் பாலன் எற்கு-அறியாப் பருவ முடைய அடியேனுக்கு. உரைத்தருள் செய்ய-உபதேசஞ் செய்தருளும் பொருட்டு. மதுரை சொக்கேசர் மதுரையின்கண் ஒறுள்ள சோமசுந்தரக் கடவு ளுடைய ஆலயத்தின், கோபுர வடபால் வாழ்—கோபுரத்தின் வட திசைக்கண்ணே எழுந்தருளி யுள்ள, தண்ட பாணியை பணிவாம்—தண்ட பாணியினை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை) உருவமே வடி வாய்ப் பொருளது வாய் அருள் செய்ய வாழ் தண்ட பாணி யெனக் கூட்டுக. 'வடி வாய், என்பதை உரை, மந மிறந்த என்பதனோடும், சச்சிதாநந்தம், என்பதனோடும் கூட்டுக. இரட் டுற மொழிதலென்னு முத்தியால்,"உமையின் நற் கேள்வன் உருவமே." என்பதற்கு, உமையின் நல் லுருவும், அவ டன் கேள்வனின் உருவு மாகிய விரண் டுருவு மெனப் பொருள் கொள்

ளினு மமையும். என்னே? சிவபிரானது நவந் தரு பேத மான, சிவம், சத்தி, நாதம், விந்து, சதா சிவன், மகேசுவரன் உருத்திரன், விஷ்ணு, பிரம்மா, என்பவற்றில் முந்திய நான்கும் நிஷ்கள வடிவ மென்றும்; அருவத் திரு மேனி யென்றும்; லய ஸ்தாந மென்றும். இடைய தாகிய சதா சிவம் சகள நிஷ்கள வடிவ மென்றும்; உருவ அருவத் திரு மேனி யென்றும், போக ஸ்தாந மென்றும், பிந்திய நான்கும் சகள வடிவ மென்றும், உருவத் திரு மேனி யென்றும். அதிகார ஸ்தாந மென்றுஞ் சொல்லப்படுகையாலும், இவற்றில், சிவத்திற்குச், சத்தியும். நாதத்திற்கு, விந்துவும், மற்றவற்றிற்கு முறையே மநோந்மணியும், மகேசுவரியும், உமையும், திருவும், வாணியும், சக்திக ளாகையாலும். இவை யெல்லாம் தன் னுரு வாகப் பெற்றான் முருகப் பிரான் ஆகையாலும் என்க

ஈண்டுச் சகுண மென்றது, காரணப் பிரம்ம மாகிய ஈசுவர நிலையினையும், காரியப் பிரம்மங்க ளாகிய இரணிய கருப்ப விராட்டு முதலிய வடிவங்களின் நிலையினையும், நிர்க்குணம் என்றது, சுத்தப் பிரம்ம நிலையினையு முணர்த்த தின் றன

முக்காலத்தும் பாதிக்கப்படாததும், எல்லாவற்றையு மறிவதும், பரமப்பிரேமைக்கு விஷய மாவதும், முறையே சச்சிதாநந்தத்தி னிலக்கண மாக லின், அவை அப் பெருமானின் நிர்க்குண சொரூப இலக்கண மெனவும், சகுண மென்றது தடத்த விலக்கண மெனவும் உணர்க. பாலன் என்பது, பால் பருகுங் குழவிப் பருவத்தை யுணர்த்தாது, ஆந்மாநாந்ம விவேக மின்மையை யுணர்த்தி நின்ற தென்பார், "அறியாப் பாலன்" என்றும், அங்ஙன் அறியாமை யுடையேனாயினும், அப் பெருமான் அறிவிக்குங் கடப்பாடுடைய னென்பார், "உரைத் தருள் செய்ய" என்றுங் கூறினர். அது பகுதிப் பொருள் விகுதி இதனை, "பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய பொய்க்கூரை, இத்தை மெய்யெனக் கருதின் நிடர்க்

கடற் சுழித்தலைப் படுவேனை, முத்து மாமணி மாணிக்க வைரத்த பவளத்தின் முழுச்சோதி, அத்த னுண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே". (அதிசயப் பத்து7) வரும் மணி வாசகத்தா னுணர்க. 3

4. பதிதனைக் காத்த பண்பினு லருணை
கிரிமுதற் பாவலர் சிலர்தம்,
மதிதனைக் கொண்டு பதம்பெறப் பாடும்
மாண்பினைக் கருதியே யாமுங்,
கதிதனை விரும்பிக் கட்புனல் சொரிந்து
கதறியே கருணைசெய் தருள,
மதுரைச்சொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) பதிதனை காத்த பண்பினுல்—(சூராதியரா லிடுக்கண் வாராது) தேவ ருலகைக் காத்தருளிய பெருந் தகைமை காரண மாக, அருணை கிரி முதல் பாவலர் சிலர்—அருணை கிரி நாதர் முதலிய சில பாவில் வல்ல பக்தர்கள், பதம் பெற—திரு வடிப் பேற்றின் பொருட்டு, தம் மதிதனைக் கொண்டு பாடும் மாண்பினை கருதி—தம் முடைய கூரிய புத்தியால் பாடிய பெருமையினைக் கருதி, யாமும் கதிதனை விரும்பி—நாமும் திரு வடிப் பேற்றை விரும்பி, கண் புனல் சொரிந்து கதறி—கண்களினின்றும் நீர் சொரிய அழுது, கருணை செய்து அருள—(அது கண்டு) திரு வருள் பாலிக்கும் வண்ணம், மதுரை சொக்கேசர் கோபுர வடபால்—மதுரையின்கண் ணுள்ள சோம சுந்தர ருடைய ஆலயத்தின் கோபுரத்தினது வட திசைக்கண்ணே, வாழ் தண்ட பாணியை பணிவாம்—எழுந் தருளியுள்ள தண்ட பாணியை (முக் கரணங்கலாலும்) வழிபாடு செய்வாம். எ-று,

(வி-ரை) யாமும் விரும்பி கதறியே அருளப் பணிவாம் மெனக் கூட்டுக. வரப் பிரசாத வலிமையால் ஆங்காரமேலிட்டுத் தேவரை யவமதித்துப் புன்னெறியிலேவி அவச் செயல்களையே மேற்கொண் டொழுகிய துட்டராஞ் சூராதியரைக் காய்ந்து, சிட்டராந் தேவரைக் காத்து, அவர்க்கு வா

று டளித்துத் தேவ சேநா பதியாய் நின்ற பெருந் தகைமை தோன்ற, "பதிதனைக் காத்த பண்பினுல்" என்றும், அப் பெருந் தகைமை காரண மாக அப் பெருமானே முழுமுதற் கடவு ளென உள்ள வா றுணர்ந்து, அவன் புகழ் பாடி அருள் பெற்றூர் அருண கிரியார் முதற் சிலரே யாகலின், "அருண கிரி முதற் பாவலர் சிலர்" என்றும், அவன் திரு வடிகட்கு வாடும் பூ மாலை சூட்டி வழிபாடு செய்தலினும், வாடாப் பா மாலைசூட்டி வழிபாடு செய்தலே சிறப் புடைத் தாகலின், "பாடும் மாண்பினைக் கருதி' என்றும், பிறவிப் பெருங் கடலில் வீழ்ந்து கரை காணுது துன்புறும் அன்பர் கள், அவன் திரு வடிப் புணை பற்றி யின்புற விழைந்து, அல்லும் பகலும் அவனை நினைந்து, அழுத கண்ணீ ருடைய ராய்க் காட்சியளிப்ப ராகலின், "கட் புனல் சொரிந்து கதறி யே" என்றும், அங்ஙன் கட் புனல் சிந்திக் கதறி லன்றி அவ னருள் கிட்டுத லரிதாகலின், 'கருணை செய் தருள" என்றும் கூறினர். இவற்றை, "சூரனுங் கிரவுஞ்சப் பொருப்புத் துணிபட வடிவேல் விடுவோ னென்றுந், தாரணி பன்னிரு புயனே யென்றுஞ் சரவணனே சண் முகனே யென்றும், தேர்நவ வீரர்க டுணைவா வென்றுந் தேவர்கள் சேநா பதியே யென்றும், கூறறி வினர்புகழ் போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே." என வருந் திருப் போரூர்ச் சந்நிதி முறையானும், "யானே பொய் யென்னெஞ்சும்பொய் யென்னன்பும் பொய், ஆனால் வினையே னழுதா லுன்னைப் பெறலாமே, தேனே யமுதே கரும்பின் றெளிவே தித்திக்கும், மானே யருளா யடியே னுனைவந் துறுமாறே.,,(திருச் சதகம் 90) என வரும் மணி வாசகத்தானும் உணர்க பதிதனை, மதிதனை, கதிதனை, என்ற விடத் துள்ள "அன்"சாரியைகள், கொண்டு', என்பது, கரு விப் பொருளில் வந்த மூன்ருவதன் சொல் லுருபு. பாடுதல் பதம் பெறக் காரண மாகையால், பெற வென்னுஞ் செய வென் னெச்சம் காரியப் பொருட்டு. பணிதல், கருணை செய்தருளக் காரண மாகலின், அருள, வென்னுஞ் செய வென் னெச்சமும் காரியப் பொருட் டாம். 4

5. மதுரைமீ னாக்ஷி தநயனாய் வள்ளி
மகிழ்தரக் கானிலே மணந்தும்,
மதுமலர்த் தாமந் துலங்குமிந் திரன்றன்
மகள்தெய்வ யானையோ டிருந்தும்,
புதுமைகொள் ஞானத் துறவியா யிருக்கும்
புதுமையைக் கண்டுயாம் புகழ்ந்தே,
மதுரைசொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) மதுரை மீனாக்ஷி தநயன் ஆய்—மதுரை அங்கயற் கண்ணியாரின் புதல்வனாகத் தோன்றி, கானிலே வள்ளி மகிழ்தர மணந்தும்—காட்டில் வள்ளி யன்னையார் இன்பம் மிக அவளைத் திருமணஞ் செய்தும், மது மலர் தாமம் துலங்கும் இந்திரன்—தேன் நிரம்பிய மலர் மாலையால் விளங்குகின்ற இந்திரனுடைய, மகள் தெய்வ யானையோடு இருந்தும்—மகளாகிய தெய்வ யானையாரோடு இன்புற்றிருந்தும், புதுமை கொள் ஞான துறவி ஆய் இருக்கும்—நூதனமாகிய ஞானத்தை யுடைய துறவி யாகத் தானிருந்தபடியே இருக்கின்ற, புதுமையை யாம் கண்டு புகழ்ந்தே—அதிசயத்தை நாம் கண்டு புகழ்ந்து, மதுரை சொக்கேசர் கோபுர வடபால் வாழ்—மதுரையின்கண் ணுள்ள சோமசுந்தரனுடைய ஆலயத்தின் கோபுரத்தினது வட திசைக்கண்ணே எழுந்தருளியுள்ள, தண்ட பாணியை பணிவாம்—தண்ட பாணியை (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை) ஈண்டு மாயா சத்தியே வள்ளி தெய்வ யானையாராகையாலும், இச் சத்தி விசிட்ட ஜகத் காரண இறைவனே முருகவேளாகையாலும், சூரியன் ஒருவனே தன்னியல்பின் னின்று தானாகி விளங்குகின்ற காலத்துக் கதிரெனவும், புறப் பொருள்களை விளக்குகின்ற காலத்துக் கதிரோன் எனவும், தாதாத்மியத்தா லிரு திறப்பட்டு இயைந்து நிற்றல் போல, சைதந்யம் ஒன்றே தன் னியல்பின் னின்று தானாகி விளங்குகின்ற காலத்து முருகவேளெனவும், பிரபஞ்சாகாரத்தை யடைகின்ற போது சத்தி யெனவும் தாதான்

மியத்தால் இரு திறப்பட்டு இயைந்து நிற்கு மாகலின், சத்தி வடிவ வள்ளி தெய்வ யானையார் முருக வேளின் வடிவமே ஆகையாலும் தீயின் சக்தி யொன்றே அடுதலும், சுடுதலு மாகிய தொழில் வேறுபாட்டால், அடுஞ் சத்தியுஞ், சுடுஞ் சத்தியு மென விரு வகைப் படு மாறு போல, மயா சத்தி யொன்றே, இச்சை, ஞான மென்னுங் காரிய வேறுபட்டால், வள்ளி தெய்வ யானையா ராய் விளங்குகின்றன ராகையாலும், சர்வ சராசரப் பிரபஞ்ச சங்களையும் உற்பநஞ் செய்யும் கருப்பாதார கருத்தா வாகிய தந்தை, சேதந வடிவ முருக வேளா கையாலும், அவற்றைப் பெற்று வளர்க்கின்ற தாய், சத்தி வடிவ வள்ளி தெய்வ யானையா ராகையாலும், இவ் வினையாட்டுக்குத் தடத்த இலக்கணங் கொண்டே வியாவகாரிக மாகவும், சங்கற்ப மாத்திரத்தாலும் சீவர்களின் இரு வினை காரண மாகவும்; முருக,வேளிடத் தமைவன வாகலாலும், "தனையு ஞய் வள்ளி மகிழ்தரக் கானிலே மணந்தும் தெய்வயானையோ டிருந்தும்" என்றும், பாரமார்த்திக நிலையில சீவோபகார ஆக மெல்லாம் சொல் மாத்திர மாகையால், இவற்றுள் ஒன்றுந் தா ஞகாது இருந்தபடி யிருத்தலே முருக வேளின் சச்சிதா நந்த மாகிய சொருப விலக்கண மாகையாலும், இங்ஙன் இருத்த லாகிய வீடுபேற்றை யடைதற்குப் பிரம்மாத் மைக்கிய ஞாந சகிதத் துறவே காரண மாகையாலும், அத் துறவை, அதிகாரிகள் அடையும் வண்ணம் ஞாநாசாரியத் திருக் கோலத் துறவி யாய் அம் முருக வேளே க்காட்சி யளித்தருளுகின்முன் ஆகையாலும், புறப் பொருள் ஞாந மெல்லாம் பழமை கொள் ஞாந மாகவும், அகப் பொருள் ஞாநமே! சீவப் பிரம்மைக்கிய ஞாந மாகலாலும், "புதுமை கொள் ஞாநத் துறவியா யிருக்கும்" என்றுங் கூறினர்; இவற்றை, "துறவாதே கட்டறுத்த சோதி யானை" என்னும் அப்ப ரடிகள் திரு வாக்காலும், "இந்த மண்ணகத் தி ஞுவிவ்வு லகிடை, வந்த யோநியெ லாம்வரு வித்திடும், தந்தை யானவை யீன்றளிக் கின்றதாய், அந்த வென்னுடை மாயை யதாகுமால்." (14 குறுநிதம் 5) என்னும் பகவத்

கீதையானும். "எந்தயோ நியிற்பிறப்பார் யார்க்குந்தா யென்மாயை, தந்தையா னெனவறிவார் சனனவினை தப்பு வரால்" (8 புராண புருஷப் பிரதிபாதநம் 4) என்னும் ஈசுவர கீதையானும். "மலையரையன் பொற்பாவை வாணு தலாள் பெண்திருவை, உலகறியத் தீவேட்டா னென்னு மது என்னேடி, உலகறியத் தீவேளா தொழிந்தனனே லுல கனைத்தும், கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங் காண் சாழலோ." (சாழல் 13) என வரும் மணி வாசகத் தானும் உணர்க. 5

6 மதுரையை யாளும் அங்கையற் கண்ணி
மதலையாய்த் தோன்றித்தன் பத்தர்,
புதுமையார் தமிழால் இனியபா மாலை
புனைதர வாற்றலை யளித்துச்,
சதமல வுலக மென்பதை யுணர்த்தத்
தகுந்துற வுருவொடு குருவாய்,
மதுரைசொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) மதுரையை ஆளும்—மதுரை மாநகரத்தைத் தலைநக ராகக் கொண்டு செங் கோ லாட்சி செய்தருளிய, அம் கயல் கண்ணி மதலை ஆய்—மீநாக்ஷி யன்னையாரின் திருக் குமார ராகிய, தோன்றி தன் பத்தர்—(உக்கிர குமார பாண் டியரா ராய்) அவதரித்து தன்னுடைய அடியார்கள். புதுமை ஆர் தமிழால் இனிய பா மாலை—கற்குந் தோறும் இன்பந் தரும் தமிழ் மொழியால் கேட்குந் தோறும் இன்பந் தரும் பா மாலையை, புனைதர ஆற்றலை அளித்து—அலங்கரித்துப் பாட சக்தியை அநுக்கிரகஞ் செய்தருளி, உலகம் சதம் அல என்பதை உணர்த்த-இவ் வுலகம் நிலை யுடைய தன் றென் பதை உபதேசிக்க, தகும் துறவு உருவொடு குரு வாய்— தகுதி வாய்ந்த துறவறத் திருக் கோலந் தாங்கி ஞாநாச்சாரிய ராய், மதுரை சொக்கேசர் கோபுர வடபால் வாழ்- மதுரை

யின்கண் ணுள்ள சோம சுந்தரனு ருடைய ஆ லயத் தி ன் கோபுரத்தினது வட திசைக்கண்ணே யெழுந்தருளி யுள்ள, தண்ட பாணியை பணிவாம்—தண்ட பாணியை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை) தோன்றி புனைதர அளித்து உயர்த்த குரு வாய் வாழ் தண்ட பாணி யெனக் கூட்டுக மலயத் துவசன் மகளா யவதரித்துத் தடாதகைப் பிராட்டியா ரென்னுந் திரு நாமந் தரித்துத் திக்கு விஜயஞ் செய்து, மதுரையைத் தலை நகர மாகக் கொண்டு புவந மெல்லாந் தன் வெண் கொற்றக் குடைக் கீ ழடங்க ஆட்சி செய்த பெருமை தோன்ற, "மதுரையை ஆளும் அங் கயற் கண்ணி" யென் றும், அப் பிராட்டியாரின் திரு மகனு யவதரித்து. உக்கிர வழுதி யென்னுந் திருப் பெயர் பூண்டு, அம் முறையே புல காண்ட மகிமை தோன்ற, "மதலையாய்த் தோன்றி" என் றும், நற் குண முடைய மக்கள் தம் முட் கொண்ட நட்பு பழகப் பழக வின்பந் தருதல் போல, தமிழ் மொழியும் கற்கக் கற்கக்கற்றார்க்குஇன்பந்தருஞ் சிறப்புநோக்கி,"புதுமையார் தமிழ்" என்றும். அடியா ருள்ளத்தி னின்றும் ஊற் றெடுத்த அன்புச் சுவை சொட்டுஞ் சொற் சுவை, பொருட் சுவை மிக்க பா மாலை இறைவன் செவிக் கு ண வா ய் நின் று, அ வ னைப் பத்தி வலை யுட்படுத்தக் காரண மாகலின், "இனிய பா மாலை புனைதர" என்றும், முக் கரணங்களுள் வாக்கின் செய லாகிய பா மாலை சூட்டலே இறைவனுக்கு மகிழ்ச்சி யூட்டுவதாயுஞ், சிறப் புடைத்தாயு மிருத்தலின், உயிர்க் குயிராய்த் தோன்றாத் துணையா யிருக்கு மனேக அன்பர்களுடைய ஊனினை யுருக்கி யுள் ளொளி பெருக்கி யுலப்பிலா வாநந்த மாய தேனினைச் சொரிந்து, அவர்கட்குப் பா மாலை புனையும் ஆற்ற லருளுவன் என்பார், "ஆற்றலை அளித்து" என்றும், வியாவகாரிகத் தன்மையான் வரைந்து கொள்ளப்பட்ட வுலகம் நிகழ் காலத்தே தோற்று மாயி னும், பாரமார்த்திகத் தன்மையான் வரைந்து கொள்ளப் பட்ட வுலகம் முக் காலத்தும் இன்மையானும், இதனை,

அன்பர் கட் குள்ள வா றுணர்த்தும் பொருட்டு வைராக்கியாதி ஞாந சாதந சகித முற்றத் துறந்த முநிவராம் ஞாநாசாரியத் திருக் கோலங் கொண்டான் என்பார், "சத மென வுலக மென்பதை.........குருவாய்," என்றுங் கூறினார். இவற்றை, "பாடும் பணியே பணியா வருள்வாய்" என்னும் அருணகிரியார் திரு வாக்கானும் "நில்லாத வற்றை நிலையினவென் றுணரும், புல்லறி வாண்மை கடை." என்னும் (34 நிலையாமை1) பொய்யா மொழியானும், "ஐயமிலறவி ஞலே யழிவின்றி யகண்ட மாகி, மெய்யெனும் பொருளை நாடி மேவருங் கான னீர்போல், வையக மாதியாக வழங்கிய வுலக மெல்லாம், பொய்யெனு மாயை யாலே பொருந்துமென் றெண்ணல் வேண்டும்." என்னும் பாக வதத்தாலும், "கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்களூர், வாநமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு, பீநமாந் தறிபு மானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே, ஞாநமெய் மகனே யுன்னை நம்மாலை மறந்திடாதே." (1 தத்துவ விளக்கப் படலம் 101) என்னுங் கைவல்ய நவநீதத்தானுங் கண்டு கொள்க. 6.

7. துதிபெறும் வைகை நதிவட பாலுஞ்
சொலுங்கிரு தமாநதி யதுவே,
பறு தென்பா லதனிலு மாகச்
சிறக்குநன் மாலையாப் புனைந்து,
றை செல்வ மாடங்கள் கதித்து
நெருங்கிடச் சிவபுர மெனச்சொல்,
மதுரைச்சொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) துதி பெறும் வைகை நதி வடபாலும் (அன்பர்கள்) துதிக்கின்ற வைகை நதியானது வட பக்கத்திலும், சொலும் கிருதமாநதி தென்பாலதனிலும் ஆக (அன்பர்கள்) துதிக்கின்ற கிருத மா நதியானது தென் பக்கத்திலும் ஒழுகிக் கொண்டிருக்க, சிறக்கும் நல் மாலை ஆ(க) புனைந்து —(அவற்றை)சிறந்த நல்ல மாலை யாக அணிந்து, நிதி பொழு

நிதி நிறை செல்வ மாடங்கள்—நிலைபெற்ற செல்வம் நிறைந்த அழகிய மாடங்கள், கதித்து நெருங்கிட ஒளி விட்டு நெருங்கி யிருக்கின்றமையால், சிவ புரம் எனச் சொல்—திருக் கைலாயம் என்று (ஆன்றோர்களால்) புகழப் படுகின்ற, மதுரை சொக்கேசர் கோபுர வடபால் மதுரை யின்கண் ணுள்ள சோம சுந்தரனு ருடைய கோபுரத்தினது வட திசைக்கண்ணே, வாழ் தண்ட பாணியை பணிவாம்—எழுந்தருளி யுள்ள தண்ட பாணியை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை) திதி பெறு நிதி நிறை செல்வ மாடங்கள் எனக் கூட்டுக. ஆ றில்லா வூருக் கழ கில்லை யாகலாலும், வைகை நதியும், கிருத நதியும், புண்ணிய தீர்த்தங்க ளாகை யாலும், அவற்றைத் தன் னுள்ளே கொண்டு மதுரை மா நகரம் சிறப்புற்ற தாகையாலும், "மாலையாப் புனைந்து," என்றும், மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறப் புற்ற தென்பார், அம் மூன்று லும் சிறப்புற்ற சிவபுரமே மதுரை மா நகர மாம் எனவுங் கூறினர். 7

8. கதிதனைக் கருதுங் கருத்திலா தவருங்
கண்ணினுற் காணினே பாவம்,
பதிதனை நீங்கித் தூரத்தே செல்லும்
பான்மைபெற் றுடையநற் றலமாம்,
நிதிதுனுஞ் செல்வர் மாளிகை நிலவும்
நிரைநிரை வீதிக டுலங்கும்,
மதுரைச்சொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) கதிதனை கருதும் கருத்து இலாதவரும்—முத்தி வீட்டைக் கருதுகின்ற எண்ணம் இல்லாத பாமரரும், பதிதனை கண்ணினுல் காணின் பாவம்—மதுரையைக் கண் களால் தரிசித்தால் பாவமானது, நீங்கி தூரத்து செல்லும் பான்மை—அகன்று சேய்மையிலே செல்லுகின்ற தன் மையை, பெற்று உடைய நல் தலம் ஆம்—பெற்றுள்ள

அந்தகாரம் எவ்வாறு வீட்டைப்பற்றி யிருந்து வீட்டையே மறைக்கிறதோ, அவ்வாறே மாயை யல்லது அஞ்ஞானம் சீவனைப் பற்றிக்கொண்டிருந்து அதன அறிவாகிய கண்ணை மறைக்கிறது.

(இதுகாறும் பகவான் ஆன்ம ஞானத்தால் பெறப்படும் விதேக கைவல்யத்தைப்பற்றிக்கூறியருளினர். இனி ஆன்ம ஞானத்தால் இத்தேகத்திலிருக்கும்போதே யடையத்தக்க ஜீவன்முக்தத் தன்மையைப்பற்றிக் கூறியருள்கின்ருர்.)

ஏ அர்ச்சுனு! சத்துவ ரஜோ தமோகுண பேதங்களான எல்லாச் சீவன்களிடத்தும் அபேதமாய் என்னை எவன் காண்கிருனே அவன் தேகத்தோடிருந்தாலும் தேகம் சம் பந்தமான ஜனன மரணுதிகளைச் சயித்தவனுவான்.

சூரியன் சுத்தமான கங்கா ஜலத்திலும், அசுத்தமான சாக்கடை நீரிலும், நறுமணம் பொருந்திய மலர்மேலும், துர்நாற்றமுடைய மலத்தின் மேலும் பிரகாசித்தாலும் அந்த வஸ்துக்களின் சுத்தா சுத்தங்களால் பற்றப்படாமல், தான் பரிசுத்தமாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. ஆகாயம் இந்த அண்டரண்ட சராசரமனைத்திற்கும் இருப் பிடமாக விருந்துகொண்டு இவற்றின் உட்புறம் எங்கனும் வியாபித்து நின்ருலும் எதிலும் தாக்கற்று இருக்கிறது. அதைப்போலவே பரமான்மா யாவற்றிலும் உள்ளும் புறம்புமாய்ச் சர்வவியாபியாய் நிறைந்து நின்ருலும், எதிலும் தாக்கற்றுப் பரிசுத்தமான சச்சிதாநந்த மயமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அத்தகைய பிரம்மத்தைத் தன் ஆன்ம சொரூபத்தோடு அபேதமாய் எவன் காண் கிருனே அச்சீவன் முத்தன் பிறப்பிறப்பை யொழித்த வனே யாவான்.

சொக்கேசர் கோபுர வடபால்—மதுரையின்கண் உள்ள சோம சுந்தரனுருடைய ஆலயத்தின் கோபுரத்தினது வட திசைக்கண்ணே. வாழ் தண்ட பாணியை பணிவாம் எழுந்தருளியுள்ள தண்ட பாணியை (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று,

(வி-ரை) அதிதிகள் முதலியோரது புகழ்ச்சிக் குரிய தலங்கள் பல விருப்பினும், மதுரை மா நகரமே அவற்றுளெல்லாஞ் சிறந்த தென்பார், "பதிதனில்.................. பொலியும்" என்றார், 9

10. சதியினுல் ஆளும் தன்மையால் பதிக்குச்
சமம்எனச் சாற்றுந்தன் பெருமை,
துதியினுல அன்று உண்மையாம் எனவே
சொல்லும்வே தாந்தங்கள் இயாவும்,
சதியினுல் அன்றிச் சிவனுக்குச் சக்தி
சங்கரர் இலையெனச் சொன்னுர்,
மதுரைச்சொக் கேசர் கோபுர வடபால்
வாழ்தண்ட பாணியைப் பணிவாம்.

(இ-ள்) சதியினுல் ஆளும் தன்மையால்— மீநாக்ஷியாக இருந்து ஆட்சி செய்யுந் தன்மையினுல், பதிக்கு சமம் என சாற்றும்—சிவனுக்கு அம்பிகை சமம் என்று கூறுகின்ற, தன் பெருமை—தன் னுடைய மகிமையானது, துதியினுல் அன்று-தோத்திர மாகச் சொல்லப்படுவது அன்று, உண்மை ஆம் என—எதார்த்தமே ஆகும் என்று, வேதாந்தங்கள் யாவும் சொல்லும்— உபநிஷத்துக்கள் யாவும் கூறுநிற்கும், சங்கரர் சிவனுக்கு சக்தி—(காலடியில் அவதரித்த) சங்கராச் சார்ய ஸ்வாமிகள் இறைவனுக்கு ஆற்றல் வந்தது, சதியினுல் அன்றி இலை என சொன்னுர்—மனைவி யாகிய மீநாக்ஷி யினுல் அன்றி ஸ்வயம் அசக்தர் எனச் சௌந்தரிய லஹரி யென்னும் நூலில் கூறினர் அப்படிப்பட்ட கடவுளுக்கு பிரணவப் பொருளை உபதேசித் தருளிய, மதுரை சொக் கேசர் கோபுர வடபால்—மதுரையின்கண் உள்ள சோம

சுந்தரேசுவரர் ஆலயத்தின் கோபுரத்தினது வடபால், வாழ் தண்ட பாணியைப் பணிவாம்—எழுந்தருளி உள்ள தண்டா யுத பாணியை (மூக் கரணங்களாலும், முப்போதும்) வழி படுவோமாக. எ-று.

(வி-ரை) வேதாந்தங்கள் யாவும் சொல்லும் என க் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. இவற்றை (ஆநந்த லகரி சங்கராச்சாரியர் செய்து, கவி ராஜ பண்டிதர் மொழி பெயர்த்தது.)

1. "சிவமெ னும்பொருளும் ஆதி சத்தியொடு
 சேரின் எத்தொழிலும் வல்லதாம்,
 இவள்பி ரிந்திடின்இ யங்கு தற்கும்அரி
 தரிதெ னுமறையி ரைக்குமால்,
 நவபெ ரும்புவநம் எவ்வ கைத்தொழில்ந
 டத்தி யாவரும் வழுத்துதாள்.
 அவனி யின்கணொ ருதலம்இ வார்பணியல்
 ஆவதோ பரவல் ஆவதோ."

ஆநந்த லஹரி,

"சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: பிரபவிதும்
நசேதேவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திதும் அபி,
அதஸ் த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபி: அபி
பிரணந்தும் ஸ்தோதும் வா கதம்
 அக்ருதபுண்ய: பிரபவதி"

இதன் பொருள்: "ஹே தாயே, எந்தக் காரணத்தினால் பரமசிவன் ஆனவர் பராசக்தியாகிற உன்னுடன் சேர்ந்து கொண்டிருப்பாரேயானால், 'உலகத்தில்' சிருஷ்டி ஸ்திதி சம் மாரம் முதலான காரியத்தை செய்வதற்கு சாமர்த்தியம் உள்ளவராக ஆகின்றாரோ, அந்தப் பரம சிவக் கடவுள் முன் சொன்னபடி உன்னோடு கூடினவராக இல்லாத சமயத்தில் (தான்) அசைவதற்குக் கூட சாமர்த்தியம் உள்ளவராக ஆக மாட்டார் அல்லவா? அக் காரணத்தினால் விஷ்ணு ருத்திரன்

பிரஹ்மா முதலான தேவர்களாலும் கூட பூஜிக்கத் தகுந்தவளான உன்னை, சென்ற ஜந் மங்களில் அளவிடக்கூடாத புண்ணியத்தை செய்யாதவன், (காயத்தால்) நமஸ்காரம் செய்வதற்கோ, (வாக்கினால்) ஸ்துதிப்பதற்கோ, எப்படி. சாமர்த்தியம் உள்ளவனாக ஆவான்'' என வரும் சௌந்தரிய லஹரியினால் உணர்க. 10

மதுரை தண்டபாணி தோத்திரமும், பரிமள நீடாகுரையும் முற்றுப் பெற்றது

# குன்றைக் குடிக் குமர வேள் தோத்திரம்.

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. நின்றன் தியற்கை வேண்டிய தீயு
நீக்கமில் கருணையோ டிலங்கல்,
என்றன தியற்கை வேண்டுத லென்னு
மியல்பினால் இலையெனு தளித்துத்,
தன்தனைத் தன்து சொரூபமா யுணர்த்திச்
சகலவை பவங்களும் விளங்கும்,
குன்றைநன் னகரில் சிகியின்மீ தமருங்
குமரவே ளடியினைப் பணிவாம்.

பத வுரை:-நின் தனது இயற்கை-தேவரீருடைய இறைவனுந் தன்மையானது, வேண்டியது-(அடியார்) விரும்பும் பொருள்களனைத்தையும், ஈயும்—அளிக்கின்ற, நீக்கம் இல்-அழிவின்றிய, கருணையொடு—திருவருள் வடிவாய், இலங்கல்—விளங்குவதாகும், என் தன்து—அடியேனுடைய, இயற்கை—அடியனுந் தன்மை, வேண்டுதல் (தேவரீரிடமே) விரும்பிக் கேட்டலாகும், என்னும் என்று வேதாகமங்கள் கூறும், இயல்பினால்-அங்ஙனங் கூறுவதால்,

இலை யெனுது-(அடியேன் விரும்பிய பொருள்களை) இல்லை யென்று கூறுது, அளித்து—கொடுத்து, தன் தனை—தத்பத லக்ஷியார்த்த மாகிய தேவரீரது பரமார்த்த சொருபத்தை, தனது—துவம் பத லக்ஷியார்த்தமாகிய அடியேனது பரமார்த்த சொருபமாக, உணர்த்தி—உபதேசித்து, சகல வைபவங்களும்—எல்லாப் பெருமைகளும், விளங்கும்—விளங்குகின்ற, நல்—வளப்ப மிக்க, குன்றை நகரில்—குன்றக்குடி என்னுந் திருப் பதியின்கண், சிகியின் மீது-மயில் வாகனத்தின்கண், அமரும்—எழுந்தருளியிருக்கின்ற, குமர வேள்-முருகப் பெருமா ணுகிய தேவரீ ருடைய, அடியினை-திரு வடிகளை, பணிவாம் (முக் கரணங்களாலும்) வழிபடுகின்ருேம். எ-று.

விரி வுரை:- இதனுல் முருகப் பிரான் தன் னடியார்கட்கு இம்மை மறுமை யின்பங்களையும், இறுதியிற் பேரின்பத்தையும், அளிக்கு மியல்புடையா னென்ற தாயிற்று. அன்பால் நினைவோரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவொடு விரைந்து சென்று வேண்டுவன அளிக்கும் அருளே திரு மேனியாக வுடைய னென்பார். "நின்றனை ...........இலங்கல்" எனவும், வேண்டுதல் வேண்டாமை இல்லா விறைவன் அடியார் வேண்டுவன வளிக்கும் விருப்புடைய னுகலின் அவர் அவனிடம் வேண்டுதல் அமைவுடைத் தென்பார், "என்றனை......வேண்டுதல்" எனவும், இங்ஙனம் இறைவன் ஈதலும், அடியார் வேண்டுதலும், ஆண்டா னடிமைத் திறம் பேறும் சோபாதிக நிலையி லென்பார், "இயல்பினுல்.........அளித்து" எனவும், நிருபாதிக நிலையில் ஈவானும், வேண்டுவானும், இறைவனேயாகலின், அவ னருளாலே அவ னுருப் பெறுதல் கூடு மென்பார், "தன்தனை............உணர்த்தி" எனவும், இறைவன் றன்னை யிகழ்வாரின் அறியாமைக்கு இரங்கி அவரைத் தாயன்பாற் றண்டஞ் செய்து, தன் அடிமை யாக்குவ னென்பார், "சிகியின் மீது அமரும்" எனவுங் கூறினுர்.

ஈண்டு இறைவனுந் தன்மைக்குக்'' கருணையோ டிலங்கல்'' எனப், பேரருளுடைமை யொன்றனையே கூறினரேனும், தன் வயத்த னுதல், தூய வுடம்பின னுதல், இயற்கை வுணர்வின னுதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், முடிவி லாற்ற லுடைமை வரம்பி லின்ப முடைமை யாகிய வெழு குணங்களையும், அடியனுந் தன்மைக்கு, ''வேண்டுதல்'' என வரம்பி லின்பமின்மை யொன்றனையே கூறினரேனும், இறைமைத் தன்மைக் கெதிர்மறையாய வெழு குணங்களையும் உபலக்கணமாகக் கொள்க. கூறியவற்றை, ''மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்'' (1-3) என வரும் பொய்யா மொழியானும், ''பொன்னும், மெய்ப் பொருளுந் தருவானைப், போகமுந் திருவும் புணர்ப்பானை'' என வரும் வன் றொண்டர் திரு வாக்கானும், ''பின்னையத் தலைவன் றனைப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்'' (1-13) என வரும் கவின் பெறும் ஞானக் கைவல்லியத்தானும், விரித்துணர்க. 'வேண்டியது' என்னுங் குறிப்பு வினையாலணையும் பெயர், ஈண்டுச் சாதி யொருமையாம். 'என்னும்' என்பது செய்யு மென் முற்றுகலின் 'அதற் கேற்ப' 'வேதாகமங்கள்' என எழுவாய் வருவிக்கப்பட்டது, குமர வேள், என்றவிடத்துக் 'குமரன்' என்பது இனம் விலக்க வந்த அடைமொழி, 1

2. **கன்றதன் முறையே கதறிடு மென்றன்**
**கருத்தினை யுளத்தினிற் கருதா,**
**முன்றவ முயன்ற முனிவரர்க் கருள்செய்**
**முறையினென் னுற்பவ மொழிய,**
**நின்றன துருவை யீவதன் பொருட்டா**
**நிறைபெரும் தவத்தினர் வாழுங்,**
**குன்றைநன் னகரில் சிகியின்மீ தமருங்**
**குமரவே ளடியினைப் பணிவாம்**

(ப-ரை) கன்று அதன் முறையே (ஆவைப் பிரிந்த) கன்று அதனைக் கூவி யழைக்கு மாறு போல, கதறிடும்

கூவி யழைக்கின்ற, என் தன் கருத்தினை—அடியேனது எண்ணத்தை, உளத்தினில் கருதி-(தேவரீர்) திரு வுளத்தில் நினைந்து, என்—அடியேனது, உற்பவம் ஒழிய—பிறவித் துன்பம் நீங்கும் வண்ணம். முன்—முன் னாளில், தவ முயன்ற—தவத்தை முயற்சித்துச் செய்த, முநிவரர்க்கு—குறு முநி முதலிய (சிறந்த) முநிவர்கட்கு, அருள் செய்த முறையின்-திரு வருள் பாலித்த வண்ணமே, நின்தனது உருவை—தேவரீரது (பரமார்த்த) சொரூபத்தை, ஈவதன் பொருட்டாக (அடியேனது பரமார்த்த சொரூப மாக) உபதேசிக்கும் பொருட்டு, நிறை பெரும்—மிக்க பெருமை பொருந்திய, தவத்தினர்—முநிவர்கள், வாழும்—வாழ்கின்ற, நல்—வளப்ப மிக்க, குன்றை நகரில்—குன்றக் குடி யென்னுந் திருப் பதியின்கண், சிகியின் மீது—மயில் வாகனத்தின்கண், அமரும்—எழுந்தருளியிருக்கின்ற குமர வேள்—முருகப் பெருமா னாகிய தேவரீ ருடைய, அடியினை—திருவடிகளை, பணிவாம்—(முக் கரணங்களாலும்) வழிபடுகின்றேம். எ-று.

(வி-ரை) இதனாற் றன்னை இடைவிடாது தியானிக்கும் அடியார்க்கு வேண்டுவன அளிப்பான் முருகப் பிரான் என்றதாயிற்று. ஆவைப் பிரிந்த கன்று அதனை நினைந்து கதறி, அத னடைவை யெதிர் நோக்கி வருந்துங் கால், அதுவுங், கன்றை நினைந்து அத னெதி ருற்றுப் பா லூட்டி யின் பளித்து இன்னல் போக்கிடுதல் போன்று, இறைவனைப் பிரிந்த வுயிரும், அவனை நினைந்து கதறி, அவ னடைவை யெதிர் நோக்கி வருந்துங் கால், அவனும் அதனை நினைந்து எதி ருற்றுத் திரு வருட் பா லூட்டிப் பேரின்ப மளித்துப் பிறவி இன்னல் போக்கிடுவன் என்பார், "கன்றதன்.........கருதி" எனவும், இருமை யின்பங்களையு முவர்த்து, வைராக்கியாதி சாதந சம்பந்நராய் வீடு பேற்றை விரும்பும் ஞாநாதிகாரிகட்கு, இறைவனே ஞாநாசாரிய னாய்த் தோன்றித் தத்துவ மசி மா வாக்கியப்

பொருளை யுபதேசித்து, அவரைத் தன்மய மாக்குவ னென்பார், "நின்றன.........பொருட்டா" எனவும், ஈ, தா, கொடு, என்னும் மூன்றும்—இரத்தற் குரிய மொழிக ளாயி னும், அடியார், ஈயென் றிரக்க, ஆண்டான் ஈவன் என்பார். "ஈவதன்" எனவும், அவத்தொழில் ஒழித்துத் தவத் தொழில் மேற் கொண்டு, தம் மனக் குகையில் குகனை வைத்து, மலை குகையில் என் பெரும் தியங்கு மியாக்கைய ராய்த் தவங் கிடக்குந் தவத்தினர் பல ரென்பார், "தவத்தினர்............குன்றை" எனவுங் கூறினார்.

முனிவரர்:-காம வெகுளி மயக்க மாகிய மூக் குற்றங்களையும் முனிந்து கடிதலும், முற்றத் துறத்தலு மாகிய விவற்றான் மேம்பட்டவர் தவம்:- மனம், பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், தம் முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிற வுயிர்களை யோம்புதலும் ஆம். இவற்றை.- "பால் நினைந் தூட்டுந் தாயி னுஞ் "சாலப் பரிந்து"(பிடித்தபத்து 9)என்னும் மணிவாசகத் தானும், கலந்தார்க்கு அருள்செய்திடுங் கற்பகமே" என்னும் சுந்தரர் திரு வாக்கானும், "அவன்றனையான், பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னா ளழைத்தால், இவனெனைப் பன்னா ளழைப்பொழியா னென்றெதிர்ப் படுமே." என்னும், அப்ப ரடிகளார் திரு வாக்கானும், "அவற்றுள், ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" (சொல் அதிகாரம் எச்ச இயல் 49) என்னுந் தொல்காப்பியத்தானும் உணர்ந்து கொள்க. 2

3. அன்றெனை யழைத்தே யாக்கையீ தெனவு
மறிவதீ தென்னவுங் கேளா
தென்றனை யிங்ங னிகழ்ந்திடா தருளி
யினிவரும் பிறவியும் போக்கி,
நன்றெனப் புலவோர் புகழ்ந்திடுஞ் சோலை
நலங்கிளர் கழனிகள் திகழும்,
குன்றைநன் னகரில் சிகியின்மீ தமருங்
குமரவே ளடியினைப் பணிவாம்.

பதவுரை: அன்று—அந் நாளில், அழைத்து—(ஞானாசாரியனாக) வரிய வந்து ஆட்கொண்டு, யாக்கை—க்ஷேத்திரமாகிய உடம்பின் இலக்கணம், ஈது எனவும்—இத் தன்மைத் தென்று கூறியும், அறிவது க்ஷேத்ரக்ஞனாகிய ஆந்மாவின் இலக்கணம், ஈது என்னவும், இத் தன்மைத் தென்று கூறியும். நன்று என-(அவற்றை) உறுதி பயக்கும் உபதேசமென்று. கேளாத-கேட்டுச் சிந்தித்துத் தெளியாத; என்தனை—அடியேனை, இங்ஙன்—இந் நாளில், இகழ்ந்திடாது—புறக்கணியாது, அருளி—திரு வருள் பாலித்து, இனி வரும்—மேல் வருகின்ற, பிறவியும்—பிறவித் துன்பத்தையும் போக்கி—நீக்கி, புலவோர்-(இந்திராதி) தேவர்களும், புகழ்ந்திடும்—புகழ்கின்ற, நலம் கிளர்-வளப்ப மிக்க, சோலை கழனிகள் திகழும்—சோலைகளும் மருத நிலங்களும் விளங்குகின்ற, நல் குன்றை நகரில்—நல்ல குன்றக் குடி யென்னுந் திருப்பதியின்கண், சிகியின் மீது மயில் வாகனத்தின்கண், அமரும்—எழுந்தருளி இருக்கின்ற, குமர வேள் முருகப் பெருமானாகிய தேவரீருடைய. அடியினை—திரு வடிகளை, பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுகின்றோம்(எ-று)

(வி-ரை) இதனால் இறைவனே ஞானாசாரியனாகத் தோன்றி உபதேசித்துத் தன்னுரு வாக்குவன் என்பதாயிற்று. இரு வினை யொப்பு மல பரிபாகத் தன்மையோடு விவேகாதி சாதந அவதிபரியந்தம் அடைவுற்ற வுயிர்கட்குபதேசித்துத் தன்னுருவாக்கும் வண்ணம் இறைவனே ஞானாச்சாரியனாக வெழுந்தருளுவ னென்பது, நூற்கருத்தும், வாதவூரடிகளார் போன்ற சிவ ஞானியரின் அநுபவமும் ஆகும் என்பார், "அன்றெனை அழைத்து" எனவும், உயிர்களால் அநுபவிக்கப்படுகின்ற போகங்களை, பிருதிவி வடிவ க்ஷேத்திரம் போல, அளவிலா துண்டுபண்ணி எதிரிற் காணப்படுந் தன்மை யுடைமையே க்ஷேத்திரத்திற் இலக்கண மென்பார், "யாக்கை யீதெனவும்" எனவும், உடம்பு வடிவ க்ஷேத்திரத்தைப் பொது வாகவுஞ், சிறப்பாகவும் ஆராய்ந் தறியும் தன்மை யுடைமையே, க்ஷேத்ரக்

ஞனுக் கிலக்கண மென்பார், "அறிவ தீது என்னவும்" எனவும், கருணை மேலிட்டால் இறைவன் குரு வடிவாய் வலிய வந் துபதேசித்தும், அதனை யறிந்து கடைப்பிடிக்கும் அறி வாற்ற லிலாமைக் கிரங்கினேன் என்பார், "கேளாத என் தனை" எனவும், இது போது முன் னுபதேசப் பொருளை யெல்லாம் அறி வாற்றல் கொண்டுச் சிந்தித்துத் தெளிந்தமையின் இறைவன் அருள் பாலித்துப் பிறவி நோய் நீக்கினன் என்பார், "இங்ஙன்......போக்கி" என வும், முருகப் பிரான் தேவ சேனா பதி யாகி இந்திராதி தேவர்களின் இன்னல் துடைத்து இன்புறுத்தின றைகை யால், அவர்கள் குன்றை அடைந்து அவனை வழிபட்டு வாழ்கின்றார்க ளென்பார், "புலவோர் புகழ்ந்திடும் குமர வேள்" எனவும் கூறினர்.

"புலவோர் புகழ்ந்திடுங் குமர வேள்" எனவும், "சிகி யின்மீத மருங் குமர வே" ளெனவும், கூறினமையால், குமர வேள் நல்லார்க்கும். பொல்லார்க்கும் நடுவில் நின்ற 'நடுவன்' என்னும் நயந் தோன்றுதலைக் கண்டு மகிழ்க.

நன் னூலார் எழுத் தென்றுஞ், சொல் லென்றுங், கூறி, ஆகு பெயரால் அவற்றின் இலக்கணங்களை யுணர்த்திய வாறு, ஈண்டும், யாக்கை, அறிவது. என்பவற்றிற்கு ஆகு பெயராய் அவற்றின் இலக்கணங்களைக் கொள்க. (அறி வது-அது-பகுதிப் பொருள் விகுதி.) கேளாத வென்னும் பெய ரெச்சத் தகரம் தொகுத்த லாயிற்று. இவற்றை:-

> "உடம்பெனவு ரைப்பதுயி ருண்பவைக ளெல்லா
> மிடம்படவி ளைப்பதெதிர் காணலுறு மீதாற்
> றிடம்படவு மற்றிதுதெ ரிந்துணரு மெய்கைக்
> கடம்படுமு யிர்ப்பொரு ளெனப்பகர்வர் கற்றோர்."

என வரும் (13-2) (பகவத் கீதை) பரமார்த்த தரிசநத் தாற் கண்டு கொள்க. 3

4. இன் றுநான் வேண்டி யிரப்பதொன் றுண்டு
யாவரும் போற்றவீற் றிருந்து,

உன்றன துருவை யுன்னிடும் வண்ணம்
உடம்பினுக் காற்றலை யுதவி,
மன்றமர் கூத்த னடியினை மறவா
மநத்தினை யீதலாம் ஈயக்,
குன்றைநன் னகரிற் சிகியின்மீ தமருங்
குமரவே ளடியிணைப் பணிவாம்.

(ப-ரை.) இன்று - இந்நாளில், நான் - அடியேன், வேண்டி-விரும்பி, இரப்பது ஒன்று-(தேவரீடத்து) யாசிப்ப தாகிய தொரு விண்ணப்பம், உண்டு-உளது, (அஃதியாதெனில்) யாவரும்-உலக ரனைவரும், போற்ற-புகழு மாறு, வீற்றிருந்து-மேப்பட்டிருந்து, உன் தனது உருவை-தேவரீரது திரு வுருவத்தை, உன்னிடும் வண்ணம்-தியானிக்கும் பொருட்டு, உடம்பினுக்கு-(இப் பூத) வுடலுக்கு, ஆற்றலை உதவி-வன்மையை அளித்து, மன்று-(சிதம்பர சிற்) சபையின்கண், அமர்-பஞ்சகிருத்திய நடஞ் செய்தருளுகின்ற, கூத்தன்-நடேசப் பெருமானது, அடியினை-திரு வடிகளை, மறவா-(என்றும்) மறக்காத, மநத்தினை-மநதை, ஈதலாம்-கொடுத்தருளுதலாகும், ஈய-(அங்ஙனங்) கொடுத்தருள, நல்-வளப்ப மிக்க, குன்றை நகரில்-குன்றைக் குடி யென்னுந் திருப் பதியின்கண், சிகியின் மீது-மயில் வாகநத்தின் கண், அமரும்-எழுந்தருளி யிருக்கின்ற, குமர வேள்-முருகப் பெருமா னாகிய தேவரீரது, அடியினை-திரு வடிகளை, பணிவாம்-(முக் கரணங்களாலும்)வழிபடுகின்றோம் (எ-று)

(வி-ரை.) இதனால் முருகப்பிரான் றிரு வுருவைத் தம் முளத்தில் வைத்துத் தியானிக்கும் வரம் கேட்டவாறாயிற்று. நால் வகைப் பிறப்பு எழு வகைத் தோற்றத் துள்ளும் கிடைத்தற் கரியது மாநுட யாக்கை யாகலின், அஃது தருமை யுடைத் தென்பார், "இன்று" எனவும், இறைவன் றிரு வுருவைத் தியானிக்க, அவன் றிரு வருள் முதற்கண் வேண்டப்படுவ தாகலின், அதனை விரும்பி அவன்கண் இரத்தல் வேண்டும் என்பார், "வேண்டி இரப்ப தொன் றுண்டு"

எனவும், தியாகிக்குங் கால், அநாத்மாகார விருத்திகள் பண்டை வாதனை வயத்தால் வருமேல், அவற்றை விலக்கி இறை யாகார விருத்தியை நிலைபெறச் செய்ய வேண்டு மென்பார், "உன் தன துருவை உன்னிடும் வண்ணம்" எனவும், அசை வின்றி யிருந்து அங்ஙன் தியாகிக்கையில் தெய்வீக சக்தி வளர்ந்து ஞான மேலிட்டு, ஒன்றுறத் தேறலும். உவந்தாரை யாக்கலுங் கைவரப் பெற்று, வானும் வையமும் வந்து தாள் வணங்கு மென்பார், "யாவரும் போற்ற வீற்றிருந்து" எனவும், இறை யுருவை யுன்னுங் கால், ஊ னுறக்கஞ் சுருக்குதலால் உள வாகும் இன்னல் களைத் தாங்கும் உடல் வன்மை வேண்டு மென்பார். "உடம்பினுக் காற்றலை உதவி" எனவும், சிவபிரானே முருகப் பிரானய்த் தோன்றினன் ஆதலின் இவனை வழிபடுவார் அவனையும் வழிபட வேண்டு மென்பார், "மன்றமர்— மாத்தினை" யெனவும் கூறினர். இவற்றை, "உன் பொன் னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்" (1 சிவ புராணம் 32) எனவும், "அவனரு ளாலே அவன் றாள் வணங்கி" (1 சிவ புராணம் 18) எனவும் வரும் மணி வாசகங்களாலும், "உருவாய்த் தெரிந்துன் றன் றன் நாமம் பயின்றேன் உன தருளால்." எனவும், "உன்னடி யென்மனத்தே வழுவா திருக்க வரந்தரல் வேண்டு." மெனவும், வரும் நாவுக் கரசர் திருவாக்கானும், "மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாத மேமனம் பாவித்தேன்." எனவும், "விரும்பி நின்மலர்ப் பாதமே நினைந்தேன் வினைகளும் விண்டன" எனவும், வரும், நம்பி யாரூரர் திரு வாக்கானும்,

> "எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென்
> றேத்திச், சிந்தை செய்பவர்க் கல்லாற் சென் றுகை
> கூடுவ தன்றால்."

என வரும் ஆளுடைய பிள்ளையார் அருள் வாக்கானு முணர்க. 4

5. நின்றிரு நாமம் நித்தமும் செபித்து
நிதியினில் ஆசையை நீக்க,

மென்றிரு மகளிர் மேலுறு காம
வேட்கையைச் சிறிதுமில் லாமல்,
உன்றன தாற்றல் கொண்டியான் நீக்க
உளத்தினில் கருதினேன் அதனல்,
குன்றைநக னகரிற் சிகியின்மீ தமரும்
குமரவேள் அடியினைப் பணிவாம்.

(ப-ரை.) நின்-தேவரீருடைய, திருநாமம்-அழகிய ஆறெழுத்தை, நித்தமும்-(நிரந்தரம் நேயத்தோடும்) இடைவிடாது, செபித்து-செபிக்கின்ற காரணத்தால், நிதியினில்-பொருளிலுண்டாகும், ஆசையை-பற்றை, நிக்க-போக்கவும், மென்மை திரு-மென்மையும் அழகுமுடைய, மகளிர் மேல் உறு-மங்கையர் மீதுண்டாகின்ற, காம வேட்கையை-காம மாகிய பற்றை, சிறிதும் இல்லாமல்-கொஞ்சமும் (மந்தி) லுண்டாகாமல், யான்-அடியேன், உன் தனது-தேவரீரது, ஆற்றல் கொண்டு-வன்மையைக் கொண்டு, நீக்க-போக்கவும், உளத்தினில்-மநத்தில், கருதினேன்-நினைத்தேன், அதனல்-அங்ஙனம் கருதினமையால்(அப் பற்றுகளை நீக்கும் பொருட்டு), நல்-வளப்பம் மிக்க, குன்றை நகர்-குன்றக் குடி யென்னுந் திருப் பதியின்கண். சிகியின்மீது அமரும்-மயில் வாகநத்தின்கண் எழுந்தருளி இருக்கின்ற, குமர வேள்-முருகப் பெருமானுகிய தேவரீரது, அடியினை-திருவடிகளை, பணிவாம்-(முக்கரணங்களாலும்) வழிபடுகின்றேம். (எ-று)

(வி-ரை.) இதனல் பற்றற்ருன் தாளைப் பற்றற்றுத் தியாகிக்க வேண்டு மென்ப தாயிற்று.

"நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க"

என மணிவாசகனர் இறைவன் திருநாமத்திற்கு முதற்கண் வாழ்த்துக் கூறிப், பின்னர் திருவடிகட்கு வாழ்த்துக் கூறியதனலும், ஆஞ்சநேயர் இராம நாம செபத்தாற் கடல் தாண்டிச் சென்றமையானும், அந் நாமத்தை உள்ளன்போடு கண்களில் நீர் மல்கக் கசிந்து செபிக்கின்ற அடி

யார்கள் அவன் றிரு வடி கைவரப் பெற்றுப் பிறவிப் பெருங் கடலைத் தாண்டுவார்க ளென்பார், "நின் றிரு...... செபித்து" எனவும், நிலையில்லாத பொருள் வளர வளர, அதனை யிறுகப் பற்றும் பற் றுள்ளமும் வளர்வதனால், அப் பொருளானது தன்னை யாக்கியவனுக்கு உலோபி என்னும் பட்டப் பெயரை ஆக்குவதோடு நில்லாமல், நிலை யுடைய பே ரின்பம் எய்துதற்குந் தடையாகு மென்பார், "நிதியி னில்......நீக்க" எனவும், மங்கையர் ஆசையே பொரு ளாசையாதி பிற வாசைகட்குங் காரண மாகிப் பே ரின் படைய விழைவாரைப் பிறவிப் பெருங் கடலுள் சுழியாக விருந்து இழுத்து மூழ்குவித்துக் கரை சேரவொட்டாது செய்யு மென்பார், "மென் றிரு......இல்லாமல்" எனவும், அம் மங்கையர் ஆசை பிற வாசைகளினும் வலி யுடைத் தாய்ச் சாதந சம்பந்ந ரல்லாதாரால் நீக்குதற் கரிதாகலின், அதனை யிறைவன் றிரு வரு ளாற்றல் கொண்டு நீக்கவேண்டு மென்பார், "உன் தனது......... கருதினேன்" எனவும், தன்னை முக் கரணங்களாலும் வழிபடும் வாயிலால் அப் பற்றுக்க ளனைத்தையும் நீக்கி, அடியார்கள் தன் னடி சேரும் பொருட்டே இறைவன் ஆங் காங்கே திருக் கோயில் கொண் டெழுந்தருளி யுள்ளா னென்பார், "அதனால்...... அரும்" எனவுங் கூறினர். இவற்றை, "காத லாகிக்க சிந்து கண் ணீர்மல்கி, யோது வார்தமை நன்னெறிக் குய்ப்பதும், வேதநான்கினும் மெய்ப்பொரு ளாவதும், நாத னுமந மச்சி வாயவே." என வரும் ஆளுடைய பிள்ளையார் அருள் வாக் கானும், "மூண்டு பற்றி முழங்கி யெழுங்கனல், ஈண்டு காட்டம் இலதேல் இலதாகும், தீண்டு மப்பொரு ளின் றெனிற் சித்தமும், மாண்டு தோற்ற மிலதாய் மடிந்திடும்." என வரும் தேவிகாலோத்திரத்தாலும், "பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேரா தார்." என வரும் (1-10) பொய்யா மொழியானும், "நற்ற வாவுனை நான்ம றக்கினும் சொல்லும் நாநமச்சி வாயவே." என வரும் தம்பிரான் றோழர் திரு வாக்கானும் பிற வாற்றானு முணர்ந்து கொள்க.

6. நன்றியை மறந்து பாலனு யிருந்த
நாளிலே செய்தபா வங்கள்,
குன்றெனக் குவிந்தே யிருப்பினு மவற்றைக்
குறித்திடா திரக்கம துற்று,
இன்றெனைத் தகுதி யுடையனுச் செய்து
இன்பம தளித்திடு வதற்குக்,
குன்றைநன் னகரிற் சிகியின்மீ தமருங்
குமரவேள் அடியினைப் பணிவாம்.

(ப-ரை) நன்றியை மறந்து-(தேவரீர் செய்த செய்ந்) நன்றியை மறந்து, பாலனுய் இருந்த நாளில்-அறியாமையோடிருந்த காலத்து, செய்த பாவங்கள்-செய்துள்ள (வேதாகம விலக்காகிய) பாவங்க ளனைத்தும், குன்று எனக் குவிந்து இருப்பினும்-மலை போன்று அள விறந் துள்ளன வாகிலும், அவற்றைக் குறித்திடாது-அப் பாவங்களைத் திரு வுளத்திற் கருதாது, இரக்கமது உற்று-கருணையோடு, இன்று-(வேதாகம உணர்ச்சி பெற்ற) இந் நாளில், எனை-அடியேனை, தகுதி யுடையனுகச் செய்து-திரு வருளுக்குப் பாத்திர னுகச் செய்து, இன்பமது அளித்திடுவதற்கு - பே ரின்பத்தைக் கொடுத்தருளுவதற்கு, நல்-வளப்பமிக்க, குன்றை நகரில்-குன்றக் குடி யென்னுந் திருப் பதியின்கண், சிகியின் மீது-மயில் வாகனத்தின்கண், அமரும்-எழுந்தருளியிருக்கின்ற, குமர வேள்-முருகப் பெருமா னுகிய தேவரீரது, அடியினை-திரு வடிகளை, பணிவாம்-(மூக் கரணங்களாலும்) வழிபடுகின்றோம். (எ-று)

இதனுல், உயிர்கள் நன்றி மறந்தாலும், இறைவன் அதற்கிரங்கி அருள் செய்வன் என்பது தாயிற்று.

(வி-ரை.) இறைவன் உயிர்கட்கு உடலாகிய தநுவையும், மந முதலிய கரணங்களையும், உலக மாகிய புவநத்தையும், நுகர்தற் பொருள்களால் உண்டாம் போகத்தையும், கொடுத்து, அவைகளின் நலத்துக்காக அசேதந மாகிய வுடலையும், சேதந மாகிய வுயிரையும், தன் சக்தியினுல்

ஒன்று சேர்த்து, கண் ஒரு பொருளை யறிதற்கு ஆன்ம போதம் துணை செய்வது போன்று, அவ் வுயிர்கள் ஒரு பொருளை யறிதற்கு அச் சத்தியினால் உபகரித்து உயிர்க் குயிராய் நிற்றலையும், உயிர்கள் உடலோடு வாழுங் கால், தான் வகுத்த கட்டளைப்படி நடவாமையால் அவற்றைத் திருத்தி யாட் கொள்ளும் வண்ணம் கருணையோடு செய்யுந் தண்டத்தையும், மறந்து மாக்களாய் வாழ்தல் செய்ந் நன்றி கொன்ற தாகும் என்பார், "நன்றியை மறந்து" என்றும், பால் பருகுங் குழவிப் பருவத்த னல்லன், அறியாமை யுடையன் என்பார், "பாலனாய்" என்றும், உயிர்கள் அறியாமையாற் செய்த பாவங்கள் எத் துணைய வாயினும், இறைவன் அவற்றின் அறியாமைக் கிரங்கித் தன் திருவருட் பார்வையா லவற்றை யொழித்துப் புனித மாக்கித் திரு வடியிற் சேர்ப்பன் என்பார், செய்த பாவங்கள்...... உற்று" என்றும், உயிர்கள், தாம் முன்னர் நன்றி மறந்த குற்றத்தை வேதாகம வுணர்ச்சி பெறுங்கால் நினைந்து வருந்தி உடல் பொரு ளாவி மூன்றினும் வைத் துள்ள பற்றாகிய தற் போதத்தை யிழக்கு மிடத்து, அவ னடிமையாந் தன்மைக்குப் பாத்திர மாகு மென்பார், "இன்றேனை...... செய்து" என்றும், அங்ஙன் அடிமையாந் தன்மைக்குப் பாத்திர மான வுயிர்களை யழைத்துப் பே ரின் பளிக்கவே ஆங் காங்கு திருக் கோயில் கொண் டெழுந்தருளி யுள்ளான் என்பார், "இன்பமது...... அமரும்" என் றுங் கூறினார். 'குன்று' என்னும் உவமை ஈண்டு வடிவு பற்றி வந்தது. இரக்கமது, இன்பமது, என்ற விடத்து (அது) பகுதிப் பொருள் விகுதிகள்., (இவற்றை)

"காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற கண்ணிலாக் குழவி யைப்போல்-கட்டுண்டி ருந்தவெமை வெளியில் விட் டல்லலாங் காப்பிட்ட தற்கி சைந்த-பேரிட்டு மெய்யென்று பேசுபாழ் பொய்யுடல் பெலக்கவினை யமுத மூட்டிப்-பெரியபுவ னத்திடைப் போக்குவர வுறுகின்ற பெரியவிளை யாட்ட மைத்திட், பேரிட்ட

தன்சுருதி மொழிதப்பில் நமனைவிட் டிடருறவு றுக்கி
யிடர்தீர்த்-திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி லிசைந்
துதுயில் கொள்ளி னென்றே, சீரிட்ட வுலகன்னை வடி
வான வெங்கையே சிந்தாந்த முத்தி முதலே-சிரகிரிவி
ளங்கவரு தட்சிணு மூர்த்தியே சிந்மயா நந்த குருவே.''
என வரும் தாயுமான வடிகளார் அருள் வாக்கா னுணர்க.

7. மென்தளிர் மேனி மெல்லியல் இருவர்
மேவிட வீற்றிருந் தருளும்,
நின்திருக் கோலம் நினைந்துநைந் துருகி
நிமலநின் னடியிணைப் பரவி,
மன்திரு மோக்ஷ நிலையினை யடைந்து
மன்னுநின் வடிவமா வதற்குச்,
குன்றைநன் னகரிற் சிகியின்மீ தமருங்
குமரவேள் அடியிணைப் பணிவாம்.

(ப-ரை.) மென்மை தளிர்-மென்மை யாகிய தளிர் போன்ற, மேனி-திரு மேனியை உடைய, மெல் இயல் இருவர்-வள்ளி யன்னையார், தெய்வ யானையார் ஆகிய இருவரும், மேவிட-(இரு மருங்கும்) எழுந்தருளி யிருக்க. வீற்றிருந்து-(மேன்மையோ) டெழுந்தருளி யிருந்து, அருளும்-(உயிர்கட்கு) அநுக்கிரகம் செய்கின்ற, நின்-தேவரீரது, திருக் கோலம்-திரு வோலக்கக் காட்சியை, நினைந்து-தியானித்து, நைந்து-(மநம்)நெகிழ்ந்து, உருகி-உருகப் பெற்று, நிமல-தூய்மை யாகிய, நின்-தேவரீரது, அடியிணை-திருவடிகளை, பரவி-துதித்து, மன்-நிலைபெற்ற, திரு-அழகிய, மோக்ஷ நிலையினை-வீடுபேற்றை, அடைந்து-பெற்று, மன்னும்-நித்திய மாகிய, நின்-தேவரீரது, வடிவம் ஆவதற்கு-சொருப மாக நிலைக்கும் வண்ணம். நல்-வளப்பம் மிக்க, குன்றை நகரில்-குன்றக்குடி யென்னுந் திருப்பதியின்கண், சிகியின் மீது அமரும்-மயில் வாகநத்தின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, குமர வேள்-முருகப் பெருமா னாகிய தேவரீரது, அடியிணை-திரு வடிகளை, பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுகின்றோம். (எ-று)

(வி-ரை.) இதனால், இறைவன் தடத்த விலக்கணங் கொண்டு உயிர்கட்கு அருள் செய்வன் என்பது தாயிற்று. சச்சிதாநந்த வடிவ சொருப விலக்கண முடைய இறைவன், ஈசாநம், தற் புருடம், வாமநம், அகோரம், சத்தியோ சாதம், அதோமுகம், என்பன வாகிய அறு முகங்களும், பன்னிரு தடந் தோள்களும், பிற திருக் கோலங்களு முடைய னாய், இச்சா ஞாநங்க ளாகிய அருட் சத்திக ளிருவரும் தன் அண்மையி லிருந்து, அருள் செய்யும் தடத்த விலக்கணங் கொண்டு, அடியார்கட்கு அருள்பாலிக்கும் வண்ணம் எழுந்தருளி யிருப்பா னென்பார், "மென்தளிர்... வீற்றிருந்தருளும்" எனவும், அங்ஙன் எழுந்தருளியிருக்குந் திருக் கோலத்தை, "ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள அளப்பருங் கரணங்கள் நான்கும், சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமே யாக" நினைந்து துதிக்கும் அடியார் உளக் கமலத்தில் விரைந்து சேருவன் என்பார், "நின்திரு... பரவி" எனவும், இங்ஙன் இடைவிடாது நினைந்து துதிக்கும் அடியருளத்தில், இறைவன் அறி வுருவாய் நின்று திரு வருள் புரிந்து அவரைத் தன் னுரு வாக்கி வீடுபே றடையச் செய்வன் என்பார், "மோக்ஷ... வடிவம் ஆவதற்கு" எனவும் கூறினார். தளிரென்னும் உவமை, ஈண்டு பண்பு பற்றியது. மெல்லியல் இருவர் என்பது அடி யளந்தான் என்பது போன்று பெயரளவாய் நின்றது. இவற்றை:- "மின் னிரண் டன்ன நுண்ணிடை யரிவை மெல்லிய லாளையோர் பாகமாப் பேணி." என வரும் திரு ஞாந சம்பந்தர் திரு வாக்கானும், "பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால் பற்றுநான் மற்றிலேன் கண்டாய்." (வாழா பத்து 6) என வரும் மணி வாசகத்தானும், "கொத்தார்மலர்க் குழலாளொரு கூறுடையடி யவர்பால், மெய்த்தாயினு மினியானை." என வரும், சேக்கிழார் அருண் மொழியனும். "வெந்தகுவர்க் காற்றுத விண்ணோர்முறைக்கிரங்கி யைந்துமுகத்தோ டதோமுகமுந் தந்து திருமுகங்க ளாறுகி." என வரும், குமர குருபர வடிகளார் திரு வாக்கானும், "சிந்தையுள் உருகிச்

ஆசையொழியும். மனம் இச்சாசொரூபமானதால் இச்சை ஒழிந்தால் விறகற்ற தீப்போல் மனம் மாயும். இதுவே உத்தம மார்க்கமாம்.

2-வது சாது சங்கம்—தத்துவ விசாரத்தை உணரக் கூடாதவர்களுக்கும் அதை மறக்கும் சுபாவமுடையோர்க்கும் சாதுசங்கமே மனநிக்கிரகம் செய்ய உபாயமாம். சாது சங்கத்தால் அடிக்கடி தத்துவ உணர்ச்சியும், சிந்தனையும் உண்டாகும், இவையே வைராக்கியம் எனப் பகவான் கூறியது.

3-வது பிராணனை அடக்கல்—குரு மூலமாய் பிராணாயாம அப்பியாசத்தில் திடமுண்டாவதாலும், யுத்தியாலும், பிராண சலனம் அடங்குகிறது. அது அடங்க மனமடங்கும். இதுவே அப்பியாசத்தால் மனவொடுக்கம் பெறுவதாம்.

[முக்கியமாய் இச்சை ஒழியவே மனம் ஒடுங்குதற்குபாயமாகும். அப்போது மனம் தானே ஒடுங்கும். மனம் எழற்கு மூலமாயுள்ளது இச்சையே. இச்சை ஒழிந்தால் உலக வாசனையே ஒழியும். அதோடு நாம ரூப நாட்டம் ஒழியும். அது ஒழியின் ஞானோதயம் உண்டாகும். உலக சம்பந்தமான யாவற்றையும் வெறுத்தாலன்றி மோக்ஷம் கிட்டாது.

"மனநாசமே ஞானத்திற்கு முக்கிய சாதனம். மனமே மாயை, இச்சையே மனதின் சொரூபம். இச்சை ஒழியின் மனம் மாளும். ஆதலின் இச்சையே மாயையின் சொரூபம்; இச்சா நாசமே மோக்ஷம்," என்று வசிஷ்ட முனிவர் ஸ்ரீ இராமருக்குக் கூறினார்.

ய ஞக்குதற்கு - அடியவ ஞகச் செய்யும் பொருட்டு, நல்-வளப்ப மிக்க. குன்றை நகரில்-குன்றக் குடி என்னும் திருப் பதியின்கண், சிகியின் மீது-மயில் வாகநத்தின்கண் எழுந்தருளி யிருக்கும், குமர வேள்-முருகப் பெருமா ஞகிய தேவரீரது, அடியினை-திரு வடிகளை, பணிவாம், (முக் கரணங்களா லும்) வழிபடுகின்றோம். (எ-று)

இதனல், அடியார்க் கடிய ராகிய தம் பிரான் தோழ ரடைந்த அருள் நெறி வேண்டு மென்பதாயிற்று.

(வி-ரை.) வழங்கிப் புரிந்து அடிய ஞக்குதற்கு அமரும், எனவும், இயற்றி உரைக்கும் அடியார் எனவுங் கூட்டிப் பொருள் கண்டு கொள்க.

முன் செய் நல் வினைப் பயனல் இறைவனிடத்து அன்பு பூண்டு, அவ னருள் வழி நின்று நினைத்த காரியங் களை முடிக்க, அவ் விறைவனை வேண்டினல், அவற்றை அவன் முடித்துவைப்பன் என்பதும், யாவ ராயினும் நெறி தவறி யொழுகினல் இறைவன் நடு நிலையி லிருந்து அவரைத் தண்டிப்பன் என்பதும், அங்ஙன் தண்டித்த போதிலும், தம் முடைய குற்றத்தை உணர்ந்து வருந்தி மெய் யன் போடு இறைவனிடம் முறையிட்டுத் தம் முடைய துயரைப் போக்க வேண்டு மென்று வேண்டுவார்க்கு அவன் அருள் புரிவான் என்பதும், 'நான் எனது' என்னும் பற்றுக்களால் துன்பங்கள் உண்டாகின்றன வாகையால், அவை யெல் லாம், பற்றுக்களை நீக்கி இறைவனிடம் அன்பு செலுத்திப் பே ரின் படைதற்காக அவனலேயே கொடுக்கப்பட்டன வென்று நினைந்து, அவன் மீதுள்ள நம்பிக்கையை இழத்த லாகா தென்பதும், இல் லற மாகிய நல் லறத்தில் ஒழுகும் அடியார்கள் உலக போகங்க ளாகிய சிற் றின்பங்களை இறை வன் திரு வருள் வழி நின்று அநுபவிக்குங்கால் அவ் வின் பங்களே பே ரின்ப மாக மாறுகின்றன என்பதும், இவை போன்ற பிறவும், தம் பிரான் றோழர் வர லாற்றினல் அறி யப்படுகின்றமையால், அது சிறப்புடை வாழ்க்கை யென்

பார், "வன் றொண்டர்... வழங்கி" எனவும், ஆ ளுடை நம்பி, தன்னை அடியார்க் கடிய னாகக் கருதிய பெருந் தகை மையே தனக்கும் வேண்டு மென்பார், "அடிய னுக்குதற்கு" எனவும் கூறினார். இவற்றை:—

"எல்லார்க்கும் இல்லை யென்னாது அருள் செய்வார்" எனவும், "பின்னையென் பிழைமைப் பொறுப்பானைப் பிழை யெலாந் தவிரப் பணிப்பானை". எனவும், "பத்தராய்ப் பாவிப்பார் பாவமும் வினையும் போக விட்டானை." எனவும், "பாட்டும் பாடிப் பரவித் திரிவார், ஈட்டும் வினைகள் தீர்ப் பானை". எனவும, "ஊனைப் பெருக்கி யுன்னை நினையா தொழிந்தேன்". எனவும், "ஊனைக் காவல் கைவிட் டுன்னை உகப்பார் உணர்வாரே". எனவும், "புல் நுனிப்பனி வெங் கதிர் கண்டாற் போலும் வாழ்க்கை".யெனவும், "தொடர்ந் திடும் கடும்பிணி தொடர்வறுத் தானை". யெனவும், "சார்ந் தனன் சார்ந்தனன் சங்கிலி மென்றோள், ஆர்ந்தனன் ஆர்ந் தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே". யெனவும், வரும் ஆ ளுடை நம்பியின் அருள் வாக்கானும், பிற சான்றோர் பெரு வாக்கானும் உணர்க. 8

9. என்றுமென் மலரால் இருமறை யடியை
யெழிலுற வருச்சனை யியற்றி,
துன்றுசொன் மலராற் றொடுத்தபா மாலை
தூயநற் றிருவடிக் கணிந்தே,
அன்றுசொல் மறையின் அவதியில் விளங்கு
மருளுநின் னுருவதா யிலங்கக்,
குன்றைநன் னகரிற் சிகியின்மீ தமருங்
குமரவேள் அடியிணைப் பணிவாம்.

(ப-ரை.) என்றும்-எந்நாளும். மென்மை பொருந் திய, மலரால்-(பல வகை) மலர்களினால், இரும்-பெருமை மிக்க, மறை அடியை-தாமரை மலராகிய திரு வடியை, எழில் உற-அழகு பொருந்த. அருச்சனை இயற்றி-அருச்

சித்து, துன்று-(பொருள் நயம்) மிக்க, சொல் மலரால்-சொற்களாகிய மலர்களினால், தொடுத்த-தொடுக்கப்பெற்ற, பா மாலை-பாக்களாகிய மாலையை, தூய-பரிசுத்த மாகிய, நல்-நல்ல, திரு அடிக்கு-திரு அடிகட்கு, அணிந்து-சாத்தி, அன்று-(சிருட்டியின்)ஆதியில், சொல்-(தேவரீர்)திரு வாய் மலர்ந்தருளிய, மறையின்-வேதங்களின், அவதியில்-முடிவில், வளங்கும்-இலங்குகின்ற, அருளும்-(அடியார் வேண்டுவன) அளிக்கும், நின்-தேவரீருடைய, உருவது ஆய்-வடிவமாக, இலங்க-விளங்கும் வண்ணம் அநுக்கிரகஞ் செய்ய, நல்-வளப்ப மிக்க, குன்றை நகரில்-குன்றக் குடியென்னுந் திருப் பதியின்கண், சிகியின் மீது-மயில் வாகனத்தின்கண், அமரும்-எழுந்தருளியிருக்கின்ற, குமர வேள்-முருகப் பெருமானாகிய தேவரீரது, அடியிணை-திரு வடிகளை, பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுகின்றோம். (எ-று.)

இதனால், இறைவன் திரு வடிக்கு மென் மலர் மாலையும், சொன் மலர் மாலையும், அணிந்து வழிபட்டு அவன் திருவுருப் பெற வேண்டுமென்ற வாறாயிற்று.

(வி-ரை.) பிறவிப் பிணிக்கு மருந்தாகு மென்பார், "நல் திரு வடி" என்றார். இறைவன் திரு வடிக்கண் பேரன்பு பூண்ட அடியார்கள் எளிதிற் கிடைக்கத் தக்க இலை மலர் நீர் முதலியவற்றால் வழிபாடு செய்யினும், அவற்றை யரி தாகக் கொண்டு அவர்களைக் கர்ம பந்தங்களினின்றும் விடுபடச் செய்து பேரின் பளிப்ப னென்பார், "என்றும் ... இயற்றி" எனவும், இறைவனது பொருள் சேர் புகழைச் சொன் மலராற் றொடுத்து அவன் றிரு வடிகளில் வீழு மாறு திருத் தோள்களி லணிந்த நால்வர், பன்னிருவ ராதியோர் போல, நாமுஞ் சொன் மாலை தொடுத் தணியின், இளம் பாவையர் உரைகளைக் காமுகர் கேட்டு மகிழ்ந்தவர்க் காவன செய்வது போன்று, அவன் விரும்பிக் கேட்டு வீடு பே றளிப்பன் என்பார், "துன்று—அணிந்தே" எனவும், சாம வேத சாந்தோக்கிய உபநிடதமானது

"தத்துவமசி மா வாக்கியத்தால் ஜீவப் பிரம ஐக்கியத்தைத் விட்டு விடாத விலக்கணையாற் போதித்தலின், அதுவே தாருக விளங்கும் வண்ணம் அநுக்கிரகிக்க வேண்டுமென் பார், "அன்று... இலங்க" எனவுங் கூறினார். இவற்றை, "பூவார் மலர்கொண் டடியார் தொழுவார்," என வரும் ஆளுடைய பிள்ளையார் அருள் வாக்கானும், "போதலர் இலைகாய் நீரே பெற்றதே கொண்டு போற்றிக், காதலாற் றாய அன்பர் தந்ததே களித்துக் கொள்வன்." என வரும் (9-19) பரமார்த்த தரிசநத்தானும், "இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன். பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு." என வரும் (1-5) பொய்யா மொழியானும். 'வாழ லாமரன் புகழின மலர்கவி மாலைசெய் தவன்றனில், விழு மாறுபொன் னிகழிசேர் தோள்களின் மீதணிந் திலை நெஞ்சே, தாழு வாயரி தேடுபொற் சரணமே சரணமென் றிதுவன்றிப், பாழி லேகருங் காக்கைபோற் கருதினாட் பலகழித் தொழியேலே" என வரும் (சதகம் 43) சாந்த லிங்க அடிகளார் பெரு வாக்கானும், "மல்லே புரியன் றிருவா குவிலென், சொல்லே புனையும் சுடர்வே லவனே." என வரும், (29) கந்தர் அநுபூதியானும், "பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர் காள், இம்மை யேதரும் சோறுங் கூறையும் ஏத்த லாம் இடர் கெடலுமாம், அம்மை யேசிவ லோக மாள்வதற் கியாது மையுற வில்லையே." என வரும் பரவை கொண்கர் திரு வாக்கானும், பிற வாற்றானும் உணர்க. 9

10 நின்றுமுன் னுருகி நித்தமும் நினது
நீக்கமில் உருவதை நினைந்து,
சென்றுசென் றுனது திருவடி மலரைச்
சிந்தையில் திகழ்தர நிறுத்தி.
குன்றவர் குலத்துக் குமரியும் கயத்தின்
குமரியு மேவுநிற் காண,
குன்றைநன் னகரில் சிகியின்மீ தமரும்
குமரவேள் அடியினைப் பணிவாம்.

(ப-ரை) முன் நின்று - (தேவரீரது திரு) முன்பே நின்று, நித்தமும்-எந் நாளும், நீக்கம் இல்-(துவம் பத லக்ஷி யார்த்த மாகிய அடியே னுடைய வடிவத்திலும்) வேறு காத, நினது-தேவரீ ருடைய, உருவதை - (தத் பத லக்ஷி யார்த்த மாகிய) வடிவத்தை. உருகி நினைந்து-(மநம்) உரு கப் பெற்றுத் தியாநித்து, சென்று சென்று-(நா டோறும் பன் முறையும் நின் திரு முன்பு) வந்து, உனது-தேவரீரு டைய, திரு அடி மலரை-திரு அடித் தாமரைகளை, சிந்தை யில்-மநத்தின்கண், திகழ்தர-விளங்கு மாறு, நிறுத்தி-வைத் துத் தியாநித்து, குன்றவர் குலத்து-வேடர் குலத்து வளர்ந்த, குமரியும்-வள்ளி நாயகியாரும். கயத்தின் குமரியும்-தெய்வ யானை அம்மையாரும், மேவும் - (இரு மருங்கும்) எழுந்தருளி யுள்ள, நின்-தேவரீ ருடைய திருக் கோலத்தை, காண-கண்டு பே ரின் படையும் வண்ணம், நல்-வளப்ப மிக்க, குன்றை நகரில்-குன்றக் குடி என்னுந் திருப் பதி யின்கண். சிகியின் மீது-மயில் வாகநத்தின்கண், அமரும்-எழுந்தருளியிருக்கின்ற, குமர வேள் - முருகப் பெருமா னுகிய தேவரீ ருடைய, அடியிணை-திரு அடிகளை, பணி வாம் (முக் கரணங்களாலும்) வழிபடுகின்றோம். (எ-று.)

(வி-ரை) இதனுல், துவம் பத லக்ஷியார்த்த மாகிய தன்னை, தத் பத லக்ஷியார்த்த மாகிய இறைவ னுகவே சிந் திக்க வேண்டு மென்று கூறிய வா ருயிற்று. தத் பத லக்ஷி யார்த்த மாகிய பிரம்மமே, துவம் பத லக்ஷியார்த்த மாகிய நான் என, துவம் பத லக்ஷியார்த்த மாகிய நானே தத் பத லக்ஷியார்த்த மாகிய பிரம்மம் என, இவ் வாறு ஓதப் புரோத பாவ மாகச் சிந்தித்துப் பிரம்மமே தா னுக விளங்குதலே ஜீவன் முக்தி யென்பார், "நினது நீக்கமில் உருவதை நினைந்து" எனவும், இறைவன் திரு உருவை நா டோறும் கண் ணுரக் கண்டு, வாக் காரத் துதித்து, மந மார நினைக் கும் வாய்ப்புக் கிடைக்குமேல், அதுவே மனித வுடம்பினைப் பெற்ற பய னுக வுளதாகையால், அவ் வாய்ப்பும், அவ் வுடம்புமே வேண்டும் என்பார். "சென்று...... நிறுத்தி"

எனவும், முருகப் பிரான் இச்சா ஞான சத்திக ளாகிய இருவரோடும் எழுந்தருளியிருந்து வேண்டுவார்க்கு வேண்டுவன அளிப்பான் என்பார், "குன்றன்......காண" எனவுங் கூறினார். 'நீக்கமில் உருவம்' என்பதற்கு, சர்வ சராசரப் பிரபஞ்சங்களிலும் வியாபித்து அவையே தானாகி வுள்ள விசுவ ரூபம் எனவும் பொருள் கொள்ளலாம். இவற்றை, "அறியும் பொருளன் றறியாப் பொருளன் றறிவா கியநீ யெனும்அப் பொருள்தான்." என வரும் சசிவந போதத்தானும் "தானே கடன்மலை யாதியு மாய்நிற்கும், தானே திசையொடு தேவரு மாய்நிற்கும், தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்கும், தானே யுலகிற் றலைவனு மாமே." என வரும் திரு மந்திரத்தானும், "அதல விதல முதலந்தத் தலங்க ளென அவனி யெனவமரண்டத்த கண்டமென, அகில சலதி யெனவெண் டிக் கில் விண் டுவென வங்கியானு, அமுத கதிரென வந்தத்து மந்த்ர மென, வறையு மறைகளி னருந்தத்து வங்களென, வணுவி லணுவென நிறைந்திட்டு நின்றதோர். பரப்பிரகாசம்." என வருந் திருப் புகழானும், "திக்குங் காலமு முதலிய வசத்துரு சிறுவடி வறத்துன்பம், தொக்க வன்னவற் றுன்மறை யாமலே சூக்கமாய் நொய்தாகி, மிக்க சோதியாய் அனைத்துமா யொன்றுமாய் மெய்யறி வொன்றேயாம், தக்க விந்நிலை நில்லென வுரைத்தனன் தலைமையா முபதேசம்" எனவும் வரும் (6-10-11) ஞான வாசிட்டத்தானும் உணர்க. 10

குன்றக் குடி குமர வேள் தோத்திரமும்,
பரிமள தீப உரையும் முற்றுப் பெற்றது.

சிவமயம்

# திருச் செந்தூர் குமர வேள் (முருகன்) தோத்திரம்.

(எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.)

1. அந்திக்கோன் இலங்கு மந்தியி லாரு
மலைகடற் கரையினில் அமர்ந்து,
புந்தியிற் றனது வடிவினைப் புகுத்திப்
போனக ஞானம தாரக்,
கந்துவாய் நிலவிக் கடற்பெருங் கரையில்
கவின்பெற இருவரோ டென்றுஞ்,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
நிதம்பணிந் திடரொழித் திடுவாம்.

(பதவுரை) அந்திக் கோன் (பூரணச்) சந்திரன், இலங்கும்-பிரகாசிக்கின்ற, அந்தியில் - இரவில், ஆரும் அலை கடல் கரையினில் அமர்ந்து - (சான்றோர்கள்) நிறைந்த அலை வீசுகின்ற கடற் கரையி லிருந்து, புந்தியில் தனது வடிவினை புகுத்தி-மநத்தின்கண் தனது திருவுருவத்தை எழுந் தருளச் செய்து, ஞான போனகம் ஆர-ஞானாமிர்தத்தை உண்ண, கந்துவாய் நிலவி-பற்றுக் கோடாய் நின்று, கடல் பெரும் கரையில் கவின் பெற-அக் கடலின் பெரிய கரையில் அழகு பொருந்த, என்றும் இருவரோடு-எந் நாளும் (அன்னையார்) இருவரோடும், செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை-திருச் செந்தூ ரென்னுந் திருத் தலத்தி லெழுந்தருளி யுள்ள முருகப் பெருமான் றன் திருவடித் தாமரைகளை, நிதம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்-நா டோறும் (முக் கரணங்களினாலும்) வழிபட்டுப் பிறவித் துன்பத்தினை நீக்குவோம்.

(எ-று)

(வி-ரை) ஆன்மாக்களின் இதய மாகிய குகைக் கண்ணே அந்தரியாமியா யிருந்து அவற்றின் கருமாநுசார மாய்ப் போகங்களை நுகர்வித்துக் குகன், என்னுந் திரு நாமம் பெற்றுளா னாயினும், தன் னிலையைக் குருபரன் வாயி லாக வுணர்ந்து சிந்தியாதாருக்கு வெளிப்படா னாய் மறைந்துளா னாகையாலும், புறத்தே வணங்கப் பெறும் அவன் றிரு வுருவினைப் பயிற்சி வலியால் அகத்தே நிறுவிச் சிந்தித்துப், பின் சிந்திக்கின்ற தானும், சிந்திக்கப்படு மவ னும், சிந்தனையு மாகிய, மும்மையும் அவனே யெனக் கண்டு தானும் அவனே யாக நிற்றலே சொரூப சமாதியாகலா னும், அந் நிலை யடையாப் புற நாட்ட முடையார்க்கு அவர், நெஞ்சமே பிணி யாகவும், பகை யாகவும், சோக மாகவும், மோக மாகவும், வீ டெய்தத் தடை யாகவும், இரு ளாகவும் மற்றும் "பல வடிவங்களையும் கொள்ளு மாகலானும், அதனை அங்ஙனம் வடிவு கொள்ள விடாது குரவன் திரு வருட் றுணை கொண்டுத் தூய்மை செய்து முருக வேளை யதன்கண் இலகச் செய்தல் வேண்டு மென்பார்;- "புந்தியிற் றனது வடிவினைப் புகுத்தி" என் றும். அங்ஙன் இறை யொளி பெற்று விளங்கு மகம் ஜீவன் முக்தி விலக்ஷணாநந்த மாகிய பே ரின்பம் நுகரு மாகலின், "போகக ஞாநமது ஆர" என்றுங் கூறினார், இவற்றை, "நின்பெற்றி தன்னை நினைக்கவொண் டோ நெஞ்ச மே நிறையப். பொன்பெற்று வைத்தும் பொதிந்துகொ ளாய்புன் குரம் பயிலே, தன்பெற்றி தன்னைத் தருந்தம்பி ரான்வந்து சார்ந் திருப்ப, என்பெற்றி நீயிந்தி யஞ்சொன்ன வா செய்தி ளைக்கின்றதே." என்னும், தத்துவ ராய சுவாமிகள் திரு வாக்கானும், "அன்பிலா நெஞ்சம் அரும்பிணி யெனவும் அளவிலாப் பகைமைக் கெனவும், துன் ப மா ர் சோக மோகமே முதலாந் துயரெலாம் விளைநில மெனவும், இன் பளி டெய்தா நிதற்றடை யூறு மிருளுமென் றியம்புவர் பெரியோர், துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே துணையலே துணையலே யெனக்கே." என்னும், மூல [illegible] னும், புலையுறு செயலால் புலனுறு போகப் புகலரும் விடத்

தையே நுகர்தற், கலமரு கவலைக் கடலுளே தலைகீ ழாகவே விழுந்தழி நெஞ்சே, கலைகளி னுணர்வுக் கரியநற் சொருபன் கழல்களை நினைந்துநைந் துருகி, யெலையறு மன்பாம் அமுதினை விரும்பா தேதுகொண் டென்செய்தாய் கெடுவாய்.'' என்னும் அநுபவ சாரத்தாலும் உணர்க. ஞான மது-அது பகுதிப் பொருள் விகுதி. சான்றோர், செந்தில் வாழ் கந்தனை யுட்புகுந்து கண்ணுரக் கண்டு வெளிவந் தவனை மனக் கண்ணுற் கண்டாறியிருந் தின்புறுதற் கேற்ற காலம் கடல் பெருகப் பிறை வளரும் பூருவபக்க இரவுக் காலமாதலின். ''அந்திக்கோ னிலங்கும் அந்தியில்''என்றனர் தனித் தமர்ந்து தியானிப்பா னிப்பாருக் குறுதுணை யாகும் ஆதலினுைனும் பெருகி ஓ வெனு மோலி செய்திலகலான் வேறு வழியிற் கண்ணையுங்காதையுஞ் செலவிடா துட்புகுத்தலானும்''அந்தியிலாரு மலைகடற் கரையினிலமர்ந்து,'' எனக்கடற் கரையந்தியில் தியானிப்பாருக்குத் தக்க இடமாதலைக் குறித்தனர்.

2. அந்தியில் புகுந்தே அமரர்கள் பரவி
அடிதொழும் அன்பினைப் பெருத,
புந்தியார் அடியேம் பொய்ம்மையைத் தவிர்த்துப்
போதமார் முத்திநன் கருள,
வந்தியா னின்றூர் வினைகளைப் போக்கி
வாழ்வொடு ஞானமீந் தருள,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(ப-ரை) அந்தியில் புகுந்து-காலை மாலை யந்திகளில் (காலை யந்தி மாலை யந்திகளில்) வந்து, அமரர்கள் பரவி அடி தொழும் (இந்திராதி) தேவர்கள் துதித்துத் திரு அடிகளை வணங்குகின்ற, அன்பினை பெருத புந்தி ஆர் அடியேம்-பக்தியைப் பெருத மநத்தை யுடைய அடியேங்களுடைய பொய்மையை தவிர்த்து-அஞ்ஞாநத்தை யொழித்து. போதம் ஆர் முத்தி நன்கு அருள-ஞாநத்தால் பொருந்திய வீடுபேற்றை நன்கு அநுக்கிரகஞ் செய்யவும், வந்தி

யானின்ருர் வினைகளை போக்கி-வணங்குகின்ற அடியார்க ளுடைய (இரு) வினைகளையும் அழித்து, வாழ்வொடு ஞானம் ஈந் தருள-இருமைச் செல்வத்தையும் ஞானத்தையும் கொடுத்தருளவும், செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை-திருச் செந் தூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெரு மான் தன் திரு அடித் தாமரைகளை, நிநம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்-நா டோறும் (முக் கரணங்களிஞலும்) வழிபட்டுப் பிறவித் துன்பத்தை நீக்குவோம். (எ-று.)

(வி-ரை) இருடிகட்கும், இந்திராதி தேவர்கட்கும், மெய்த் தொண்டர்கட்கும், நினைத்தற் கரியவனும், வீரபாகு தேவரும் ஊனக் கண்ணுல் நோக்க முடியாது ஞானக் கண் பெற்று நோக்கி அச்ச முற்ற விசுவ ரூப முடையவனும், தத் தம் பதங்களை இழந்து துன்புற்றுச் சரணுகதி யடைந்த இந்திராதி தேவர்கட்கு, அத் துயரங்களை நீக்கிப் பதங்களை நல்கிய பெருந் தகையாளனு மாகையால், அவ னருள் பெரு தற்குக் காரண மாகத் தேவர்கள் செய் துள்ள அன்பைத் தாம் பெருமைக்கு இரங்கி "அன்பினைப் பெருத புந்தியா ரடியேம்" என்றும், அது பெருமைக்குக் காரணம் அஞ் ஞானமே யாகலின், அதனை நீக்கி அன்பை வளர்த்து ஞான வாயிலாகத் தனது வடிவ மாகச் செய்து, இன்பத்தை யளிக் கும், சுப்ரமண்ய ஞகலின், "முக்தி நன் கருள" என்றும், தன்னைத் தலையன்பாலே இடையருது வழிபாடுசெய்யும் அன் பர்கள் விரும்பிய போகங்களையும், ஞானத்தையும் அருளும் ஞான பண்டித ஞகலின், "ஞானம் ஈந் தருள" என்றும் கூறினர். இவற்றை,

"இருடிகட் கரிதுவா னிமையவர்க் கரிதுநூற்,
சுருதிகட் கரிதுமெய்த் தொண்டருக் கரிதுசொற்,
கருதுதற் கரிதுளங் காண்பதற் கரிதுமாம்,
பொருளிலற் புதமொடும் போற்றுநந் தோற்றமே" எனவும்,

''ஊனுறுங் கண்களுக் குட்படா துன்றனைக்,
கானஞா நக்கணே அருளொடுந் தருதுநீ
ஞானநாட் டத்தினல் நந்திருத் தோற்றமே
மானவாட் செங்கையாம் வாகுவே காண்டியால்'' எனவும்,

வரும் திருச் செந்தூர்த் தல புராணத்தானும்,
''வந்திக்கு மன்பர்க்கு வாழ்வுங் கதியு மகிழ்ந்தளிக்கும்,
கந்திக் களத்துமை மோந்துகொ ளாறுக மலத்தானே.''
எனவும்

''ஆசையு மன்பும் அபிமாந முமுனது,
பூசையி லேவைக்காது பொய்க்காளாய்——பேசரிய,
பெண்ணுதி யாசைபி டித்துழன் றேன்போரூரா,
எண்ணுது நின்னையி ருந்து.'' எனவும்,

''தீயவ னென்குற்றந் திருவுளத்தில் நாடாது,
தாயனைய போரூர்ச்ச ரவணு— தூயசுக,
வீட்டுக்குள் வைப்பாய் வினையேனைப் பொய்க்காயக்.
கூட்டுக்குள் வைக்கேல்கு றித்து.'' எனவும்
வரும், திருப் போரூர்ச் சந்நதி முறையானும் உணர்க. 2

அந்தி யென்பது இரவிற்கே யன்றி, காலை மாலைகளுக்கும் பெயராதலை, ''காலை யந்தியும் மாலை யந்தியும்'' என புறநா னூற்றில் ஆன் முலை யறுத்த வறனில்லோர்க்கும்'' என்னும் பாட்டினுள் வந்திருத்தல் காண்க.

3. இந்துவாழ் சடையான் இமகிரி புதல்வி
இருவரும் இன்புடன் ஈன்ற,
கந்தன்சீர் வள்ளி தெய்வயா னையினற்
கணவனுங் கலியுக வரதன்,
முந்திநாம் போய்த்தன் அடிமுடி யணிய
மூப்பின்றி வாழ்கவென் றருளச்,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(ப-ரை.) இந்து வாழ் சடையன்-சந்திரன் வாழ்கின்ற சடையினை யுடைய இறைவனும், இமகிரி புதல்வி-மலை அரசன் புதல்வி யாகிய இறைவியும் ஆகிய, இருவரும் இன்புடன் ஈன்ற கந்தன்-இருவரும் மகிழ்வோடு பெற்றருளிய கந்தனும், சீர் வெள்ளி தெய்வ யானையின் நல் கணவன்-பெருமை யுற்ற வள்ளியும் தெய்வ யானையும் ஆகிய அன்னையார் இருவருக்கும் கணவனும். கலி யுக வரதன் ஆம்-கலி யுக வரதனும் ஆகிய, நாம் முந்தி போய் தன் அடி-நாம் முற்பட்டுச் சென்று தன் னுடைய திரு அடித் தாமரைகளை, முடி அணிய-சிரசின்கண்ணே அணிந்து கொள்ள (வணங்க என்ற வாறு), மூப்பு இன்றி வாழ்க-அழி வின்றி வாழ்வீர்களாக (வீடு பேற்றை அடைவீர்களாக என்ற வாறு), என்று அருள-என்று திரு வாய் மலர்ந்தருள, செந்தில் வாழ்-திருச் செந்தூரில் எழுந்தருளி யுள்ள, குமர வேள் மலர் அடியை-முருகப் பெருமானுடைய திரு அடித் தாமரைகளை, தினம் பணிந்து – நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம்-(பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று.)

(வி-ரை) சூரனுற் றுன் புற்ற திரு மா லாதி விண்ணோர்கள் இறைவனிடத்துச் சரணுகதி அடைய; அப் பெருமான் ஐந்து முகத்தோடு அதோ முகமுங் கொண் டெழுந்தருளி யிருக்க; அவற்றினின்றும் ஆறு தீப் பொறிகள் வெளித் தோன்றி உலகனைத்தும் விரிய, அவ் வெப்பந் தாங்காது இறைவி யெழுந்து தன் னிருக்கை சேர, விண்ணோர் எங்கணு மாகி யிரிந் தோடினர், அது கண்ட விறைவன் அப் பொறிகளைத் தம் முன் வரத் திரு வுளங் கொள்ள, அங்ஙன் அவை வர, பெருமான் வாயுவையும், தேயுவையும் நோக்கி, "இப் பொறிகளைக் கங்கை யாற்றில் வைத்திடுவீராக." எனப் பணித்தலும், அவர் கொண்டு சென் றதன் கண் வைக்க, அவள் அவற்றைச் சரவணத்திற் கொண்டுய்ப்ப, அதன்கண் ணொரு கமலத்தில் ஆறு குழவி வடிவாக முருகேச னிருந்திட, அவற்றைத் திரு மா லாதியோர்

ஏவலால் கார்த்திகைப் பெண்க ளறுவரும் பா லருத்திப் புரக்க, இறைவனோடு ஆண்டுச் சென்ற இறைவி, அக் குழவி யாறையுஞ் சேர அணைக்க; ஆறு முகமும் பன் னிரு தோளுங் கொண்ட ஒ ருரு வாகிக் கந்தன் எனப் பெயர் பெற்றான் என்பார், "இருவரும் இன்புட னின்ற கந்தன்." என்றார், இதனை.

"செம்மைகொ ளாறுமு கத்தொடி ருந்தே திவிழி யாறினு மாறுபு லிங்கம், வெம்மையொ டுந்தர வங்களை சென்று வீறுல கத்துமவி ரிந்திட வஞ்சிப், பொம்ம றருங்கவி னம்மையெ ழுந்துபு லம்புசி லம்புமபொ லன்கழல் மோத, இம்மென வோடியி ருக்கைபு குந்தா ளொங்கலு மாகியி ரிந்தனர் விண்ணோர்." எனவும், "அன்னிலை தன்னின்வி ரிந்திடு செந்தீ யாறுபெ ரும்பொறி யாகிய ரன்றன், முன்னுற வந்திட வண்ணமெ றிந்தே மொய்ம்புள தேயுவை வாயுவை நோக்கி, மன்னிய விப்பொறி தன்னையெ டுத்தே மங்கலில் கங்கையுள் வைத்திடு மென்றே, பின்னலில் சத்திகொ டுத்திட மாறியெ டுத்துயர் கங்கையு டுத்ததில் வைப்ப," எனவும், "மங்கலில் கங்கையும் அப்பொறி தன்னை வண்ணமு றுஞ்சர வணமிசை வைப்ப, பொங்கெழி லையிரு திக்கினு மான்முற் புங்கவர் நின்றுபு ரந்தன ரப்போ, தங்கதி லாறுமு கத்தொடு பீரா றத்தமொ டுங்கம லத்தினி டத்திற், சங்கர னேமுரு கேசனெ னச்சீர் தங்கவி ருந்திட வண்டர்கள் கண்டார்." எனவும் வரும் கந்த புராணச் சுருக்கத்தா னுணர்க.

"வரதன் ஆம் குமர வேள்" எனக் கூட்டுக. கலி யுகத்தில் அடியவர்க் கெளியவனாய் வேண்டுபவற்றை யெல்லாம் மருது ஈபவ னாதலின், 'கலி யுக' வரதன் என்றனர். வரங்களைத் தருபவன், "வரதன்" என்ப தாம்.

மற்றோ இவன் கிருஷ்ணன், நந்தகோபன் மகன், நம்போல் விவகாரங்களோடு கூடியிருப்பவனாதலின் நித்தியானந்தனவன், சாதாரண ஜீவர்களில் இவனும் ஒருவன் என்றே கருதா நிற்பர்.

"ஏ பகவான் தாங்கள் யாவரிடத்துமில்லாத அநேக விசேஷ குணங்களும் சகல ஐசுவரியங்களும் பொருந்தியுள்ள சர்வேசுரனாகவிருக்கத் தங்களை அவிவேகிகள் சாதாரண மனிதனாகவும் ஜீவனாகவும் கருதுவானேன்?" என்ற அர்ச்சுனன் ஐயத்தை நீக்குவான் வேண்டி பகவான் அருளிச்செய்கிறார்:—

ஏ பார்த்த! நான் பிரகிருதியாகிய மாயையில் மறைந்திருப்பவனாதலின், உலக மாயையில் மனம் பொருந்தியுள்ள ஞான சூரியர்கள் ஜனன மரணமற்ற என்னை அறிந்து கொள்வதில்லை. முன் சென்றவைகளும், இப்போதுள்ளவைகளும், இனிமேல் உண்டாகுபவைகளுமாகிய சர்வ பிராணிகளையும் நான் அறிந்துளேன். உலகிலுள்ள சகல பிராணிகளும் ஜனிக்கும்போதே இச்சை துவேஷம் என்னும் குண வேறுபாட்டால் உண்டாகும் மோகத்தில் அழுந்தியவர்களாய்த் தேகபாவனையைப் பொருந்தி யிருப்பதால் அந்தரியாமியாகவுள்ள என்னை அறியமாட்டார்கள்.

[ஜீவர்கள் இராகத்துவேஷங்களோடு பொருந்தியவர்களாய் மனமாயையின் வழியே உழன்று கொண்டிருப்பதால் அத்தகையோர் பரமான்மாவின் உண்மைச் சொரூபத்தை அறியமாட்டார்கள். பரமேசுவரனை உபாசிக்கிறவர்களாயினும் இச்சையை ஒழித்து மனதின் பசை அறுத்து பிரத்யகான்மாவாகிய தன்னை அறிந்தாலோ பரமான்ம சொரூபத்தை அறியலாகும்.]

(மற்றப்படி எத்தகையோர் தம்மை சாராதிருப்பவர்கள் என்பதை பகவான் அருளிச் செய்கின்றார்.)

மேலிட்டால் மேற் கதியிற் பிறந்து அதனை யடையு மாற்றைத், "தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்." (அகவல் 30) என வரும் மணி வாசகத்தால் கண்டு கொள்க. சாலோகாதி பத முத்திகள் அல்ல என்பார் வீட்டிற்கு, "நல்" என அடை கொடுத்தார்; எனவே, அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ அத்துவித முத்தி யென்பது பெற்றும். முருகப் பிரான் சரவணத்திற் றோன்றிப் பொருந்தின ராய குரு முனி முதலியோருக்கும், பொருந்தா ராய சூரன் முதலியோருக்கும்; கழு மலத்திற் சம்பந்தராய்த் தோன்றிப் பெரு மணத்திற் றிரு மணங் கண்டோ ரனைவருக்கும், வீடுபே றளித்தமையின், "காக்குந் தகையினை" என்றும், அத் தகையினை வேதாகம புராணேதிகாசங்களாலும், யுக்தியாலும், கேட்டுத் தெளிந்தனம் என்பார், "சங்கை யின்றறிந்து." என்றும், ஐம் பொறிகளும் ஏக காலத்தில் நுகரும் ஜீவன் முத்தி விலக்ஷணாநந்த வடிமே பெருமான் றிரு வடி யாகலானும். அதனைச் சரணாகதியாக அடைந்தாரும் அவ் வாநந்தத்தைப் பெறுவா ராகலானும், "மாறிலா இன்பம தடைய". என்றுங் கூறினர். இவற்றை, "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடு வாழ் வார்". (1 கடவுள் வாழ்த்து 3) என வரும் பொய்யா மொழியானும்,

"மற்றவர் நிற்கமெய்ஞ் ஞானிகள் வம்மின்வ குத்துரைக்
உற்றது கேண்மினெம் போரூர் முருக னுயர்கதியை,[கேன்
நற்றமிழ்க் காழிவந் தெண்ணிலி பேர்க்குந யந்தளித்தான்,
கொற்றம வனத லாலெவர்க் குண்டினிக் கூறுமினே."

என வரும் திருப் போரூர்ச் சன்னிதி முறையானும்,

"மாசில் வீணையும் மாலை மதியமும்,
வீசு தென்றலும் வீங்கிள வேனலும்,
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே,
ஈசன் எந்தை இணைஅடி நீழலே.".

என வரும் அப்பர் அடிகளார் திரு வாக்கானும் உணர்க. 4

5. நந்தியெம் பெருமான் காவல்செய் தொழுகு
ஞாநநல் கைலையா மலையில்,
நந்துவெண் தலையின் புழையினில் பணிகள்
நடுங்குபு நுழைந்துமீண் டிடவே,
அந்தியே உறழு மேனிகொள் அரன்முன்
ஆடல்மா மயில்மிசை உலவிச்,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(ப-ரை) எம் நந்தி பெருமான் காவல் செய்-எம்முடைய நந்தி யென்னுந் தலைவனுற் காவல் செய்யப் பெற்ற, ஞாந நல் கைலையா மலையில்-(வந்தடைந்தாருக்கு)ஞாநத்தை ஈய வல்ல கைலாய மலையின்கண்ணே, நந்து வெண் தலையின் புழையினில்-உட லழியப் பெற்ற வெள்ளிய தலைகளின் துவாரங்களிலே, பணிகள் நடுங்குபு நுழைந்து-பாம்புகள் நடுக்க மடைந்து நுழைந்து, மீண்டிட-மீண்டும் தலைகளை வெளியிலே நீட்டிப் பார்க்கும் வண்ணம், அந்தி உறழும் மேனி கொள் அரன் முன்-செக்கர் போன்ற திரு மேனி உடைய இறைவன் திரு முன்பு, மா மயில் மிசை உலவி ஆடல்-சிறந்த மயிலின் மே லேறி உலாவித் திரு விளையாடல் செய்கின்ற, செந்தில் வாழ் குமர வேள்-திருச் செந் தூரி லெழுந்தருளி யுள்ள முருகப் பெருமா னுடைய, மலர் அடியை திநம் பணிந்து-திரு அடித் தாமரைகளை நா டோறும் (முக்கரணங்களினுலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம்-(பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று.)

(வி-ரை) அற வாழி யந்தண னுகிய விறைவன், இறைவியோடு திரு வோலக்கங் கொண் டுள்ள அர சிருக்கை மண்டபத்தின்கண், அக் கோலங் காண்பான் நெருங்கிய திரு மாலாதி தேவர்களையும், நாரதராதி முனிவர் களையும், மற்று முள்ள தேவ கணங்களையும், தந் திருக் கைப் பொற் பிரம்பா லடித் தொதுக்கி, அவ் வத் தேவர்

முதலியோரது தகுதிக்கேற்ப இறைவன் முன் புக்குப் பணிவிக்கின்ற காவற்றலைவ னாதலானும், இறைவனை வணங்குதும் பெற்றியோர், தன்னையும் வணங்கப் பெறும் பெற்றியோ னாதலானும், "நந்தியெம் பெருமான் காவற் செய் தொழுகும்." என்றும், திரிலோக குடும்பி யாகிய இறைவன், தன்னால் அணியப் பெற்ற மானும் பாம்பு களும், தனக்கும், தன் றலைவியாகிய இறைவிக்கும், தனயரா கிய பிள்ளையா ரிருவருக்கும், முறையே ஊர்திகளாக அமைத்த, இடபமும், சிங்கமும், பெருச்சாளியும், மயிலும், ஆடும், ஆகிய இவைகள் ஒன்றற் கொன்று பகைமை யுடையன வாயினும், அவைகளை யிணங்கி வாழச் சங்கற் பித் திருக்கவும், முருகப் பெருமான் அவைக்கண் மயி லேறித் தன் அண்மைக்கண் வரும் போது, பாம்புகள் மயி லைக் கண்டஞ்சித் தலைப் புழைகளில் நுழைவதும், சேய் மைகண் செல்லும் போது, வெளியே தலை நீட்டிப் பார்ப்ப தும், இப் பெருமான் சங்கற்பம் என்பார், "வெண்டலை யின் புழையினில் பணிகள் நடுங்குபு நுழைந்து நீண்டிட". என்றார், இவற்றை,

"படிகொண் மாமுடிக் கங்கணத் திறைபதம் படுமொண்,
முடிகள் யாவையும் படுகழ னந்தியெம் முதல்வன்,
அடிக ளேந்துகை யுறவடித் தொதுக்கியவ் வவையைக்,
கடிகொண் மாலையம் பிரம்பொடு திரிந்தனன் களித்து."

எனவும்,

"பாக மொருபெண் குடியிருக்கும் பரம னணியிற் பரித்த மணி, நாக நுழைவுற் றுடல்சுருண்டு கிடந்து நகுவெண் டலைப் புழையிற், போக மெல்லத் தலைநீட்டிப் பார்த்து வாங்கப் போகு மொரு தோகை மயில்வா கனப்பெருமா னிணைத்தாட் கமலந் தொழுதிடுவாம்."

எனவும் வரும் பிரபு லிங்க லீலையா லுணர்ந்து கொள்க.
நடுங்குபு—செய்பு என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். 5

6. சந்திரன் கங்கை தனிமத்தம் அறுகு
தவழ்பணி இதழியார் சடையன்,
செந்திரு கணவன் எனுமிவர் உருவாய்
திகழ்தரும் சுப்பிர மணியன்,
சிந்தியார்க் கரியன் சிறியனேன் பவத்தைச்
சிதைக்குநன் ஞாநம தருளச்,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(ப-ரை) சந்திரன் கங்கை-சந்திரனும் கங்கையும். மத்தம் அறுகு தவழ் பணி-ஒப்பற்ற ஊமத்த மலரும் அறுகும் தவழ்ந்து செல்லும் பாம்பும், இதழி ஆர் சடையன் - கொன்றையும் ஆகிய இவைகள் பொருந்திய சடையை யுடைய சிவபிரானும், செந் திரு கணவன் எனுமிவர் உரு வாய்-திரு மாலு மாகிய இவ் விருவர் வடிவமாய், திகழ் தரும் சுப்பிரமணியன்-விளங்குகின்ற சுப்பிரமணியன் என்னும் பெயர் உடையவனும், சிந்தியார்க் கரியன்-(தன்னை) நினையாதருக்குக் கிடைத்தற் கரியனு மாகிய, சிறியனேன் பவத்தை சிதைக்கும்-அடியேனு டைய பிறவியை அழிக்கின்ற, நல் ஞாநமது அருள-தத்துவ ஞாநத்தை அநுக்கிரகஞ் செய்ய, செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை-திருச் செந் தூரில் எழுந்தருளி யுள்ள முருகப் பெருமானின் திரு அடித் தாமரைகளை, திநம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்-நா டோறும் (முக் கரணங்களினு லும்) வழிபாடுசெய்து (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று.)

(வி-ரை) சிந்தியார்க்கு அரிய ஞகிய குமர வேள் எனக் கூட்டுக. சுப்பிரமணியன் என்னுந் திரு நாமத்துள்ள னகர விகுதி நீங்கிய மற்றைய மூன்று மொழிகளுள், இடைக்க ணுள்ள "பிரமந்" என்பது சிவ பிரானையும், இறுதிக்கண் ணுள்ள, "ய" என்பது திரு மாலையும். முதற்கண் ணுள்ள, "சு" என்பது இவ் விருவரின் ஐக்கியத்தையும்

உணர்த்துதலாலும், சு-பிரமந்-ய, என்பன வட மொழி விதிப்படி புணரும் போது, "சுப்பிரமண்ய" என்று புணர்ந்து. பின் னகர விகுதி பெற்று, "சுப்பிரமணியன்" என்று ஆதலாலும், அர னரி உருவா யிலகும் பிரா னுகிய முருக வேளை வழிபாடு செய்யின் அவ் விருவரையும் வழிபட்டால் உண்டாம் பேறு எய்து மாகையாலும், காத்தற் கடவு ளும், அழித்தற் கடவுளும் தானே யாகிய முருகப் பிரான், அயனது அகந்தை யடங்கப் படைத்தற் றொழிலும் மேற் கொண்டான் ஆகையாலும், மும்மூர்த்தி வடிவமும் அவன் வடிவே என்பார் "சந்திரன்—— சுப்பிரமணியன்" என் றும்; சொற் பதங் கடந்த தொல்லோனுயினும், தன் பெரு மைமை யுணர்ந்து இடைவிடாது தியானிக்கும் அடியா ருளத்தில் மேவி யிருந்தும், அது மாட்டாதாருக்கு மறைந்து மிருப்பவ னுகலின், "சிந்தியார்க்கு அரியன்", என்றும் கூறி னுர். "இவற்றை"

"சுப்பிர மணிய னென்று சொலும்பெயர் பதமூன் றுரும்.
அப்பதத் திடையுண் டான வரும்பதஞ் சிவனு மீற்றின்.
மெய்ப்பதஞ் சிவனை யேத்தும் விண்டுவின் வடிவா முன்
செப்புறு பத மிரண்டு பதங்களைச் சேர்த்துக் காட்டி." [னஞ்,
எனவும்,

"ஒப்பரு மயிக்க மாக வுரைத்தலால் உரைக்க வொண்ணு,
மைப்படி மிடற்றி னுனும் மாலெனு நாமு மாக,
முப்புவ னங்க ளேத்த மூலமு முடிவு மில்லாச்,
சுப்பிர மணிய னுகச் சொல்லுநால் வேத மாதோ." எனவும்
வரும் திருச் செந் தூர்த் தல புராணத்தானும்,

"சொற்பதங் கடந்த தொல்லோன், உள்ளத் துணர்ச் சியிற் கொள்ளவும் படாஅன், கண்முதற் புலனுற் காட்சியு மில்லோன்,.' என வரும் (3 அண்டப் பகுதி 111) மணி வாசகத்தானும் உணர்க. தவழ் பணி—வினைத் தொகை.

தத்துவ மசி மா வாக்கியத்தின் வியாக்கியாந மனைத் தும், "சுப்பிரமணிய" மா வாக்கியத் துள்ளன, அவற்றை வல்லார்வாய்க் கேட் டுணர்க. விரிக்கிற் பெருகும். 6

7. பந்துவாய்த் தேவர் பரிபவ மொழிய
பாறிட வசுராக ளெவரு,
மிந்திரன் சேனைத் தலைவராய் சென்றோர்
எமதிடர் களையுநற் பானு,
மெந்தையா முருக ரிடும்பனார் பணியை
யேற்றருள் சரவண பவருஞ்.
செந்தில்வாழ் குமர வேண்மல ரடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்.) தேவர் பந்து ஆய் - தேவர்கட்கு சகாயராய், பரிபவம் ஒழிய-(அவர்கட்கு அசுரர்களா லுண்டாகிய) துன்பங்கள் நீங்கவும், அசுரர்கள் எவரும் பாறிட- அசுரர்கள் அனைவரும் அழியவும், இந்திரன் சேனைத் தலைவர் ஆய் சென்றோர்-தேவ தேசநாபதியாச் சென்றவரும், எமது இருள் களையும் நல் பாநு-அடியேங்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கும் ஞாந சூரியனும், எந்தையாம் முருகர்- எம்முடைய பிதா வாகிய முருகர் என்னுந் திரு நாம முடையவரும், இடும்பனார் பணியை ஏற்று அருள்-இடும்பனார் செய்த தொண்டை யேற்றநுக்கிரகஞ் செய்த, சரவண பவன் ஆம்-சர வண பவன் என்னும் திரு நாம முடையவரும் ஆகிய, செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை-திருச் செந் தூரில் எழுந்தருளி யுள்ள முருகப் பெருமா னுடைய திரு வடித் தாமரைகளை. திநம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்-நா டோறும் (முக்கரணங்களினாலும்) வழிபாடு செய்து (பிறவித்) துன்பத்தை நீக்குவோம் (எ-று)

(வி-ரை.) சூரியன் தனது கிரணங்களால் அண்டத்தில் உள்ள புற விருளை நீக்கி உயிர்களின் ஊநக் கண்ணுக் கொளி கொடுத்து, அவற்றிற்கு இன்பந் தருதல் போல, முருகப் பிரான் தனது ஞாந வொளியால் பிண்டத்தி லுள்ள அக விருளை நீக்கிப், பக்குவ மடைந்த ஆன்மாக் களின் ஞாநக் கண்ணிற் கொளி கொடுத்து, அவற்றிற்குப் பேரின்பம் அளித்தால், ''இருள் களையும் நற் பாநு''என்றார். சூரன் முதலியோருக்கு ஆயுத வித்தை பயிற்றுவித்த குரு

வாகிய இடும்பன் என்போன், பூர்ச்ச வகத்தின்கண்ணுள்ள சத்தி மலை சிவ மலை யாகிய இரண்டினையும் அகத்திய முனிவர் கட்டளைப்படித் திரு ஆவினன் குடிக்குக் கொண்டு வந்ததும், அவன் முண்டு ஆங்கு டுள்ள பழநி யாண்டவன் திரு விளையாடல் ஆற்றியதும், பின் இடும்பன் அவ் வாண்டவன் அருள் பெற்றதும், பிறவு மாகிய வரலாற்றுத் துறைகளைப் பழநித் தல புராணத்துள், மலைகள் பழநி யடைந்த சருக்கத்துள் கண்டு கொள்க

'சரவணபவன்' என்னும் மா வாக்கியத்துள்ள, சரம் என்னும் மொழி நீரையும், வநம் என்னும் மொழி இருப்பிடத்தையும் உணர்த்தி, அன் மொழித் தொகையாய், நீரை இட மாகக் கொண்டவ னாகிய திரு மால் எனவும், பவன், என்னும் மொழி சிவ பெருமான் எனவும், பொருள் பட்டு, அவ் விருவர் உருவும் ஒருங்கே பெற்றவ னாகிய முருகப் பிரானை அம் மும் மொழியும் உணர்த்துதலால்,

"சர வண பவன்" என்று கூறினார், இவற்றை,

"சரவண பவனென் றோதுந் தாவறு பதங்கள் மூன்றிற்,
பரவுறு சரமென் றுய பதமது சலமே யாகும்,
வருவந வாச மிந்த வான்பத மிரண்டும் பார்க்கில்,
அரிதுமா தவத்து நாரா யணனென் றுமருத்த மாமால்".

எனவும்,

"இயலுறு பவனென் றோது மிருபதஞ் சிவன்ற ஞகு,
மயலற விரண்டு மொன்ருய் வழுத்திலா தெழுத்தே யாகும்,
பயனெருங் குணரின் ஞானப் பரம்பொருட் சிவன தாய.
சுயவடி வாகு மென்றே சொல்லுவான் மறைமுக னம்மா."

எனவும் வரும், திருச் செந் தூர்த் தல புராணத்தா லுணர்க,
சரவண பவனாங் குமர வேள், எனக் கூட்டுக. 7

8. புந்தியார் அழுக்கைப் போக்கிமோகக் கத்தைப்
புரிவதற் காகவே விரும்பி,
முந்தியுள் ளிறுமாப் புற்றநான் முகனை
முனிவறப் பிரணவப் பொருளைக்,

சிந்தியா வதனுற் புகலொணு திருந்த
சிறுமையை நீக்கியாண் டருளிச்,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திரம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்.) புந்தி ஆர் அழுக்கை போக்கி-(ஆன்மாக்களின்) அந்தக் காரணத்தின்கண் உள்ள (காமம் வெகுளி மயக்கம்) ஆகிய முக் குற்றங்களையும் நீக்கி, மோகத்தை புரிவதற்காக விரும்பி-(அவைகட்கு வீடுபேற்றை அளிக்கத் திரு வுளங் கொண்டு, முந்தி உள் இறுமாப்பு உற்ற நான் முகனை- தன் னெதிர்ப்பட்டு உளத்தில் செருக் குற்ற பிரமனை, முனிவு அற-(அவன்மீது) வெறுப் பில்லாமல், பிரணவ பொருளை சிந்தியா வதனல்-பிரணவார்த்தத்தைச் சிந்தனை செய்யாத காரணத்தால். புகல ஒணுது இருந்த சிறுமையை நீக்கி-சொல்ல முடியாதிருந்த இழி தகைமையினை மன்னித்து, ஆண்டு அருளி--ஆட்கொண் டருளி, செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை- திருச் செந்தூரி லெழுந் தருளி யுள்ள முருகப் பெருமானின் திரு வருடித் தாமரைகளை, திரம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்- நாம் மூன்றும் (முக்கரணங்களாலும்) வழிபாடுசெய்து (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று.)

(வி-ரை) அருளி, விரும்பி, வாழ் குமர வேள், எனக் கூட்டுக. தன்னைச் சரணுகதியாக வடைந்து இன்புற வேண்டி நிரந்தரம் நெடுங் காலம் நேயத்தோடும் வழிபாடு செய்கின்ற அடியார்கட்கு வேண்டுவன அளிக்கும் இறைவருகாலனும், அவ் வத் தேவதைகள் வடிவ மாகத் தானொருவனே யாகி நின்று, அவரவர்களுடைய வழிபாட்டின் பயனை விரைவில் அளிக்க வல்லானுகிக், கலியுக வரதனென்னுந் திரு நாமமும் பெற்றுளா னுகையாலும், "மோக்கத்தைப் புரிவதற் காகவே விருப்பி" என்றும்; பெருமான் திரு விளையாடல் புரிந் தருளுங் காலைப் பிரமன் இறைவனை வணங்கும் பொருட்டுக் கைலையங் கிரியை யடைந்து ஆண்

டுக் கோபுரத் தலத்தி லெழுந்தருளி யிருந்த பெருமானைக் கண்டும் வழிபடாது வாளா செல்ல, அவனை விளித்து, "நீ எத் தொழில் புரிவாய்". எனப் பிள்ளையார் வினவ, "சிருட்டித் தொழில் புரிவேன்". என அவன் விடை யிறுக்க, "வேதம் வருமோ" என வினவ, "வரும்" எனக் கூற, "ஆயின், முதற்கண் பிரணவப் பொருளைக் கூறுக" எனக் கட்டளையிட, அவன் கூற வறியாது விழிக்க, உடன் றலையிற் குட்டிச் சிறையிடுவித்துச், சிருட்டித் தொழில் நடாத்திப், பின் பிறைவன் ஆணையாற் சிறைவிடுத்து, அத் தொழிலையும் அவற் கழித்தான் ஆகையால், " சிறுமையை நீக்கி யாண்டருளி" என்றுங் கூறினார். இவற்றை, "ஆலயத்தின் முன்பிருந்த வணிமணிக்கோ புரத்தலத்தில், கோலமுட னிருந்தருளுங் குமரவேள் கண்டருளி, ஞாலமளித் திடுவோனை நம்முன்வரு கெனவேகிச், சீலமுறப் பணிந் திடுதல் செய்யாமற் பரவுதலும்". எனவும், "ஏதுபுரி வாயென்ன யான்படைப்பே னெனவருமோ, வேதமென வருமென்ன வியனிருக்கு விளம்பென்ன, வாதியினிற் குடிலையெடுத் தறைகுதலும் அதன்பொருளை, யோதியபின் னோதெனவே யோதினு னுமைபாலன்". எனவும், "மன்னுகுடிலைப்பொருளை யறியாமல் மயங்குதலும், கொன்னுடைய நரசிங்கக் குட்டிதலைக் குட்டியுதைத்து, இன்னலுறக் கந்தவெற்பிற் சிறையிடுவித் ததிவேகி, அன்னநடை யுமைபாலன் ஆவிகள்பன் னுட்படைத்தான்." எனவும் வரும், கந்த புராணச் சுருக்கத்தானும்.

"முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையும்"
நயனுணர் செந்திலான் நல்குமே,
நயனுணர் செந்திலான் நல்கா னயின்,
அயலொரு வானவர்க ளாக்குதற்குவல்லவரு மல்லரன்றே."

என வருஞ் திருச் செந்திற் கலம்பகத்தாலும் உணர்ந்து கொள்க.

9. முந்துநான் மறையில் முடிந்திடும் பொருளாய்
முழுதுணர் முனிவரர் சாந்த,
புந்தியில் விளங்கும் பொருளினை யெமக்கும்
போதிக்க வேண்டிநல் அருளால்,
இந்துநீர் சடையிற் கொண்டகோன் மகிழ
இலங்கிடும் பிரணவ முரைத்தே,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) முந்து நான் (கு) மறையில்-மேப்பட்ட இருக்காதி நான்கு வேதங்களில், முடிந்திடும் பொருள் ஆய்-இறுதியாகக் கூறப்பட்ட ஞாந காண்டப் பொருளாய், முழுதுணர் முனிவரர் சாந்த - ஞாந நூற் பயிற்சி பெற்ற முனிவர்களுடைய சாந்த மாகிய, புந்தியில் விளங்கும் பொருளினை-அந்தக் கரணத்தில் விளங்கும் இறைப் பொருளை, எமக்கும் போதிக்க வேண்டி-அடியேங்கட்கும் போதிக்கத் திரு வுளங்கொண்டு, நல் அருளால் - சிறந்த கருணையோடு, இந்து நீர் சடையில் கொண்ட கோன் மகிழ-சந்திரனையும் கங்கையினையும் சடையி லணிந்த இறைவன் மகிழும் வண்ணம், இலங்கிடும் பிரணவம் உரைத்தே - பிரணவப் பொருளை யுபதேசித்து, செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை-திருச்செந் தூரில் எழுந்தருளி யுள்ள முருகப் பெருமானின் திரு அடித் தாமரைகளை, திநம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்-நாடோறும் (முக்கரணங்களாலும்)வழிபாடுசெய்து (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று)

(வி-ரை) நல் அருளால் செந்தில் வாழ் குமர வேள் எனக் கூட்டுக. மறையின் காண்டத் திரயத்துள் இறுதிக் கண்ண தாகிய உபநிடதப் பொரு ளாகிய ஞாந பண்டிதருகலின், "மறையில் முடிந்திடும் பொரு ளாய்" என்றும், அவ் வுபநிடத மாய்ந்த முநிவர்கள் பிராண நிரோத வாயிலாய் மநச் சாந்தி யுற்று, அதனுற் பொறிகள் அடங்கப் பெற்று, அவ் வடக்கத்தால் சத்தாதி விஷயப் பற்று நீங்கி,

அதனூற் பகிர் முக நாட்ட மாகிய துவித பாவனை யற்றுத் தம் முளத்தே முருகப் பிரான் எழுந்தருளியிருக்க, அவனோ தா ளுகி அத்துவித பாவனையோடு எழுந்தருளியிருப்பா ராக லின், "சாந்த புந்தியில் விளங்கும் பொருளினை" என்றும், முப் பத்து முக் கோடி தேவர்கட்கும் மற்று முள்ள ஞான யோக பக்தர்கட்கும், தம் வடி வாகிய முருகப் பிரானே ஞானாசாரியன் ஆதற் றகுதி யுடையான் என்பதை விளக்கு வான் கருதிச் சிவனே அவனிடத் தரு ளுபதேசங் கேட் டமை போன்று, கேட்ட திரு விளையாடலை, "பிரணவம் உரைத்தே" என்றுங் கூறினுர்—இவற்றை.

"வாயு நிற்ப மனமின்று மனந்தா னிற்பப் பொறி நின்று, பாய பொறிக ணிற்பவிடர் படுபுன் புலன்க ளின் றனவால், ஆய புலன்க ளின்றமையால் அகிலந் தோன்று துள்ளத்தே, தூய பரமா நந்தபரஞ் சோதி தோன்றக் கண் டிருந்தார்". எனவும்,

"பொறியிற் புறந்து மநஞ்செல்லிற் புலனே தோன்றி யிடுமகத்திற், செறியிற் கரணம் பராநந்த சிவமே தோன் றுஞ் சிவந்தோன்ற, அறிவிற் பரந்த விடயமய மாருமுலகந் தோன்றுமற், பிறவித் துயரக் கடல்கடந்து பேரின் பஞ் சார் குவ னென் றும்". எனவும் வரும், பிரபுலிங்க லீலை.

"வெறுப்பொடு விருப்பினை யறுத்தவ ருளத்துமமர் பத்மபதத் தானை வேதபுரி யிற்சின, விடைக் கொடி வலத் திலும டக்கொடியி டத்துமுள முக்கட்புருத் தாதை யார்ப ணிகுருக்களை" என வரும் முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழாலும், "உய்யவென் னுள்ளத்து ளோங் காரமாய்நின்ற, மெய்யா விமலா விடைப்பாகா". (1 அக வல் 31) என வரும் மணி வாசகத்தாலுங் கண்டுகொள்க. 9

10 வந்திமா தவட்கு வைகைநீர் அடைக்க
வந்தநல் லேவல னென்னுஞ்,
சுந்தர னாகு மீனவன் மகிழ
உக்கிர வழுதியாய்த் தோன்றி,
அந்திவான் மேனி யழகனா யெவர்க்கு
மருளவே வாயில்காத் திருக்குஞ்,
செந்தில்வாழ் குமர வேண்மலர் அடியைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) வந்தி மாதவட்கு - வந்தி யன்னையாரின் பொருட்டாக, வைகை நீர் அடைக்க-வைகை யாற்றின் நீரை யடைக்கும் வண்ணம், வந்த நல் ஏவலன் என்றும்- (கருணையால்) எழுந்தருளிய நல்ல அடிமையாள் என்று சொல்லப்பட்ட, சுந்தரன் ஆகும் மீனவன் மகிழ-சோம சுந்தரக் கடவு ளாகிய பாண்டியன் களிக்கும்படி, உக்கிரவ ழுதியாய் தோன்றி- (அவன் ஆணையால்) உக்கிர குமார பாண்டியனாய்த் திரு அவதாரஞ் செய்து, அந்திவான் மேனி அழகன் ஆய்-செவ் வானம் போன்ற திரு மேனி அழகுடை யவனாய், எவர்க்கும் அருள-எல்லா வுயிர்கட்கும் அநுக் கிரகஞ் செய்யும் வண்ணம், வாயில் காத்திருக்கும்- (காட்சிக் கெளிய னாய்) தந் திருக் கோயில் வாயிலில் காத் துக் கொண்டிருக்கும், செந்தில் வாழ் குமர வேள் மலர் அடியை-திருச் செந் தூரில் எழுந்தருளி யுள்ள முருகப் பெரு மானின் திருவடித் தாமரையை, திநம் பணிந்து இடர் ஒழித்திடுவாம்-நா டோறும் (முக் கரணங்களினாலும்) வழி பட்டுப் (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று)

(வி-ரை) சர்வ சராசரப் பிரபஞ்சங்களையும், படைத் துக் காத்து அழிக்கும் இறைவன், தான் ஆண்டானா யிருந் தும் அடிமையாய் வருதல் அடியார்கள் பொருட்டு அவன் செய்யும் கருணைத் திறனால் ஆய திரு விளையாடல் ஆகையா லும், திருமால் வடிவ ராய திரு வுடை மன்னர்கட்கு

ஆட்சி முறையின் வழி காட்டியாய் அன்னை யளித்த அறச் செங் கோல் கொண்டு பா ராண்ட அருட் செய்கையாலும், "நல் ஏவலன்" என்றுஞ், "சுந்தரனுகு மீனவன்" என்றும், அங்ஙன் பா ராண்ட சுந்தர மீனவன் கான் முனை யாய் அவ னருளால் அவதரித்துக் குறை வேண்டினோர்க்கும், முறை வேண்டினோர்க்கும், எளிய னுகிப் பொது நீக்கித் தன் றிருப் பெயருக் கேற்பச் செங் கோ லோச்சிய பெருமை தோன்ற, " மகிழ உக்கிர வழுதியாய்த் தோன்றி." என்றுங் கூறினார். வந்தி யன்னையார் வர லாறும், உக்கிர வழுதி வர லாறும் திரு விளையாடற் புராணத்தாற் பெறப்படும், ஆண்டுக் கண்டு கொள்க. இரு வினை யொப்பு மல பரிபாகம் பெற்ற அதிதீவிர பக்குவ முடையாரை இறைவனே காலங் கரு தாது தேடி உபதேசா நுக்கிரகஞ் செய்யக் காத்திருத்தல் வழக் காறுதலின், "அருளவே வாயில் காத்திருக்கும்." என் றார். இதனை, "அருபரத் தொருவன் அவனியில் வந்து, குரு பர னுகி யருளிய பெருமையை. சிறுமையென் றிகழாதே." எனவும், "சிவனென யானுந் தேறினன் காண்க, அவ னெனை யாட்கொண் டருளினன் காண்க." (3 அகவல் அண்டப் பகுதி 2) எனவும், வரும் மணி வாசகத்தாலும், 'துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி நின்ற வண்ணம் நிற்கவே, துயரில் மலியு மனிதப் பிறவியிற் றோன்றிக்கண் காண வந்து, துயரங்கள் செய்துதன் றெய்வ நிலையுல கிற் புக வுய்க்கு மம்மான், துயர மில் சீர்க்கண்ணன் மாயன் புகழ் துற்ற யாஞேர் துன்ப மிலனே". என வரும் (3-10-8) திரு வாய் மொழியானும்.

"வந்துநான் வறுமை யுற்றேன் மாற்றென திலம் பா டென்று, சிந்தையா குலமுற் றுன்கைச் செழும்பொரு

லீதல் செய்வார், இந்தநா ளளிக்க வேண்டு மெனவிதி யின்
மை யாலே, யந்தநா ளின்று ளாக வடிமைகொண் டருள
வெண்ணி''. என வரும், திரு வாத வூர் அடிகள் புராணத்
தானும் உணர்ந்து கொள்க. 10

திருச் செந் தூர் முருக வேள் தோத்திர ரச மஞ்சரியும்,
பரிமள தீப உரையும், முற்றுப் பெற்றது.

உ
சிவமயம்

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

## திருப் பூ வண நாதர் தோத்திரமும்,

பரி மள தீப உரையும்.

1. பொன்வளர் மதுரைப் பாண்டியர்க் கருள்செய்
பொன்திறன் நினைந்துளைந் துருகி,
மன்வளர் அன்பால் வழுத்துறு பவர்க்கு
மருவுநோய் போக்கிடும் இயல்பார்,
கொன்வளர் பலபூஞ் சோலைகள் சூழ்ந்து
கோதற விளங்கிடு தலமாம்,
புன்மையில் பூவண வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதனைப் பணிவாம்.

(ப- ரை) பொன் வளர் மதுரை- திரு மகள் வாழ்கின்ற மதுரை மா நகரை அர சாண்ட, பாண்டியர்க்கு அருள் செய்- பாண்டி மன்னர்கட்கு அநுக்கிரகஞ் செய்தருளிய, பொன் திறன் நினைந்து- அழகிய பெருந் தகைமையை நினைந்து, மன் வளர் அன்பால்- மேன் மேல் வளர்கின்ற பக்தியினால், நைந்து உருகி- (மந மானது) இளகி உருகப் பெற்று, வழுத்துறுபவர்க்கு- துதிக்கின்ற மெய்

யடியார்க்கு, மருவு நோய் போக்கிடும்- (இரு வினையால்) பொருந்துகின்ற (பிறவிப்) பிணியை நீக்குகின்றன, இயல்பு ஆர்-திரு அருளே திரு மேனியாகக் கொண்டுள்ள, கொன் வளர் பூம் சோலைகள் பல-பெருமை பொருந்திய பூக்களை யுடைய சோலைகள் பலவும், சூழ்ந்து கோது அற விளங்கிடு-சூழப் பெற்று குற்றம் இன்றி விளங்குகின்ற, தலம் ஆம் - (புண்ணிய) தல மாகிய, புன்மை யில் வைகையின் கரை-சிறுமை யின்றிய வைகை (மாநதி) யின் கரைக்கண்ணிருக்கின்ற, பூவணம் வாழ்-திருப் பூ வணத்தின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, பூ வண்ண நாதனைபணி வாம்-பூ வண நாதனை (மந வாக்குக் காயங்களால்) வழிபடுவோமாக. (எ-று)

(விரை) "பெருந் தகைமையை நினைந்து வழுத்து வராது நோய் போக்குவன்" எனவே, வழுத்தாரது நோய் போக்கான் என்பதும் அருத்தா பத்தியாற் பெற்றாம். இதனை, "திரு வடியே உள்கி நினைந்து எழுவார் உள்ளம் ஏயவன்காண்," "பேணாதார் அவர்தம்மைப் பேணாதானை." என வரும் அப்பர் அடிகளார் திரு வாக்கா னுணர்க.

நோய், என்பதற்கு, ஆதி, வியாதிக, ளாகிய உடற் பிணியினையும், உளப் பிணியினையும் கொள்ளினும் அமையும். என்னை, அவையும் பிணியாகலின். சம்பந்தர் இட்ட திரு ஏடு எதிர் ஏறப் பெற்றதும், இறைவன் மண் சுமந்து கொட்டிக் கரை கோலப் பெற்றதும் ஆகிய இவை முதலியன வைகையின் பெருமைக்குச் சான்றாகலின், "புன்மையில்" என்பதை, வைகைக்கு அடை யாக்கினும். "புன்மையில்" எனக் கூறிப், பெருமையின் உண்மையை.அருத்தாபத்தியாற் பெற வைத்தார்.

வளர் அன்பு, மருவு நோய், வினைத் தொகை. செய் பொன் திறன், என்ற விடத்தும், செய் திறன்-வினைத் தொகை. பொன்-இடைப் பிற வரல்.

வழுத்துறுபவர்க்கு-என்ற விடத்து, உறு என்பதும், போக்கிடு-விளங்கிடு-என்ற விடத்து, இடு- என்பதும், பகுதிப் பொருள் விகுதிகள். "இயல்பு ஆர் நாதனே" எனவும், "பூ வணம் வாழ் நாதனே" எனவும் கூட்டுக. இனி, வழுத்து- உறுபவர்க்கு, எனப் பிரித்து வழுத்துதலைச் செய்வார்க்கு, எனப் பொருள் கொள்ளினும் அமையும், இப் பொருளில், " நினைந்து, நைந்து, உருகி " என்னும் செய்தென் னெச்சங்கள், வழுத்துறுபவர் என்னும் வினையாலணையும் பெயர் கொண்டது. 1

2. ஆவல்கொண் டுன்னை வழுத்தியே பணிந்தும்
 ஆயிழை யார்களை வெறுத்தும்,
மேவரு ஞான சாதனம் அடைந்தும்
 மேன்மையார் குருபரன் அருளால்,
ஏவமில் ஞானம் உற்றுநல் மோக்ஷம்
 எய்திட எமக்குநீ அருள்வாய்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
 பூவண்ண நாதநின் பணிவாம்.

(ப-ரை) வைகையின் கரை - வைகை மா நதியின் கரைக்க ணிருக்கின்ற, பூவண மதனில் வாழ் - திருப் பூவணத்தில் எழுந்தருளியிருக்கின்ற, பூ வண்ண நாத - திருப் பூ வண நாதனே, உன்னையே-தேவரீரையே, ஆவல் கொண்டு வழுத்தி உம் - (வழிபட வேண்டும் என்னும்) விருப்பம் அடைந்து தோத்திரஞ் செய்தும், பணிந்தும்- வணங்கியும், ஆய் இழையார்களை வெறுத்தும் - அழகிய அணி கலன்களை அணிந்த பெண்களை வெறுத்தும், மேவ அரும் ஞான சாதனம் அடைந்தும்- அடைதற் கரிய ஞான சாதனங்களைப் பெற்றும், மேன்மை ஆர் குருபரன் அருளால்-மேன்மை பொருந்திய ஞானாச்சாரியன் திரு அருளால், ஏவம் இல் ஞானம் உற்றும்- குற்றம் அற்ற (தத்துவ)ஞானத்தைப் பெற்றும், நல் மோக்ஷம் எய்திட-கைவல்ய பதவியை அடைந்திட, எமக்கு நீ அருள்வாய்-அடியேங்கட்கு தேவ

ரீர் அநுக்கிரகம் செய்யும் பொருட்டு, நின் பணிவாம்- தேவரீரை (மநம் வாக்குக் காயங்களிறுல்) வணங்கு கின்ருேம். (எ-று)

(வி-ரை) பொன்னேயுந் துகிலேயும் பிரித்திடில் வெறும் புழு மலக் கூடாகையால், அப் பொன்னுந் துகிலுமே அவர்கட் கணி செய்வன, என்ப துணர்த்தற் பொருட்டு, "ஆ யிழையார்" என்ருர். ஆ யிழையார் எனவே அவர்கட் கின மாகிய, பொன்னேயும், மகாரையும் கொள்க. என்னே - அவையும் அதிகாரிகளால் வெறுக்கப்படுவன வாகலின், இதனே,.

"அகல்ஞாலத் தகத்துட் டோன்றி, வருந்துணேயும் சுற்றமும் பற்றும் விட்டு வான்புலன்கள் அகத்தடக்கி மட வாரோடும், பொருந்தணேமேல் வரும்பயனேப் போக மாற்றி", என வரும் (கோயில் 5) அப்பர் அடிகளார் திரு வாக்கான் உணர்க. வழுத்தியே, என்ற விடத்துள்ள ஏகாரம் அசை.

ஞாந சாதநங்கள் வரும் ஆறு:- விவேகாதிகள் நான் கும், சிரவணுதிகள் மூன்றும், தத் துவம் பார்த்த சோதநம் ஒன்றும், ஆகிய எட்டும், அந்தர் அங்க சாதநங்க ளாம், யக் ஞாதி கர்மங்கள், பகிர் அங்க சாதநங்க ளாம்.

அந்தர் அங்கம்-அண்மைச், சாதநம். பகிர் அங்கம்-சேய்மைச் சாதநம், ஜிஞ்ஞாசு வானவன், பகி ரங்கத்தை விட்டு, அந்த ரங்கத்தைக் கொள்ளுதற் குரியனுயினும், யக்ஞம் சகுணுேபாசனே ஆகிய இவற்ருல் முறையே மல விக்ஷேப தோடங்கள் ஒழிந்து, சித்த சுத்தி யுண்டாகுதலால், அதன் வாயி லாக அந்த ரங்க சாதநங்களே அடைந்த பிறகே பகி ரங்க சாதநங்களே விடல் வேண்டும். இன்றேல், உபயப் பிரஷ்டனுய் சம்சார மாகிய கிணற்றில் மூழ்குவன். இதன் விரிவை, விசார சாகர, டிப்பணியிற் கண்டு கொள்க. விரிக் கிற் பெருகும் என்று அஞ்சி விடுத்தனம்.

"ஆவல் கொண்டு" என்றவிடத்துக், "கொண்டு" என்பது வினையெச்சம், மூன்றுவதன் சொல்லுருபன்று. "இயலானது கொண்டு" என்னும் சரஸ்வதி யந்தாதியிற் போல. ஜீவப் பிரம்ம ஐக்கிய கேவலாத்வைத ஞாந மென்பார். "ஏவமின் ஞாநம் என்றூர். 2

3. மேவலர் இன்றி இனிதுயாம் வாழ
மேவலர் உளமது களிக்கப்,
பாவநம் ஆக என்றும்யாம் இருக்கப்
பாருளோர் விரும்பிட எவரும்,
பாவிஎன் றெம்மைப் பகர்ந்திடா திருக்கப்
பணித்தெமக் கன்புடன் அளிப்பான்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவாம்.

(இ-ள்) வைகையின் கரை-வைகை (மா) நதியின் கரைக்கணிருக்கின்ற, பூவணமதனில் வாழ் - திருப் பூவணத்தில் எழுந்தருளி யுள்ள, பூவண்ண நாத-திருப் பூவண நாதனே, யாம் மேவலர் இன்றி- (அடியேங்கட்கு) அந்நியராக ஒருவரு மின்றி (யாவைரையும் யா மாகக் கண்டு), இனிது வாழ- பேரின்ப வடிவ மாக வாழவும், மேவலர் உளமது களிக்க- அவ் வந்நியரும் தம் முளத்திலே (அடியேங்களைத் தா மாகக் கண்டு) மகிழவும், யாம் என்றும் பாவநம் ஆக இருக்க- யாம் எந்நாளும் சுத்தப் பிரம்ம சொரூப மாக இருக்கவும், பாருளோர் விரும்பிட-(மைத்திரியாதி குணங்க ளுடைமையால்) மக்கள் விரும்பவும், எவரும் எம்மை பாவி என்று- ஒருவரும் எம்மைப் பாவி என் பதாக, பகர்ந்திடாது இருக்க - கூறுதிருக்கவும், பணித்து எமக்கு- ஆட்கொண்டு அடியேங்கட்கு, அன்புடன் அளிப்பான்- கருணையோடு அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பணிவாம்-தேவரீரை (மந வாக்குக் காயங்களால்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) "ஈதனைத்தும் பிரம்ம மல்லவா." எனச் சுருதி கூறுகின்றமையாலும், உலகினைத் தானே யாக உணர்ந்திடின் முத்தியா மாகையாலும், சர்வப் பிரபஞ்சங் களும் ஆன்மா வாகிய தன்னிற் கற்பித மாகையாலும், அதிஷ்டான மாகிய தன்னிலும் அவற்றிற்குச் சத்தை வே றின்மையானும், "மேவலர்............களிக்க" என்றார். "மேவலர்" என உயர்திணைப் பொருள்மேல் வைத்துக் கூறினாரேனும், அஃறிணைப் பொருளையும் கொள்க என்னை. அவையுந் தன் வடிவ மாகலின் - இதனை,

"நூலனைத்தின் சித்தாந்த மேதெல் லோர்க்கும் நோக்கு யதே தோர்ந்ததே தெல்லா மேது, ஞாலமெலா முறைவதே, தசைவொன் றில்லா நல்லதே தொனிக்குமொனி தருவ தேது, பாலுறுதன் னநுபூதி யொன்றாக் காணப் பட்டதே, தொன்றாயும் பலவா மேது, சாலுகளங் கம்படைத்தும் படையா தேது சகலமுமா யலாதேது அதுதான் ஆன்மா. என்னும் (5-9-75) வாசிட்டதா னுணர்க "மைத்திரி யாதி குணங்க ளாவன:- 1 மைத்திரி (நட்பு). இன்ப முடையா ரைக் கண்டு மகிழ்ந்து அவரைத் தம்மவராக் கருதுதல்; 2 கருணை (அருள்) துன்ப மூடைய பிராணிகளைக் கண்டு தமக்குத் துன்பம் நிகழ்தல் கூடாது என்று கருதுதல்; 3, முதிதை (உவகை). நற் கருமங்களைச் செய்கின் றோரைக் காண்டலும், உள மகிழ்ச்சியோடு முக மலர்ச்சி யுறுதல்; 4, உபேட்சை (நொதுமல்). கொடியோரிடத்தும் விருப்பு வெறுப் பின்மை. பாவி யெனப் பகராதிருத்தலே. "உலகிற் சீயென்று பேயென்று நாயென்று பிறர்தமைத் தீங்குசொல்லாத தெளிவும்". என வரும் வள்ளலார் வாக் கான், தாம் பிறரைக் கூறுமையும் கொள்க. மேவலர், என்பது, மேவு என்னும் முத னிலை யடியாகப் பிறந்த எதிர்மறை வினையா லணையும் பெயர். 'பாவநம், என்பு தீண்டு, விடாத விலக்கணையால் சுத்தப் பிரம்மத்தை யுணர்த்திற்று, இதற்குத் தவம் எனப் பொருள் கொண்டு, தவத்தின்கண்ணே நினைபெற்றிருக்க எனினும் அமையும்,

என்னே? "தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார்." ஆக லின், எவரும், "என்ற விடத்து ம்மை ம, எஞ்சாமைப் பொருட்டு, பாவி என்பது தொகுதி யொருமை. அல் என் பது எதிர்மறை யிடைநிலை, எதிர்மறை விகுதி யெனினு மாம். மேலவர்-பொருந்தாதார் அந்நியர். 3

4. வாஎன அழைத்து வைகைநல் கரையின்
மடம்ஒன்றை இயற்றுவாய் என்று,
ஏவல்செய் தனையால் இயானும்அவ் வாறே
இயற்றினன் நின்அருள் வாக்கால்,
மேவிநல் அடியார் அவண்இருந் தாந்ம
விசாரஞ்செய் திடஅருள் செய்வான்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவேன்.

(இ-ள்) வைகையின் கரை-வைகை (மா) நதியின் கரைக்கண் ணிருக்கின்ற,பூவணமதில் வாழ்-திருப்பூவணத் தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற பூவண்ண நாத-திருப் பூவண நாதனே. (என்னை) வா என அழைத்து-அடியேனை 'வருவாயாக' என்று அழைத்து-வைகை கரையில்-வைகை (மா) நதியின் கரைக்கண்ணே, நல் மடம் ஒன்றை-இயற்று வாய்-அமைப்பாயாக, என்று ஏவல் செய்தனை-என்று கட் டளை யிட்டருளினீர், யானும் அவ்வாறே - அடியேனும் தேவரீர் கட்டளையிட்ட வண்ணமே, நின் அருள் வாக்கால் இயற்றினன்---நுமது அருள் வாக்கை சிர மேற் கொண்டு அமைத்தேன், நல் அடியார் அவண்-பெருமைமிக்க அடியார் கள் அம் மடாலயத்தில், மேவி இருந்து- (விரும்பிக்) குழுமி இருந்து, ஆந்ம விசாரம் செய்திட-ஆத்ம விசாரஞ் செய்யும் பொருட்டு, அருள் செய்வான்- அநுக்கிரகஞ் செய்தருள, நின் பணிவேன்-தேவரீரை (மந வாக்கு காயங்களால்) வழிபடுகின்றேன். (எ-று)

(வி-ரை) துறவறத் திரு நெறிப் பெரியோர்களால், செபதியாந சமாதி, செய்தற்குரிய இடமாகையானும், திருக் கோயில் வழிபாட்டு நெறியினையும், கரும பக்தி யோக ஞாந சாத்திரங்களையும், தன்னை அண்டிய துறவிகட்குப் போதித்துப் பண்படுத்தி, அவர்களைச் சன்மார்க்கத் தொண்டாற்றும் நெறியிலே நாட்டிற்குப் பயன்படச் செய்கின்றமையாலும், மக்கள் லௌகிக நெறியிலும், வைதிக நெறியிலும் பிழையாது அவர்களைக் கல்வித் துறையிலும், ஒழுக்க நெறியிலும்' செலுத்துகின்றமையாலும், முக், கரணங்களாலும் கைம் மாறு வேண்டாக் கடப்பாட்டை மேற்கொண்டு ஒழுகலானும், திருக் கோயிலினும் மடாலயம் சிறந்த தென்பர் பெரியோர். மேற் கூறப் பெற்ற நெறிகளைப் பெற்றவையே மடங்கள் எனப் பேர் பெறும். பெருதனவாமேல் அவைகள் வெறுந் தடங்களெனவே கூறப்பெறும். ஆகையால், இறைவன் மடமியற்றக் கட்டளையிட, அதனை யியற்றினன், என்றார். இதனை, "மடம் பெற்ற பேறு திருக்கோயிலுக்கில்லைஇவ் வையகத்தே ,, என வரும் பெரியார் வாக்கா னுணர்க,

வைராக்கியம், பொறுமை, அடக்கம், முதலியனவாகிய துறவொழுக்க முடையார் என்பார், "நல் அடியார்" என்றார், அவரே, அறம் பொருள், இன்பம், வீடு, ஆகிய உறுதிப் பொருள் நான்கையும், உலகிற் குள்ளவாறுணர்த்துவா ராகலின், வள்ளுவ ருரும் நூன் முகப்பிற் கணியாய், "நீத்தார் பெருமை" என வைத்து அவரைப் புகழ் வா ராயினர், மடம் இயற்ற வருளிய இறைவனைப், ஆந்ம விசாரஞ் செய்யும் அடியார் குழாத்தையும் அம்மடத்திலமைத்தல் வேண்டும் என வேண்டினர். இப் பாட்டால், நாட்டிற்கு மடாலயம் இன்றியமையாது வேண்டற்பாலதென்றும், அது செய்யும் கடமை இத்தகைய தென்றும் உணர்த்தினர். அழைத் தென்னுஞ் செய் தென் னெச்சம், ஏவல் செய்தனை, என்னும், முற்றைக் கொண்டது. வாக்கால் இயற்றினன், எனக் கூட்டுக.

5. சேவகம் இன்றிப் பாவகம் ஆகச்
செல்வமும் வித்தையும் பெற்றுத்,
தேவனும் உன்சீர் நூல்பல இயற்றிச்
சேர்ந்தபத் தர்கட்கவை சாற்றி,
வீவிலா உன்தன் சொருபமே எய்தி
விளங்கிட எமக்கருள் செய்வான்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவாம்.

(இ-ள்) வைகையின் கரை-வைகை (மா) நதியின் கரைக்கண் ணிருக்கின்ற, பூவணமதனில் வாழ் - திருப் பூ வணத்தின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, பூ வண்ண நாத- திருப் பூ வண நாதனே, சேவகம் இன்றி-சோம்பல் இன்றி (அதிதீவிர முயற்சியுடனே,) செல்வமும் வித்தையும்-செல் வப் பொருளையும் கல்விப் பொருளையும், பாவகம் ஆக பெற்று- பரிசுத்த மாக அடைந்து, தேவன் ஆம் உன் சீர் நூல் பல இயற்றி-இறைவ னாகிய தேவரீரது புகழ் பற்றிய நூல்கள் பலவற்றை ஆக்கி, அவை சேர்ந்த பத்தர்கட்கு சாற்றி-அவற்றை அண்டிய அடியார்கட்கு கூறி, உன் தன் வீவு இலா சொருபமே எய்தி-தேவரீரது அழிவில்லாத வடிவத்தையே அடைந்து, விளங்கிட - (நின் வடிவ மாக) விளங்கும் பொருட்டு, எமக்கு அருள் செய்வான்-அடியேங் கட்கு அநுக்கிரகஞ் செய்ய, நின் பணிவாம்-தேவரீரை (மந வாக்குக் காயங்களினால்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) முக் கரணங்கட்கும் அவ் வப்போ துண் டாகும் துன்பங்களைப் பொருட்படுத்தா தென்பார், "சேவகம் இன்றி" யென்றும், செல்வப் பொருளை, அற நெறியாலும், கல்விப் பொருளை, ஆசிரிய னிடத்துச் செய் கின்ற சிரத்தை வாயிலாக ஐயந் திரி பின்றியும், ஈட்டல் வேண்டும் என்பார், "பாவக மாக பெற்று" என்றும் கூறினர். இதனை,

"அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து, தீதின்றி வந்தபொ ருள்." "(76—4.) என்னும், வள்ளுவர் திரு வாக்கானும், "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே." என்னும் புற நானூற்றானும் உணர்க.

பூ மாலையினும், பா மாலையே இறைவனுக்கு விருப்பந் தருவதாகலின், "சீர் நூல் பல வியற்றி" என்றார் இதனை,

"வாழ லாமரன் புகழின மலர்கவி மாலைசெய் தவன்றாளில்
வீழு மாறுபொன் னிதழிசேர் தோள்களின்
மீதணிந் தினிநெஞ்சே,
தாழு வாயரி தேடுபொற் சரணமே
சரணமென் றிதுவன்றிப்
பாழி லேகருங் காக்கைபோற் கதறிநாள்
பலகழித் தொழியேலே."

(வைராக்கிய சதகம் 48) என வரும் சாந்த லிங்க சுவாமிகள் திரு வாக்கா னுணர்க.

அவ னருளாலே அவன் றாள் வணங்கி, பின் அவ னுதல் வேண்டு மாகலின், "உன் தன் சொரூபமே யெய்தி விளங்கிட" என்றார். இதனை. "சிவமாக்கி யெனை யாண்ட, அத்தன் எனக்கு அருளியவாறு." (அச்சோ பதிகம்-1) என வரும் மணி வாசகனார், திரு வாசகத்தா னுணர்க.

"இன்றி," என்னும் குறிப்பு வினை எச்சம், 'பெற்று' என்பதையும், அது, 'இவற்றி,' என்பதையும், அது 'சாற்றி,' என்பதையும், அது, 'எய்தி,' என்பதையும், முறையே கொண்டன.

வீவு—தொழிற் பெயர், வீ—பகுதி, உ—விகுதி. 5

6. நாவலர் போற்ற நல்தமிழ் மொழியில்
நல்உரை களைச்செவ்வே ஆற்றப்,
பாவநம் ஆகும் தேவபா ஷையின்நூல்
பலவற்றைத் தென்மொழிப் படுத்த,

மேவிந்தி நூல்கள் தமிழ்வச நத்து
மிளிர்வுறச் செய்எனக் கருள்வான்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவாம்.

(இ-ள்) வைகையின் கரை-வைகை (மா) நதியின் கரைக்கண் ணிருக்கின்ற, பூவண மதனில் வாழ் - திருப் பூ வணத்தின்கண் ணெழுந்தருளியிருக்கின்ற, பூ வண்ண நாத-திருப் பூ வண நாதனே, நல் தமிழ் மொழியில்-செந் தமிழ் மொழியில், நல் உரைகளை-உயர்வு மிக்க (நூல் களின்) உரைகளை, நாவலர் போற்ற செவ்வே ஆற்ற-கற் றறிவுடையோர் புகழு மாறு பத் தழகுடனே இயற்றவும், பாவநம் ஆகும் தேவ பாஷையில் (உள்ள) நூல் பல வற்றை-பரிசுத்த மாகிய வட மொழியி லுள்ள பல நூல் களை, தென் மொழிப் படுத்த-தமிழ் மொழியில் பெயர்க்க வும், மேவு ஹிந்தி நூல்கள்-(சாத்திரார்த்தங்கள்) பொருந் திய இந்தி மொழியி லுள்ள நூல்களை, தமிழ் வசநத்து மிளிர் உற-தமிழ் மொழியில் வசந வடிவ மாக (விளங்கு மாறு), செய எனக்கு அருள்வான்-செய்தற்கும் அடியேற்கு அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பணிவாம்- தேவரீரை (முக்கரணங்களாலும்) வழிபடுவோமாக,(எ-று)

(வி-ரை) உரை யியற்றல் முதலியன உலக வுபகாரத் தின் பொருட்டாதலின், அவையும் வேண்டு மென வேண்டினார். பத் தழகாவனவற்றை:—

"சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்,
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்,
ஓசை யுடைமை ஆழமுடைத் தாதல்,
முறையின் வைப்பே உலக மலையாமை,
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்தது,
ஆகுதல் நூலிற் கழகெனும் பத்தே."
என்னும் நன் னூற் சூத்திரங் கொண் டுணர்க.

இங்ஙன் கவின் பெற்ற உரைகளே நீடு நின்று நிலவு மாகலின், "செவ்வே ஆற்றி" என்றார். அங்ஙன் நீடு நிலவுவன, ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய, பிரம்ம சூத்திர பாஷியமும், ஸ்ரீ மாதவச் சிவ ஞாந யோகிகள் இயற்றிய, சிவ ஞாந போத பாஷியமும், நச்சினார்க் கினியர் இயற்றிய, சிந்தாமணி, பத்துப் பாட்டு, முதலியவற்றின் உரைகளும், பரிமேல் அழகியார் இயற்றிய திருக் குறள் உரை முதலியனவு மாம். தென் மொழியை அகத்தியனாருக்கும், வட மொழியைப் பாணினியாருக்கும், இறைவனே அறிவுறுத்தினமையின், அவ் விரு மொழியும் இரு கண்ணே போற் போற்றியாராய்த் தக்கன வாகையால், "தேவ பாஷையின் நூல் பலவற்றைத் தென் மொழிப் படுத்தி" என்றார். ஏனைய மொழிகள் போல வட மொழி உலக வழக்கிற் பயின்று வாராமையால், தேவ பாஷை, எனப்பட்டது.

ஆற்ற, படுத்த, செய, என்னும் செய வென் னெச்சங்கள், அருள்வான், என்னும் வினை யெச்சங் கொண்டு முடிந்தன. அது, பணிவேன், என்னும் வினை முற்றைக் கொண்டு முடிந்தது. எண் ணும்மைகள் தொக்கன. 6

7\. நாவலர் புலவர் பாவலர் அவையின்
நல்லசொல் பொழிவுசெய் திறனே,
ஏவரும் புகழ எமக்கருள் செய்வான்
ஏத்துபொன் னனையினன் மனையின்,
மேவல்செய் இரசவாதியாய்த் துலங்கி
விக்கிர கத்தினை யளித்துப்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதனின் பணிவாம்.

(இ-ள்) ஏத்து பொன் னனையின் நல் மனையில்-(அடியா ரனைவரும்) துதிக்கின்ற பொன்னனையாளது நல்ல வீட்டின்கண், மேவல் செய் இரச வாதி ஆய்-(யாவரும்) விரும்புகின்ற இரச வாதி யாக, துலங்கி-எழுந்தருளி வந்து,

விக்கிரத்தினை அளித்து-விக்கிரகத்தைச் (செய்து) கொடுத்து, வைகையின் கரை-வைகை (மா)நதியின்கரைக்கண் உள்ள, பூவண மதனில் வாழ்-திருப் பூவணத்தின்கண் ணெழுந் தருளி யிருக்கின்ற, பூ வண்ண நாத - திருப் பூ வண நாதனே, நாவலர் புலவர் பாவலர் அவையில் - நாவலர், புலவர், பாவலர், கூடிய, அவையின்கண்ணே, நல்ல சொல் பொழிவு செய் திறனை-நன்மை யாகிய சொற் பொழிவு செய்கின்ற திறமையை, ஏவரும் புகழ-அறிஞர் அனைவரும் புகழும்படி, எமக்கு அருள் செய்வான் - அடியேங்கட்கு அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பணிவாம்-தேவரீரை (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை.) நா வலர்-நாவில் வல்லவர், புலவர்-கல்வி அறி வுடையவர், பா வலர்-பாவில் வல்லவர், தன்னின், மிக்காரும், ஒப்பாரும், தாழ்ந்தாரும், ஆகிய மூ வகை அவயத்தாரில், ஈண்டு, மிக்காரையும், ஒப்பாரையுமே, "நா வலர், புலவர், பாவலர், என்றார். என்னை? அவரே, செஞ் சொல், இலக்கணைச் சொல், குறிப்புச் சொல், ஆகிய மூ வகைச் சொற்களையும், அவற்றின் பொருள்களையும் உணர வல்லா ராகலின். சுருங்கச் சொல்லல், முதலிய அழகுடனே, முன் சொல்வனவும், பின் சொல்வனவும், அறிந்து அம் முறையே கோத்து இனி தாகச் சொல் லுரையாலும், இங்ஙன் சொல்லுதல் வல்லார்ப் பெறின், மேற் கூறிய அவை யத்தார் ஏற்றுக் கொள்வ ராகையாலும், சொல் லிலக்கண நெறியானே, தருக்க நூலைக் கற் றுணர்ந்து, சுருதி, யுக்தி அநுபவ நெறி பிழையாது சொல்லுகையாலும், மேற் கூறிய சொற் பொருள்களின் தொகையினை யுணர்ந்து, அவற்றுள் ஆகாதன வொழித்து, ஆவன கொண்டு அவைக் கண் அச்ச மின்றிச் சொல்லுகையாலும், "நல்ல சொல் பொழிவு செய் திறனை" என்றார். இதனை.

"விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது,
சொல்லுதல் வல்லார்ப் பெறின்."—(65-8.) என்றும்,

"ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா,
மாற்றங் கொடுத்தற் பொருட்டு."—(73-5) என்றும்,

"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை,
வெல்லுஞ்சொல் இன்மைய றிந்து."-(65-5) என்றும்

வகையறிந்து வல்லவைவாய் சோரார் சொல்லின்,
தொகையறிந்த தூய்மைய வர்." — (73-1) என்றும்.
வரும் திரு வள்ளுவர் மொழியா னுணர்க.

பொன்னனையாளின் திரு வுளப் பண்மை, இரச வாதஞ் செய்த படலத்துக் காண்க.

'இரச வாதியாய்' என்ற விடத்து, திறனை அருள் செய்வான் எனக் கூட்டுக., வான்-வினை யெச்ச விகுதி. திறனைப் புகழ அருள் செய்வான், எனக் கூட்டி, எவரும், என்பதனை இடைப் பிறவரலாகக் கொள்ளினும் அமையும். 'செய் திறன்', 'ஏத்து பொன்னனை', 'செய் இரச வாதி', என்பன வினைத் தொகை. 7

8. பாவமே லீட்டால் தீமைசெய் பவர்க்கும்
பல்துயர் அளித்தவர்த் தடுத்து,
மேவநல் வழியுய்த் தின்பருள் நின்தன்
மேன்மையார் அறிவரிவ் உலகில்
ஏவர்க்கும் அரிதாம் உயர்முத்தி எமக்கிங்
கெளிதினில் அருள்செய வேண்டிப்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவாம்.

(இ-ள்) வைகையின் கரை-வைகை (மா நதியின்) கரைக்கண் ணிருக்கின்ற, பூவணமதனில் வாழ்-திருப் பூ வணத்தின்கண் ணெழுந்தருளியிருக்கின்ற, பூ வண்ண நாத-திருப் பூ வண நாதனே, பாவம் மேலீட்டால் தீமை செய் பவர்க்கும்-தீய கருமம் அதிகரித்தலால் தீ வினைகளையே செய்கின்ற பாவிகட்கும், பல துயர் அளித்து-பல துன்பங் களை நுகரும்படி கொடுத்து, அவர் தடுத்து - அவர்களை

(மேலும் தீய கருமங்களை ஈட்டாது) தடுத் தாட்கொண்டு, நல் வழி மேவ உய்த்து-சன்மார்க்கத்தின்கண்ணே செல்லு மாறு செலுத்தி, இன்பம் அருள் நின் தன் மேன்மை-பே ரின்பத்தை அநுக்கிரகஞ் செய்கின்ற தேவரீரது பெருந் தகைமையை, இவ் உலகில் ஆர் அறிவர்-இந்த உலகத்தில் அறிவார் யாவர், ஏவர்க்கும் அரிது ஆம் உயர் முத்தி-(அநதிகாரிகள்) அனைவர்க்கும் கிடைத்தற் கரி தாய கை வல்ய பதத்தை, எமக்கு இங்கு எளிதினில்-அடியேங்கட்கு இவண் எளி தாக, அருள் செய்வான் வேண்டி-அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு வேட்கை யுற்று, நின் பணிவாம்-தேவரீரை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோ மாக. (எ-று)

(வி-ரை) பாவம் காரண மாகத் தீ வினை செய்தலும், அதனைச் செய்தல் காரண மாகப் பாவஞ் சேர்தலும், மர மும், விதையும், போல, மாறி மாறி வருதலின், "பாவமே லீட்டால் தீ வினை செய்பவர்க்கும்" என்றார்.

இறைவன் பாவிகளையும், பெற்ற தாய் தீய மக்களைத் தீமைக்குத் தக்க வாறு அடித்துப் பின் னணைத்து இதம் செய்தல் போல, அப் பாவத்திற் குரிய துன்பங்களை நுகர் வித்து, தன் னுடைய கருணைப் பெருந் தகைமையாற் றடுத் தாட்கொண்டு, நல் வினையிற் செலுத்தி புண்ணியத்தை மிகு வித்து, அது காரண மாக இன்பத்தை நுகர்விப்பன்; ஆகையால், "பல் துயர் அளித்து அவர் தடுத்து, மேவு நல் வழி யுய்த் தின் பருள்" என்றார். இதனை,

"நீதி யாவன யாவையும் நினைக்கிலேன்
நினைப்பவ ரொடுங்கூடேன்,
ஏத மேபிறந் திறந்துழல் வேன்றனை
யென்னடி யானென்று,
பாதி மாதுடன் கூடிய பரம்பரன் நிரந்தரம் ஆய்நின்ற,
ஆதி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே."

(அதிசயப் பத்து 2) என வரும் மாணிக்க வாசகர் திரு வாக்கானும், "பொல்லாத சேயெனிற் றாய்தள்ளல் நீதமோ புகலிடம் பிறிது முண்டோ." என வரும், தாயுமா னார் திரு வாக்கானு முணர்க. சாலோக மாதி பத முத்திகள் அன்றிக் கேவலாத்துவித முத்தி யென்பார். "எவர்க்கும் அரிதா முயர் முத்தி" யென்றார். அம் முத்தி அரி தாயினும், எளி தாக வருள் செய்யும் வன்மை இறைவனுக் குள தாக லின், "எளிதினி லருள் செய." என்றார். மேலீடு-முத னிலை திரிந்த தொழிற் பெயர். செய்பவர்க்கும், என்ற விடத் தும்மை, இழிவு சிறப்பு. தீமைக ளாவன-கொலை, களவு பொய் கள் சூது. 8

9. நோவறத் தாயில் பன்றியின் குருளை
நுகர்ந்திடக் கருணை நல் தாயின்,
மேவுருக் கொடுபால் நன்களித் தருளி
மிளிர்கரிக் குருவிநா ரைகட்கும்,
ஓவுறப் பந்தம் ஒளிருப தேசம்
ஓதினை எமக்கும் இன் றருள்வான்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவாம்.

(இ-ள்) வைகையின் கரை - வைகை (மா நதியின்) கரைக்கண் ணிருக்கின்ற, பூவண மதனில் வாழ்-திருப் பூ வணத்தில் எழுருந்தருளி யிருக்கின்ற, பூ வண்ண நாத-திருப் பூ வண நாதனே, தாயில் பன்றியின் குருளை-தா யில்லாத பன்றிக் குட்டிக ளானவை, நோ அற நுகர்ந்திட - (பசி நோய் ஆகிய) துன்பம் நீங்கும் வண்ணம் பருகிட, கருணை மேவு நல் தாயின் உருக் கொடு-கருணை பொருந்திய பெற்ற தாயின் உருவத்தோடு வந்து, நன்கு பால் அளித் தருளி- (அவைகள்) இன்ப மடையப் பால் கொடுத்தருளி, மிளிர் கரிக் குருவி நாரைகட்கும்-(பறவை இனங்க ளாக) விளங்கு கின்ற, கரிக் குருவிக்கும் நாரைக்கும், பந்தம் ஓவு உற ஒளிர் உபதேசம்-பந்தமானது நீங்க விளங்குகின்ற உபதேசத்தை,

ஓதினை-உபதேசித்தாய், இன்று எமக்கு அருள்வான்-இந் நாள் அடியேங்கட்கு அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பணிவாம்-தேவரீரை (முக் கரணங்களாலும்) வழிபடு வோமாக. (எ-று)

(வி-ரை) இறைவன் சர்வ சராசரப் பிரபஞ்ச வடிவமா யிருத்தலின், அப் பிரபஞ்சத் தொகுதிக்கண் பொருந்திய, விலங்கினங்கட்கும், பறவை இனங்கட்கும் வரும், இன்னல்களையும் தன தாகக் கொண்டு பால் நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து, அவற்றை நீக்குபவ னுகையால், பன்றிக் குட்டிகட்கும், கரிக் குருவிக்கும், நாரைக்கும், அநுக்கிரகித்தமையை, விதந் தோதினுர்.

அச்சுதனும் ஆனைக் கருளியது ஈண்டு நோக்கற்பாலது. இவற்றின் வர லாற்றைப், பன்றிக் குட்டிகட்கு பால் கொடுத்த படலத்தும், கரிக் குருவிக் குபதேசித்த படலத்தும், நாரைக்கு முத்தி கொடுத்த படலத்தும் (திரு விளையாடல் புராணத்து) கண்டு கொள்க.

குருளை என்பது, தொகுதி யொருமை யாதலின், பன்னிரு குட்டிகளையுங் கொள்க. 'நுவல் கருணை', மிளிர் குருவி', 'மிளிர் நாரை', வினைத் தொகை. 9

10. கூவிளம் தளிர்கைக் கொண்டுநல் பூசை
குயிற்றுவார் தமக்குநல் துறக்கம்,
காவிதி யரைப்போல் கொடுக்குநின் கலந்தை
காண்பவர் எவர்தர ணியிலே,
பாவியேன் உன்னைப் பணிவது கண்டும்
பராமுக மாயிரா தருள்வான்,
பூவண மதனில் வைகையின் கரைவாழ்
பூவண்ண நாதநின் பணிவாம்.

(இ-ள்) வைகையின் கரை-வைகை (மா) நதியின் கரைக்கண் ணுள்ள, பூவண மதனில் வாழ்-திருப் பூ வணத் தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, பூ வண்ண நாத-

திருப் பூவண நாதனே, கூவிளம் தளிர் கை கொண்டு- வில்வத் தளிரைக் கையின்கண் கொண்டு, நல் பூசை குயிற் றுவார் தமக்கு-நல்ல பூசையைச் செய்கின்றவர்கட்கு, நல் துறக்கம் - பிரம்ம லோகத்தி லுள்ள நல்ல போகங்களை, காவிதியரைப் போல் - காத்தல் தொழிலை யுடைய திரு மாலைப் போல, கொடுக்கும்-அளிக்கின்ற, நின் கலந்தை- உனது பெருமையை, காண்பவர் தரணியில் எவர்-அறி பவர் இவ் வுலகில் யாவர்? (ஆயினும்), பாவியேன் உன்னை பணிவது கண்டும்-பாவ முடையே னாகிய அடியேன் தேவ ரீரை வழிபாடு செய்வதைப் பார்த்தும், பராமுகம் ஆய் இராமல் அருள்வான்-அருள் செய்யாதிராமல் அருள் செய் யும் வண்ணம், நின் பணிவாம்-தேவரீரை (முக் கரணங் களாலும்)வழிபாடு செய்வோமாக. (எ-று)

(வி-ரை) 'நல் பூஜை' என்பதற்கு, ஈண்டு, சரியை, கிரியை, யோகம், ஆகியவற்றைக் கொள்க. 'நல் துறக்கம்' என்பதற்கு, இரண்யகர்ப்ப (பிர்ம) லோகத்தைக் கொள்க. சரியை முதலியவற்றை மேற் கொண்டு ஒழுகும் யோகியர், அல்லது, உபாசகர், மறுமையில் தேவ யாந மார்க்க மாகப் பிரம லோகத்தை யடைகின்றனர் என்றும், அவர் களுள் சிலர் ஆண்டே மோட்சம் அடைகின்றனர் என் றும், சிலர் போகங்களை நுகர்ந்து பின் நற் குலத்திற் பிறந்து சற் குரு வாயி லாகத் தத்துவ விசாரஞ் செய்து, ஜீவன் முக்த ராகி, விதேக முத்தி யடைகின்றனர் என்றும். சாத் திரங்கள் கூறுகின்றமையால், சரியை முதலியன ஞாந மருவுதற்குக் காரணம் என்பதை யுணர்த்த, "கூவிளம் தளிர் கைக் கொண்டு நல் பூசை குயிற்றுவார்" என்றார். இதனை

"கர்ம உபாசனைகளால் இரண்ய கர்ப்ப லோகத்தினை யடைகின்றனர், ஆண்டு, (வைராக்கிய முள்ள) சிலர் மோட்ச மடைகின்றனர், போகேச்சை யுடையோர், மீண் டும் ஜந்ம மடைகின்றனர்" என்று கூறும் சுவராஜ்ஜிய

சித்தியாலும், "உத்தம உபாசகர்கள் விதேக முக்திக்கு அதிகாரிக ளாக விருத்தலின், தேவ யாந மார்க்க மாக அவர் யாவரும் பிரம லோகத்திற்குப் போகின்றனர். ஆனால், ஒரே பிரம லோகம் விஷ்ணு உபாசகனுக்கு வைகுண்டரூப மாகவும், அங்குள்ளவர்கள் சதுர் புஜங்களோடு கூடியவராகவும் தோன்றுகின்றனர், தானும் சதுர் புஜனகவே யாகின்றான். அங்ஙனமே, சிவ உபாசகனுக்குப் பிரம லோகமே சிவ லோக மாகவும், அங்குள்ளவர்கள் திரி நேத்திர சொரூபிகளாகவும் தோன்றுகின்றனர். அவன் தன்னையும் அங்ஙனமே பார்க்கின்றான். இவ் வாறு எல்லா உபாசகர்களுக்கும் பிரம்ம லோகமே தமது உபாஸ்யத்தின் லோக மாகக் காணப்படுகின்றது." என்று கூறும் விசார சாகரத்தானும் உணர்ந்து கொள்க. சரியை முதலியவற்றின் இலக்கணங்களை சிவ ஞாந சித்தியாரிற் கண்டு கொள்க.

கா—முதனிலைத் தொழிற் பெயர். விதி யென்னும் பல பொருளொரு சொல். ஈண்டு உயர்த்தற்கண் அர் விகுதி பெற்று, 'காவிதியர்' என்று ஆகி, திருமாலை உணர்த்திற்று. என்னை? அவனே உயிர்களைப் போகங்கள் நுகர்வித்துக் காக்கும் கடவு ளாகலின்.

'துறக்கம்' என்பது ஆகு பெயராய் ஆண் டநுபவிக்கும் போகங்களை யுணர்த்திற்று. "புத்தலர் கொடுஙின் பரவு பூசையினும் பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்." என வரும். சோண சைல மாலையாலும் காண்க. 10

திருப் பூவண நாதர் தோத்திரமும்,
பரிமள தீப உரையும், முற்றுப் பெற்றது.

உ
சிவமயம்

# மதுரை சொக்க லிங்கேசர் தோத்திரமும்,

பரிமள தீப உரையும்.

## எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்,

1. குதுகலம் ஆக இயாவரும் விரும்பும்
   கோலமார் ஆலயந் தனிலே,
   சதுர்மறை கூறும் விதிகளில் பொருந்தித்
   தரணியோர் போற்றவீற் றருளிப்,
   புதுமையா வந்து பணிந்திடும் அன்பர்
   போற்றவே இன்பம தளித்து,
   மதுரைநல் நகர்வாழ் சொக்கலிங் கேச
   வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

(இ-ள்) குதுகலம் ஆக-மிக்க மகிழ்ச்சியோடு, யாவரும் விரும்பும் - (ஸ்தம்பம் முதல் பிரம்மா வரையில் உள்ள சீவர்கள்) அனைவரும் விரும்பும், கோலம் ஆர் ஆலயம் தனில்-அழகு பொருந்திய திருக் கோயிலின்கண், தரணியோர் சதுர் மறை கூறும் விதிகளில்-பூமியின்கண் ணுள்ள வர்கள் இருக்காதி வேதங்கள் கூறுகின்ற சரியை ஆதி பூசா விதிகளினால், பொருந்தி போற்ற வீற்று அருளி-(முக் கரணங்களாலும் வழிபட) பெருமையோ டெழுந்தருளி யிருந்து, புதுமை யா(க) வந்து பணிந்திடும்-வீடு அடையும் பொருட்டு வந்து வணங்குகின்ற, அன்பர் போற்ற-அன்பர் கள் வழிபாடு செய்ய, இன்பமது அளித்து-பேரின்பத்தை அநுக்கிரகஞ் செய்து, நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை மா நகரில் வாழ்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, உன் வளம் தரு பதத்தினை-நின் னுடைய அழகிய திரு அடிகளை, பணிவாம் - (யாம் முக் கரணங்களாலும்) வணங்குவாம். (எ-று)

(வி-ரை) "ஆலயம்" என்பதற்கு, மநக் கோயில் எனினும், "போற்ற வீற்றருளி" என்பதற்கு, தியாநிக்க எழுந்தருளி யிருந்து, எனினும் அமையும். இதனை, "மலர் மிசை யேகினன்", குறள் (3) "மனத்தகத்தான்", அந்த ணர்தஞ் சிந்தையானை" என வரும் பெரியோர் திருவாக்கா னுணர்க.

நம்மனோரால், அவன் என்றும், அவள் என்றும், அது என்றும், இரு திணை முக் கூற் றொரு மையாகச் சுட்டி அறியப்படும் பிரபஞ்சம், படைத்தல் காத்தல் அழித் தல் என்னும் முத் தொழிலின் பயனையும் உறுதற் குரிய தாக விருத்தலின், அதற் கொரு காரண கர்த்தா ஆகிய முதற் பொருள் உண் டென்று வேதாகமங்களால் உணர்ந்து, அப் பொருளை மெய் யன்போடு வழிபட்டுப் பே ரின்ப நிலையை எய்துகின்றவர் அன்ப ராகலின், "அன் பர் போற்ற இன்பம தளித்து" என்றார். 'யாரும்' என்ற விடத் தும்மை - எஞ்சாமைப் பொருட்டு. சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத் தாகலின், "புதுமை" என்ற தீண்டு வீடுபே றுயிற்று. 'ஆக' என்ற விடத்துக் ககரம் தொகுக்கப் பெற்றது. இன்ப மது-அது பகுதிப் பொருள் விகுதி. 1

2. சதுர்மறை முடிவைத் தக்கவர்க் கருளும்
தன்மையைக் கேட்டுநான் வந்து,
கதும்என அடைந்தேன் கடைக்கணுல் பார்த்துக்
கருணைபா லித்தருள் புரிவாய்,
மதுமலர் கடப்பம் தாரணி மார்பும்
மாணிக்க மாலையும் துலங்க,
மதுரைநல் நகர்வாழ் சொக்கலிங் கேச
வளங்கொள்நின் பதத்தினைப் பணிவாம்.

(இ-ள்) அணி மார்பும் மது கடப்ப மலர் தாரும்-அழகிய மார்பின்கண் தே னொழுகும் கடப்ப மலர் மாலை

யும், மாணிக்க மாலையும்-மாணிக்கக் கற்களா லாகிய மாலை யும், துலங்க—விளங்க, நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை (மா) நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, நின் வளம் கொள்-நின் னுடைய அழகிய, பதத்தினை பணிவாம்-திரு அடிகளை (முக் காணங் களாலும்) வணங்குவோம். சதுர் மறை முடிவை-நான்கு வேதங்களின் முடி வாகிய பரம் பொருளை, தக்கவர்க்கு அருளும் தன்மையை-சநகாதி முனிவர்கட்கு உபதேசித்த கருணைத் திறனை, நான் கேட்டு-அடியேன் கேள்வி யுற்று, கதும் என வந்து அடைந்தேன்-விரைவிலே வந்து (திரு அடிகளை) அடைந்தேன், கடை க(ண்)ணால் பார்த்து-(அங் ஙன் அடைந்த அடியேனை) கடைக் கண்ணினால் நோக்கி, கருணை-பாலித்து-உபதேசித்து, அருள் புரிவாய்-அநுக்கிர கஞ் செய்வாய். (எ-று)

(வி-ரை) அரு ளிறையாய்க் காட்சி யளிக்கும் போது கடப்ப மலர் மாலையும், அர சிறையாய்க் காட்சி யளிக்கும் போது மாணிக்க மாலையும் கொள்க.

தக்கவர்க் கருளுந் தன்மையை கீழ் வரும் பாவா லுணர்க.

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி.
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்,
எல்லாமாய் அல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி இருந்து காட்டிச்,
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்,

வாதவூர் அடிகளைத் தக்கவர் என்றார் எனினும் அமை யும். அப் பொருட்குச் சதுர் மறை முடி வென்பதனை வைதிகம் தாந்திரீகம் என்பவற்றுள் (வைதிக) சிவ ஞான போத மெனக் கொள்க.

தலை ரோமத்திலே நெருப்புப் பற்றியவன் அதனைத் தணிக்க விரைவிலே தடாகத்தை விரும்புவது போன்று, தாபத் திரய அக்கினியால் வெதும்பிய சாதந நான்கு முடைய உத்தமாதிகாரி விரைவிலே ஞாநாச்சாரியனைச் சரணகதி யாக அடைந்து, அவர துபதேசத்தால் வீடு பெறுதல் வழக் காருகலின், "கதும் என அடைந்தேன்" என்றார். மார்பும் என்ற விடத் தும்மையைத், 'தார்' என்ற விடத்துங் கூட்டி யுரைக்க. 'கடம்பு' என்பது அம் சாரியை பெற்றுக் 'கடப்பம்' என ஆயிற்று. 2

3. இதம்தரும் எனவே உணர்திறன் இன்றி
இருக்குநாள் இனிமைய தாக,
மதம்தனை விளக்கி மாசிலாப் பதத்தை
மன்னிவீ டுறைவதற் கருள்வாய்,
நிதம்திரு விளையா டல்புரிந் தெவர்க்கு
நீக்கமில் லாத்தனை அருளி,
மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச
வளஞ்செய்நின் பதத்தினைப் பணிவாம்.

(இ-ள்) நிதம் திரு விளையாடல் புரிந்து - எந் நாளும் (மெய் யடியார் பொருட்டு) திரு விளையாடல் செய்தருளி ஆட் கொண்டு, எவர்க்கும் நீக்கம் இல்லா(த) - சர்வ சரா சரப் பிரபஞ்சங்களிலும் நீக்கம் இன்றி நிறைந் திருக்கின்ற, த(ன்)னை அருளி - (பரிபூரண பரமாத்மா வாகிய) தன்னை (உத்தமாதிகாரிகட்கு அவர் வடிவ மாக) உபதேசித்து., நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை (மா) நகரில் எழுந் தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, நின் வளம் செய் பதத்தினை-நின் னுடைய அழ கிய திரு அடிகளை, பணிவாம் - (முக் கரணங்களாலும்) வணங்குவோம், இதம் தரும் என உணர் திறன் இன்றி- (உபநிடதக் கொள்கையானது) முத்தியை அளிக்கும் என்று அறிகின்ற வல்லமை யின்றி, இருக்கும் நாள் (அறி யாமையோ டிருக்கின்ற) இந் நாளில், மதம்தனை இனிமை

யது ஆக-அக் கொள்கையை சந்தேக விபரீதம் இன்றி, விளக்கி-விளங்கும்படி செய்து, மாசு இலா பதத்தை மன்னி-குற்ற மற்ற ஞான நிலையை யடைந்து, வீடு உறை வதற்கு அருள்வாய்-முத்தி வீட்டில் தங்குதற்கு அநுக் கிரகஞ் செய்வாய். (எ-று.)

(வி-ரை) வேதாந்தத்தின் தாற்பரிய நிச்சய மாகிய அத்வைத சித்தாந்தம் சாதந நான் குடைய அதிகாரிகட் கன்றி ஏனையோருக்குப் புல னுகா தாகலின், "உணர் திற னின்றி" என்றும், முற் பிறவிகளில் செய் துள்ள சரியை கிரியை யோக மாகிய புண்ணிய பரிபாக வசத்தால், சுரோத் ரிய பிரம்ம நிஷ்ட னுகிய ஞான வாசானைச் சரணுகதி யாக அடைந்து, ஆப்தம், அங்கம், தாநம், சத்பாவம் ஆகிய சதுர் வித பணிவிடைகளையும், அவன் உள முவக்கச் செய்து, அவன் அவ் வத்வைத சித்தாந்த நெறியினை விளக்க விளங்கவேண்டு மாகலின், "மதந்தனை விளக்கி" என்றுங் கூறினுர் இதனை,

சாதநம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை,
ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்
கறிவுண் டாகும்,
நூதந விவேகி உள்ளம் நுழையாது
நுழையும் ஆகில்,
பூதசென் மங்கள் கோடி புநிதனும் புருடன் ஆமே,
(1-4. கைவல்ய நவநீதம்)

என வரும் திரு வாக்கா னுணர்க.

திரு என்னும் பல பொருள் ஒரு சொல், கண்டுக், கண்டாரால் விரும்பப்படுந் தன்மை. மோக்கம், என்னும் பொருள் உடையது. இப் பொருளைத் திருக் கோயில், திரு நீறு, திரு மண், திரு வாசகம், திரு வள்ளுவர், முதலிய இடங்களிலும் கண்டு கொள்க. இறைமைக் குணங்கள் இல ராயினுர் செய்யும் விளையாடல்கள் திரு என்னும் அடையினைப் பெறத் தகுதி யுடையன வல்ல

வாகலின், அவை முற்று முடைய இறைவன் விளை யாடலே திரு விளையாடல் எனப்பட்டது.

எவர்க்கும், என்ற விடத் தும்மை எஞ்சாமைப் பொருட்டு, உருபுமயக்கம். 'இலா' 'இல்லா' இரண்டும் தகர வீறு குறைந்த பெயர் எச்சம். உணர் திறன் - வினைத் தொகை, இனிமை யது-அது பகுதிப் பொருள் விகுதி, இதம் தருவதனை இதம் என உபசரித்தார். 3

4. புதுமையா எவரும் போற்றிவந் தடையப்
புதுமையாம் உமதுரு அதனைப்,
பதுமைபோல் நின்று கண்ணினால் கண்டு
பத்தியால் தெளிந்துநைந் துருகித்,
திதம்பெறு பதத்தை அருளுடன் பெறுவான்
திருஉளம் இரங்குதி பெரும,
மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச
வளந்தருன் பதத்தினைப் பணிவாம்,

(இ-ள்) நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை (மா) நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, பெரும-பெருமை யுடையோனே, உன் வளம் தரு-நின் னுடைய அழகிய, பதத்தினை பணிவாம்-திரு அடிகளை (முக் கரணங்களாலும்) வணங்குவோம். எவரும்-(மெய் யடியார்கள்) அனைவரும், புதுமை ஆ(க)-தமது பரமாத்த சொருபமாய் இலங்கும் பொருட்டு, வந்து போற்றி அடைய - (தேடி) வந்து துதித்துச் சரணகதி அடைந் தமையால், புதுமை ஆம்-(அடியேனும்,) அச் சொருப மாதற்குக் காரண மாகிய, உமது உரு அதனை-தேவரீரது திரு வடிவத்தை, பதுமை போல் நின்று-பதுமை போல் செய லற்று நின்று, கண்ணினால் கண்டு-கண்களால் தரிசித்து, பத்தியால் தெளிந்து-பக்தியால் (சித்தம்) தெளியப் பெற்று, நைந்து உருகி-நெகிழ்ந்து உருகி, திதம் பெறு பதத்தை-சித்திய மாகிய திரு அடித் தாமரை களை, பெறுவான்-(சரணகதி யாகப்) பெறும் பொருட்டு,

அருளுடன் திரு உளம் இரங்குதி-கருணையோடு திரு உள்ளத் திரக்கம் உறுவாய். (எ-று)

(வி-ரை) உள்ளம் இறைவன் திரு அடியிற் பதிந்து தன் வயம் இழந்து செயல் அற்று நிற்றலின், "பதுமை போல் நின்று." என்றும், ஞானேந்திரியங்கள் ஐந்தனுள் ஏனைய நான்குஞ் செய லற, கண்ணே செய லுறுகின்றமையின், "கண்ணினால் கண்டு" என்றும், அந்தக் கரணம் நான்கனுள், ஏனைய மூன்றும் செய லற சிந்தையே செய லுறுகின்றமையின். "பத்தியால் தெளிந்து" என்றும், முக்குணங்களுள், ஏனைய விரண்டும், அடங்கச் சத்துவ குணமே, மேம்படுதலின், "நைந்துருகி" என்றும் கூறினர், இதனை

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்,
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே ஆக,
இந்துவாழ் சடையான் ஆடுமா நந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்,
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

என வரும் (திருத் தொண்டர் புராணம் 106) பெரியார் (பெரிய புராணத்) திரு வாக்கா னுணர்க. "**அடைய**" என்னுஞ் செய வெ னெச்சம் காரணப் பொருட்டாய் நின்று, "**பெறு வான்**" என்பதனோடு முடிந்தது. 4

5. **நிதம்திரு அருளால் நின்தனை வணங்கி**
**நீக்கமில ஒருபரம் பொருளாய்,**
**இதம்பெற ஆறி யிருப்பதற் குரிய**
**யாக்கையை அறத்தினால் எய்திச்,**
**சதுர்மறை கூறும் வழிகளில் சென்று**
**தக்கவ ரொடுமுற வருள்வாய்,**
**மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச**
**வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.**

(இ-ள்) நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை(மா) நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, உன் வளம் தரு-நின் னுடைய அழகிய, பதத்தினை பணிவாம்-திரு அடிகளை (முக் கரணங்களாலும்) வணங்குவோம், திரு அருளால்-(நின்)திரு அருட் டுணை கொண்டு, நிதம்-நா டோறும், நின் தனை வணங்கி-தேவ ரீரை (அடியேன்) வணங்கி, நீக்கம் இல் ஒரு பரம் பொருள் ஆய்-அகண்ட மாகிய ஒப் பற்ற பிரம்ம வடிவ மாகி,இதம் பெற (உம்)-பே ரின்பத்தை யடையவும், ஆறி யிருப்ப தற்கு உரிய ஆக்கையை-சித்த விசிரர்ந்தியா யிருப்பதற்கும் ஏற்ற உடலை, அறத்தினால் எய்தி-புண்ணிய மேலீட்டினால் அடைந்து, சதுர் மறை கூறும் வழிகளில்-நான்கு வேதங் களும் விதித்த சந் மார்க்கத்தில், சென்று-ஒழுகி, தக்கவ ரொடும் உறவு அருள்வாய்-பெரியோரோடு நட்பை அநுக் கிரகஞ் செய்வாய். (எ-று.)

(வி-ரை) இறை அருள் துணையாகவே, இறையை வணங்க வேண்டும் என்பதை "அவ னருளாலே அவன் றாள் வணங்கி" என்னுந் (க. சிவ புராணம் 183 மாணிக்க வாசகர்) திரு வாக்கா னுணர்க.

நீக்கமில் பொருள் - அகண்ட வஸ்து. அஃதாவது-வியாபகத் தன்மையால், தேசத்தாலும், நித்தியத் தன்மை யால், காலத்தாலும், சர்வாத்மகத் தன்மையால், வஸ்துவா லும், அந்த மின்றிய வஸ்து. சசாதீய விசாதீய சுவகத பேதம் நீங்கிய பொருள் எனினும் பொருந்தும், தக்கவர்-ஈண்டு மெய் யுணர் வுடையார், அவ ருறவு இறை வழி பாடு வாயி லாக பேரின்ப அடைவிற்குக் காரண மாகலின், "தக்கவர் உறவு அருள் வாய்" என்றார். இதனை,

"அறக் குறைவை நிறைவாக்கும் சம்பத் தாக்கும்
ஆபத்தைச் சுபமாக்கும் அசுபந் தன்னைச்,
சிறக்குமுயர்ந் தவர்கூட்டம் என்னுங் கங்கைச்
சீதநீர் ஆடினர்க்குச் செந்தி வேள்வி,

இறக்கரிய தவந் தானந் தீர்த்தம் வேண்டாம்
இடர்பந்தம் அறுத்தெவர்க்கும் இனியோ ராகி,
பிறப்பெனும்வே லேப்புணையாம் உணர்வு சான்ற
பெரியோரை எவ்வகையும் பேணல் வேண்டும்."

(2 முமூட்சுப் பிரகரணம் வாசிட்டம் 20) என்றும்,

உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி,
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானல் அடியேனுன்,
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்"

(திரு வாசகம் கோயின் மூத்த திருப் பதிகம்-1.) என்றும்,

"ஆயும் பழைய அடியா ருடன்கூட்டி." என்றும் வருகின்ற பெரியார் வாக்கா னுணர்க. 5

6. குதிரைகொண் டிடவே பெருந்துறை சென்று
குழந்தைநல் மாத்தராய் நின்னை,
மதம்திகழ் குருந்த மாத்தினி மூலிலே
மாசிலா அன்பர்அன் றடைந்தார்,
பதமுறு தற்குத் தகுதியற் றிருக்கும்
பாவியாம் எற்குநீ அருள்வாய்,
மதுரைநல் நகர்வாழ் சொக்கலிங் கேச
வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

(இ-ள்) நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை(மா) நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, உன் வளம் தரு பதத்தினை-நின் னுடைய அழகிய திரு அடிகளை, பணிவாம்-(முக் கரணங்களா லும்) வணங்குவோம், மாசு இலா அன்பர் குதிரை கொண்டிட-காமம் வெகுளி மயக்கம் என்னும் முக் குற்றங்களும் நீங்கப் பெற்ற திரு வாத வூர் அடிகள் குதிரை வாங்கும் பொருட்டு, பெரும் துறை-திருப் பெருந் துறைக்கு,

அன்று சென்று-முற் காலத்தில் போய், மதம் திகழ் குருந்த மரத்தின் நீழலில்-பெருமை விளங்குகின்ற குருந்த மரத்தின் நீழலிலே, நின்னை நல் குழந்தை மநத்தராய்-தேவரீரை பால் அருந்தும் குழவியினது மநத்தை யொத்த மந முடையா ராய் (சுத்தாந்தக்கரண முடையாராய்), அடைந்தார்-(சரணு கதி யாக) அடைந்து நும் உபதேசத்தால் திரு அடிப் பே ருகிய முத்தியினை எய்தினர், பதம் உறுதற்கு-(அத் தகைய) முத்தியினை அடைதற்கு, தகுதி அற்று இருக்கும்-(சிறிதுந்) தகுதி யின்றி யிருக்கும், பாவி ஆம் எற்கும் - பாவ வினை யினை யுடையே னுகிய அடியேற்கும், நீ அருள்வாய்-தேவரீர் அநுக்கிரகம் செய்வீராக. (எ-று)

(வி-ரை) குழவியானது, இராகம், துவேஷம், காமம் குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், ஈரிஷை, அசூயை, இடம்பம், தர்ப்பம், அகங்காரம், ஆகிய பதின் மூன்று குணங்களும் நீங்கப் பெற்றமையும், உதராக் கினியால் வெதும்பி, தாயை நினைந்து, அவள் பால் ஊட்ட அவ் வக்கினி தணியப் பெற்றமையும் போன்று, வாத வூர் அடிகளும், அக் குணங்கள் நீங்கப் பெற்றமையும், தாபத் திரயாக்கினியால் வெதும்பி இறைவனை நினைந்து அவன் உபதேச மாகிய பால் ஊட்ட, அவ் வக்கினி தணியப் பெற்ற தையும் கொண்டு, "குழந்தை நன் மநத்தராய்" என்றுர். இதனை,

"பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்துநீ பாவியே னுடைய, ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆநந்த மாய, தேனினைச் சொரிந்து" என வரும். (திரு வாசகம் பிடித்த பத்து 9.) அப் பெரியார் வாக்கா

குழவி தாயை நினைந் தழுவது போன்று, இவரும் இறைவனை நினைந்து அழு தடி அடைந்தா ராகலின், "குழந்தை நன் மநத்தராய்" என்றுர், எனினும் அமையும்.

இதனை, "அமுதா லுன்னைப் பெறலாமே" என வரும் அவர் வாக்கானு முணர்க.

குருந்த மரத்திற்குப் பெருமை இறைவன் வீற்றிருந்தமை யாகையால், "மதம் திகழ்" என்னும் அடை கொடுத்தார், இதனை அன்பருக் கடை யாக்கினும் பொருந்தும். தகுதி யற்றவ ராயினும் தகுதி யுடையா ராக்கி ஆட்கொள்ளும் அரு ளுடைய னிறைவன் என்பது போதர, "எற்கும் நீ அருள்வாய்" என்றார். உம்மை-இழிவு சிறப்பு.(6

7. பொதுவதாய் எவர்க்கும் போதம்ஊட் டுதற்குப்
பொதுவினில் வீற்றிருந் தருளி,
மதுமலர்த் தாமம் துலங்கநல் குருவாய்
வாவென அன்பரை அழைத்து,
இதமுறு பதத்தைச் செவியினில் கூறும்
இயல்புகண் டுனதடி அடைந்தேன்.
மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச
வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

(இ-ள்) நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை(மா) நகரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோமசுந்தரக் கடவுளே, உன் வளம் தரு பதத்தினை-நின் னுடைய அழகிய திரு அடிகளை, பணிவாம்-(முக் கரணங்களாலும்) வணங்குவோம், பொதுவது ஆய் எவர்க்கும்-நடு நிலைமையுடனே (அடியார்) அனைவர்க்கும், போதம் ஊட்டுதற்கு-சிவ ஞானத்தை (மெய் உணர்வை) அளிப்பதன் பொருட்டு, பொதுவினில் வீற்றிருந்து அருளி - பொதுவிடத்தின்கண் (காட்சிக் கெளியராய்) பெருமையோ டெழுந்தருளி யிருந்து, மது மலர் தாமம் துலங்க நல் குரு வாய்-தேன் ஒழுகும் மலர் மாலையை விளங்கும்படி அணிந்த ஞான ஆசா னுகி, அன்பரை வா என அழைத்து-உத்தமாதிகாரிகளை வா என்று கூறி அழைத்து, இதம் உறு பதத்தை-பேரின்பம் தரத் தக்க (தத்துவ மசி) மகா வாக்கியத்தை, செவியினில் கூறும்-காதினில் உபதேசிக்கும், இயல்பு கண்டு-

(நினது) பெருந் தன்மையைக் கண்ணுற்று, உனது அடி அடைந்தேம்-தேவரீரது திரு அடிகளைப் (பற்றுக்கோடா(க) அடைந்தோம். (எ-று)

(வி-ரை) நடு நிலைமையோடு பொது விடத்தி லிருப்பார் பகைவர் நட்டோர் என்னும் பாகுபாடின்றி அறநெறியில் சாட்சியாய் நின்று செயல் நடாத்துவது போன்று, இறைவனும் சீவர்களின் கருமாநுசார மாகப் போகங்களை நுகர்வித்து அவர்கள் இரு வினை யொப்பும், மல பரிபாகமும் பெற்ற ஞான்று தன் வய மாக்குந் திரு வுளத்தோடு ஐந் தொழில் விரிந்திடப் பொதுவதனில் செங் கழல் அதிர நடம் செய்வ துகையால், "பொதுவதாய் வீற்றிருந்தருளி" என்றார், இறைவன் நடு நிலைமை யுடையான் என்பதனை, "அனைய ஈசனும் அடைந்தவர்க் கருள்செய்வான் அகன்றவர்க் கருள் செய்யான், இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகுமென்று எண்ணி நீ அறிவாயே." (கைவல்ய நவநீதம் 2-61.) எனவும்,

"பொருதிடம் கொண்ட பொன்னி புரக்கும்,
மருதிடம் கொண்ட மருத வாண,
நின்னது குற்றம் உளதோ நின்னினைந்து,
எண்ணறும் கோடி இடர்ப்பகை களைந்து,
கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா,
இறப்பையும் பிறப்பையும் இகழ்ந்து சிறப்பொடு,
தேவர் ஆவின் கன்றெனத் திரியாப்,
பாவிகள் தமதே பாவம்"

(பட்டினத் தடிகள் திரு இடை மருதூர் மும் மணிக் கோவை) எனவும்,

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை கரவார்பால் விரவாடும் பெருமானை." எனவும் வரும் பெரியார் வாக்கானும் உணர்க. அன்பர் என்பதற்கு "வாத வூரர்" என்றும், 'பதம்' என்பதற்குச் சிவ ஞாந போதம் என்றும் பொருள் கொள்ளினும் அமையும். இதனை "முத்து மாமணி மாணிக்க

வயிரத்த பவளத்தின் முழுச் சோதி" அத்தன் ஆண்டுதன் அடியாரில் கூட்டிய அதிசயம் கண்டாமே" (திரு வாசகம் அதிசயப் பத்து 7.) எனவும், "தாட்டா மரை காட்டித் தன் கருணைத் தேன்காட்டி' (திரு வாசகம் திரு அம்மானை 6.) எனவும் வரும் அவர் திரு வாக்கா னுணர்க. 7

8. மதிநுதல் நல்லார் பார்வையில் சிக்கா
வகைதனை அடியனேற் கருளி,
அதிதியாய் இருக்கும் அறிவினைத் திநமும்
அன்பினுல் அறைந்துநீ காப்பாய்,
திதிபெறு தெங்கு கதலிசா லிகள்நல்
தீஞ்சுவைப் பொருள்களை யீயும்,
மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச
வளந்தருன் பதத்தினைப் பணிவாம்,

(இ-ள்) மதி நுதல் நல்லார்-அர்த்த சந்திரன் போன்ற நெற்றியினை யுடைய மடவாரது, பார்வையில் சிக்கா வகை தனை-(மருண்ட கண்) பார்வையில் அகப்படாமைக் கேது வாகிய் வைராக்கியாதி சாதநங்களை, அடியனேற்கு அருளி-அடியேற்கு அளித்து, அதிதியாய் இருக்கும் அறிவினை-(பழைய உலகியற் றுறையி னின்றும் விடுபட்டு, புதியனு யிருத்தற் கேது வாகிய ஞானோபதேசத்தை, அன்பினுல் நீ அறைந்து-கருணையினுல் தேவரீர் உபதேசித்து, காப்பாய்-(பிறவிக் கடலில் வீழா வகை) காத்தருள்வாய், திதி பெறு தெங்கு கதலி சாலிகள்-(பலன் தருவதில்) குறை வின்றிய, தெங்குகளும், வாழைகளும், செந் நெற் பயிர்களும், நல் தீம் சுவை பொருள்களை திநமும் ஈயும்-நல்ல இனிய சுவை யுடைப் பொருள்களை நா டோறும் கொடுக்கின்ற சோலை களும் வயல்களும் சூழ்ந்த, நல் மதுரை நகர் வாழ்-நல்ல மதுரை மா நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, உன் வளம் தரு பதத்தினை பணிவாம்-நின் னுடைய அழகிய திரு அடிகளை (முக் கர ணங்களாலும்) வணங்குவோம்.

(எ-று)

(வி-ரை) 'மதி நுதல் நல்லார்' என்பதிண்டுப் பொது மகளிரெனக் கொள்க. பார்வையால் அகப்படுத்துபவர் அவராகலின், உலகிய லின்பம் புறநோக்குடைய தாய். பழைய தாய், அதனை நுகர்வானும் பழையோனாய் இருத்தலையும், பேரின்பம் அகநோக்குடையதாய் புதியதாய், அதனை நுகர்வானும் புதியனாய் இருத்தலையும் நோக்கி, "அதிதியாய்" என்றார். இதனை, "அடையவேண்டிய தடைந்து மேற்றுயரம் அற்றுஇன்பம் அளவிலாதாய்க், கடையதாம் தருவிலங்கு பறவைகள்போல் வீணாட்கள் கழியா தாகித், தடையிலா மநநத்தால் வாழ்வதே உயர் வாணாள் சநநந் தீர்ந்தோர், உடையபிறப் புயர்ந்ததாம் கிழவேசரிப்பிறப்பாம் ஒழிந்த வெல்லாம்." என வரும் (வாசிட்டம் 1 வைராக்ய பிரகரணம் 55.) திருப் பாட்டானுணர்க. மதி நுதல் - உவமைத் தொகை. சிக்கா-தகர வீறு குறைந்த பெயரெச்சம். 8

9\. விதமதாம் வேத ஆகம புராணம்
விளங்கவே உணர்திறன் உதவி,
மதுமலர்க் கழுநீர்த் தாரணி மார்பா
மன்னிநின் றிடும்படி திகழ்வாய்,
நதிபல வற்றுள் உயர்வுடன் ஒளிரும்
நலநிறை வைகைநன் னதிசூழ்,
மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச
வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

(இ-ள்) நதி பலவற்றுள் - (தேவ கங்கை முதலிய புண்ணிய) நதிகள் பலவற்றுள்ளும், உயர் வுடன் ஒளிரும்-மேன்மையோடு விளங்குகின்ற, நலம் நிறை நல் வைகை நதி சூழ்-வளப்பத்தை மிகுவிக்கின்ற நல்ல வைகை நதி பாய்கின்ற, நல் மதுரை நகர் வாழ் - சிறந்த மதுரை(மா) நகரின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, சொக்க லிங்க ஈச-சோம சுந்தரக் கடவுளே, மது மலர் கழு நீர் தார் அணி மார்பா-தேனொழுகும் மலர்களா லாகிய கழு நீர் மாலை அணிந்த மார்பை யுடையானே, உன் வளம் தரும் பதத்

தினைப் பணிவாம்-தேவரீருடைய (ஞான) வளப்பத்தைத் தருகின்ற திரு அடிகளை (முக்கரணங்களாலும்) வணங்குவாம், வித மது ஆம் வேத ஆகம புராணம்-(அதிகாரிகளுக்கு ஏற்ற வாறு) வெவ்வேறு பொருளைப் போதிக்கின்ற, வேதாகம புராணங்களாகிய இவற்றை, விளங்க உணர் திறன் உதவி-ஐயம் திரிபின்றி உணர்கின்ற மிகச் சூக்கும அறிவினைக் கொடுத்து, மன்னி நின்றிடும்படி திகழ்வாய்-(நின் சொரூபத்தின்கண்ணே) நிலை பெற்றிருக்கும் வண்ணம் (அடியே னுடைய) கண்ணெதிரே விளங்குவாயாக. (எ-று)

(வி-ரை) வேத ஆகம புராணக் கருத்துக்கள் உள்ளத் தூய்மை யுடையார்க்கே உள்ள வாறு விளங்குமாகையாலும், அத் தூய்மையினை எய்த, வாய்மை முதலிய நற் பண்புகள் வேண்டற்பாலன வாகையாலும், பின் சித்த ஏகாக்கிரத் தன்மை அடையப் பெறும் ஆகையாலும், அதுவே விளங்க வுணர்தற்குக் கருவி யாகையாலும், "விளங்கவே யுணர் திறன் உதவி" என்றார். இதனை,

"சொல்விற் பனமும் அவதான முங்கல்வி சொல்ல வல்ல, நல்வித்தை யுந்தந்து அடிமைகொள் வாய்." என வரும் பெரியார் வாக்கான் உணர்க.

வித்தைகள் பலவற்றுள்ளும் பிரம்ம வித்தையே சிறந்துள தாகையால், அதனைப் போதிக்கும் உபநிடதங்களைக் குறிக் கொண்டு ஞானாசாரியன்பால் ஐயந் திரிபறக் கேட்டு, அதனோ டமையாது, சுவாநுபவ நெறியில் தன்னை யுணர்ந்து, அதுவே தா னாய் நிற்க வேண்டு மென்பார், "மன்னி நின்றிடும் படி." என்றார். இதனை "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக." (391) குறள் என்றும்,

வேதவா கமசாத் திரபுரா ணங்கள்
விளங்கவே கற்றுணர்ந் தவற்றைத்,

தீதற எவர்க்கும் தெளிவுற ஓதிச்
செப்பிய அந்நெறி யதனில்;
சாதகம் இலாத குருவினை ஒருவன்
தானடைந் தாநந்தம் வினவல்,
ஏதமாம் கழுதை தன்னைக்குங் குமத்தின்
இயல்புகேட் டிடுதல்போ ன்றே.''

(மகா ராஜத் துறவு 27.)என்றும் வருவனவற்றுற் காண்க.

'சைவத்தின் மேற் சமயம் இலை' என்பதனையும், 'சிவமாந் தெய்வத்தின் மேற் றெய்வம் இலை' என்பதனையும், மெய்ப்பிக்கும் பொருட்டுச் சீர் காழிப் பிள்ளையார் இட்டருளிய ஏடு, எதிர் ஏறப் பெற்று தேவ கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் பலவற்றினும் மேம்பட்டமையான், ''நலம் நிறை வைகை'' என்ருர். உணர் திறன்-வினைத் தொகை. 9

**10. மதுரமார் மீநாம் பிகையுடன் விளங்கி**
**மாநம்தளர் வுறுசம யத்தில்,**
**இதம்பெற உணர்த்தி எளிமையைப் போக்கி**
**இன்புடன் இருக்குமா றருள்வாய்,**
**பதம்பெறும் வீதி தோறும்வீற் றருளிப்**
**பத்தர்கள் களிப்புறு தலமாம்,**
**மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச**
**வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.**

(இ-ள்) பத்தர்கள்-மெய் யடியார்கள், பதம் பெறும்-திரு அடிகளை அடைதற் பொருட்டு, வீதி தோறும் வீற்றருளி-தெருக்கள் தோறும் (பொறுமையோ) டிருந்து வழிபாடு செய்து, களிப்புறு தலமாம்-பே ரின்பம் அடைதற் கேது வாகிய புண்ணிய தல மாகிய, நல் மதுரை நகர் வாழ் சொக்க லிங்க ஈச-நல்ல மதுரை (மா)நகரத்தில் எழுந்தருளியிருக்கின்ற சோம சுந்தரக் கடவுளே, உன் வளம் தரு பதத்தினை-நின் அழகிய திரு அடிகளை, பணிவாம்-(முக்கரணங்களாலும்) வணங்குவாம். மாநம் தளர்வு உறு சம

யத்தில் - (அடியேன்) தாபத் திரயாக்கினியால் வெதும்புகின்ற போது, மதுரம் ஆர் ஸ்ரீ அம்பிகையுடன்-பேரின்ப சொரூபியாகிய அம் கயற் கண்ணியுடன், விளங்கி-எழுந்தருளி வந்து. இதம் பெற உணர்த்தி-இன்பத்திற்கு (ஏது வாகிய பரமார்த்த வடிவத்தை) அடைய உபதேசித்து, எளிமையை போக்கி - துன்பத்திற்கு (ஏது வாகிய சீவ போதத்தை) நிவிர்த்தித்து, இன்புடன்-பேரின்ப வடிவமாக இருக்கும் ஆறு-(சொரூபத்தில்) நிலைபெற் றிருக்கும் ஆறு, அருள்வாய்-அநுக்கிரகஞ் செய்வாய். (எ-று)

(வி-ரை) "மநந் தளர் வுறு சமயத்தில்." என்பதற்கு, தேக வியோக சமயத் தென்றும், "எளிமையைப் போக்கி," என்பதற்கு, அநுக்கிரகம் செய்து, என்று கூறினும் அமையும். இதனை, "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐமேலுந்தி,அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான்," (திரு ஞாந சம்பந்த ஸ்வாமிகள் திரு வை யாறு 1.) என வருவதா னுணர்க.

"வீதி தோறும் வீற் றருளி" என்பதனை இறைவனுக் கேற்றி, மெய்யடியார்கள் பொருட்டு இறைவன் மதுரைத் திரு வீதிகள் தோறும் வேட மாறிச் சென்று விளையாடல் செய்தமையைக் கொள்ளினும் அமையும். "எளிமையைப் போக்கி இன்புடன் இருக்கும் ஆறு" என்றமையால், அநர்த்த நிவிர்த்தி, சர்வாநந்தப் பிராப்தி யாகிய வீட்டின் சொரூபத்தை விளக்கிய வா றுயிற்று. 10

மதுரை, சொக்க லிங்கேசர் தோத்திரமும்,

பரிமள தீப உரையும் முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

# தில்லை நட ராஜர் தோத்திரமும்,

## பரி மள தீப உரையும்.

### எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. நல்லவாக் கியத்தால் தோத்திரம் புரிந்து
நாடொறு முநிவரர் மருவும்,
தொல்லைமாண் புடைய கைலையை நீத்துத்
துலங்கிட உளத்திருள் கழிய,
எல்லையில் பவத்தை இனியுரு வண்ணம்
எமக்கருள் குருபரன் ஆகித்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
திநம்பணிந் திடரொளித் திடுவாம்.

(இ-ள்) நல்லவாக்கியத்தால்-வழு அகன்று, பொருள் அறியாது படிப்பினும் புண்ணிய நல்கும் வேதாகம வாக்கியங்களால், தோத்திரம் புரிந்து-துதித்து. முநிவரர்-(உபமந்யு முநிவர் முதலிய) முநி சிரேட்டர்கள், நாள் தொறும் மருவும்-என்றும் பொருந்தி வாழ்கின்ற, தொல்லை மாண்பு உடைய கைலையை நீத்து-பழைமையான மாட்சிமையை உடைய கைலை மலையை விட்டு நீங்கி, எல்லையில் பவத்தை இனி உரு வண்ணம்-அள வின்றி வருகின்ற பிறவிகளை (யாம்) மேலும் மேலும் அடையாதபடி, எமக்கு உளத்து துலங்கிட இருள் கழிய-எங்களுக்கு உள்ளத்தின்கண்ணே (தத்துவ ஞாநம்) தோன்றி விளங்கவும் அதனால் இல்லை இலங்கிற் றிலை என ஆவரிக்கும் ஆவரண இருள் அகன் டொழிந்திடவும், அருள் குருபரன் ஆகி-(தத் துவ மஸி மகா வாக்கியத்தைப் பொருள் தெரிய) விரித் துரைக்கும் குருபரன் ஆக ஆவிர்ப்பவித்து, தில்லை வாழ் நல் நட ராஜன் தன் - (யாவர்க்கும் வேண்டுவன எல்லாம் அருள்

செய்யும்,(சிதம்பரத்தில் திருக் கூத்தாடும் திருக் கூத்தப் பிரானுடைய, தாளை-திரு அடிகளை, தினம் பணிந்து-வைகலும் (முக் கரணங்களாலும்) வணங்கி, இடர் ஒழித்திடுவாம்-(அவன் அருளால், தோன்றிய ஞானம் திட மாகக் கைவரப் பெற்று, ஆரா இயல்பினை யுடைய அவாவினை நீக்கி, அவாக் காரண மாக எழும் பிறவித் தொடா ராகிய) இடர்களனைத்தையும் போக்கி (பரமாநந்த மாக இருந்தபடியே) இருப்போம். (எ-று)

(வி-ரை) பிறவிகள், நால் வகைப் பிறப்பு, எழுவகைத் தோற்றமா யுள்ளன வாகலின், "எல்லையில் பவம்" என்றார்.

காரண காரியத் தொடர்ச்சி யாக வருதலின், அங்ஙனம் கூறினார் எனினு மாம், இறைவன் அந்தமும் ஆதியும் இல்லா அத்த னாய் உயிர்களின் கருமாநுசார மாக அவற்றை ஆட்டுவிக்கின்ற, தொல்லை மாண் புடைய னாகலின், அவன் வீற்றிருக்கும் இடமும் தொல்லை மாண்புடைய தாயிற்று.

பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், "நல் தாள்" என்றார். இதனை, "கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅர் எனின்." (2) என்னும் வள்ளுவர் வாக்கா னுணர்க. 1

2\. இல்லையென் னுமல் ஈயுநன் மாநமும்
இருமைப்போ கத்தினில் வெறுப்பும்,
பல்வினைக் காட்டிப் பரிதவி யாத
பான்மையும் பெற்றுநா டோறும்,
சொல்லினைக் கேட்டுச் சுகமிது என்னச்
சொலுமொழிச் சுந்தரி யோடு,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
தினம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) நாள்தோறும் இல்லை என்னுமல் ஈயும் நல் மாநமும்- தினந் தோறும் (எப் பொருளை யாயினும் எக்

காலத்தி லாயினும் யாவர் கேட்பினும் அப் பொரு ளிருக்கு மாயின்) இல்லை என்று சொல்லாமல் கொடுத் துதவுகின்ற நல்ல மநமும்; இருமைப் போகத்தினில் வெறுப்பும் - இகா முத்திரார்த்த பல போக விராகமும், பல்லினைக் காட்டி - (தம் முடைய எளிமையை வெளிப்படுதற் கேது வாகிய) பல்லைத் தெரியக் காட்டி, பரிதபியாத பான்மையும் - வருந் தாதிருக்கின்ற (போது மென்ற) இயல்பும், பெற்று - அடைந்து, நாள் தோறும்-பிரதிதிநமும், சுகம் இது என்ன சொல்லும் சொல்லினை- பே ரின்பம் இத் தகைத்து என்று உபதேசிக்கும் உபதேசத்தை, கேட்க மொழி சுந்தரியோடு- (அதிகாரிகள்) கேட்கும்படி உபதேசிக்கின்ற சிவ காம சுந் தரியோடு, தில்லை வாழ்- சிதம்பர (சித் சபையின்கண் பஞ்ச கிருத்திய நடநஞ்) செய்கின்ற, நல் நட ராஜன் தன் தாளை- நல்ல நட ராஜப் பெருமா னுடைய திரு அடிகளை, திநம் பணிந்து-நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம் - (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-

(வி-ரை) நல்லவற்றுள் எல்லாம் நல்லது ஈதலே, ஆகையாலும், தீயவற்றுள் எல்லாம் தீயது ஏற்றலே ஆகையாலும், தீயதை விளக்கினல், அல்லது, நல்லது விளங்காது, ஆகையாலும், இரண்டையும் உடன் கூறினர். இவற்றை (வள்ளுவர் வாக்கானும்) "நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம், இல்லெனினும் ஈதலே நன்று." என்னும் (222). "ஈ யென்று நாமொருவர் இடம்நின்று கேளாத இயல்பும், என்னிடம் ஒருவர் ஈது இடுவென்ற போதவர்க்கு இலையென்று சொல்லாமல் இடுகின்ற திறமும்" என்றும், வரும், வள்ளலார் வாக்கானும் உணர்க உயர் குடிக்கண் தோன்றினர், தமக்கு வறுமை காரண மாக வந்த துன்பங்களைப் பிறரிடம் உரையாது, தம் மிடம் பிறர் அத் துன்பங்களை உரைக்கின் மாற்றுது ஈவா ராக லானும். தண் ணீர் பெருது இறக்கும் நிலைமைத் தாய ஆவிற்கு. தண்ணீர் தரல் வேண்டும் என்று இரப்பி

னும் அவ் இரவு தம் நாவிற்கு இழிவைத் தரத் தக்க தென்று கருதுவ ராகலானும். "இல்லை யென்னுமல் ஈயும் நன் மநம் என்றும்". "பல்லினைக் காட்டிப் பரிதவியாத பான்மை" என்றும் கூறினர். இவற்றை:-

"இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்,
குலனுடை யான்கண்ணே உள." (205) என்றும்,

"ஆவிற்கு நீரென்றி ரப்பினும் நாவிற்கு,
இரவின் இளிவந்த தில்." (1066) என்றும்

வரும் வள்ளுவர் வாக்கா னுணர்க.

வீடுபே றடைய விரும்புகின்ற அதிகாரிகட் குரிய சாதநம் நான்கனுள், இரண்டாவ தாகிய, "இகாமுத்தி ரார்த்த பல போக விராக மாவது:- இக பர லோகங் களில் உள்ள அருந்தல், பொருந்தல் ஆதி. போகங்களுக் குரிய போக்கியப் பொருள்களில், அசுத்தம், துக்கம், அநித் தியம் ஆதி தோடம் கண்டு, அவற்றை வெறுத்து, வைராக் கியம் பெறுதல். இச் சாதநம், முதல் சாதநத்தால் தோன்றி மூன்றும் சாதநத்தைத் தோற்றுவிப்பதா யிருத்தலின், சிங்க நோக்காக் கொண்டு பிரதாநம் பற்றி இதனையே கூறினர். 2

3. **தொல்லையாம் உலகைத் தோற்றியே காத்துத்**
**தொலைக்கும்தன் பதமதை அளித்தல்,**
**கல்லைநல் தோணி ஆக்கொண்டு கடந்த**
**கபடமில் பத்தர்க்குப் போலச்,**
**சொல்லைநல் தோணி ஆய்க்கொண்டு கடக்கத்**
**துணிந்திடும் எமக்கருள் புரியத்,**
**தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்**
**திநம்பணிந் திடரொழித் திடுவாம்.**

(இ-ள்) கல்லை நல் தோணி ஆய்க் கொண்டு - கல்லை நல்ல தெப்ப மாகக் கொண்டு, கடந்த கபடமில் பத்தர்க்கு- (கடலைத்) தாண்டிய சிவ போதம் இழந்த நாவுக் கரை யருக்கு, தொல்லை ஆம் உலகை- (பிரவாக) அநாதியாகத்

தோன்றும் பிரபஞ்சத்தை, தோற்றியே காத்துத் தொலைக்கும் - படைத்துக் காத்து அழிக்கின்ற, தன் பதமதை அளித்தல் போல-தன் திரு வடி நீழலை யநுக்கிரகித்தது போல, நல் சொல்லை தோணி ஆய் கொண்டு-நல்ல பாமாலையைத் தெப்ப மாகக் கொண்டு, கடக்க துணிந்திடும் எமக்கு - (பிறவிக் கடலைத்) தாண்டத் துணிந்த அடியேங்கட்கு, அருள் புரிய-அநுக்கிரகம் செய்யும் பொருட்டு, தில்லை வாழ் நல் நட ராஜன் தன் தாளை-சிதம்பர சித் சபையின்கண் பஞ்சகிருத்திய நடநஞ் செய்கின்ற நல்ல நடராஜப் பெருமானின் திரு அடிகளை, நிநம் பணிந்து - நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம்- (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். (எ-று)

(வி-ரை) சீவர்களது கர்ம பரிபாகம் காரண மாக இறைவனிடத்தினின்றும் அநாதி யாக உலகம் தோன்றி நின்று, ஒடுங்கி வருகின்றதென்பதும், இறைவன் சீவர்கட்கு அவர் தம் கர்ம போகங்களைக் கொடுக்க உதாசீநரான போது, உலகம் தன் காரணத்தில் ஒடுங்கி, அவன் அவர்கட்கு அவர்தம் கர்ம போகங்களைக் கொடுக்கச் சந்முக ருகும் போது, அது போன்ற உலகம் தன் காரணத்தினின்றும் வெளியாகின்றதென்பதும், உலகத் தோற்றம் சீவர்களுடைய கர்மாதீந மாம் என்பதும், காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுளுக்கு இருப்புக் கூற வேண்டுதலால், முன்னர் இறைவனது தடத்த லக்ஷணத்தையும், பின்னர் அது வாயி லாக அவனது சொரூப லக்ஷணத்தையும் உணர்தல் வேண்டும் என்பதும். இறைவனை உலகத்தின் தோற்றம் உடமை, நிலை உடமை, ஒடுக்கம் உடமை, வாயி லாக உணரல் வேண்டும் என்பதும் தோன்ற, "தொல்லை யாம் உலகைத் தோற்றியே காத்துத் தொலைக்கும் தன் பதமதை." என்ருர், இதனை.

"அவனவள் அதுவெனும் அவைமூ வினைமையின்,
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்,
அந்தம் ஆதி என்மனுர் புலவர்"

என வரும் சிவ ஞாந போதத்தாலும்.

"சாகைநுனி மதியுளதென் றுணர்த்தலிற்பூ தாதி-சக
மாய காரணங்கொண் டறிவுணர்த்தல் தடத்தம்." (26)
என வரும், வேதாந்த சூடா மணியாலும் உணர்க.

அப்பர் அடிகளார் முன்னர் அருள் பெருக்கமும், வாக்கின் முதிர்வும் பெருது, அருகக் கடலைத் தாண்டிச் சைவம் எனும் கரைக்கண் ஏறியது மிக அரி தென்பதும், பின்னர் அவற்றைப் பெற்றுக் கல்லைத் தோணியாய்க் கொண்டு உப்புக் கடலைத் தாண்டியது அத் துணை அரி தன்று என்பதும், எளிதிலே கற் றோணியால் கடலைக் கடந்தவர்க்கு அருள் பாலித்தது போன்று, சொற் றோணி யால் பிறவிக் கடலைக் கடக்கத் துணிந்தவர்க்கும், அருள் பாலித்தல் முறையே என்பதும் தோன்ற, "கல்லை......... புரிய."என்றார்.

கபடம்-என்ற தீண்டுச் சீவ போதம், அஃதாவது, தான் அல்லாத உடலைத் தான் னெனக் கருதும் அகங்கார மும், தன தல்லாத பொருளைத் தன தெனக் கருதும் மம காரமும் ஆம். 3.

ஷட் வித உருவ மூர்த்தி வழிபாடு கூறல்.

4. தொல்லைமுக் குறுணி விநாயகன் அடியைச்
சுந்தரி அம்பிகை அடியை,
எல்லையில் வள்ளி தெய்வயா னையிரு
டிணைபிரி யாதஷண் முகனை,
அல்லலில் லாமல் அயர்ந்திடும் அரியின்
அடிகளை நினைக்குமா றருளத்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) தொல்லை முக் குறுணி விநாயகன் - முதற் கடவு ளாகிய முக் குறுணி விநாயகன், அடியை - திரு அடிகளையும், சுந்தரி அம்பிகை அடியை-(சிவ காம) சுந்தரி அன்னையாரின் திரு அடிகளையும், வள்ளி தெய்வ யானையி

ளோடு-வள்ளியும் தெய்வ யானையு மாகிய அன்னையாரோடு, இணை பிரியாத எல்லையில் ஷண்முகன் (அடியை) - (மெய் யடியார் உளத்தின்கண்) கலந்து எழுந்தருளியிருக்கின்ற அந்தம் இன்றிய முருகப் பிரானது இரண்டு திரு அடிகளை யும், அல்லல் இல்லாமல் அயர்ந்திடும் .. (உயிர்கட்கு) துன் பம் வாராது (காத்தற் றொழிலைக்) செய்கின்ற, அரியின் அடிகளை - திரு மாலின் திரு அடிகளையும், நினைக்கும் ஆறு அருள - தியாநிக்கும் முறைமையை உபதேசிக்கும் பொரு ட்டு, தில்லை வாழ் நல் நட ராஜன் தன் தாளை - சிதம்பர சிற் சபையின்கண் பஞ்சகிருத்திய நடநம் செய்கின்ற நட ராஜப் பெருமானின் திரு அடிகளை, நிநம் பணிந்து - நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம் - (பிறவித்) துன்பத்தை நீக்குவாம். எ-று

(வி-ரை) தொல்லை, என்ப தீண்டு முதன்மையை உணர்த்திற்று. அதனை விநாயகன், என்னும் திருப் பெயர் கொண் டுணர்க. 'தொல்லை' என்பதற்குத் துன்பம் எனப் பொருள் கொண்டு, தன்னை வழிபடாதாருக்குத் துன் பத்தை ஆக்குதலும், வழிபட்டோர்க்கு போக்குதலும் வல்ல விக்நேசுவரன் எனினும் அமையும். இதனை,

"முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறை ரதம் அச்சது பொடி செய்த அதிதீரா." என்னும் (1190 முப் பழ மொடு பொறி) அருண கிரியார் வாக்கா லுணர்க.

சித்திரக்காரன் தன்கண் உள்ள சித்திர சக்தியைக் கொண்டு சித்திரம் சித்திரிப்பது போல, முருகப் பிரானும், இச்சை கிரியை யாகிய இரு சக்தி வடிவம் கொண்ட அறக் கற் புடைய அன்னையார் இருவரோடும் கூடி நின்றே ஜெகத்தின் படைத்தல் ஆதியன செய்கின்றான். ஆகையால், மெய் யடியார்கட்கு அநுக்கிரகஞ் செய்கின்ற போதும் அன்னையாரோடு அவர் உளத்தில் வீற்றிருந்து காட்சி யளிப்பன் என்பது தோன்ற, "வள்ளி தெய்வ யானையினோடு இணை பிரியாத" என்றார்.

இதனுல், "மாயா விசிட்ட இறைவனே, ஜெகத் காரணன்." என்பதும் உணரற்பாற்று.

எல்லை எனினும், அந்தம் எனினும், பரிச்சேதம் எனினும், கண்டம் எனினும், முடிவு எனினும் ஒக்கும். எல்லை இன்மை யாவது:- தேச கால வஸ்துக்களால் பரிச்சேதம் இன்மையாம். அநாத்மப் பொருள்களே, தேச கால வஸ்து பரிச்சேதம் உடையன. ஆத்மப் பொரு ளாகிய முருகப் பிரான், வியாபக மாகையால், தேசத்தாலும், நித்திய மாகையால், காலத்தாலும், சர்வாத்மக மாகையால், வஸ்துவாலும் அந்த மின்றியவ னுகையால், "எல்லையில் சண் முகன்" என்ருர்.

தில்லை வாழ் நட ராஜனே, விநாயகன் முதலிய மூர்த் தங்களிலும் நிலை பெற்று மெய் யடியார்கட்கு அநுக்கிரகஞ் செய்கின்றவன் ஆகையால், அம் மூர்த்தங்களையும் நினைக்கு மாறு அருளப் பிரார்த்தித்தார். அன்பால் நினைவாரது. உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவொடு, விரைந்து சேரலின், அவ் வவ் வடிவங்களையும் உடன் கூறு

ஒடு என்னும் மூன்றன் உருபு - கலப்புறு பொருளில் வந்தது, இணை பிரியாமை-கலந்திருத்தல், "பாலொடு தேன் கலந் தற்றே" 'எள்ளொடு விராய வரிசி' என்னு மிடங் களில் கலப்புறு பொருளில் வருதல் காண்க.

எல்லையில், இணை பிரியாத என்னும் எதிர்மறை பெய ரெச்ச அடுக்கு, "சண் முகன்"என்னும் பெயர் கொண்டது.

'எல்லையில்' என்பது, ஈறு கெட்ட எதிர் மறைக் குறிப்புப் பெய ரெச்சம்.

மாநம் கண் நா என்னும், மூ இந்திரிய நிக்கிரகம் கூறல்.

5. கல்லினை நிகர்க்கு மாநந்திநம் அவன்தன்
 கஞ்சநல் மலரடி நினைக்க,
வில்லினை ஒத்த புருவமார் மாதர்
 மேல்விழி செலாதவை நோக்க,
நல்லவாம் அவற்றின் குணங்களை என்றும்
 நாநனி மொழிதரத் திருவார்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
 திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) கல்லினை நிகர்க்கும் மாநம்-கல்லை ஒத்த மாநமானது, அவன் தன் நல் கஞ்ச மலர் அடி-அவனது நல்ல தாமரை மலர் போன்ற திரு அடிகளை, திநம் நினைக்க-நாள் தோறும் தியாநிக்கவும், விழி-கண்கள், வில்லினை ஒத்த புருவம் ஆர் மாதர் மேல் செலாது-வில்லை ஒத்த புருவத்தினை உடைய மடவாரது (செயற்கை அழகில்) செல்லாது, அவை நோக்க-அத் திரு அடிகளையே நோக்கவும், நா அவற்றின் நல்ல ஆம் குணங்களை-நா ஆனது அத் திரு அடிகளின் உயர் வாகிய பண்புகளை, என்றும் நனி மொழி தர-நாள் தோறும் மிகவும் துதிக்கவும், திரு ஆர் தில்லை வாழ் நல் நட ராஜன் தன் தாளை-அழகு பொருந்திய சிதம்பர சிற் சபையின்கண்ணே பஞ்ச கிருத்திய நடநம் செய்கின்ற நட ராஜப் பெருமானின் நல்ல திரு அடிகளை, திநம் பணிந்து-நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபட்டு, இடர் ஒழித்திடுவாம்-(பிறவித்) துன்பத்தை நீக்குவோமாக. (எ-று)

(வி-ரை) மாநம் கல்லை நிகர்த்தல் ஆவது:- பகுத்துணரும் சூக்குமம அறிவும், நற் பண்புகளும், இன்றித் தூலத் தன்மை அடைந்து, இறைவன் திரு அடித் தியாநம் இன்றி இருத்த லாம். இதனை,

"திணியான மனோசிலை மீதுனதாள்
அணியார் அரவிந்தம் அரும்புமதோ."

என்னும் அருணகிரியார் வாக்கா னுணர்க.

சத்தாதி விஷயங்களைக் கவர்தல் ஒழிந்த சுரோத்திர இந்திரியங்கள் இருந்தும் பயன் இன்மை போல, மலர் அடியை நினையாத மநமும், காணாத கண்ணும், துதியாத நாவும், இருந்தும் பயனில என்பார். "மநம் நினைக்க" "விழி நோக்க" "நா மொழிதர" என்றார் இதனை,

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்,
தாளை வணங்காத் தலை."

என்னும் (1-9) வள்ளுவர் வாக்கா னுணர்க.

தலையாதி உறுப்புகள் இறைவழிபாட்டிற்கே அமைந்தன என்பதை. அப்பர் அடிகளார் அருளிய அங்க மாலையில் விரிவாகக் கண்டு கொள்க. "நினைக்க, நோக்க மொழிதர." என்னுஞ் செயவென் னெச்சங்கள், பணிந் தென்னும் செய் தென் னெச்சங் கொண்டு முடிந்தன. மூன்றிடத்தும் எண் ணும்மை தொக்கது. 5

6. எல்லைதான் இன்றி இருக்குமோர் பெருமை
எளியரால் உணரவொண் ணுது,
தில்லைப்பால் அருந்தும் முநிவர்கள் காண்பர்
திருந்திய தன்சொரு பத்தைத்,
தொல்லையாம் உடலை நானெனல் நீக்கித்
தோன்றவே கண்டினி திருக்கத்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) எல்லை தான் இன்றி இருக்கும்-(தேசகால வஸ்து) பரிச்சேத மின்றி இருக்கின்ற, ஓர் பெருமை-ஒப்பற்ற அகண்ட சொருபத்தை, எளியரால் உணர ஒண்ணுது-அஞ்ஞாநிகளால் அறிய முடியாது, தில்லை பால்

அருந்தும் முநிவர்கள் - (பட்ட அளவில் தூல உடம்பை வேக வைக்குந்) தில்லைப் பால் போல், அஞ்ஞாந உடம்பை அழிக்க வல்ல திரு வரு ளாகிய பாலைப் பருகும் சிவ ஞாநிகள், திருந்திய சொரூபத்தை காண்பர் - (தம் முடைய) பரமார்த்த வடிவத்தைக் காண்பார்கள், அவ் வகண்ட சொரூபத்தை (யாமும் அங்ஙன் காணும் பொருட்டு), தொல்லை ஆம் உடலை - (பல) துன்பங்கட்கு இட மாகிய உடம்பை, நான் எனல் நீக்கி-நான் என்று கருதுகின்ற (அகங்காரத்தை) விலக்கி, தோன்றவே கண்டு-(அவ் வுடம்பில் தேகி சொருபமா யிருக்கும் ஆத்மா வாகிய தன்னை) அபரோக்ஷ மாக உணர்ந்து, இனிது இருக்க-பே ரின்ப சொருப மாக இருத்தற்பொருட்டு, தில்லை வாழ்-சிதம்பர சிற் சபையின்கண்ணே பஞ்சகிருத்திய நடநஞ் செய்கின்ற, நட ராஜன் தன் நல் தாளை-நட ராஜப் பெருமான் தன் நல்ல திரு அடிகளை, நிநம் பணிந்து-நாள் தோறும் (முக்கரணங்களாலும்) வழிபா டியற்றி, இடர் ஒழித்திடுவாம்-(பிறவித்) துன்பத்தை நீக்குவோமாக. (எ-று)

(வி-ரை) தேச கால வஸ்து பரிச்சேத மின்றிய தென்பார், "எல்லை தான் இன்றி." என்றார். இதன் விளக்கத்தை நான் காம் பாவின் உரையிற் கண்டு கொள்க

"பெருமை" என்ப நீண்டு பெரிதுக் கெல்லாம் பெரிதாகிய, அகண்ட பரிபூரண சச்சிதாநந்த பிரம்ம சொருபத்தை உணர்த்திற்று. அவ னருளாலே அவன் தாள் வணங்கி, அவ னுகை வேண்டு மெனப் பெரியோர் பணித்தமையால், "பா லருந்தும் முநிவர்கள் காண்பர்." என்றார். இதனை, ஞாந சம்பந்தர் அருட் பால் அருந்தி, அவன் தாள் வணங்கி, அவன் ஆக நின்றமையாற் கண்டு கொள்க.

உடலுக்குத் துன்பம் தருவன, வாத பித்த சிலேட்டுமங்க ளாய நோய்க ளாகலின், அந் நோய்களை ஆகு பெயரால், "தொல்லை" என்றார். சேதநமாய், அருவாய் நித்தமாய,

ஆந்மாவை, நான் எனல் பரமார்த்த மாகையாலும், அசேதந மாய், உரு வாய் அநித்த மாய, உடலை, நான் எனல் அத்தியாச மாகையாலும், அவ் வுடல், வினை வயத்தாற் கூடி, அதன் ஒழிவில் பிரிகின்றமையாலும், அதத்வியா விருத்தி இலக்கணத்தால், உட லாதிகளை நேதி களைதல் வேண்டு மாகையாலும், "உடலை நான் எனல் நீக்கி." என்றார். இதனை,

"ஆகமுத லனவற்றை நேதி செய்து நின்ற ஆருயிரை யறிவித்தல் அதத்வியா விருத்தி." (26) எனவும், "துச்ச மாகிய தோன்மலி யாக்கையை, இச்சி யானதை யானென எண்ணியே." எனவும் வரும் வேதாந்த சூடாமணியாலும், பிரபு லிங்க லீலையாலும், முறையே உணர்க. இதனால், நித்திய நிவிர்த்தத்தின் நிவிர்த்தியும் கூறினார் என்பது ஆயிற்று.

தேகி யாகிய ஆந்மா, ஜீவேசுவர ஜெகத் தாகிய கற்பித சொருபங்களின் நின்றும் விடுபட்டு இருந்தபடியே இருக் கும் செம் பொரு ளாகையாலும், அவ் வாந்மாவே "நான்" என் றிருத்தல், நித்தியப் பிராப்தத்தின் பிராப்தி யாகையா லும், "தோன்றவே கண்டு இனி திருக்க." என்றார். இதனை,

"சச்சி தாநந்த சங்கரன் ஆகவே, அச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்." என வரும், பிரபு லிங்க லீலையால் அறிக.

பட்ட மாத்திரத்தில் தூல உடம்பினை வேகவைப்பது தில்லைப் பால், பெற்ற மாத்திரத்தில் அஞ்ஞாந அழிவைச் செய்வது, திரு அருட் பால், ஆதலின், தில்லைப் பாலை ஒத்த திரு அருட் பால் என்பார், "தில்லைப் பால்" என வுருவகித்தனர்.

7. கல்லினை வில்லாய் வளைத்தஞான் றவனைக்
கண்டடி பணிந்துளம் ஆயின்,
வில்லினை நம்மேல் விட்டுவல் வினையை
விதையின்றி மரிக்கச்செய் திருப்பான்,
இல்லினைக் கடந்து முன்வரா திருந்தேம்
இன்றெமைக் காத்தருள் புரியத்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) கல்லினை வில்லாய் வளைத்த ஞான்று-மகா மேரு மலையை வில்லாக வளைத்த (திரி புர சம்மார) காலத்து, அவனை கண்டு அடி பணிந்துளம் ஆயின்-அவ் விறைவனைக் கண்டு அவன் தாளை வணங்கினே மாயின், நம் மேல் வில்லினை விட்டு-நம் மீது அவ் வில்லில் (திருமா லாகிய பாணத்தைத்) தொடுத்து விட்டு, வல் வினையை- (பிறவிக்குக் காரண மாகிய) கொடிய வினைகளை, விதை இன்றி-பீஜம் இல்லாமல் (மிச்சம் இன்றி), மரிக்க செய் திருப்பான்-அழியு மாறு செய்திருப்பான், முன் இல்லினை கடந்து-இளம் பிராயத்திலேயே இல் லறத்தை விட்டு நீங்கி, வராதிருந்தேம்-(துறவு பூண்டு திரு அடிக் கன்பு செய்ய) வராமல் இருந்துவிட்டோம், இன்று எமை காத்து - இந் நாள் அடியேங்களைக் காத்து, அருள் புரிய-அநுக்கிரகஞ் செய்யும்பொருட்டு, தில்லை வாழ்-சிதம்பர சிற் சபையின் கண்ணே பஞ்ச கிருத்திய நடனஞ் செய்கின்ற, நட ராஜன் தன் நல் தாளை-நட ராஜப் பெருமானின் நல்ல திரு அடி களை, திநம் பணிந்து-நாள் தோறும் (மூக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம் - (பிறவித்) துன் பத்தை நீக்குவோ மாக. (எ-று)

(வி-ரை) இறைவன், மேரு மலையை வில் லாகவும், மற்றையவற்றை மற்றைய கருவிக ளாகவும் கொண்டா ராயினும், பிரதாநம் பற்றி வில் லொன்றுமே கூறினர்.

இறைவன், திரி புரங்களையும் மேற் கூறிய கருவிகளைக் கொண் டழிக்காது, சங்கற்ப மாத்திர மாகிய புன் னகை பூத் தழித்து, அம் முப் புர முடையார்க் கருள் செய்தமை போல, அன்று நாமும் அவ் விறைவனைக் காணும் பேறு பெற்றிருந்தே மாயின், நம் வல் வினைக ளாகிய புரங்களையும், அங்ங னழித் தருள் செய்திருப்பாரே. எனக் கூறிக், கிடைத் தற் கரி தாகலின், சென்ற காலத்திற் கிரங்கினார், தன்னோடு மநத்தையும் உளப்படுத்தி, "நம் மேல்" என்றார். மெய் யடியார்களை முன்னிலை யாக்கி உளப் படுத்தினார் எனினும் அமையும்.

இளமைக் காலத்திலேயே துறந்தால், ஞான ஆசானை விதிப்படி சரண் அடைந்து, சதுர் வித பணிவிடைகளையும் அவன் உளம் உவக்கச் செய்து ஞானோபதேசம் பெற்று நிட்டை கூடி நீண்ட நாள் இன்பம் நுகர லாம். ஆகையால், "இல்லினைக் கடந்து முன் வராதிருந்தேம்" என்றார். இதனை,

"நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர், குழவி யிடத்தே துறந்தார்." எனும் (இளமை நிலையாமை 11) நா லடியா னுணர்க.

இனி, இல் லென்பதற்கு, ஆகு பெயரால் மனைவி யெனக் கொண்டு, இனம் பற்றி மக்களையும், பொருளையும், உடன் கொள்ளினும் அமையும்.

நீர் நிலையைப் புணை கொண்டு கடப்பது போன்று, இவரையும் வைராக்கிய மாகிய புணை கொண்டு மிக அரி தாகக் கடக்க வேண்டுதலின், "கடந்து" என்றார். இதனை,

"ஆனபின் மனைவி மக்கள் அர்த்தவே டணைகண் மூன்றில்,
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போல்,
போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணம் செ
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே." [ன்று,
(1-6) என வரும், கைவல்ய நவநீதத்தால் உணர்க.

"வல் வினை" என, ஈண்டு, தீ வினையைக் கூறினார், அன்றிப் பிறவியை யாக்கும் வன்மை, காமிய (நல்) வினைக்கு முள தாகலின், அதனையும் சேர்த்து வல் வினை யென்ற ரெனினு மாம். நிட்காம நல் வினை பிறவிக்குக் காரண மாவ தில்லை யாதலி னது வல் வினையாகாது.

கல்லினை, வில்லினை, இல்லினை, என்பவை, இன் சாரியை பெற்றன. 7

8. அல்லும்எல் பகலும் இடைவிடா தொளிரும்
ஆந்மரு பத்தினை நாடிக்,
கல்லினை உறழு மநத்தினைக் கசக்கிக்
காமநீத் தடியவர் நாளும்.
சொல்லரும் பரமாத் துவிதஞா நத்தைச்
சுருதிசொல் வழியினால் அடையத்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) கல்லினை உறழும்-கல்லை யொத்துக் கடிந மாகிய, மநத்தினைக் கசக்கி-மநத்தைக் கனியும்படி செய்து, காமம் நீத்து-(மூ) ஆசைகளையும் நீக்கி, அல்லும் எல் பகலும்-இராக் காலத்திலும் சூரியன் ஒளி வீசுகின்ற பகற் காலத்திலும், இடைவிடாது ஒளிரும்-நீக்க மின்றி விளங்கு கின்ற, ஆந்ம ரூபத்தினை-பரிபூரண ஆந்மாவை, அடியவர்-(முதற் பொருளைத் தா னாக வுணர்ந்த) முக்தர்கள், நாளும் சொல்ல-நாள் தோறும் உபதேசிக்க (அதனைக் கேட்டு), நாடி-மநநம் செய்து, அரும் பரமாத்துவித ஞாநத்தை-அடைதற் கரிய ஜீவப் பிரம்ம ஐக்கிய ஞாந சொரூபத்தை, சுருதி சொல் வழியினால் அடைய-உபநிடதங்கள் கூறிய முறையே (யாம்) அடையும் பொருட்டு, தில்லை வாழ்-சிதம்பர சிற் சபையின்கண்ணே பஞ்சகிருத்திய நடநஞ் செய்கின்ற, நட ராஜன் தன் நல் தாளை-நட ராசப் பெருமானது நல்ல திரு அடிகளை, திநம் பணிந்து-நாள்

தோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம்-(பிறவித்)துன்பத்தைநீக்குவோமாக.(எ-று)

(வி-ரை) கல்லினை உறழும் மநம்-தூல மநம், அதனைக் கசக்குத லாவது:- மிகச் சூக்குும மாகச் செய்தல். சூக்குும மநமே சிரவணாதிகட்கு யோக்கிய மான தென்பது கருத்து. காமம் நீத்தென்றமையால், முமுட்சுத்வம் பெறப்பட்டது. சகல கேவலங்க ளாகிய அவஸ்தாத் திரய சாட்சியா யிருந் தறிதலை, "அல்லும் எல் பகலும் இடை விடா தொளிரும்." என்றார்.

அடியவர், என்ற விடத் துள்ள, அடி என்னும் பகுதி, முதற் பொரு ளாகிய பிரம்மத்தை உணர்த்தும். எனவே அதனைத் தா னுக உணர்ந்தவர், அடியவர் எனப்படுவர். சொல்ல, நாடி, அடைய, என்னும் வினை யெச்சங்களால், முறையே, சிரவணம், மநநம் நிதித்தியாசநங்களைக் கொள்க.

சிரவணம் ஆவது:- அறு வித லிங்கங்களால், வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயஞ் செய்தல்.

மநநம் ஆவது:- பேத பாதக, அபேத சாதக யுக்தி யினுல், அத்துவித பிரம்மத்தைச் சிந்தனை செய்தல்.

நிதித்தியாசநம் ஆவது:- அநாத்மாகார விருத்தியின் மறைப் பின்றிய, ஆத்மாகார விருத்தியின் ஸ்திதி. இதன் பரிபாக அவஸ்தை சமாதி எனப்படும்.

பரம-அத்துவிதம்: பரமாத்துவிதம்-வட மொழி தீர்க்க சந்தி. அகரம், இன்மை, அன்மை, மறுதலை, முதலிய பொருள்களைப் பெறு மேனும், ஈண்டு இன்மைப் பொருள் பெற்று நின்றது. அத்துவிதம், என்பதற்குப் பொருள், பலரும் பல வாருகக் கூறுவ ராகையால், ஈண்டுக் கேவலாத்துவிதம், என்பது போதர, "பரம" என் றடை கொடுத்தார், எனவே, வேதத்தின் அந்த பாக மாகிய உப நிடதங்களின் கருத்துக் கேவலாத்வைதம், என்பதும் பெற்றும். கேவலம்-ஈண்டுச் சுத்தம்.

காவிக்கல் போன்ற (சிவந்த) நிறம் பொருந்தியது. இது இலௌகிக வைதிக கருமங்களோடு ஜீவான்மாவைப் பந்திப்பதற்கு ஏதுவாக விருப்பதாகும்.

தமோகுணம் கருநிற முடையது. அஞ்ஞானத்திற் கேதுவானது. மயக்கம், சோம்பல், நித்திரை யிவற்றால் ஜீவான்மாவைப் பந்திப்பது.

ஏ கீர்த்தி பொருந்திய அர்ச்சுனா! சத்வகுணமானது ஆன்மாவைச் சுகத்திற் பொருத்துகிறது. இரசோகுணம் கருமங்களில் பொருத்தும். தமோகுணம் ஞானத்தை மறைத்து அறியாமையாகிய அஞ்ஞானத்தில் பொருத்துவிக்கும் என்று உணர்வாயாக.

இந்த மூன்று குணங்களும் மாறி மாறித் தத்தம் காரியங்களைச் செய்யும். இவற்றில் ஒன்று மேலெழும்போது மற்றை யிரண்டும் கீழடங்கும். சத்துவம் மேலெழும் போது இரஜசு தமசு என்ற இரண்டு குணங்களும் கீழடங்கி விடும். இரஜோ குணம் மேலெழும்போது சத்துவ தமோகுணங்கள் கீழடங்கிவிடும். தமோகுணம் மேலோங்கின் சத்துவ இரஜோ குணங்கள் கீழடங்கிவிடும்.

(கவனம் வைத்து நோக்கின் இதை யநுபவமாக உணரலாகும். இந்த மூன்று குணங்களின் விருத்திகள் இத் தன்மையவென வறிந்தாலன்றி அவற்றில் நீக்க வேண்டியவற்றை நீக்கவும் கொள்ள வேண்டியவற்றைக் கொள்ளவும் ஒருவரால் இயலாது. ஆதலின் பகவான் அக் குணங்களின் சுபாவத்தைக் கூறுகிறார்.)

ஏ பார்த்த! எப்போது அறிவின் பிரகாசம் மிகுந்து நிறைந்த சாந்தம் தோன்றுகிறதோ, அதுவே சத்துவகுணம் என்று அறி. கருமங்கள் செய்வதில் மனம் நாடி ஆசையானதுண்டாகி லோபகுணம் வந்தடையின் அப்போது

ருத்திய நடனஞ் செய்கின்ற, நட ராஜன் தன் நல் தாளை-நட ராசப் பெருமானது நல்ல திரு அடிகளை, இறைஞ்சி பணிந்து-நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவாம் - (பிறவித்) துன்பத்தை நீக்குவோமாக. (எ-று)

(வி-ரை) எல்லாம் வல்ல சித்த ராய்க் கல்யானைக்குக் கரும் பருத்தியது. கொண்டு அட்ட மா சித்தி வல்லமையினையும், மெய் யடியா ராகிய தருமியின் பொருட்டுத் தம்மால் திரு வாய் மலர்ந்தருளப் பெற்ற. பாவிற்குக் குற்றம் கூறிய நக்கீரருக்கு அருளிய, பெருந் தகைமையினையும், எடுத்துக் காட்டி, முறையே, இறைவ னுடைய பரத்துவ நிலையினையும், பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து, உயிர்கள் செய்யும் குற்றம் களைந்து குணம் கொண்டு அநுக்கிரகஞ் செய்யும், திரு அருட் சொருபத்தையும், உணர வைத்தார். கல் யானை வரலாற்றையும், நக்கீரர் வரலாற்றையும், திரு விளையாடலில், முறையே கல்யானைக்குக் கரும் பருத்திய படலத்தும், தருமிக்குப் பொற் கிழி அளித்த படலத்தும், கீரனைக் கரை யேற்றிய படலத்தும், கண்டு கொள்க சொல்லினுல் ஆய பா வரும் ஆறு:-

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி,
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ,
பயிலியது கெழீஇய நட்பின்,
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலின்,
நறிய முளவோ நீயறியும் பூவே."

(இ-ள்) மணத்தை ஆராய்ந்து திரிதலே வாழ்க்கையாக உடைய, உட் சிறையை உடைய வண்டே; நீ ஆராய்ந்து உணர்ந்த பூக்களுள், பழகிய மிக்க நட்பால் விருப்பத்தால் பொய் கூறாது, மயில் போலும் சாயலும் நெருங்கிய பற்களு முடைய பாண்டியன் தேவியார் கூந்தலின் நறு மணம் போல, நல்ல பூக்களு முளவோ? கண்ட உண்மையைக் கூறு. (எ-று) 9

மரண காலத்தில், ஆத்ம சொரூபத்தினைக் கேட்டு,
மநம் ஆத்ம சொரூபத்தில், பெண் ஆசை நீங்கி
யிருக்க வேண்டும் எனக் கூறல்.

10. பல்லினை இறுக்கிச் சொல்லினைச் சொல்லாப்
பரவுல கடையுநாள் தன்தன்,
சொல்லினைச் செவியால் கேட்டுயாம் இருக்கச்
சொரூபமேல் மநமுறத் துலங்கி,
வில்லினை யொத்த புருவம துடைய
வியன்பெண்டீர் விருப்பிலா திருக்கத்,
தில்லைவாழ் நடரா ஜன்தனல் தாளைத்
திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

(இ-ள்) பல்லினை இறுக்கி-(வாய் திறக்க முடியாமல் மேல் வாய்) பல்லும் (கீழ்வாய்)ப் பல்லும் இறுகப் பெற்று, சொல்லினை சொல்லா-(ஒரு) மொழியும் சொல்லமுடியாத, பர உலகு அடையும் நாள்-தேக வியோக காலத்தில், தன் தன் சொல்லினை-தன் னுடைய சுய வடிவத்தை யுணர்த் தும் வாக்கியங்களை, செவியால் கேட்டு - (பெரியோர் சொல்ல) காதால் கேட்டு, சொரூப மேல் மநம் உற- ஆந்மாவின்கண் மநம் இலயித்ததனுல், யாம் துலங்கி இருக்க-யாம் (தானே தா னுய்) விளங்கிக் கொண்டிருக்க வும். வில்லினை ஒத்த புருவமது உடைய-வில்லைப் போன்ற புருவங்களை யுடைய, வியன் பெண்டீர்-கற்பில் சிறந்த மடவாரிடத்து, விருப்பு இலாது இருக்க-ஆசை யில்லா திருக்கவும், தில்லை வாழ்-சிதம்பர சிற் சபையின்கண்ணே பஞ்சகிருத்திய நடம் செய்கின்ற, நட ராஜன் தன் நல் தாளை-நட ராசப் பெருமானது நல்ல திரு அடிகளை, திநம் பணிந்து-நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்து, இடர் ஒழித்திடுவோம்-(பிறவித்) துன்பத்தை நீக்குவோமாக. (எ-று)

(வி-ரை) மரணத் துன்பம், பிறவித் துன்பத்தினும் எண் மடங்கு அதிகம். ஆகையாலும், அத் துன்பம்

வருவதன் முன் வீ டடைதற் குரிய சாதநங்களை முயன்று தேட வேண்டு மாகையாலும், அத் துன்பம் வரும் கால் பல் வேறு மெய்ப்பாடுகள் நிகழு மாகையாலும் அவை நிகழுங்கால் சாதநங்களை முயன்று தேடல் அசாத்திய மாத்திரமே யன்றி, அவற்றை வாயாற் சொல்லுதலும், அசாத்திய மாகையாலும், "பல்லினை இறுக்கிச் சொல்லினைச் சொல்லாப் பர வுல கடையும் நாள்." என்றார். இதனை,

"நாச்செற்று விக்குண்மேல் வாராமுன் நல்வினை,
மேற்சென்று செய்யப்ப டும்."

என்னும் (335) திருக் குறளாலும்,

"வந்திடு மரணத் துன்பம் மறித்துரை செய்யப் போமோ,
உந்திமேல் ஐயும் பித்தும் உணர்வொடு பொறிக லங்கி,
நந்திடா இருளே மூடி நாஉலர்ந் தலமந் தென்னே,
இந்தமா இறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்ம டங்கே."

என்னும் மெய்ஞ் ஞாந விளக்கத்தாலும்

"மேலெ முந்ததோர் வாயுக்கி ளர்ந்து மேல்மி டற்றினை யுள்ளெழ வாங்கிக், காலுங் கையும்வி திர்விதிர்த் தேறிக் கண்ணு றக்கமதாவதன் முன்னம், மூல மாகிய ஒற்றையெ ழுத்தை மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி, வேலை வண்ணனை மேவுதி ராகில் விண்ண கத்தினில் மேவலும் ஆமே." (5 திரு மொழி 4) என்னும் பெரியாழ்வார் திரு வாய் மொழியானும் உணர்க,

'தன் தன் சொல்லினை' என்பதற்கு, உபாசநா மூர்த் தங்க ளாகிய அவ் வத் தேவதைகளின் திரு நாமங்களை எனவும், "சொரூப மேல் மநம் உற." என்பதற்கு, அத் தேவதைகளின் திரு வுருவங்களிலே மநம் பதிய எனவும். "யாம் துலங்கி இருக்க." என்பதற்கு, யாம் அவ் அத் தேவதைகள் வடிவ மாக விளங்கிக்கொண்டிருக்க எனவும் கூறினும் பொருந்தும். இருக்க, இருக்க, என்னும் செய வென் னெச்சங்கள், பணிந் தென்னும் செய் தென் எச்சங் கொண்டு முடிந்தன. 10

*தில்லை நட ராஜர் தோத்திரமும், பரி மள தீப உரையும் முற்றிற்று.*

உ

சிவமயம்.

# கோவிலூர் கொற்றவாள் ஈசர் தோத்திரமும்,

பரி மள தீப உரையும்.

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. காவிநல் ஆடை கவினுற அணிந்து
கற்பன ஞானநூல் கற்றே,
பூவினைத் தமது வடிவமா உணர்ந்து
பூரணப் பிரமமே வடிவாய்த்,
தாவிலாத் துறவோர் தங்கிநன் னிட்டை
சார்தரு மடமதால் இலங்கும்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) நல்-மேன்மையை யுடைய, காவி ஆடை-கல் லாடையை, கவின் உற-அழகு பொருந்த, அணிந்து-தரித்து, கற்பன-கேட்கத் தக்கன வாகிய, ஞாந நூல்-ஞாந சாத்திரங்களை, கற்று-கேட்டு, பூவினை-பிரபஞ்சத்தை, தமது வடிவ மாய்-தம் முடைய சொரூப மாக, உணர்ந்து-அறிந்து, பூரண-எங்கும் வியாபக மாகிய, பிரமமே-பரம் பொருளே, வடி வாய்-(தமது) சொரூப மாக, தங்கி-நிலை பெற்று, தா விலா-அழி வின்றிய, துறவோர்-(முற்றத்) துறந்த முநிவர்கள், நல் நிட்டை-நிருவிகற்ப சமாதியின் கண், சார்தரு-எழுந்தருளியிருக்கின்ற, மடம் அது ஆல்-திரு மடாலயத்தால், இலங்கும்-விளங்குகின்ற, தலம் ஆம்-(திருத்) தல மாகிய, கோவி லூர்-சமி வந க்ஷேத்திரத்தின் கண், வாழும்-எழுந்தருளி யுள்ள, கொற்ற வாள் ஈசர்-சிவ பெருமா னுடைய, குளிர்-குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, திநம்-நா டோறும், பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபாடு செய் வோ மாக. (எ-று)

(வி-ரை) வீ டெய்தும் வேட்கை யுடையோர் செவி முதலிய ஐம் பொறிகட்கும் உரிய வாய, ஓசை முதலிய ஐம் பொறிகளையும் கெடுக்குங் கால், அவற்றை நுகர்தற் பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும் ஒருங்கே விடும் வாயி லாக, தா னல்லாத வுடம்பைத் தா னென்றும், தன்னு டியை யில்லாத பொருளைத் தன தென்றுங் கருதி, அவற்றின்கட் பற்றைச் செய்தற் கேது வாய மயக்கம் ஒழிந்து மெய் யுணர்வு தலைக் கூடி நிரதிசய இன்பத்தோடு வாழும் சர்வ கன்ம சந்நியாசத்திற் கறிகுறி யாக அணியப்படும் பெருமை யுடைய தென்பார் "காவி ..............அணிந்து" எனவும், வீடுபே றடைவிக்கும் ஞானப் பொருளை யன்றிப் பிற பொரு ளுணர்த்துவன சின் னாட் பல் பிணிச் சிற் றறிவை மேலும் மேலும் உள வாக்கி ஐயந் திரிவுகளை யுண்டுபண்ணிப் பிறவிப் பெருங் கடலுள் வீழ்த்து மாகலின், ஞான நூல்களையே கேட்க வேண்டு மென்பார், "கற்பன ஞான நூல்" எனவும், கிடைத்தற் கரிய மக்கட் பிறவியிலேயே அநுபவ முடைய தேசிகர்பால் ஞான நூல்களைக் கேட்டு மெய்ப் பொரு ளுணர்ச்சி பெற்று பிறவா நெறி பெறவேண்டும் என்பார், "கற்று" எனவும், துவம் பத லக்ஷியார்த்த மாகிய தன்னிற் பழுதையிற் பாம்பு போலக் கற்பித மாக வெழுந்த பிர பஞ்ச மனைத்தும், பாத சாமாநாதிகரண்ய சம்பந்தங் கொண்டு தன் வடிவமே யென வுணர வேண்டு மென்பார், "பூவினை.........உணர்ந்து" எனவும், மேற் கூறிய தன்னை முக்கிய சாமாநாதிகரண்ய சம்பந்தத்தால் தற் பத லக்ஷி யார்த்த மாகிய பிரம மாகவே யுணர வேண்டு மென்பார், "பூரண.........வடிவாய்" எனவும், எல்லாப் பொருளையுந் துறந்தால் இம்மைக்கண், துன்ப இன்மையும் இன்ப உண்மையும் உள வா மென்பார், "தாவில் துறவோர்" எனவும், அநாத்மாகார விருத்தியின், மறைப் பின்றிய ஆத்மாகார விருத்தியின் நிலைபேறுகிய நிருவிகற்ப சமாதி யென்பார், "நல் நிட்டை" எனவும் கூறினர். இவற்றை, "அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்,

வேண்டிய வெல்லாமொ ருங்கு.'' (35-3) என வரும், பொய்யா மொழியானும், "என்னையே யன்றி யொன்று மில்லெனத் தேர்ந்தான் வேந்தன்'' (56) எனவும், "தோன் றிடுஞ் சொருபந் தானுய்த் துளக்கமற் றிருந்தான் வேந்தன்.'' (53) எனவும் வரும் மகா ராசத் துறவாலு முணர்க. இதனுல், "மடம்பெற்ற பேறு திருக்கோயி லுக்கில்லையிவ் வையகத்தே.'' என வரும் சான்றோர் வாக்கும் தெளிந் தமை காண்க. 1

2. ஆவியோ டாக்கை அரும்பொருள் அந்நாள்
அருளினுல் பெற்றுநல் உமையாம்,
தேவியை நீத்தே செகம்புகழ் குருவாய்த்
திகழ்ந்திடும் வீரசே கரனுய்ப்,
பாவினுல் புகழும் பத்தருக் கிரங்கிப்
பதமலர் காட்டிவண் தலமாம்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) அந்நாள் - (அடியேனை அடிமை யாக கொண்ட) காலத்தே, அருளினுல் - கருணை மேலிட்டால், ஆவியோடு ஆக்கை அரும் பொருள் - அருமை யாகிய உடல் பொருளாவி மூன்றனையும், பெற்று, - (தம தாக) ஏற்றுக்கொண்டு, நல் - கல்யாண குணங்க ளனைத்தும் நிரம் பிய, உமையாம் தேவியை - திருநெல்லை நாயகி அன்னையை, நீத்து - துறந்து, செகம் புகழ் - உயர்ந்தோ ரனைவரும் துதிக்கின்ற, குரு வாய் - ஞாநாசாரிய னுய், திகழ்ந்திடும்- விளங்குகின்ற, வீர சேகர னுய் - வீர சேகர ஞாந தேசிகன் என்னுந் திரு நாமம் பூண்டு, பாவினுல் புகழும் - (செந் தமிழ்ப்) பாக்களாற் றுதிக்கின்ற, பத்தருக்கு - அடியார்கள் பொருட்டு, இரங்கி - இரக்க முற்று; பத மலர் காட்டி- திரு அடித் தீட்சை செய்தருளி, வண் - எல்லா வளங்களும் நிரம்பிய, தலம் ஆம் - திருத் தல மாகிய. கோவி லூர் - சமிவந க்ஷேத்திரத்தின்கண், வாழும் - எழுந்தருளி யுள்ள.

கொற்ற வாள் ஈசர் - சிவ பெருமானுடைய, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, பதங்களை - திரு அடித் தாமரைகளை, நிதம் - நாடோறும், பணிவாம் - (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோ மாக. (எ-று)

(வி-ரை) பெற்று நீத்து இரங்கி காட்டி வாழும் எனக் கூட்டுக. விவேகாதி சதுட்டய சாதனங்களை அவதிபரியந் தம் பெற்ற அதிகாரிகட்கு உபதேசித்து வீடுபே றடைவிக் கும் வண்ணம், பரம் பொருளே தேசிகர் திருக் கோலங் கொண் டெழுந்தருளிவர, அத் தேசிகருக் கவர்கள் ஆப் தாதி நான்கு பணிவிடைகளையு மியற்றுங் கால், தம் முட லாதி மூன்றினு முள்ள அபிமானத்தை விட்டு நிற்றலேயே உபசாரமாகத் தேசிகர் அவற்றைப் பெற்றதாகவும், மாண வர் அர்ப்பணித்ததாகவும் சான்றோர் மொழிவர் என்பார், "ஆவியோடு——பெற்று" எனவும். மாயோபாதி நீங்கிய சுத்த சைதந்யத் திருக்கோலமே தேசிகர் வடி வென்பார், "நல் உமை யாம் தேவியை நீத்து" எனவும், கொற்ற வாள் ஈசனே தேசிகர் திருக் கோலங் கொண் டெழுந்தருளி வந்து தமக்கு அநுக்கிரகித்தான் என்பார், "குருவாய்......... வீரசேகர னாய்" எனவும், தாபத் திரயங்களால் வெதும்பித் தம்மைச் சரணாகதி யாக அடைந்து திரு முன்பு நின்று பாக்களால் துதிக்கும் அதிகாரிகளின் இயற்கை யாகிய குணங்களை முன்னர் சோதித்துப் பின்னர் திரு அடி யாதிய தீட்சைகளைச் செய்தல் உபதேச மரபாம் என்பார், பாவி னால்——காட்டி" எனவும், சுகாதாரத்திற் கேற்றன வாகிய இயற்கையும் செயற்கையு மாம் வளங்கள் நிரம்பப் பெற்ற தென்பார், "வண் தல மாம்" எனவும் கூறினார். இவற்றை, "காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத் துக் கண்ணெனுழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்லவன் குருவாம் மாரிபோன் மாறுவேண் டாதே, மீட்சியில் பதத்தைக் கருணையால் அளிக்கும் வித் தகக் குரவனே யெவரும், தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர னென்றிடத் தகுவான்." என வரும்

(18-22) பிரம கீதையானும், "அன்னதன் சிசுவை யையன் ஆமைமீன் பறவை போலத், தன்னகம் கருதி நோக்கித் தடவிச்சந் ததியி ருத்தி." (1-8.) என வரும் கைவல்ய நவநீதத்தானும் பிற வாற்றானும் கண்டு கொள்க. 2

3. நாவினால் வழுத்தி நற்கதி அடையும்
நலம்கிளர் புந்தியில் லவராய்,
பாவியென் றெவரும் பாரிலே வெறுக்கும்
பதகரும் பரகதி அடைவான்,
ஆவியோ டுறுமவ் வளவுமா நந்தம்
அளிப்பவர் அணையுநற் றலமாம்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) நாவினால் வழுத்தி - நாவினாலே துதித்து, நற் கதி-கிடைத்தற் கரிய வீடுபேற்றை, அடையும்-அடைதற்குக் காரண மாகிய, நலம் கிளர்-மேன்மை விளங்குகின்ற, புந்தி-மெய் யுணர்வானது, இல்லவராய்-இல்லாதவர்க ளாகி, பாரிலே-இவ் வுலகின்கண், எவரும்-(சான்றோர்) அனைவரும், பாவி என்று - கொடியவர் என்று, வெறுக்கும்-வெறுத்து நீக்குகின்ற, பதகரும் கீழ் மக்களும், பர கதி-வீடுபேற்றை, அடைவான்-அடையும் பொருட்டு, ஆவியோடு உறும் அவ் வளவும்-ஜீவித தசை வரையிலும், ஆநந்தம் - (தம்மை அண்டிய அடியார்கட்கு) பே ரின்பத்தை, அளிப்பவர் - கொடுப்பவ ராகிய துறவோர்கள், அணையும் - சார்ந்திருக்கின்ற, நல்-வள மிக்க, தல மாம்-திருத் தல மாகிய, கோவி லூர்-சமி வன க்ஷேத்திரத்தின்கண் வாழும் எழுந்தருளியுள்ள, கொற்ற வாள் ஈசர்-சிவ பெருமானுடைய, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, தி நம்-நா டோறும், பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோ மாக. (எ-று)

(வி-ரை) புந்தி யில்லவராய் எவரும் வெறுக்கும் பதகரும் அடைவான் வாழும் எனக் கூட்டிப் பொருள்

கண்டு கொள்க. அளிப்பவர்-பலர்பால் வினையா லணையும் பெயர். குளிர் பதம்-வினைத் தொகை. பாவி, என்றது ஈண்டுச் சாதி யொருமை. கொடியவரைப் பாவிகள் என்னும் வழக் குண்மையின், தமக்கும் தம்மை அண்டினோர்க்கும் இருமையும் கெடுக்கும் கொடுமை பற்றி மெய்ப் புணர்விலா தாரைப் பாவி யென்றார். இறைவன் புகழ் பாடி இம்மை மறுமை யின்பங்களையும் இறுதியிற் பேரின்பத்தையும் பெறுதலே நாவினாற் பெறும் பயனென்பார். "நாவினும் ——அடையும்" எனவும், அங்ஙன் புகழ் பாடுதல் முற் பிறப்பின் வாசனையாற் சுத்தாந்தக்கரணமுடையார்க்கே யன்றிப் பிறர்க் குளதாகா தாகலான் முற்பிறப்பின் வாசனை யின்றி, மறு பிறப்பும், இரு வினைப் பயனும். இறைவனும் இல்லை யெனவும், மற்றும் இத் தன்மையவுஞ் சொல்லும் மயக்க நூல் வழக்குகளை மெய்ந் நூல் வழக் கெனத் துணிகின்ற திரிபுணர்ச்சி யுடையா ரென்பார், 'நலம் கிளர் புந்தியில்லவராய்" எனவும், அன்னோர் விலக்கு வினைகளை விதி வினைக ளெனக் கருதித் துணிந்து செய்பவ ராகலின் உலகோரால் பாவி யென்னும் நாமம் சூட்டப் பெறுவா ரென்பார், "பாவி........பதகரும்" எனவும், தம்மைச் சரணகதி யடைந்த அதிகாரிகட்கு ஞானோப தேசஞ் செய்து வீடுபே றடைவிக்கும் முற்றத் துறந்த முனிவர் வாழும் தலம் என்பார், "ஆவி தலமாம்" எனவும், மேற் கூறிய பாவிகளும், அத் தலத்தின் எல்லை யைச் சார்ந்த அளவில் பாவங்கள் ஒழியப் பெற்று இறைவ னருட் பார்வையால் வீடுபே றடைவார், என்பார், "பத கரும் பர கதியடைவான்" எனவும் கூறினார். இவற்றை, "இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு." (1-5) என வரும் பொய்யா மொழியானும், "பூக்கைக் கொண்டான் பொன்னடி போற்றிலார், நாக்கைக் கொண்டான் நாமம் நவில்கிலார், ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து, காக்கைக் கேயிரை யாகிக்க ழிவரே." என வரும் (தனித் திருத் தொகை 5) நாவுக் கரையர் திரு வாக்கானும், "உரையேன்நனி வாய்

திறந் துன்புகழ் தன்னைநாளும், விரையார்மல ரிட்டருச் சிக்கவி ருப்புமில்லேன், கரையேனுளம் நின்னினைந் தெத் திறத் தாற்கடப்பேன், திரையார்வினை யார்பிற விக்கடல் தில்லையானே.'' என வரும் (வைராக்ய சதக தோத்திரம் 9) சாந்த லிங்க சுவாமிகள் திரு வாக்கானு முணர்க. 3

4. பூவின்நல் மாதும் புவியின்நல் மாதும்
புகழ்ந்திடும் புண்ணிய வடிவாம்,
நாவின்நல் மாதால் ஞானமும் வீடும்
நாடிடும் அன்பருக் களிக்க,
தேவின்நல் மாதை நீத்திருந் தருள்செய்
தெக்ஷிணு மூர்த்தியின் வடிவாய்க்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) நல்-முதன்மை யாகிய, பூவின் மாதும்-திரு மகளும், நல்-நல்ல, புவியின் மாதும்-பூ மா தேவியும், புகழ்ந்திடும் புகழ்கின்ற, புண்ணிய வடி வாம்-புண்ணிய சொரூபி யாகிய, நல் நல்ல, நாவின் மாதால்-நாமகளால், நாடிடும் (தன்னை முக் கரணங்களாலும்) வாழிபாடு செய்கின்ற, அன்பருக்கு - அடியார்கட்கு, ஞானமும் - (சீவப் பிரம்ம ஐக்கிய) ஞானத்தையும், வீடும்-வீடுபேற்றையும், அளிக்க-ஈந்தருளும் பொருட்டு, நல் நல்ல, தேவின் மாதை-உமா தேவியை, நீத்து-துறந்து, இருந்து-(யோக நிலையில் எழுந்தருளி) யிருந்து, அருள் செய்-(சநகாதிகட்கு) அருள் பாலித்த, தெக்ஷிணுமூர்த்தியின் வடி வாய்-தென் முகக் கடவுள் வடிவ மாய், கோவி லூர்-சமி வந க்ஷேத்திரத்தின் கண், வாழும் எழுந்தருளி யுள்ள, கொற்ற வாள் ஈசர்-சிவ பெருமா னுடைய, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு வடித் தாமரைகளை, திநம் நா டோறும், பணிவாம்-(முக் கரணங்களாலும்)வழிபடுவோமாக.(எ-று)

(வி-ரை) மாதால், அளிக்க, மூர்த்தியின், வடி வாய், வாழும், கொற்ற வாள் ஈசர், எனக் கூட்டுக.

பூ வெனப்படுவது பொறிவாழ் பூ வென்பார், "நல் பூ" எனவும், புவி யெனப்படுவது பொறுமையின் இடம் என்பார் "நல் புவி" எனவும், நா எனப்படுவது கலை வாழ் இடம் என்பார் "நல் நா" எனவும். பொருட் செல் வம் புவிச் செல்வம் ஆகிய விரண்டினும் தெருட் செல்வம் சிறந்த தென்பார், "புகழ்ந்திடும்" எனவும், கரும உபா சனையால் மல விட்சேப தோடங்கள் நீங்கப் பெற்று, பின்னர் ஞாநாசாரியனிடம் ஞாந நூல் கேட்டுப் பரோட்ச ஞாந முற்று அநுபூதி வாயி லாக அபரோட்ச ஞாநம் பெற்று வீடுபே றடைய வேண்டு மென்பார், "நாவி னல் மாதால்" எனவும். மாயோபாதி நீங்கிய தத் பத லக்ஷி யார்த்த மாகிய சுத்த சைதந்யத் திருக் கோலமே ஞாநா சாரியத் திருக் கோல மென்பார், "தேவி னல் மாதை.. ... தெக்ஷிண மூர்த்தி" எனவும், அத் திருக் கோலமும், மாயோபாதியோடு கூடிய தத் பத வாச்சியார்த்த மாகிய ஈசுவர சைதந்யமும் ஒன்றே என்பார், "வடி வாய் வாழும் ஈசர்" எனவும் கூறினார். இவற்றை, "பொன்னும் மெய்ப் பொரு ளுந்தரு வானைப் போக மும்திரு வும்புணர்ப் பானை." (திரு வாரூர் 1) எனவும், "முன்னவ னெங்களபி ரான்முதல் காண்பரி தாயபிரான், சென்னியி லெங்கள்பி ரான்றிரு நீலமி டற்றெம்பிரான் "மன்னிய வெங்கள்பி ரான்பழ மண்ணிப்ப டிக்கரையே" எனவும் (திருப் பழ மண்ணிப் படிக் கரை 1) வரும் வன் றொண்டர் திரு வாக் கானும்,

"ஏக மூர்த்தி யிருமூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி,
யாகி யைந்து பூதமா யிரண்டு சுடராய் அருவாகி,
நாக மேறி நடுக்கடலுட் டுயின்ற நாரா யணனேயுன்
ஆக முற்று மகத்தடக்கி யாவி யல்லல் மாய்த்தேனே."

என வரும் நம் மாழ்வார் திரு வாய் மொழியானும் (கோவை வாயான் 3) உணர்க. 4

5. தாவிலா ஞானத் தனிப்பெரும் கடலுள்
தாழ்ந்திட வேண்டுவார் நாளும்,
நாவினுல் வழுத்தி நலம்கிளர் மனத்தால்
நாடிட அவர்க்கதை அருளி,
பாவியாம் அவற்றில் பற்றிலா எனக்கும்
பவத்தினை நீக்குநல் உளத்தால்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) தாவு இலா-அழிவின்றிய, தனி-ஒப்பற்ற, பெருமை-வியாபக மாகிய, ஞானக் கடலுள்-ஞான மாகிய கடலில், தாழ்ந்திட-மூழ்கி இன்புறும் பொருட்டு, வேண்டுவார்-விரும்புகின்ற சான்றோர்கள், நாளும்-நா டோறும், நாவினுல் வழுத்தி-(தம்) வாயால் துதித்து, நலம் கிளர்-காமம் வெகுளி மயக்க மாகிய குற்றங்கள் இன்றிய, மனத்தால் - மனத்தினுலே, நாடிட - தியானிக்க, அவர்க்கு - அச்சான்றோர்கட்கு, அதை - அந்த ஞானக் கடலை, அருளி-ஈந்தருளி, அவற்றில்-அப் பக்தி ஞானங்களில், பற்று இலா-விருப்பம் இன்றிய, பாவி யாம் - பாவி யாகிய, எனக்கும்-அடியேற்கும். பவத்தினை - பிறவியை. நீக்கும் - போக்க வேண்டு மென்று விரும்பும், நல் உளத்தால்-நல்ல திருவுளத்தோடு, கோவி லூர்-சமி வன க்ஷேத்திரத்தின்கண், வாழும்-எழுந்தருளி யுள்ள, கொற்ற வாள் ஈசர் - சிவ பெருமா னுடைய, குளிர்-குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, நிதம்-நா டோறும், பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோ மாக. (எ-று)

(வி-ரை) தானங்கள் தவங்கள் மந்திரங்கள் ஆசாரங்கள் யாகங்கள் ஆகியவற்ருல் அடைய முடியாததாகியும், மன முத லாகிய சரீரத் திரயங்களில் நான் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் யா தென்றம், இவைகளில் சித்தா யிருப்பது யா தென்றுஞ் சடமா யிருப்பது யா தென்றும், இச் சித் சடங்க ளிரண்டும் ஒன்ருகப் பொருந்துகின்ற பந்த மாவது யா தென்றும், மோட்ச மாவது யா தென்றம், நிரந்தரம்

அழுத்த மாக ஆராய்கின்ற விசாரத்தாலே அடைய முடிவ தாயும், வீடுபேற்றின் வடிவ மாய் நித்திய மாய் வியாபக மாய் சர்வாங்மக மாய் உள்ளதுவே ஞாந மென்பார், "தா விலா ஞாநத் தனி பெருங் கடல்." எனவும், மல விட்சேப தோடங்கள் நீங்கும் பொருட்டு முறையே வேண்டப்படு வன வாகிய நிட்காம கருமம் ஈசுவர பக்திகளை யநுட்டித் தவர்கட்கே மேல் ஆவரண நீக்கத்தின் பொருட்டு ஞாந உதயம் ஆம் என்பார், "நாவினுல்......அருளி." எனவும், அக் கரும பக்தி ஞாநங்க ளில்லாத அநதிகாரிகட்கும் தன்னை தரிசித்த மாத்திரத்தே வீடுபேற்றை யளிக்கும் கருணை யுடையன் என்பார், "பவத்தினை......ஈசர்" என வுங் கூறினர். இவற்றை,

"கெடாதசிற் கண்ணுல் நீதான்
 கிளர்மே லவர்க ளுடனேதான்,
தடாதுட் பொருள்தேர் வித்தைக்கு
 விசாரந் தானே தனிஞாநம்,
கடாவி யறியத் தக்கததிற்
 காணும் பாலின் மதுரம்போல்." என வரும்

(5 உபசாந்தி பிரகரணம் 63) ஞாந வாசிட்டத்தா லும், "உரைசெயிற் பிரம ஞாந மொன்றுமே முத்திக் கேது, சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞாந, மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக், கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே." என வரும் பிரபு லிங்க லீலையாலும் உணர்க. 5

6. வீவிலா வந்நி விநாயகன் கழலே
 விருப்புடன் போற்றுவார் தமக்குத்,
தாவிலாப் பந்தம் தகர்ந்திடப் பார்த்துத்
 தன்பதங் களையருள் செய்தே,
பாவியென் பாவம் பறிந்திடச் செய்து
 பற்றிலார் வாழ்ந்திடு தலமாம்,
கோலிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
 குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) வீவு இலா-அழிதல் இல்லாத, வந்தி விநாயகன்-வந்தி யைங்கர னுடைய, கழலை-திரு அடிகளை, விருப்புடன்-பக்தியோடு. போற்றுவார் தமக்கு-வழிபாடு செய்கின்ற அடியார்கட்கு, தாவு இலா-(ஞானத்தா லன்றிப் பிறவற்றால்) அழியாத, பந்தம்-(சம்சார)பந்த மானது, தகர்ந்திட-தூ ளாகும் வண்ணம், பார்த்து-கிருபா வீட்சண்யம் செய்து, தன் பதங்களை - தன் னுடைய திரு அடிகளை, அருள் செய்து - (பற்றுக்கோ டாக) அருளி, பாவி என்-பாவி யாகிய அடியே னுடைய, பாவம்-தீவினைக ளனைத்தும், பறிந்திடச் செய்து-அழியு மாறு செய்து, பற்றிலார்-முற்றத் துறந்த முனிவர்கள், வாழ்ந்திடு-வாழ்கின்ற, தல மாம்-திருத் தல மாகிய, கோவி லூர்-சமி வந க்ஷேத்திரத்தின் கண், வாழும்-எழுந்தருளியுள்ள, கொற்ற வாள் ஈசர்-சிவ பெருமா னுடைய, குளிர்-குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, திநம்-நா டோறும், பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோ மாக. (எ-று)

(வி-ரை) மும் மூர்த்திகட்கும் முதல்வன் என்பார், "விநாயகன்" எனவும், விநாயகப் பெருமான், தனித் தனிப் பல் வேறு கடவுளரை வழிபாடு செய்யும் அடியார்க ளனை வருக்கும் அவ ரவர் விரும்பிய பலன்களைத் தானே. அவ் வவ் மூர்த்திகளில் இருந்து அநுக்கிரகம் செய்யும் முதன்மை யுடைய ராகலின், இப் பெருமான் வழிபாட்டைத் தன் வழிபாடாகவே ஏற்று அவர்க்கு அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மாகிய வீடுபேற்றை அளிப்பான் என்பார் "பந்தம் தகர்ந்திடப் பார்த்து" எனவும், ஆன்மாக்கள் பிறவித் துயர் நீங்கிப் பே ரின்பம் அடைதற்கு சரணு கதியாகக் கொள்ளும் இடம் இறைவன் திரு அடியே என்பார், "தன் பதங்களை அருள் செய்து" எனவும், முற் பிறவிகளில் இறை வழிபாடு இன்மையராய் இருந்தும், நிகழ் பிறப்பிற் சிறிது அவ் வழிபாடு செயப்பெறின், பாவம் நீங்கிப் புண்ணியம் மேலிட இறைவன் திரு வருள் நாளுக்கு நாள் சுரக்கும் என்பார், "பாவி......செய்து.

எனவும், அறம் முதற் பொருள்களை உலகிற் குள்ள வா றுணர்ந்துவார் நீத்தா ராகலின், அன்னூர் வாழுந் தலம் பெரிதுஞ் சிறப்புடைய தென்பார், "பற்றிலார்......தல மாம்" என்றுங் கூறினூர். இவற்றை,

"கல்லா மநத்துக் கடைப்பட்ட நாயேனை,
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்,
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்,
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலமென்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்கா ணம்மானாய்."

என வரும் (திரு அம்மானை 5) மணி வாசகத் தானும்,

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்,
செந்தண்மை பூண்டொழுக லான்." என வரும்
(3 நீத்தார் பெருமை 10) பொய்யா மொழியானும் அறிக. 6

7. கூவியர் கூட்டம் கூடிடா தருளிக்
கூவலர் நண்பரின் மையராய்ச்,
சாவிலா நிலையஞ் சார்ந்தவர் கூட்டஞ்
சாருமா றெனக்கருள் செய்து,
வாவிநற் பண்ணை மற்றுறு வளத்தால்
மாகர்தம் நகரென மிளிரும்.
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) கூவியர் கூட்டம்-கீழ் மக்களின் கூட்டத் தை, கூடிடாது-சேராது, அருளி-அநுக்கிரகஞ் செய்து, கூவலர் - பகைவரும், நண்பர் - நண்பர்களும், இன்மையர் ஆய்-இன்றி உபேக்ஷை யுடையவ ராய், சா விலா நிலையம்-ஜீவன் முக்தித் தசையை, சார்ந்தவர் கூட்டம் - அடைந்த (முக்தர்களின்) கூட்டத்தை, சாரும் ஆறு - அடையும்

வண்ணம், எனக்கு - அடியேற்கு, அருள் செய்து - அநுக்கிரகஞ் செய்து. வாவி - தடாகங்களும், நல் பண்ணை - நல்ல வயல்களும், மற்று உறு வளத்தால் - மேலும் மிக்க வளங்களாலும், மாகர் தம் நக்ரென - தேவ லோகம் போன்று, மிளிரும் - விளங்குகின்ற, கோவிலூர் - சமிவந க்ஷேத்திரத்தின்கண், வாழும் - எழுந்தருளியுள்ள, கொற்ற வாள் ஈசர் - சிவ பெருமானுடைய, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, பதங்களை - திரு அடித் தாமரைகளை, திநம் - நாடோறும், பணிவாம் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக. (எ-று)

(வி-ரை) அருளி, அருள் செய்து, வாழும் கொற்றவாளீசர் எனக் கூட்டுக. கீழ் மக்கள் இம்மை மறுமைக்குரியவாய புகழ் அறங்களையும், வீட் டின்பிற் குரிய தாய ஞாநத்தையும், அடைதற் கேற்ற முயற்சியிலராகி, இவற்றின் மறுதலையாய பழி பாவங்களையும், அறியாமையினையும் நாளும் ஈட்டி, அதோகதி யடைவர் ஆகலின், அன்னார் கூட் டுறவால், மேகத்தினின்றும் தன் தன்மையோடு வீழ்கின்ற நீர், நிலத்தோடு சேர்ந்த விடத்து, நிறம், சுவை, முதலிய பண்புகள் திரிந்தாற் போலத் தன் தன்மைத் தாய அறிவு திரியக் கூடும் என்பார், "கூவியர் அருளி" எனவும், நட்டாரிடத்தும் பகைவர் இடத்தும் வேண்டுதல் வேண்டாமை இலராகிய முற்றத் துறந்த முநவராகிய ஜீவன் முக்தர்களின் கூட்டுறவு தவம் தாநம் மூர்த்தி தலம் தீர்த்தம் ஆதியவற்றுளுள வுாகும் இம்மை மறுமை இன்பங்கட்கும் இறுதியிற் பெறும் பிறவா நெறியாய பேரின்பத்திற்கும் காரண மாகலின் அதுவே வேண்டுமென்பார். "கூவலர்......அருள் செய்து" எனவும், வானுலகு, வேண்டுவார்க்குக் கற்பக மாதியிவற்றால் வேண்டுவன ஈந்து மகிழ்விப்பது போல், தன்னை அண்மினாருக்கு மடம் ஆதிய வாற்றால் எல்லா இன்பங்களையும் தரும் பெருமை யுடைய தென்பார், "மாகர்தம் .... கோவிலூர்" எனவும் கூறினர். இவற்றை, "நிலத்தியல்பா னீர்

திரிந் தற்ருகு மாந்தர்க், கினத்தியல்ப தாகும றிவு.'' என வரும் (46 சிற் றினம் சேராமை 2) பொய்யா மொழியா னும், " அறக்துறைவை ஙிறைவாக்குஞ் சம்பத் தாக்கு மாபத்தைச் சுபமாக்கு மசுபங் தன்னைச், சிறக்குமுயர்ங் தவர்கூட்ட மென்னுங் கங்கைச் சீதநீ ராடினர்க்குச் செங்தி வேள்வி. யிறக்கரிய தவம்தாநம் தீர்த்தம் வேண்டா மிடர் பந்த மறுத்தெவர்க்கு மினியோ ராகிப். பிறப்பெனுவே லைப்புணையா முணர்வு சான்ற பெரியோரை யெவ்வகையும் பேணல் வேண்டும்.'' என வரும் (2 முமுக்ஷுப் பிரகர ணம் 20) ஞாந வாசிட்டத்தாலும். " ஒருமையுட னினதுதிரு மலரடிநி னைக்கின்ற வுத்தமர்த முறவு வேண் டும்.'' என வரும், இராம லிங்கர் திரு வாக்கானும் உணர்க. 7

8. ஓவியத் திருந்தே உணர்வினை உண்மை
உருவதில் ஒருக்கியே நாளுஞ்,
சாவிலாப் பயிக்கந் தனிமலர்க் கரத்தாற்
றுங்கியே உண்டுழல் துறவோர்,
மேவிவாழ் நிலைய மேவுற அடியேன்
விளக்கிநல் ஆரிய உருவாய்க்
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) ஓவியத்து இருந்து-சித்திரப் பதுமை போல் (அசை வற்) றிருந்து, உணர்வினை-(அறி வுருவ) ஆந்மாவை, உண்மை உருவதில்- சச்சிதாநந்த வடிவப் பிரம்மத்தில், ஒருக்கி-ஐக்கியம் செய்து, நாளும்-எக் காலத்தும், சா விலா-அழிவில்லாத, பயிக்கம்-பிட்சையை, தனி-ஒப்பற்ற, கரத்தால்-திருக் கைகளால், தாங்கி-(இல்லங் தோறும்) ஏற்று, உண்டு-திரு அமுது செய்து, உழல்-சஞ்சரிக்கின்ற, துறவோர்-முற்றத் துறந்த முநிவர்கள், மேவி-அடைந்து, வாழ்-(பே ரின்பத்தோடு) வாழ்கின்ற, நிலையம்-ஜீவன் முத்தி தசையை, அடியேன்-அடியேனும், மேவுற-அடை

யும் வண்ணம், விளக்கி-உபதேசித்தருளி, நல் ஆரிய உரு ஆய்-ஞாநாசாரியத் திருக் கோலத்தோடு, கோவி லூர்-சமி வாக்ஷேத்திரத்தின்கண், வாழும்-எழுந்தருளி யுள்ள, கொற் றவாள் ஈசர்-சிவ பெருமா னுடைய, குளிர்-குளிர்ச்சி பொ ருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, நிதம்-நா டோ றும், பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபடுவோ மாக. (எ-று)

(வி-ரை) அடியேன் நிலையம் மேவுற விளக்கி உரு வாய் வாழுங் கொற்ற வா ளீசர் எனக் கூட்டுக. பிரமா காரமான அந்தக் கரண விருத்தியின் அஞ்ஞாத விருத்தி யோடு கூடிய அத்வைத பாவநா ரூப நிருவிகற்ப சமாதியின் அப்பியாச வலியால் பிரமாகார விருத்தியும் சாந்த மாகிய, விருத்தி ரகித மான அத்வைதாவஸ்தாந வடிவ நிருவிகற்ப சமாதியின்கண் அசை வற்றிருந் தென்பார், "ஒவியத் திருந்து" எனவும் தத் துவம் பதங்களின் இலட்சியார்த் தங்கட்கு ஏகத்துவப் பொருளை, "தத் துவமசி" மா வாக்கிய மும். யாவருக்கும் அபரோட்ச மாகிய ஆந்மாவே பிரம மாம் என்னும் பொருளை, "அய மாந்மாப் பிரமம்" என்னு மா வாக்கியமும், "நான் பிரமமா யிருக்கிறேன்" என்னும் பொருளை, "அகம் பிரமாஸ்மி." என்னும் மா வாக்கிய மும், ஆந்மாவுக் கபிந்ந மான பிரமம் ஆநந்த வடிவ மாம் என்னும் பொருளை, "பிரக்ஞாந மாநந்தம் பிரமம்," என்னு மா வாக்கியமும் பாகத் தியாக விலக்கணையின்றுற் குறிப்பிக் கின்ற தென் பார், "உணர்வினை.........ஒருக்கி" எனவும், ஜீவன் முத்தி விலக்ஷணாநந்தாநுபவ ராகிய முற்றத் துறந்த முனிவரர், உதராக்கினியைத் தணிப்பான் வேண்டிக் கூழ் காடி யாதியவற்றைக் கரத்திற் றுங்கிக் கவினுற வுண்டு பறவைகள் போல் யாண்டும் உலாவுவர் என்பார். "நாளும்......துறவோர்" எனவுங் கூறினர். இவற்றை,

"தத்துவ மெனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி யான,
வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு,
நித்தமும் அதுநீ யாகும் நீயது வாகு மென்னும்,

அர்த்தமும் அகண்ட மென்றே யசிபத வைக்கியங் காட்டும்'' (1-74) என வரும் கைவல்யத்தாலும்,

"நகர்தனி லேகிப் பிச்சை நண்ணியே மனைக டோறும்,
அகமகிழ்ந் தங்கை யேற்றே யவ்விடத் தருந்தி யாங்கே,
செகமுளோர் பேயென் றெண்ணிச் சிரித்திட நாண மின்றி,
இகபரத் திச்சை யற்றே யேகனு யுலாவ லுற்றான்,
என வரும் மகா ராசத் துறவாலும் உணர்க. 8

9. தாவிஎப் பொருளும் தனதெனக் கருதிச்
சார்தரும் சுத்தசங் கற்பம்,
மேவிஇவ் உலகை மெய்யெனக் கருது
மேதகும் அறிவிலா தவர்க்கும்,
சாவிலா ஞானம் சார்தர உணர்த்தித்
தன்னடி அளிக்குநல் உளத்தால்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) எப்பொருளும்-பிரபஞ்சப் பொருள்களனைத்தையும், தனது எனக் கருதி-தன்னுடையதென்பதாக அபிமானித்து, தாவி-அப்பொருள்கள் மேல் விழுந்து, சார்தரும்-அவ் வடிவ மாகின்ற, சித்த சங்கற்பம் - மனோ சங்கற்பத்தை. மேவி-அடைந்து, இவ் உலகை-இம் மாயா உலகை, மெய் எனக் கருதும்-சத்தியம் என்பதாக எண்ணுகின்ற, மேதகும்-மேம்பட்ட - அறிவிலாதவர்க்கும்-அஞ்ஞானிகட்கும், சா விலா-இறவா நெறிக்குக் காரண மாகிய, ஞானம்-மெய்ஞ் ஞானத்தை, சார்தர-அடையும் வண்ணம், உணர்த்தி-உபதேசித் தருளி, தன் அடி-தன்னுடைய திரு அடிகளை, அளிக்கும்-கொடுக்க வேண்டு மென்னும், நல் உளத்தால்-திரு உளத்தால், கோவி லூர்-சமி வந க்ஷேத்திரத்தின்கண், வாழும்-எழுந்தருளி யுள்ள, கொற்ற வாள் ஈசர்-சிவ பெருமா னுடைய, குளிர்-குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, திநம்-நா டோறும், பணிவாம் - (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக.

(வி-ரை) விபரீத ஞானத்தாற் கயிற்றினிடத்துத் தோன்றிய பாம்பின் தன்மை அவ் விபரீத ஞாந மொழிந்து ஆய்ந்து நோக்கிய விடத்து மாறிக் கயிறு கயிறேயாய் விளங்குவது போல், அவித்தை யொழிந்து தத்துவ ஞாநம் பெற்ற விடத்துப் பிரபஞ்சத் தோற்றங்கள் மறைந்து பரமாத்மா வொன்றே இயற்கையாய்க் காணப்படுதலின், கட்புலப்படும் பிரபஞ்சத் தோற்றங்கள் யாவும் மித்தை யெனக் கூறும் உபநிடதக் கருத்தை நல்லார்வாய்க் கேட்டுணராது, தா னல்லாத உடலைத் தா னென்றும், தன தல்லாத பொரு ளாதியவற்றைத் தன தென்றும் விபரீத மாக உணர்ந்து அவித்தியா மோகித ராய் வாழ்வார் என்பார், "தாவி.........அறிவிலாதவர்க்கும்" எனவும், அங்ஙன் தோற்ற மாத்திர மாய திருசியப் பொருள்களை அழிவிலவெனக் கருதும் புல் லறிவால் அவற்றின்கண் பற்றுவைத்தல் பிறவித் துயருக்குக் காரணம் என உணராது, சிற் றின்பத்திற் கேது வாய செல்வத்தின்கண்ணும், அதனை அநுபவிக்கும் யாக்கையின்கண்ணும், பற்றைச் செய்து, பிறவிப் பெருங்கட லுள் மூழ்கி முத்தி யங்கரை காணுது தவிக்கும் பெத்த ஆன்மாக்கட்கும், திரு அருள் பாலித்து பே ரின்பளிக்கும் பொருட்டுத் திருக் கோவில் கொண் டெழுந்தருளி யுளான் என்பார், "தன்னடி...கொற்ற வா ளீசர்." எனவுங் கூறினர். இவற்றை,

"நில்லாத வற்றை நிலையினவென் றுணரும்,
புல்லறி வாண்மை கடை." என வரும் (34 நிலையாமை) பொய்யா மொழியானும்.

"இளமையும் நில்லா யாக்கையும் நில்லா,
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா."
என வரும் மணி மேகலை யடிகளாலும்,

"எந்தைநின், திருவளர் நாட்டம் கருணையிற் பெறலும்,
யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி,
மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை,

ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய,
சிற்ப விகற்ப மெல்லா மொன்றில்,
தவிராது தடவினர் தமக்குச்,
சுவராய்த் தோன்றும் துணிவுபோன் றனவே.''
என வரும், பட்டினத் தடிகளார் திருவாக்கானும் உணர்க.

10. ஆவியும் உடலும் உடைமையும் அன்றே
அளித்தவற் கருடனை ஈந்து,
மேவியெக் கலையும் விளங்குமா றருளி
விழுப்பநல் துறவினில் கூட்டி,
காவிபொன் கண்ணும் கவின்மதி முகமும்
கழையெனும் சொல்லுமை யோடும்,
கோவிலூர் வாழும் கொற்றவாள் ஈசர்
குளிர்பதங் களைத்திநம் பணிவாம்.

(ப-ரை) ஆவியும்-உயிரையும், உடலும்-உடம்பையும், உடைமையும் - பொருளையும், அன்றே - (ஆட்) கொண்ட காலத்தே, அளித்த-தத்தஞ் செய்த, எற்கு-அடியேற்கு, அருள் தனை-திரு அருளை, ஈந்து-அளித்து, எக் கலையும் - கலை ஞானங்கள் அனைத்தும், மேவி-(மநதிற்) பதிந்து, விளங்கும் ஆறு-தெரியும் வண்ணம், அருளி-உபதேசித்து, விழுப்பம் - மேன்மை மிக்க, நல் - சிறந்த, துறவினில்-துற வற நெறியில், கூட்டி-சேர்த்து, காவி-நிலோற்பல மலர் போன்ற, பொன்-அழகிய, கண்ணும்-திருக் கண்களையும், கவின்-அழகிய, மதி-பூரண சந்திரன் போன்ற, முகமும்-முகத்தையும், கழை எனும்-கரும்பின் ரசம் போன்ற, சொல்-சொற்களையும் உடைய, உமை யோடும் - உமா தேவியாரோடும், கோவி லூர்-சமி வந க்ஷேத்திரத்தின்கண், வாழும்-எழுந்தருளி யுள்ள, கொற்ற வாள் ஈசர் - சிவ பெருமா னுடைய, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, பதங்களை-திரு அடித் தாமரைகளை, திநம்-நாடோறும், பணிவாம் - (முக் கரணங்களாலும்) வழி படுவோமாக. (எ-று)

(வி-ரை) உலகில் தாய் தந்தையர் பிறவிக்குக் காரண மும் அம்மை யப்பர் பிறவா நெறிக்கே காரணமும் ஆம். உடல் பொருள் ஆ வி யாகிய மூன்றன்கண்ணும் உள்ள அகங்கார மமகாரங்களை விடுதலே இறைவனுக்கு அர்ப் பணஞ் செய்த லென்பார், "ஆவியும்.........அளித்த" என்றும், அங்ஙன் அர்ப்பணித்த பக்தர்கட்கு இறை யருள் எளிதிற் கிட்டு மென்பார், "அருடனை யீந்து" எனவும், அன்னார் எக் கலையும் இறை யருளால் ஓதா துணரும் வலி யுடையர் என்பார், "மேவி........... அருளி" எனவும், கல்விக்குப் பயன் அறிவும் அறிவுக்குப் பயன் முற்றத் துறந்து மெய் யுணர்வடைதலும் என்பார், "துறவினிற் கூட்டி" எனவும் கூறினார், இவற்றை "கற் றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி." என வரும், (36 துற வியல் 6) பொய்யா மொழியானும்,

"அன்றே யென்றன் ஆவியு முடலும் உடைமையும் எல்லாமுங், குன்றே யனையாய் என்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ, இன்றோ ரிடையூர் எனக் குண்டோ யெண்டோள் முக்கண் யெம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே." என வரும் (திரு வாசகம் குழைத்த பத்து 7) மணி வாச கத்தானும் உணர்க. 10

கோவில் ஊர் கொற்ற வாள் ஈசர் தோத்திரமும்;
பரி மள தீப உரையும் முற்றுப் பெற்றது.

---

# திருப் பூ வணம் சௌந்தரிய நாயகி தோத்திரமும்,

பரி மள தீப உரையும்,

எழு சீர்க் கழில் நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. பொன்பயில் பதங்கள் வாழ்த்திநின் பத்தர்
புரிதரு பதங்கள்முன் பெற்றார்,
மன்பயில் வுறுநல் பதத்தினை வேண்டி
மற்றுனை நினைந்தவர் அடைந்தார்,

துன்பயில் வில்லா இன்பினைக் கொடுத்துத்
தொடர்பிறப் பறுத்தெமைக் காப்பான்,
மின்பயில் பூவ ணச்சௌந் தரித்தாய்
விளங்குநின் அடிநிதம் பணிவாம்.

(இ-ள்)-பூவண-திருப் பூவணத்தின்கண் எழுந்தருளி இருக்கின்ற, மின் பயில் சௌந்தரி தாய் (ஏ)-மின்னல் போன்று ஒல்கி நுடங்கும் இள நடையினை யுடைய சௌந்திரிய நாயகி என்னும் அன்னையே, நின் பத்தர்-நின் னுடைய அடியார்கள், பொன் பயில் பதங்கள் வாழ்த்தி-(நின்) பொன் போன்ற திரு அடிகளைத் துதித்து, முன் புரிதரு பதங்கள் பெற்றார்-முன் னளில் (அவரவர்) விரும்பிய லோக போகங்களை அடைந்தார்கள். மன் பயில்வுறு நல் பதத்தினை வேண்டி-நிலை பெற்ற(நித்திய மாகிய) துன்பம் இறையும் யில்லாத முத்திப் பதத்தினை அடைய விரும்பி, உனை நினைந்தவர்-நினை (அநந்நிய மாகத்) தியாநித்த அடியார்கள், அடைந்தார்-(அதனை) அடைந்தார்கள், துன்பு அயில்வு இல்லாத இன்பினை-(அந்தத்) துன்பம் நுகர்தல் இல்லாத இன்பத்தை (பேரின்பத்தை), கொடுத்து-அளித்து, தொடர் பிறப்பு அறுத்து-(காரண காரியத்) தொடர்ச்சி யாக வரும் பிறவிகளை ஒழித்து, எமை காப்பான்-அடியேங்களை காத்தருளும் வண்ணம், விளங்கும் நின்-(சச்சிதாநந்த வடிவ மாக.) விளங்கும் நினது, அடி நிதம் பணிவாம்-திரு அடித் தாமரைகளை நா டோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக. (எ-று)

(வி-ரை) ஆலயத்தில் திரு விளக் கேற்றல், மலர் கொய்தல், மாலை தொடுத்தல், முதலியன வாகிய, சரியை நெறியினையும், பூஜைக் குரிய பொருள்களைச் சித்தம் செய்து கொண்டு, முக் கரண சுத்தியோடு தேவியை, விதிப்படி பூசித்த லாதியன வாகிய கிரியா நெறியினை யும்; மநத்தை விஷயங்களிற் செல்ல வொட்டாது தடுத்து யோக குரு கூறிய வாறு தேவியினிடத்து

அதனை நிறுத்துத லாகிய யோக நெறியினையும், அநுட்டிப்பார் அடையும் பேற்றை முதல் அடியிலும்; மேற் கூறிய சரியை ஆதிகளைப் பயன் நோக்காது செய்து அதனாற் சித்த சுத்தி பெற்றிருப்பவருக்குத் தேவி குரு வடிவ மாக வந்து மாநதம்-சட்சு, பரிசம் எனப்படும். திட்சை மூன்றனையுஞ் செய்து, தத்துவோபதேசம் செய்கின்றமையால், அவர் தம்மைச் சிவை யென் றுணர்ந்து இந்திரிய வியாபாரம் இன்றி, சிவை வேறு ஆத்மா வேறு என்னும் பேத புத்தி சிறிதும் யில்லாது, சிவையாகவே விளங்குகின்ற ஞாநப் பேற்றை, இரண்டாம் அடியிலும் விளக்கினார்.

உலக இன்பங்கள் எல்லாம் இடை இடையே துன்பங் கலந்தன வாகையால், துன்பக் கலப் பின்றிய நிராவரண பரிபூரண ஜீவன் முக்தி விலக்ஷணாநந்தம் என்பார், "துன்பயில் வில்லா இன்பம்" என்றார்.

(அகம் பிரம்மாஸ்மி) எனச் சுருதி வாக்கியம் இருத்தலால், அவளைத் தா மாக நினைந்தவர் என்பார், "உனை நினைந்தவர்" என்றார்.

சௌந்தரி-சுந்தரம் உடையவள், எனப் பொருள் படும். வட மொழித் தத்திதாந்த நாமம். "சரியைகிரி யா யோகப் பதத்தின் முற்றிச் சாதநங்கள் நிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்." என்று (4-4-11) வாசிட்டம் கூறுவதனால், இவை ஞாந சாதநம் என்பதும், இவற்றால் நேரே மோட்சம் முண்டாகா தென்பதும், இவை வுடையார் மீண்டும் பிறவி யுறுவர் என்பதும், பெறப்படும்.

"உற்ற சரியையனுக் கோரா யிரம்பிறப்பு,
மற்றயர்க்கு நூறுகும் வன்பிறப்பு—முற்றுகின்ற,
யோகிக் கொருபிறப்பு உண்மைச் சிவஞாந,
மோகிக்கு விப்பிறப்பின் முத்தி."

என வரும் ஞாந விளக்கத்தால் உணர்க.

2. பாவநம் இன்றிச் சீவநம் செய்தல்
பாழ்நர கடைவிக்கும் என்னும்,
தேவனல் வாக்காம் அருமறைப் பொருளைத்
தெளியவெற் குணர்த்திநன் னெறியுய்த்,
தாவியைக் கவரும் கூற்றுரு வண்ணம்
அனையினும் இனியைநீ அருள்வான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூ வணத்து உறை-(திருப்) பூ வணத்தின் கண் எழுந்தருளி யிருக்கின்ற, அன்னையினும் இனியை சௌந்தரிய நாயகி-அன்னையினும் இன்பம் தரும் அன்புடையாளே, பாவநம் இன்றி சீவநம் செய்தல்-(இரு வகைச்) சுத்தமும் இல்லாது உலகில் வாழும் வாழ்க்கை யானது, பாழ் நரகு அடைவிக்கும்-கொடிய நரகத்தினை அடையும்படி செய்யும், என்னும் தேவன் நல் வாக்காம்-என்று கூறுகின்ற திரு வள்ளுவர் உடைய நல்ல வாக்காகிய, அரும் மறை பொருளை-அருமை யாகிய மறையின் பொருளை, எற்கு தெளிய உணர்த்தி-அடியேனுக்கு (ஐயம் திரிபுகள் இன்றி) உணரும்படி செய்து, நல் நெறி உய்த்து-ஞான மார்க்கத்தின்கண் செல்லும்படி செய்து, ஆவியை கவரும் கூற்று உரு வண்ணம்-ஆவியை கொள்ளை கொள்ளும் யமன் வரா வண்ணம், நீ அருள் வான்-நீ அநுக்கிரகம் செய்யும் பொருட்டு, நின் பொன் அடிகளை-நினது அழகிய திரு அடித் தாமரைகளை, நிநம் பணிவாம்-(யாம்) நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபடுவோமாக, (எ-று).

(வி-ரை) "பாவநம் இன்றிச் சீவநம் செய்தல்." என்னுஞ் சொல் லாற்றலால்; அவ் வாழ்க்கையினைப் பறவை விலங் காதியவற்றுள்ளும் சில மேற் கொள்ளாதிருக்க, மக்கட் டொகுதிக்கு அஃது அடா தென்பதையும், அதனை மேற் கொள்ளின் நர கடைதல் ஒருதலை யென்பதையும்

குறிப்பித்தார். அகம் தூய்மை, புறம் தூய்மை இரண்டை யும், "பாவநம்" என்றும், தெய்வப் புலவ ராகையால், "தேவன்" என்றும், பொய்யா மொழி யாகையால், "நல் வாக்கு" என்றும், அறியாமை நீங்கப் பெற்று மெய் யுணர் வடைதலே, அகம் தூய்மையின் பய னுகலின், அம் மெய் யுணர்வைப் பற்றிப் பேசுகின்ற வுபநிடதங்களின் கருத் தைத் தன் னுள்ளே கொண் டுள்ள, திருக் குற ளாகலின், "அரு மறைப் பொருள்" என்றும் கூறினுர்.

நீர் உண்டேல் உடல் தூய்மை உண்டு, இல்லையேல், இல்லை, அது போல, வாய்மை உண்டேல், அகம் தூய்மை உண்டு, இல்லையேல் இல்லை, என்னும் உடன்பா டெதிர் மறைகளால், புறம் தூய்மைக்கு நீர் காரண மாதல் போல, அகம் தூய்மைக்கு வாய்மை காரணம் என உணர்ந்து, அவ் வாய்மையின் முயன்று, அத் தூய்மையை எய்தல் வேண்டும் என்பார், "தெளிய" என்ருர்.
தேவன் வாக்கு வரு மாறு:—

> புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை,
> வாய்மையாற் காணப்ப டும். (30—8)

இவ் விரு வகைத் தூய்மைகளையும், அட்டாங்க யோகத்து அடங்கும். அவ் விடத்து கண்டு கொள்க. விரிக்கிற் பெருகு மென விடுத்தனம்.

மக்களிடத்துத் தாய் செலுத்தும் அன்பு சிறந்த தாயி னும், அது, கால தேச வர்த்தமாநங்களுக் கேற்ற ஆறு பிறழ்ச்சி அடைதலோடு நிலை யற்றது மாகும், உலக மாதா வாகிய தேவி, அருள் வடி வுடையள் ஆதலின், அவள் செலுத்தும் அன்பு, கால தேச வர்த்தமாநங்களைக் கடந்து நிலைபெற்று எல்லை யின்றி விளங்குவது ஆகையால், "அனை யினும் இனியை" என்ருர். இதனை, "அருளுருவாய் உயிர் கள்தமக்குஅன்னை யாகி." என்னும் (மகா ராஜத் துறவு 5) குமார தேவர், திரு வாக்கானு முணர்க

3. மேவலர் இன்றி யாவரும் உறவாய்
மிளிரவும் தக்கநூல் உணர்மே,
தாவிக ளோடு சாத்திரம் ஆய்ந்தும்
தகுவன உலகுளார்க் குரைத்தும்,
ஏவரும் போற்றிப் புகழ்ந்துகொண் டாட
இருக்குநல் வரமெமக் கருள்வான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூவணத்து உறை - திருப் பூவணத்தின் கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி-சௌந்தரிய நாயகி அன்னையே, மேவலர் இன்றி-வெறுப் புடையார் (ஒருவரும்) இன்றி, யாவரும் உறவாய் மிளிரவும்- அனைவரும் நட்புடனே விளங்கவும், தக்க நூல் உணர் மேதாவிகளோடு - தகுதி வாய்ந்த நூல்களை உணர்ந்த பண்டிதர்களோடு, சாத்திரம் ஆய்ந்தும் - சாத்திரங்களை ஆராய்ந் தறிந்தும், உலகு உளார்க்கு-உலகத்தில் வாழும் மக்களுக்கு, தகுவன உரைத்தும்-தகுதி வாய்ந்த, கருமம், பக்தி, ஞாந நெறிகளை உரைத்தும், ஏவரும் போற்றி புகழ்ந்து கொண்டாட இருக்கும் - அனைவரும் துதித்துப் புகழ்ந்து மேன்மை யாகக் கருதும்படி வாழ்கின்ற, நல் வரம் எனக்கு அருள்வான்-நல்ல வரங்களை அடியோங்கட்கு அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பொன் அடிகளை-நினது அழகிய திரு அடித் தாமரைகளை, நிதம் பணிவாம்- நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக. (எ-று)

(வி-ரை) பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின் பொருட் டுத் துறந்தார்க் குரித் தாய துறவற மானது; வினை மாசு நீங்கி அந்தக் கரண சுத்தியின் பொருட்டுக் காக்கப்படும், (அருள் உடைமை, புலான் மறுத்தல், தவம், ஒழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை,9)எனப்படும்விரதங்களும்; அவற்றுன், அது

சுத்தியாய வழி உதிப்பதாய், (நிலையாமை, துறவு, மெய் உணர்தல், அவா அறுத்தல்,) என்னும் நான் குறுப்பினைக் கொண்ட ஞானமும், என இரு வகைப்படும். இவ் வற முடையார் சர்வ சராசரப் பிரபஞ்சங்களையும் தனது வடிவ மாகக் கண்டு அவற்றிற்கு வரும் துன்பங்களைத் தம தாகக் கொண்டு அவற்றை நீக்கும் அருள் நெறியை மேற்கொள்வ ராகையாலும், முக் கரணங்களாலும் பிறர் நலம் பேணும் பெற்றிய ராகவே விளங்குவ ராகையாலும், உலகத் துயிர்கள் அனைத்தும் அவரை உற வாகக் கொள்ள விரும் பும் ஆகையால், இச் சீவந் முத்தி நிலையை அடைதற்குப் பரம்பரைச் சாதந மாகிய மேற் கூறிய விரத நெறியினையும், நேர் சாதந மாகிய ஞாந நெறியினையும், அடைய வேண்டும்' என்டார். ''மேவலர் இன்றி யாவரும் உறவாய் மிளிரவும்.' என்றார், இதனை

''தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய,
மன்னுயிர் எல்லாந் தொழும்.'' (27—8)

என்னும் பொய்யா மொழியானும்.

''தனக்கினிய ஞம்வகையே சராசரங்கள் அனைத்தினையும்,
நினைத்திகழ்வார் புகழ்வார்பால் ஒத்திருக்கு நீர்மையினை,
மநத்துடைய ஞனஅவன் நாமுரைத்த ஆசாரம்,
அனைத்துடைய ஞகவறி வெறிகமழும் ஐம்பாலாய்.''

என வரும் தேவிகாலோத்திரத்தாலும் கண்டு கொள்க.

பிரம்ம வித்தையினைப் போதிக்குஞ் சாத்திரங்க ளென் பார், ''தக்க நூல்'' என்றார். துறவறத் திரு நெறியானது, உலகம் போற்றிப் புகழ்ந்து கொண்டாடும் நெறியாகலின், அவ் உயர் நெறியே வேண்டும் என்பார், ''போற்றிப் புகழ்ந்து கொண்டாட'' என்றார். ''தம்மைப் போற்றிப் புகழ்ந்து கொண்டாட'' எனப் பொருள் கொள்ளின், அந் நெறி உடையார்க்கு அது பொருந்தா தென உணர்க.

உணர் மேதாவிகள்-வினைத் தொகை, மேதா-புதிது புதி தாகத் தோன்று மறிவு.

4. நாவலர் போற்றும் நற்கண பதியை
நலம்தரும் ஆறுமா முகனை,
ஆவலாய் உலகர் வணங்கிநன் குய்ய
அருளினல் ஈந்தனை காழி,
மேவுசம் பந்தர்க் களித்தஞா னப்பால்
மிளிர்தயை கொண்டெனக் கருள்வான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூ வணத்து உறை-(திருப்) பூ வணத்தின் கண் எழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி-சௌந் தரிய நாயகியே, நாவலர் போற்றும் நல் கணபதியை-நாவலர் துதிக்கின்ற விநாயகப் பெருமானையும், நலம் தரும் மா ஆறு முகனை-பிற பேறுகளோடு வீடு பேற்றையும் அளிக்கின்ற சிறந்த ஆறு முகப் பெருமானையும், உலகர் ஆவல் ஆய் வணங்கி-மக்கள் அன்போடு வழிபாடு செய்து, நன்கு உய்ய - பேரின்பத்தோடு (முத்தி வீட்டின்கண்) வாழும் ஆறு, அருளினல் ஈந்தனை-கருணையினல் பெற்று அளித்தாய், காழி மேவு சம்பந்தர்க்கு அளித்த ஞான பால்-(சீர்)காழியின்கண் திரு அவதாரஞ் செய்த ஞான சம்பந் தருக்குக் கொடுத் தருளிய ஞானப் பாலை, மிளிர் தயை கொடு-விளங்குகின்ற கருணை கொண்டு, எமக்கு அருள் வான்-அடியேங்கட்கு அளித்தருளும் பொருட்டு, நின் பொன் அடிகளை-நினது அழகிய திரு அடித் தாமரைகளை, நிநம் பணிவாம்-நா டோறும் (முக் கரணங் களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) இந்திரன் முதலிய தேவர்கட்கும், முநிவர் கட்கும், அசுரரால் இடுக்கண் விளைந்த விடத்து அவ் விடுக் கண் களைந்து அவர்க் கின்பந் தருதற் பொருட்டும்; உல கோர் வேத நெறி பிழையாது தம்மை வழிபட்டு முத்தி பெற் றுய்தற் பொருட்டும்; இறைப் பொருளே மாயோ பாதியோடு, விநாயகப் பெருமா னகவும், அறு முகப் பெருமா னகவும், அவதரித்தமையைப் புராணம் கூறுகின்

றமையாலும், அவ் இறைப் பொரு ளாகிய தேவியின், அறக் கற்பும், மறக் கற்பும், ஆகிய இரண்டும் சிஷ்ட பரிபாலந துஷ்ட நிக்கிரகத்தின் பொருட்டு அவ் இருவ ராகவும் உரு வெடுத்தன என்று பெரியோர் கூறுவ ராகையாலும், தந்தை அன்பினும் தாய் அன்பு சிறந்த தாகையாலும், உலகர் வணங்கி நன் குய்ய, "அருளினல் ஈந்தனே." என்ருர். திரு ஞாந சம்பந்தப் பெருமான் திரு வாய் மலர்ந்தருளிய, சிவ சத்திகளின் புகழ்ச்சியோடு வேத சிவாகம நெறிகளையும் தெரித்துணர்த்தும் தேனினும் இனிய செந்த தமிழ் மொழியானவை, ஆண்பனே, சிறத்தற்குப் பய னாகவும், விடத்தை யொழித்தற்கு, மயிலாகவும், நோயைத் தீர்த்தற்கு, மருந் தாகவும், உருச் சிதைந் துதிர்ந்த எலும்பு உருக் கொள்ளற்கு, உயி ராகவும், இருக்கும் வண்ணம் தேவியார் ஞாநப் பால் அளித்தமையாலும், அப் பாலே அம் மொழிக ளாகப் பரிணமித்தமையாலும்; தந்தையார் கல்வி அறிவுடைமையால் தனையர் அறிவுடை மையைத், தாம் மதித்து மகிழ்தலும், தாயார்க் கஃதின்மை யின், "உன்மகன் சால்புடையன்" எனக் கற்ருேர் உரைக் கக் கேட்டு மகிழ்தலும் பெரும்பாலும் உலகியல் பாகை யால், இறைவியார், அவ் வியல்புக்கு மாருக, இயற்கை அறிவும் முற்றும் உணர்தலும் முத லாய கல்யாண குணங் கள் உடைமையின், தனயனைக் கொண்டு திரு நெறித் தமிழை அருமை யாகப் பாடுவித்து இறைவரினும் இனி துவக்க விரும்பி ஞாநப் பால் அளித்தமையாலும், அதனை யாமும் உண்டு பேறடைய வேண்டும் என்பார், "ஞாநப் பால் அருள்வான் பணிவாம்." என்ருர். தேனினும் இனிய செந் தமிழ்ச் சிறப்பை-

> பயனாகு நல்லாண் பனைக்கு விடத்திற்கு,
> மயிலாகு நோய்க்கு மருந்தாம்—உயிராகும்,
> சிந்துமெ லும்பிற்குச் சிவபுரத்து நாவலன்சம்,
> பந்தன் இயம்புதிருப் பாட்டு.

என்னும் நால்வர் நான் மணிமாலையான் உணர்க.

நாயகி—அண்மை விளி. (4)

5. தேவதே வனுநின் சேர்ந்ததன் மையினால்
திகழ்சர்வ சக்திமான் ஆனான்,
நீவில குறினே ஒருசிறி தசைவும்
நிகழ்த்தவும் திறனிலன் ஆவான்,
ஏவர்நின் பெருமை அறிந்துய்ய வல்லார்
எளியனும் நிறையருள் வேண்டிப்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்திநம் பணிவேன்.

(இ-ள்) பூ வணத்து உறை-(திருப்) பூவணத்தின் கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி-சௌந் தரிய நாயகியே, தேவ தேவனும்-தேவர்கட் கெல்லாம் தேவனாகிய இறைவனும், நின் சேர்ந்த தன்மையினால்-நின்னைப் பொருந்திய காரணத்தினால், திகழ் சர்வ சக்தி மான் ஆனான்-விளங்குகின்ற எல்லாச் சக்திகளையும் உடைய னாயினான், நீ விலகுறினே-நீ (அவனை விட்டு) நீங்குவையேல், அசைவு ஒரு சிறிதும் நிகழ்த்தவும்-பஞ்ச கிருத்தியங்களைக் கொஞ்சமும் செய்தற்கும், திறன் இலன் ஆவான்-வல்லமை இன்றியவன் ஆவன், நின் பெருமை அறிந்து உய்ய ஏவர் வல்லார்-(இத்தகைய) நினது (இன்றி யமையாமை யாகிய) பெருமையைத் தெரிந்து (நின்னை வழி பட்டுப் பிறவிக் கடலினின்றும்) கரை யேற யாவர் வல்லவ ராவர், எளியனும் நின் நிறை அருள் வேண்டி நின் பொன் அடிகளை-(பற்றுக்கோ டின்றிய) அடியேனும் நினது பூரண கிருபையை விரும்பி நினது அழகிய திரு அடித் தாமரை களை, திநம் பணிவேன்-நா டோறும் (முக் கரணங்களா லும்) வழிபாடு செய்வேன். (எ-று)

(வி-ரை) சிந் மாத்திர மாய் உள்ள சிவம் குண சகிதம் அன்றாயினும்; அது சந்திர னிடத்துக் கற்பித மாய் உள்ள களங்கம் போல, தன்னிடத்துக் கற்பித மாய் உள்ள மாயையோடு கூடியிருக்கின்ற தென்னும் வியவகாரம் நிகழும் போது, சிவன் என்னும் திரு நாமத்தை யேற்று, ஆறு கோடி மாயா சக்திகளை உடைய தென்று கூறப்படு

கின்றமையால், அவ் விறைவனுக்குச் சிற் பிரதாநத்தா லும், சடப் பிரதாநத்தாலும், ஜகத்திற்கு தோற்றத்திற் குரிய அபிந்ந நிமித்த உபாதாநத் தன்மை சித்திக்கும் பொருட்டு, மாயா சத்தி வேண்டப்படுதலாலும், அவ் விறைவனே சீவரூப மாய்ப் பிரவேசித்து கர்த்தா போக்தா வாக நின்று, அச் சீவர்களின் இரு வினை யொப்பு மல பரிபாக காலத்தில், ஞாநாசாரியனுய்த் தோன்றித் தன்மய மாக்கும் பொருட்டு நியம சத்தி வேண்டப்படுதலாலும், இச் சத்திகள் சத்தன் ஆகிய சிவனுக்கு வேருக விருப்பன வல்ல ஆகையால், அவை அவ னிடத்துத் தாதாத்மிய மாக விருக்கின்றனவே யன்றித் தனித் திரா வாகையாலும், இந் நியம சத்தியினையே, "நீக்க மின்றி நிற்கும் ஆணை" எனச் சிவ ஞாந போதம் கூறுகின்றமையாலும், இச் சத்தி கள் இறைவியின் சொரூபமே ஆகையாலும், "தேவ தேவனும் பின் சேர்ந்த தன்மையினுல் திகழ் சர்வ சக்தி மா ஞுன்" என்ருர். இதனை,

> "போற்றிறை மாயா சத்தியோ டொன்றிப்
> பொலிந்தசிற் பிரதாந மதனுற்,
> சாற்றரும் நிமித்த காரணன் ஆகித்
> தருஞ்சடப் பிரதாந மதனுல்,
> ஆற்றுபா தாந காரணன் எனாநின்
> ருக்கிய புத்தியா திகளிற்,
> றேற்றுபு சீவ ருபமாய் வினையாற்
> சொற்றபோத் திருமென நின்றே."

> "நியமசத் தியினுற் போகபோத் திருவை
> நியமஞ்செய் துருத்திர உருவான்,
> மயாரு மாயா காரியஞ் சிதைந்து
> வந்தருள் ஆரிய உருவால்,
> அயர்வுறு சீவன் றனையே தன்ஞே
> டையிக்கியமாக் குவனென அறிக."

என்னும் (திருக்கு விவேகம் 45-46) வேதாந்த சூடாமணி யாலும்.

"நிருமல சிவன்றன் மாயையாற் கோடிபோல்
நிருமிக்கப் பட்டன எல்லாம்,
மருவுகா ரியங்கா ரணத்திற்கு வேறு
காமையின் மாயைரு பந்தான,
பெருகுமா யையுமற் றதிட்டாந மாகும்
பிரமத்தின் வேறுன தன்று,
குருபரன் அருள்கைக் கொண்டுமுக் குறும்பும்
கொன்றுயர்ந் தோங்கிய முனிவிர்."

என்னும் சூத சங்கிதையாலும், "ஆறு கோடி மாயா சத்திகள், வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின" என்னும் (திரு வாசகம் 4 போற்றித் திரு அகவல் 44-45) மணி வாசகத்தாலும் உணர்க. மாயா சக்தி ஆறு கோடி - மாயா சக்தி ஆறு பிரிவு. 5

6. நாவினுல் வருஞ்சொல் குற்றமும் எண்ணம்
நலமற வருமொரு பிழையும்,
மேவுடல் கொடுசெய் தீவினை யோடு
விளங்குபார் வையில்வரு கின்ற,
பாவமா தியவாய் உளபிழை அனைத்தும்
பரிவுடன் பொறுத்தருள் செய்வான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகியின்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூ வணத்து உறை-(திருப்) பூவணத்தின் கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி-சௌந்தரிய நாயகியே, நாவினுல் வரும் சொல் குற்றம்-நாவினுல் வருகின்ற சொல் குற்றங்களையும், நலம் அற வரும் எண்ணம் ஒரு பிழையும்-நன்மை யின்றி வருகின்ற (தீய) எண்ணங்க ளாகிய ஒப் பற்ற குற்றங்களையும், மேவு உடல் கொடு செய்-(கருமாநுசார மாகப்) பொருந்திய காயத்தாற் செய்கின்ற, தீ வினையோடு-(தனக்கும் பிறர்க் கும்) தீமை பயக்குஞ் செயல்களோடு, விளங்கு பார்வை யில் வருகின்ற பாவம்-விளங்குகின்ற சீவ கருணை யின்

மையால் வருகின்ற பாவத்தையும், ஆகிய வாய் உள பிழை அனைத்தும்-இவை முதலாக உள்ள பிழைகள் அனைத்தையும், பரிவுடன் பொறுத்து அருள் செய்வான்-கருணையோடு பொறுத்து ஆட்கொள்ளும் பொருட்டு, நின் பொன் அடிகளை நிநம் பணிவாம்-நினது அழகிய திரு அடித் தாமரைகளை நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) மந வாக்குக் காயங்கள் பரிசுத்தமாகா விடத்து, வேதத்தில் விதித்த கருமங்களையே செய்தாலும் அவைகள் பய னின்றி வாளா ஒழியு மாகலானும், அறியாக் காலத்து முக்கரணங்களால் ஒரோ வழிக் குற்றங்கள் செய்யினும், அவற்றை இறைவன் வேண்டுங்கால் மன்னித்து விடுவன் ஆகையானும், நூல் அறிவு பெற்ற காலத்து அவைகட்குத் தண்டனையே பயக்குமாகையானும், ஈண்டு அறியாக் காலத்துச் செய்த குற்றங்களையே பொறுத் தருளப் பிரார்த்தித்தார். நாவினால் வருஞ் சொல் குற்றம்:- பொய் குறளை கடுஞ் சொல் பயனில் சொல் என்பன வாம். இதனை, "பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்." (24 ஆபுத்திரன் நா டடைந்த கதை, 127-128 வரி) என வரும் மணி மேகலை அடிகளால் உணர்க. மநக் குற்றம் :- பொருமை, பிறர் பொருளை அபகரிக்கக் கருதுதல் முதலியன. காயக் குற்றம் :- பழி பாவங்கட் கேது வாகிய கொடும் தொழில்களைச் செய்தல். இம் முக் குற்றங்களும் கடியத் தக்கன என்பதை, முறையே, :-

"கண்டவை யில்லெனா வுலகத்து ளுணராதார், தங் காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள், நெஞ் சறிந்த கொடியவை மறைப்பவும் மறைபவாம், நெஞ் சத்திற் குறுகிய கரியில்லை யாகலின்." என வரும்.
கலித் தொகையானும்,

"புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்,
அறங்கூறும் ஆக்கம் தரும்." (19 - 3) என்றும்,

"பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்,
மக்கட் பதடி எனல்." (20—6) என்றும்,

"இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ,
வன்சொல் வழங்கு வது." (10—9) என்றும்

வரும் திருக் குறளானும்,

"எடுத்தொருவர்க் கொருவர் ஈவதனின் முன்னே,
தடுப்பது நினக்கழகி தோதகைவில் வெள்ளி,
கொடுப்பது விலக்குகொடி யோய்நினது சுற்றம்,
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றியிடு கின்றாய்."

என வரும் கம்ப ராமாயணத்தாலும்,

"நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்,
குற்றமும் ஆங்கே தரும்." (18—1) என்றும்,

"தீயவை தீய பயத்தலால் தீயவை,
தீயினும் அஞ்சப் படும்." (21—2) என்றும்,
வரும் திருக் குறளானும் உணர்க. ௬

7. தாவுறு பிரியாப் பிரியங்கள் அற்றுத்
தகுஞ்செயல் அனைத்துமே ஒழிந்து,
மேவுறு நினைப்பு மறப்புகள் இன்றி
விளங்குநிர்ச் சிந்தனைய்த் தனியே,
ஓவற இருந்துன் ஆநந்தத் தழுந்த
உளமகிழ்ந் தருள்செய வேண்டிப்.
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூ வணத்து உறை-(திருப்) பூவணத்தின் கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி-சௌந் தரிய நாயகியே, தாவு உறு பிரிய அப்பிரியங்கள் அற்று-(சத்தாதி விஷயங்களில்) செல்லுகின்ற விருப்பு வெறுப் புக்கள் நீங்கப் பெற்று, தகும் செயல் அனைத்தும் ஒழிந்து-தகுதி யுடைய லௌகிக வைதிக விகித கருமங்க ளெல் லாம் செய்யாது விடுத்து, மேவு உறு நினைப்பு மறப்புகள்

இன்றி-(சமஸ்காரத்தால்)தோன்றுகின்ற நினைப்பு மறைப்பு கள் ஒழிந்து, விளங்கும் நிர்ச்சிந்தன் ஆய் - (ஆநம வடிவ மாக) விளங்குதற் குரிய மந மிறந்த நிலையுடைய னுய், ஓவு அற தனியே இருந்து-நீக்க மின்றி ஏகாந்தத் தாநத்தி லிருந்து, உன் ஆநந்தத்தை அழுந்த-நினது வடிவ மாகிய பேரின்பக் கடலில் மூழ்க, உளம் மகிழ்ந்து அருள் செய வேண்டி-(நீ) மந மகிழ்ச்சி உற்று அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பொன் அடிகளை-நினது அழகிய திரு அடிகளை, நிதம் பணிவாம்-நா டோறும் (மந வாக்குக் காயங்களால்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) ஒரு பொருளையும், விழைதலும், வெறுத்த லும், இல்லாதவரே, மநஞ் சலிப் பின்றி இறைவனைத் தியா நித்து, நல் லொழுக்கத்தில் நின்று, இம்மையில் நமக்கு நேரும் துன்பங்களை மநம் தளராமற் பொறுப்ப ராகையா லும், மறுமையில் வீடு பெறுதலால் அத் துன்பங்களை விட்டவ ராகையாலும், "பிரியாப்பிரியங்க ளற்று." என்றும், நிஷ்காம கருமங்கள் அந்தக் கரண சுத்தியை உண்டுபண்ணுதலின், அதனை அநுட்டித்து, அச் சுத்தி அடைந்த பின்னர் ஞாந சாதகஞ் செய்வார்க்கு, அக் கருமமும் விடற்பால தாகலான், அதனையும் உளப் படுத்திச், "செய லனைத்தும்" என்றும், மெய் உணர் வுடையார், கரும யோக தவங்க ளாகிய, சரியை கிரியை யோக நெறிகளை விடுத்து, தற் தற் சொரூபத்தில் நிலை பெற்று இருப்ப ராகலான், "செய லனைத்தும் ஒழிந்து" என்றும், சுத்தம் அசுத்தம் என்னும் இரு வகை வாசனை யாலும் தோன்றும் இரு வகை நினைவினுள்ளும் சுத்த நினைவு சாதகர்க்கு வேண்டிய தாயினும், சாத்தியர்கள் அந் நினைவும் நீங்கப் பெற்று சொரூபத்தில் நிலைபெற்று நினை வின்மையால் மறதியும் இன்றி இருப்ப ராகையால், "நினைப்பு மறப்புக ளின்றி." என்றும், சிந்திப்பான்,

சிந்தனை, சிந்திக்கப்படு பொருள், என்னும் திரிபுடித் தோற்ற மாகிய பேத மின்றி, சித்தம் இறந்த தம் நிலையில் நிற்ப ராகையால், "நிர்ச்சிந்தனாய்" என்றும் கூறினார்.

"ஒன்றினும் ஆசை யின்றியிந் தியங்கள்
தம்வழி யொழிகிடா தொருக்கி,
நன்றியி னோடு தீங்கினி தொத்து
நல்வினை தீவினை துறந்து,
பொன்றினும் நோவுற் றழிதல்செய் யாதே
பூரித்தல் வாடுதல் இன்றி,
என்றுமுன் பிழந்த பொருட்கிரங் காதே
வரும்பொருட் இச்சைசெய் யாதே."

(12—10.) என வரும் பகவத் கீதையானும்,

"எந்த வெந்த வாதனைகள்
இதயத் தெழுந்த அவையெல்லாம்,
அந்த அந்த இடத்தழுக்கல்
அதுவே மாயைக் கழிவாகும்,
முந்து போக பேதமன
மொழிந்த இருவா தனைவிட்டு,
வந்த பாவா பாவங்கண்
மாற்றி விகற்ப மறமகிழ்வாய்."

(3 இதோபதேசம் 16) எனவும் வரும் வாசிட்டத்தானும் உணர்க. மேவு தாவு ஓவு:— முத னிலைத் தொழிற் பெயர்கள். 7

8. **வீவுதல் வருங்கால் விடயத்தை விழையும்**
**விருப்பினை விடுத்துநன் றுகத்,**
**தேவியாம் உனையே சிந்தைசெய் திருக்கத்**
**திரவீ ரேசனும் விளங்க,**

நாவினுல் நானே பிரமமென் றுரைக்க
நல்வரந் தந்தருள் புரிவான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்தினம் பணிவாம்.

(இ-ள்) பூவணத்து உறை-(திருப்) பூவணத்தின் கண்ணெழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி - சௌந்தரிய நாயகியே, விடயத்தை விழையும் விருப்பினை விடுத்து-(சத்தாதி) விடயங்களை விரும்புகின்ற ஆசையை விட்டு நீக்கியும், வீவுதல் வருங்கால்-உடலை விட்டு உயிர் பிரிகின்ற காலத்து, தேவி ஆம் உனையே-இறைவி யாகிய நின்னையே, நன்றாக சிந்தை செய்திருக்க-செவ்வை யாகத் தியானிக்கும் வண்ணமும், தீர வீரேசனும் விளங்க-ஜிதேந் திரிய ராகிய, வீர சேகர ஞான தேசிகர் (எம்முளத்தில்) பிரகாசிக்கவும், நானே பிரமம் என்று நாவினுல் உரைக்க- அகம் பிரம்மாஸ்மி என்னும் மகா வாக்கியத்தை நாவினுற் சொல்லவும், நல் வரம் தந்து அருள் புரிவான் - நல்ல வரத்தை அளித்து அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பொன் அடிகளை - நினது அழகிய திரு அடிகளை, தினம் பணிவாம்-நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி - ரை) இந்திரிய வியாபாரம் ஒழிந்து விடய வாசனை யற்ற சுத்த மனத்தால் அன்றி, இறைவியைச் சிந் திக்க முடியாதாகையால், "விடயத்தை விழையும் விருப் பினை விடுத்து" என்றும், உடலோடு வாழுங் காலத்து, மனத்தால் இறைவியை நினைத்தலும், வாக்காற் றுதித்தலும், காயத்தால் வணங்கலும், ஆகிய முக் கரண வழிபாட்டை நிரந்தரம் நேயத்தோடு செய்து வருவோர்; உடல் நீங்கும் காலத்து வாக்கின் செயலும், காயத்தின் செயலும் அடங் கினும், மனச் செய லாகிய தியான நிலையில் ஒன்றி யிருப்ப ராகையாலும், அங்ஙன் ஒன்றி யிருப்போர் இறைவியை அடைதல் திண்ண மாகையாலும், "உனையே சிந்தை செய்

இருக்க'' என்றும்; ஞாநாசாரியன் இறைவியின் வடிவே யாகலின், சிந்தனைக் காலத்து அவளே ஞாநாசாரியனாய்க் காட்சி அளிப்பது கொண்டு. 'தீர வீரேசனும் விளங்க'' என்றும்; ஞாநாசாரியன் உபதேசித்த, ''தத் துவம் அசி.'' மகா வாக்கியார்த்த விசாரத்தால், ''அகம் பிரம்மாஸ்மி'' என்னும் அநுபவ நிலை உதயமாகு மாகையால், ''நானே பிரமம் என் றுரைக்க'' என்றும் கூறினார், சிந்தை செய் திருத்தலால் வீரேசன் விளக்கமும், அவன் விளக்கத்தால் நானே பிரமம் என் றுரைத்தலும் நிகழு மாதலால், ஒன்றற் கொன் றுள்ள காரண காரிய முறையுங் கண்டு கொள்க.

''அறிவினால் என்னை ஆக அறிந்துகொண் டமைதி யாலே, பொறிவழி அடைத்தெப் போதும் என்னையே போற்றி செய்து, நெறியினால் வழுத்தி வாயால் என்னையே நினைந்து நெஞ்சால், செறிதரும் இவர்கள் கண்டாய் தேவ ரிற் றெரியப் பட்டார்'' (9—10) என்றும்,

''இந்த வுடலம் விடும்பொழுது யாவன் யாதொன் றினைநினைந்தான், அந்த அளவே அந்தப்பா வனையால் அதனை அடையுமால்.'' (8—6) என்றும் வரும் பகவத் கீதை யாலும், ''ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊன மில்லை.'' (கோயில் திரு விருத்தம் 2) என்றும்,

''ஐயினான் மிடறடைப்புண் டாக்கைவிட் டாவியார் போவதுமே அகத்தார் கூடி, மையினாற் கண்ணெழுதி மாலை சூட்டி மயானத்தில் இடுவதன்முன் மதியஞ் சூடும், ஐயனார்க் காளாகி அன்பு மிக்கு அகங்குழைந்து மெய் யரும்பி அடிகள் பாதம், கையினாற் றொழுமடியார் நெஞ்சின் உள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.'' (கன்றாப்பூர் 7) என்றும், வரும் அப்பர் அடிகளார், திரு வாக்கானும் உணர்க.

இருக்க, விளங்க, உரைக்க,:— என்ற இடத்து எண் ணும்மை தொக்கன. 8

9. நோவுதான் வந்து நொடிசெய வுடலை
நுவலுதம் செயலறப் பொறிகள்,
சீவநம் செய்தல் அரிதெனத் திகைத்துச்
சிந்தையா குலமுறும் தருணம்,
கூவல்செய் தென்னைக் குணநிதிக் கடவுள்
கூடவே இருக்கவந் தருள்வான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்திநம் பணிவேன்.

(இ-ள்) பூ வணத்து உறை - (திருப்) பூ வணத்தின் கண் எழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி-சௌந் தரிய நாயகியே, நோவு தான் வந்து உடலை நொடி செய- பிணிகள் மேலிட்டு உடலை அழித்தலைச் செய்யவும், பொறிகள்- (மெய், வாய், கண், மூக்கு, செவி, ஆகிய) ஐம் பொறிகளும், நுவலு தம் செயல் அற - சொல்லாநின்ற தமக்குரிய செயல்களைச் செய்யாது அடங்கவும் (வருகின்ற மரண காலத்தில்), சீவநம் செய்தல் அரிது என-(இனி)உயிர் வாழ்தல் முடியா தெனக் கருதி, சிந்தை திகைத்து-சிந்தை மயங்கி, ஆகுலம் உறும் தருணம் - (பல் வகைத்) துன்பங் களை அடைகின்ற காலத்து, குண நிதிக் கடவுள் கூடவே இருக்க வந்து-அர்த்த நாரீசுவர வடிவத்தோடு எழுந்தருளி வந்து, என்னைக் கூவல் செய்து அருள்வான்-அடியேனை (வா என்று) அழைத்து அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பொன் அடிகளை-நினது அழகிய திரு அடிகளை, நிநம் பணிவேன்-நாள் தோறும் (முக் கரணங்களாலும்)வழிபாடு செய்வேன். (எ-று)

(வி-ரை) அன்னையின் கர்ப்பத்தில் இருக்கும் காலத் தும், வெளித் தோன்றும் காலத்தும், அநுபவிக்கப்படு கின்ற, கருப்பாசயப் பை உறுத்துதல், அதிற் சலம் பூரித்தல், உதராக்கினியால் வேவுதல், பிரசூத வாயு மூரித்துத் தள்ளுதல், யோநித் துவாரத்து நெருக்குண்டல், என்னும் ஐம் பெருந் துன்பங்களைக் காட்டிலும், இறப்புத் துன்பம்

எண் மடங் கதிகம் என்றும், அக் காலத் துன்ப துன்பத்தின் அளக் கொணுக் கொடுமை பற்றி, அதனை இறைவனே அறிவான் என்றும், மேலும், இத்தகைய பிறப் பிறப்பு வாராது, சரியை கிரியை யோக, ஞான மார்க்கங்களைப் பயிலுதலே நன்றென்றும் குறிப்போடு அம் மரண காலத்தில் இறைவன் கருணையோடு அஞ்சேல் என்று அருள் செய்வான் என்றும் நால்கள் கூறுகின்றமையின், "நோவுதான்......... அருள்வான்." என்றார்.

"நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்." (34-5) என்னும்

திருக் குறளானும்,

"வந்திடு மரணத் துன்பம் மறித்துரை செய்யப் போமோ.
உந்திமேல் ஐயும் பித்தும் உணர்வொடு மொழிகள் மங்கி.
நந்திடா இருளே மூடி நாவுலர்ந் தலமந் தேங்கி,
இந்தமா இப்பிறப்பில் துன்பம் படைத்துள்ளத் தெல்லாம
டங்கே;" என வரும் மெய்ஞ் ஞான விளக்கத்தானும்,

"பரணம் ஆகிய பெண்டிரும் சுற்றமும் பண்டுதம் கையில்தந்த, இரளா மாணவை கொண்டிட இவரைவிட் டியம்பிடா திவனொருகும், மரண வேதனையாலவன் அறிய லாம் மயங்கியைம் புலனந்தக், கரணம் யாவையும் கலங் கிட வருந்துயர் கடவுளே அறிகிற்பான்." என வரும் குறுந் திரட்டினுலும்.

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந் திட் டைம்மேல் உந்தி, அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான் அமருங் கோயில்." என வரும் திரு ஞான சம்பந்தர் திரு வாக்கானும்.

"சிந்தனை கலங்கி இணைவிழி இருண்டு செவிகளும் செவிடுபட் டைம்மேல், உந்திட உயிர்போம் பொழுதுநின் வடிவம் உளம்கொளும் படிசெனக் கருள்வாய்." என வரும் சோண சைல மாலையானும் உணர்க. (9)

10. மூவிலை வேலும் மான்மழு உரியும்
முடிதனில் கங்கையும் தரித்த,
தேவன துருவில் பாதியைப் பெற்ற
தேவியே உயிர்விடும் போது,
நோவுறல் இன்றி அசஞ்சலம் ஆக
நுவலுநின் ஐக்கியம் அருள்வான்,
பூவணத் துறைசௌந் தரியநா யகிநின்
பொன்னடி களைத்தினம் பணிவாம்.

(இ-ள்) பூ வணத்து உறை - (திருப்) பூ வணத்தின் கண் எழுந்தருளி யிருக்கின்ற, சௌந்தரிய நாயகி - சௌந்தரிய நாயகியே, மூ இலை வேலும் - (திருக் கரங்களில்) சூலாயுதத்தையும், மான் மழு உரியும் - மானையும், மழுவையும், (திரு மேனியில்) (யானை புலி இவற்றின்) தோல்களையும், முடிதனில் கங்கையும் - திரு முடியில் கங்கையினையும், தரித்த தேவனது உருவில் - தரித்தருளிய இறைவ னுடைய திரு மேனியில், பாதியை பெற்ற - இடது பாகத்தை பெற் றருளிய, தேவியே - இறைவியே, உயிர் விடும் போது - (உடலை விட்டு) உயிர் நீங்கும் போது, நோவு உறல் இன்றி - (மரணத்) துன்பத்தை அடையாது, அசஞ்சலம் ஆக - பே ரின்ப வடிவ மாக, நுவலும் நின் ஐக்கியம் - கூறப்படாநின்ற நினது ஐக்கிய நிலையை, அருள்வான் - அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, நின் பொன் அடிகளை - நினது அழகிய திரு அடிகளை, தினம் பணிவாம் - நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(விரை) இறைவன், மான் மழு, உரி, தரித்தருளியதை, தாருகா வநத்து முநிவர்களின் வரலாற்றைக் கொண்டும், முடிதனில் கங்கையை ஏற்றதை, பகீரதன் வரலாற்றைக் கொண்டும், இறைவி, இடது பாகம் பெற்றதை, பிரிங்கி முநிவரின் வரலாற்றைக் கொண்டும், உணர்ந்து கொள்க.

இறைவன், திரு மேனியில் இறைவியையும், திருச் சடையில் கங்கா தேவியையும், தரித்தருளாவிட்டால் வரும் தீங்குகளை,

"பெண்பால் உகந்திலனேல் பேதாய் இரு நிலத்தோர்"
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ."
(திருச் சாழல், 9) எனவும்,

"சலமுகத்தால் அவன்சடையில்
பாய்ந்திளலேல் தரணியெல்லாம்,
பிலமுகத்தே புகப்பாய்ந்து
பெருங்காடாம் சாழலோ." (திருச் சாழல் 7)
எனவும் வரும் மணி வாசகத்தான் உணர்க.

ஈண்டு ஐக்கியம் என்றதன் கருத்தாவது: ஈசுவர சாட்சி யாகிய இறைவியே, சீவ சாட்சி யாகிய தானாதலைப் போதிக்கும் வாக்கியம், "தத் துவ மசி மா வாக்கியம்" என்றும், சீவ சாட்சி யாகிய தானே ஈசுவர சாட்சி யாகிய இறைவியாதலைப் போதிக்கும் வாக்கியம் "துவந் தத் அஸி" மா வாக்கியம் என்றும், இங்ஙன ஓதப் புரோத பாவ மாகக் கூறுதல், தத் பதத்தின்கண் ணுள்ள பரோட்சத்துவப் பிராந்தியும், துவம் பதத்தின்கண் ணுள்ள பரிச்சின்னத்துவப் பிராந்தியும், நீங்குதற் பொருட்டாம் என்றும்: மற்றைய அப்பியாச வாக்கிய மாகிய, "பிரஞ் ஞானம் பிரம்மம்" என் பதும், சம்மதி வாக்கிய மாகிய, "அய மாத்மா பிரமம்." என்பதும், அநுபூதி வாக்கிய மாகிய. "அகம் பிரமாஸ்மி" என்பதும், மேற் காட்டிய கருத்தைக் கொண்டே விளங்கு வன என்றும், சாத்திரங்கள் கூறும் கேவலாத்வைத ஐக்கி யமே யாம். இதனை,

"அவனே தானே யாகிய அந்நெறி, ஏக னாகி இறைபணி நிற்க, மலமாயை தன்னொடு வல்வினை இன்றே." என்னும் சிவ ஞாந போதத்தா னும்;

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னை." (கோயிற் றிருப் பதிகம் 10) என்னும் மணி வாசகத்தானும்,

"நானுன்னை அன்றியிலேன் கண்டாய் நாரணனே, நீ யென்னை அன்றி இலை." என்னும் (நான் முகன் திரு அந்தாதி 7) திருமழிசை யாழ்வார் திரு வாக்கானும் உணர்க. 10

திருப் பூவணம் - சௌந்தரிய நாயகி தோத்திரமும்,
பரிமள தீப உரையும்,
முற்றுப் பெற்றது.

## மதுரை, மீநாக்ஷி அம்பிகை தோத்திரமும்

பரிமள தீப உரையும்.

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. பூவணி கொள்ளும் பாண்டியற் கருளும்
   புநிதராய் வைகைமண் போட்ட,
   பாவணி பலகொள் சொக்கநா தரினற்
   பாகத்தில் வீற்றிருந் தாட்சி,
   கோவணி கொடுசெய் குறிப்பறிந் தடைந்தேன்
   கொடியனை கடைக்கண்பார்த் தருள்வாய்,
   மாவணங் கினைச்செய் மயக்கறுத் தருளும்
   மதுரைமீ நாக்ஷியம் பிகையே

(இ-ள்) மா அணங்கினை செய் - (பிறவியால் ஆய) மிக்க துன்பத்தினை விளைவிக்கின்ற, மயக்கு அறுத்து அருளும்-அறியாமையைக் கெடுத்து (மெய் உணர்வை) அளிக்கும், மதுரை மீந அக்ஷி அம்பிகையே மதுரை மா நகரில் எழுந்தருளி யிருக்கின்ற அம் கயல் கண்ணி அன்னையே, அணி பூ கொளும் பாண்டியற்கு - அழகிய வெற்றி மாலையை அணிந்த (அரிமர்த்தன) பாண்டியற்கு, அருளும்

புநிதர் ஆய்-அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டுப் பரிசுத்தம் உடையராய், வை கை மண் போட்ட-(வந்தியின் கூலி யாளாய் வந்து,) வை கைக் கரையிலே மண் சுமந்து கொட்டிய, பல பா அணி கொள் சொக்க நாதரின் நல் பாகத்தில்- பல வாகிய (தேவார முதலிய) பா மாலைகளை அழ காக அணிந்து கொண்ட சொக்க நாதருடைய வாம பாகத்தில், வீற்றிருந்து-(பெருமையோடு) எழுந்தருளி யிருந்து, அணி கோடு - (செங் கோல் நெறி யாகிய) அழகோடு, கோ ஆட்சி செய் - அர சாட்சி செய்கின்ற, குறிப்பு அறிந்து அடைந்தேன் - (நினது) திரு உளக் குறிப்பை உணர்ந்து (திரு அடிகளைப் பற்றுக் கோடாக) அடைந்த, கொடியனை - கொடியவ னாகிய அடியேனை, கடை கண் பார்த்து அருள்வாய்-கருணை செய்து ஆட் கொள்வாய். (எ-று)

(வி-ரை) இறைவனுக்குப் புநிதத் தன்மை மாயோ பாதி யின்றிய சுத்த நிலையாயினும், ஈண்டு அடியார்கள் உய்யும் பொருட்டுத் திரு மேனி தாங்கி வரும் மாயை யோடு கூடிய அநுக்கிரக மூர்த்தியினைக் கொள்க. இறை வன் மண் சுமந்தது: — வாதவூர் அடிகளை வருத்திய தன் பொருட்டுப் பாண்டியன் மீது உண்டான கோபத்தால் இறைவன் வை கை யாற்றை மதுரை மா நகர் மேல் ஏவ, அவ் வாறு அந் நகரை அழிக்கும் ஆறு பெருகி வர, யாவரும் அரசன் கட்டளைப் படிக் கூலி ஆட்களை வைத்துக் கரை கோலுகையில், சோம சுந்தரக் கடவுள், பிட்டு விற் றுண்ணும் வந்தி யென்பாள் பொருட்டு வேலையா ளாக வந் தமர்ந்து முடியின் மேல் கூடையில் மண்ணைச் சுமந்து கொண்டு சென்று கொட்டினர் என்ப தாம்.

இறைவி தடாதகைப் பிராட்டியா ராய் அவதரித்துச் செங் கோல் செலுத்தி உயிர்களைப் புற உலகில் இன் படைய வாழ்வித்தமையும், மெய் அடியாரது உள்ளக் கமலத்து வீற்றிருந்து, அவ ரதுண்மை நிலையைக் காட்டி, அக உலகில் பே ரின்பம் அளித்து முத்தி நிலை அடைவிக்

கின்றமையும் தோன்ற, "குறிப் பறிந்" தெனவும், இத் தகைய குறிப்பை முன்னரே உணர்ந்து இறைவியை வழி பட்டு முத்தி நெறி எய்தாது வாளாளே வீணாய்க் கழித் தமைக் கிரங்கி, "கொடியனே" என்றும் கூறினார்.

அடைந்தேன் என்பது, ஈண்டு முற் றெச்சம். கடைக் கண்-மொழி நிலை மாறுதல் செய் குறிப்பு. செய் மயக்கு-வினைத் தொகை. 1

2 ஆவல்செய் தென்தன் ஆக்கைஉள் அளவுன்
அடியரன் பினைப்பெறு வதற்குப்,
பாவியேன் பணிகள் செய்துநின் பெருமை
பக்தர்கள் பகர்ந்திடக் கேட்டு,
நாவினால் வழுத்தி மநத்தினால் நினைந்து
நாடொறும் புரியுமா றருள்வாய்,
மாவடுப் போன்ற கண்களை யுடைய
மதுரைமீ நாக்ஷியம் பிகையே

(இ-ள்) மா வடு போன்ற கண்களை உடைய-மா வடுவின் பிளவை ஒத்த கண்களை யுடைய, மதுரை - மது ரையின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, மீந அக்ஷி அம்பி கையே-அம் கயல் கண்ணி அன்னையே, பாவியேன் என் தன் ஆக்கை உள்ள அளவு - (மல, விட்சேப, ஆவரணம் என்னும் மூன்று) குற்றங்களையும் உடையேனாகிய அடியே னது உடல் இருக்கும் பொழுதில், உன் அடியர் ஆவல் செய்து-நின்னுடைய அடியாரிடத்து விருப்பம் வைத்து, அன்பினை பெறுவதற்கு - (அவரது) கருணையைப் பெறும் பொருட்டு, பணிகள் செய்து - (அவர் திரு உளம் உவக்க) ஏவல் பணிவிடைகளைச் செய்து, நின் பெருமை - நின் பெருமையை, பக்தர்கள்-அவ் அடியார்கள், பகர்ந்திட-திரு வாய் மலர்ந்தருள, கேட்டு - கேள்வி யுற்று, நாள் தொறும்-நாடோறும், நாவினால் வழுத்தி - (நின்னை) வாக்

கால் துதித்து, மநத்தினால் நினைந்து - மநத்தால் நினைந்து, புரியும் ஆறு - (நின் திரு வடிகட்குக் காயத்தால்) பணி செய்யு மாறு, அருள்வாய்-அநுக்கிரகஞ் செய்வாய். (எ-று)

(வி-ரை) மாறுபட உடல் பெறுதற் கரிதாகையாலும், இதன் அழிவும் இன்ன காலம் எனத் திண்ணமாகச் சொல்லொணாதாகையாலும், இறைவனை வழிபட்டுய்ய இவ்வுடல் கருவியா யிருத்தலாலும், இஃதிருக்கு ஞான்றே பயன் அடைதல் வேண்டும் என்பது தோன்ற, "ஆக்கை உள்ளவு" என்றார். "அருளினை" அன் பென்றனர் பரந்த அன்பே அரு ளாதலின், சர்வ சராசரப் பிரபஞ்சங்களிலும் நிறைந்து பரிபூரண சொருபியா யிலங்கும் இறைவனின் திரு வருள் மய மாகிய மெய் யுணர்வுடையார், அவனைத் தம் முளத்தே கண்டு தம்மைச் சரணாகதியாக அடைந்து முக் கரண வழிபாடு செய்யும் அன்பர்கட்கும் காட்டுவ ராகலான், இறைவனின் காட்சிக்கு அம் மெய் யுணர் வுடையாரை உறு துணை யாகப் பற்றுதல் வேண்டும் என்பதை,

"நின்கழற் கணைமெய் கலந்தவன்பர் அன்பு எனக்கு மாக வேண்டுமே." (திரு வாசகம் ஆநந்தத் தழுந்தல் 73) என்றும், "வேண்டும்நின் னடியார் மெய்யன் பெனக்கும் அருள்செய் சிவனே." என்றும், வரும் பெரியோர் வாக்கானு முணர்க

வழுத்தி, நினைந்து, எனக் கூறினும், அமையு மாயினும், வழுத்தா நாவும். நினையா மநமும் இருந்தும் பய னில வென்ப தறிவுறுத்தற்கு, நாவினால், மநத்தினால், எனக் கூறினார், கூறினாரேனும், இனம் பற்றிக் கண்ணாற் காண்டல் கையாற் றொழுதல் முதலியனவுங் கொள்க,

உள் ளளவு-அகரந் தொகுத்தல் விகாரம். நாவினால் மநத்தினால் என்ற விடத்து, மூன்ற இுருபு கருவிப் பொருளது

3. தேனினும் இனிய சொல்லினைப் பெற்றுத்
 தெங்கங்காய் போற்றநம் உடையார்,
மேனிகண் டுழலென் விழிமநம் எல்லா
 மேன்மைபெற் றுன்றிரு வடியில்,
மானினம் போல மயங்கியே இருக்கும்
 வரமொன்றை எனக்குநீ அருள்வாய்,
மானினம் போன்ற செயல்விழி உடைய
 மதுரைமீ நாக்ஷியம் பிகையே.

(இ-ள்) மானின் செயல் போன்ற அம் விழி உடைய-மானது (மருண்ட பார்வை யாகிய) அழகிய கண்களை யுடைய, மதுரை-மதுரை நகரில் எழுந்தருளி யிருக்கும். மீந அக்ஷி அம்பிகையே-அம் கயல் கண்ணி அன்னையே, தெங்கம் காய் போல-தெங்கின் இள நீரை யொத்த, தநம் உடையார் - தந பாரம் உடைய மடவாரது, தேனினும் இனிய-தேனைக் காட்டிலும் இனிமை யுடைய தாகிய, சொல்லினைப் பெற்று - சொற்களை (அவர் வயப்பட்டு) மேற்கொண்டு, மேனி கண்டு - (அவரது) வடி வழகைக் கண்ணுற்று, உழல் - (காம பரவச மாய்) வருந்துகின்ற, என் விழி மநம் எல்லாம்-அடியேனுடைய கண் மநம் முதலிய கருவிகள் அனைத்தும், மயங்கியே இருக்கும் மான் இனம் போல (ஓசை வயமாகி அதன்கண்) ஒருப்பட்டிருக்கும், மான் கூட்டம் போன்று, உன் திரு அடியில்-நினது திரு அடி வயமாகி அதன்கண், மேன்மை பெற்று-(மயங்கியே இருக்கும்) மேன்மை அடைந்து ஒருப்பட்டிருக்கும், வரம் ஒன்றை - ஒரு வரத்தை, எனக்கு - அடியேற்கு. நீ அருள்வாய்-நீ அநுக்கிரகஞ் செய்வாய் (எ-று)

(விரை) காவிய நூலார் காமச் சுவை ததும்பக் கற்பனை யாக மிகைபடப் புனைந் துரைக்கும் கட்டுரைகளை, மெய் எனக் கருதி மடவாரது சொல் வயப்படுதலின், "பெற்று" என்றும், பொன்னையும் துகிலையும் பிரித்து நோக்கின், அற்பமேனும் பொற்பில்லா அவரது மேனி

கண்டு, காதலால் வாடுதலின், "உழல்" என்றும் கூறினார். சொல்லினைப் பெறுதல், மாத்திரைக்கும், மேனி காணுதல் ...க்கு மாக, எதிர் நிரல் நிறை யாகக் கொள்க.

மேன்மை:— ஈண்டு, இறுமாப்பு இதனை, "இறுமான் ஏந்திதன் சேவடிக் கீழ்ச்சென்றங் கிறுமாந் திருப்பன் கொலோ" எனப் பெரியார் பணித்தமையானும் காண்க. திரு வடிக் குவமை யாகிய ஓசை வருவித் துரைக்கப் பட்டது. மயங்குதல்—ஈண்டு ஒருப்படுதல் "தெங்கு" என்பது, காயொடு புணரும் போது அம் சாரியை பெற்றுத் தெங்கங் காய் என நின்றது. (தெங்கு — தென்னை) உழல் கண், உழல் மனம் எனக் கூட்டி வினைத் தொகை யாகக் கொள்க. "மயங்கியே இருக்கும்" என்பது பின்னும் கூட் டப்பட்டது. 3

4\. ஊன்கவர் அன்றில் ஆதியாம் உயிர்கட்
குவப்புடன் அருளினை அதனால்,
ஊனையோம் புதலை விடுத்துனை அடைந்தேன்
உண்மையைத் தருதலோ டமையா,
தூநமார் உடம்பை இனிப்பெறு திருக்கும்
உபாயமொன் றெனக்குநீ தருவாய்.
மான்மழு சூலப் படையினன் மனைவி
மதுரைமீ நாக்ஷியம் பிகையே.

(இ-ள்) மான் மழு சூலப் படையினன் மனைவி- மானையும், மழு, சூலம், என்னும் ஆயுதங்களையும் தாங்கிய சொக்க நாத ருடைய மனைவியே, மதுரை - மதுரை மா நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, மீந அக்ஷி அம்பிகையே- அம் கயல் கண்ணி அன்னையே. ஊன் கவர் அன்றில் ஆதி ஆம் உயிர்கட்கு-தசை யாகிய உணவை உண்ணுகின்ற, அன்றில் பறவை முதலாகிய சீவ ராசிகட்கு, உவப்புடன் அருளினை - மகிழ்ச்சியோடு (வீடு பேற்றை) அநுக்கிரகஞ் செய்தாய், அதனால் - (அங்ஙன் அநுக்கிரகஞ் செய்ததனை அடியேன் கேள்வியுற்)றதனால், ஊனை ஓம்புதலை விடுத்து-

(கருமாநுசார மாக வந்த) உடலைப் பேணுதலை (அறவே) விடுத்து, உனை அடைந்தேன்-நின்னைப் (பற்றுக் கோடாக) அடைந்தேன், உண்மையை தருதலோடு அமையாது-பரமார்த்த வஸ்துவே (யாளுதும் வண்ணம்) அநுக்கிரகஞ் செய்து உடனே, ஊனம் ஆர் உடம்பை-அசத்து சட துக்க வடிவ மாகிய உடலை, இனி பெருது இருக்கும் உபாயம் ஒன்று-மேற் பெரு திருப்பதற் கேற்ற ஒரு உபாயத்தை, எனக்கு அடியேற்கு, நீ தருவாய்-நீ தந்தருளுவாயாக.(எ-று)

(வி-ரை) பக்தி யோக ஞாந நெறியிற் செல்வார், தம் மநம் பொறி வழி போகாமல் நிற்றற் பொருட்டு, உண்டி சுருங்கல் முத லாய விரதாநுட்டாநங்களை மேற் கொண் டொழுக வேண்டும் என்பார், "ஊனை யோம்புதலை விடுத்" தென்றார். அகம் புறம் ஆகிய இரு வகைப் பற்றுக் களையும் நீத்தாரே இறையை உணர்ந் தின்புறுவர் என்பதை, "ஊனைக் காவல் கைவிட் டுன்னை உகப்பார் உணர்வாரே." (சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரம் ஊர்த் தொகை 7.) என்னும் பெரியார் வாய் மொழியானு முணர்க,

"உண்மையைத் தருதல்" என்றதனுனும், "உடம்பை இனிப் பெரு திருத்தல்" என்றதனுனும், முறையே பரமாநந்தப் பிராப்தியினையும், சர்வ துக்க நிவிர்த்தியினையும் கொள்க. "அமையாது" என்றதும், "உபாயம்" என்றதும் ஈண்டு முறையே, விரைவுப் பொருளையும், மெய் உணர்வை யும் குறித்தன.

கவர் = அன்றில், வினைத் தொகை. 4

5. ஆய்தரு புகழார் தில்லையம் பலவர்
அடிகளை அநுதிநம் இறைஞ்சி,
வாயுறப் புகழ மநநனி நினைக்க
வரமொன்றென் றனக்குநீ தருவாய்,

காயொடு கனியுங் கருதியெந் நாளும்
கனன்றிவண் திரிதரீஇக் கதித்து,
மாய்வுறு பவரை மாய்வற வைக்கும்
மதுரைமீ நாக்ஷியம் பிகையே.

(இ-ள்) எந் நாளும் காயொடு கனியுங் கருதி-நாள் தோறும் காயும் கனியும் விரும்பி உண்ண, கதித்து கனன்று இவண் திரிதர - (அதனால் உடல்) மிகவும் பருக்கப் பெற்று இவ் வுலகில் திரிந்து, மாய்வுறுபவரை - (மெய் யுணர்வு பெறாது) பிறந் திறந் துழல்பவரை, மாய்வு அற வைக்கும் - (அங்ஙன் உழலாத வாறு) முத்தி வீட்டின் நிலைபெறச் செய்யும், மதுரை - மதுரை மாநகரில் எழுந்தருளி யிருக்கின்ற, மீந அக்ஷி அம்பிகையே - அங் கயற் கண்ணி அன்னையே, ஆய் தரு புகழ் ஆர்-(மெய் யுணர் வுடையார்) ஆராய்ந்த புகழ் பொருந்திய, தில்லை அம்பலவர் அடிகளை- தில்லை யம்பலத்தில் ஆடுகின்ற நடராஜப் பெருமானின் றிரு அடிகளை, அநுதினம் இறைஞ்சி-நாடோறும் (காயத் தால்) வணங்கி, வாய் உற புகழ-வாயால் நன்றாகப் புகழ் தற்கும், மநம் நனி நினைக்க மநத்தால் மிகவும் நினைத்தற்கும், வரம் ஒன்று - (உரிய) ஒரு வரத்தை நீ என் தனக்கு தரு வாய்-நீ அடியேனுக்கு அநுக்கிரகஞ் செய்தருளுவாய். (எ-று)

(வி-ரை) பொருள் சேர் புகழை, "ஆய் தரு புக" ழென்றார். (மெய்ம்மை சேர்ந்த புகழ்). தலைமை நூதற் றேற்ற முற்று மறிதல் முதலிய நற் குணங்கள் இல ராயினரை, "உடையர்" எனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள், "ஆய் தரு புகழ் ஆகா"வாகலின், அவை முற்று முடைய இறைவன் புகழே, ஆய் தரு புகழ் எனப்பட்டது. இதனை,

"இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்,
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு." (5) என்னும்
பொய்யா மொழியானும் உணர்க.

"நினைத்தொறுங் காண்டொறும் பேசுந் தொறும் எப்போதும், அனைத்தெலும் புண்ணெக ஆநந்தத் தேன் சொரியும் குனிப்புடையான்" எனப் பெரியார் (திரு வாசகம் கோத் தும்பி 3) பணித்தமையான், "புகழ நினைக்க வரம் ஒன்று தருவாய்" என்றார்

மெய் உணர்வான் அன்றி ஏனையவற்றாற் பிறப் பிறப்பு நீங்கா தென்பதையும், சரியை யாதிகள் அவ் வுணர்வை மருவுதற்குக் கருவி யாக வுள்ளன வென்பதையும், அக் கருவிகளைப் பொருள் என் றெண்ணி மயங்குவார், பிறப் பிறப்பு நீங்கப் பெறார் என்பதையும், வலியுறுத்தற் பொருட்டு "காயொடு......... மாய்வுறுபவரை" என்றார். இதனை,

"உரைசெயிற் பிரம ஞானம் ஒன்றுமே முத்திக் கேது,
சரியை நற் கிரியை யோகந் தாமொரு மூன்றும் ஞான,
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கும் இந்தக்,
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவர்
தாமே" என்னும் பெரியார் வாக்கான் ஓர்ந் துணர்க.

ஆய் தரு, மாய் வுறு-துணை வினை. திரிதரீஇ - அளபெடை சொல் இசை நிறைக்க வந்தது நனி-உரிச் சொல். 5

6. அறம்பொருள் இன்பம் வீடெனு நான்கும்
அடைவுடன் அடைவதற் கான,
திறம்படும் உடம்பைச் செய்தநல் தவத்தால்
சேர்ந்துநன் முயல்விலா என்னை,
புறம்புள ஆசைத் தளைகளைப் போக்கிப்
போதமுண் டாவதற் கருள்வாய்,
மறஞ்செயும் அவர்க்கும் வரம்தந்து காக்கும்
மதுரைமீ னாக்ஷியம் பிகையே.

(இ-ள்). மறம் செயும் அவர்க்கும்-பாவச் செயல்களைச் செய்கின்றவர்கட்கும், வரம் தந்து காக்கும்-(அவர் பாவங்களை நீக்கிச்) சிறந்த வீடு பேற்றை யளித்து (பிறவிக் கட

லில் வீழாது) தடுத் தாட்கொண் டருளும், மதுரை-மதுரை மா நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, மீந அக்ஷி அம்பிகையே-அம் கயல் கண்ணி அன்னையே, அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கும் - புருஷார்த்தங்கள் நான்கினையும், அடை வுடன் -அடைவதற்கு ஆன திறம் படும் உடம்பை-முறை யாக அடைதற்கு (கருவி) ஆகிய வலியும் பிணி யின்மையு முடைய உடலை, செய்த நல் தவத்தால் சேர்ந் தும் - (முற் பிறப்பிற்) செய்த சிறந்த தபோ பலத்தால் அடைந்தும், நல் முயல்வு இலா என்னை-(அவற்றை அடை தற் குரிய) சிறந்த முயற்சி யில்லாத அடியேற்கு, புறம்பு உள ஆசை தளைகளை போக்கி-(அகப் பற்றோடு) புறப் பற் றுகிய விலங்குகளை சிதைத்து, போதம் உண்டாவதற்கு அருள்வாய்-மெய் உணர்வு உண்டாகும் பொருட்டு அநுக் கிரகஞ் செய்வாய் (எ-று)

(வி-ரை) அறம் - (இன்னது செய்யத் தக்கது என நூல்களினல்) வரை யறுக்கப்பட்டது. அறு-பகுதி, அம்-செயப்படு பொருள் விகுதி. இதற்கு எதிர் மொழி மறம். இதனை, "அறஞ் செய விரும்பு" என்னும் பிராட்டியார் வாக்கான் உணர்க, அவ் வறம் - ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூ வகைப்படும், அவற்றுள், ஈண்டு மக்கள் உயிர்க்கு நன்மை தருஞ் சிறப் புடைய ஒழுக்கமே கொள்க. பொருள் ஆவது:—தன் அநுபவத்தால் இம்மைப் பயனையும், தாநம் முதலியவற்றால் மறுமைப் பயனையும் கூட்டுவது. இன்பம் ஆவது:— ஒரு காலத்து ஒரு பொரு ளான் ஐம் புலனும் நுகர்தற் சிறப் புடைத் தாய காமம் ஆகிய இன்பம். வீடு:— அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ பேறு. இவற்றுள், அறம் இம்மை மறுமை வீ டென்னும் மூன்றையுந் தருதலாலும், பொருள், இம்மை, மறுமை, என்னும், இரண்டையுந் தருதலாலும், இன்பம் இம்மை ஒன்றே தருதலாலும், அவற்றின் சிறப்பும், சிறப் பின்மையும் நோக்கி, அறம், முதலிலும், அதன் பின் பொருளும், அதன் பின் இன்பமும் வைக்கப்

பெற்றன. இவற்றுள் இரண்டாவ தாகிய பொருள், முதல தான அறத்திற்கும், மூன்றாவ தான இன்பத்திற்கும் காரண மாதல் பற்றிச் சிங்க நோக் காக அவ் விரண்டன் இடையில் நிறுத்தப் பெற்ற தென்க வீடு, சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், முடிந்த பயனு மென் றுணர்க

"அற்றது பற்றெனில் உற்றது வீடு", "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று, நிலையாமை காணப் ப டும்., (349 திருக் குறள் 35-9) என்பன பெரியார், திரு வாய் மொழியாகலான், "புறம்புள ஆசைத் தளைகளைப் போக்கி" என்றும், "பாவியே னுடைய ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி யுலப்பிலா வா நந்த மாய, தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த செல்வமே." (திரு வாசகம் பிடித்த பத்து 9) எனப் பெரியார் பணித்தமையான், "மறஞ் செயு மவர்க்கும் வரந் தந்து காக்கு." மென்றும் கூறினர்.

நான்கும் - உம்மை, இனைத் தென் றறி பொருளில் வந்தது. வீடு-முத னிலை திரிந்த தொழிற் பெய ராய் விடுத லோடு பே ரின்பப் பெறுதிக்கு மானமையின், விடாத ஆகு பெயர். அன்றி, 'வீடு' என்பது, விடுதலையும், தங்கு தலையும், உணர்த்தலின், அநர்த்த நிவிர்த்தி ஆநந்த பிராப் தியை யுணர்த்து முதல் நிலை திரிந்த தொழி லியற் பெய ரெனினு மமையும்.

"மறஞ் செயு மவர்க்கும்"-உம்மை இழிவு சிறப்பு. 6

7. **சென்மமீ துயர்ந்த கருமத்தால் ஆன**
**திறமறி வதற்குணர் விறையும்,**
**இன்மையின் விலங்கை ஒத்தனன் மிகவும்**
**ஏற்றமாம் உடலினைப் பெற்று,**
**நன்னலம் அடைய முயன்றிலேன் முயல**
**நங்கையர் அமுதென மயக்கும்,**
**மன்மத பாணந் தொலைவதற் கருள்வாய்**
**மதுரைமீ நாக்ஷியம் பிகையே**

(இ-ள்) மதுரை - மதுரை மா நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, மீந அக்ஷி அம்பிகையே-அம் கயல் கண்ணி அன்னையே. ஈது சென்மம்-(கிடைத்தற் கரிய) இம் மாநுடப் பிறவி, உயர்ந்த கருமத்தால் ஆன - (முற் பிறவிகளிற் செய் துள்ள) மேம்பட்ட தவத்தால் உண்டான, திறம் அறிவதற்கு - தன்மையை அறிவதற் குரிய, உணர்வு இறையும் இம்மையின்-அறிவு சிறிதும் இல்லாமையால், விலங்கை ஒத்தனன் - மிருகத்தை ஒத்தவன் ஆயினேன், மிகவும் ஏற்றம் ஆம் உடலினைப் பெற்றும்-மிக்க மேம்பட்ட இம் மாநுட உடலைப் பெற்றும், நல் நலம் அடைய-(இதனைக் கருவி யாகக் கொண்டு) நன்மை யாகிய பேரின்பம் அடைதற்கு, முயன்றிலேன்-முயற்சித்தேன் அல்லேன், முயல-(அவ் இன்பத்தை அடைய) முயலுகையில் (இடையில் வந்து), நங்கையர்-மடவாரை, அமுது என மயக்கும் - அமுதம் என்று (கருதும்படி) மயக்குகின்ற, மன்மத பாணம் - மாரனுடைய (மலர்ப்) பாணங்கள் (ஐந்தும்), தொலைவதற்கு அருள்வாய்-(என்கண் பொருந்தாது) நீங்குதற்கு அநுக்கிரகஞ் செய்வாய். (எ-று)

(வி-ரை) மாநுட உடலின் கிடைத்தற் கருமையை, "பெறுதற் கரிய பிறப்பீது." என்றும், "எண்ணரிய பிறவி தனின் மாநுடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" என்றும் வருவனவற்றானும், முற் செய் தவத்தால் இப் பிறவி எய்தும் என்பதை, "கிழியாமியற் றுயர்தவத் திவ்வுடல் கிடைத்ததன்றோ." என்னும்.(வைராக்கிய சதகம் 1) வாக்கியத்தானும். மாநுட வுடல் பேரின்பம் அடைவதற்குக் கருவி யாக வுள்ளது என்பதை,

"மடல்வி ரிந்தம ரைமலர் வைகுவோன்,
சடம னைத்தையும் தந்தும்உ வந்திலன்,
இடர்அ றுக்குமென் றெண்ணிநன் மானுட,
உடல்ப டைத்தபின் ஓகையுற் றனரோ."

என்னும் (பாகவதம்) திருப் பாட்டானும் ஓர்ந் துணர்ந்து கொள்க.

வீட்டு நெறி செல்வார்க்கு மடவார் ஆசை தடை யாக வுள்ள தென்பதனை, "அரவகல் அல்கு லார்பால் ஆசைநீத் தவர்க்கே வீடு, தருவமென் றளவில் வேதம் சாற்றிய தலைவன் றன்னை." என்றும், "மகளிரெ னுந்த வாத வலிய சுழியது" (24) சசி வந்த போதம், என்றும் வருவனவற்றா னுணர்க. மன்மத பாணம், இவை என்ப தும், அவற்றின் செயல்களும், வரு மாறு:—

> "நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ,
> அனைத்துணவு நீக்கும் அசோகு—வநத்திலுறு,
> முல்லை இடைகாட்டும் முழுநீல மாதே,
> கொல்லுமத னம்பின்கு ணம்."

'நன் னலம்' என்ற தீண்டு, அநர்த்தநிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ வீடு, நலங்க ளெல்லாவற்றுள்ளும் அதுவே சிறந்த நல மாக முடிதலின் என்க. 7

8. **குதிரைகொண் டிடவன் றடைந்துடல் ஆதி**
**கொடுத்தவன் போற்கொடுப் பவர்க்கும்,**
**இதுவுமத் தகைத்தென் றுடல்பொருள் ஆதி**
**ஈயுமென் றனக்குநன் கருள்வாய்,**
**பொதுமையுற் றிவணோர் மாறுடன் ஆகி**
**பொலிந்தவன் மனைவியாய் விளங்கி,**
**மதுரைமா நகரின் ஆக்ஷிகைக் கொடுத்த**
**மதுரைமீ நாக்ஷியம் பிகையே.**

(இ-ள்) இவண் ஓர் மாறுடன் ஆகி-இப் புவியின் சுந்தர பாண்டிய னாகி வந்து, பொதுமை யுற்றுப் பொலிந் தவன்-நடு நிலைமையோடு (செங்கோல் ஆட்சி செய்து) விளங்கியவ னுடைய, மனைவி ஆய் விளங்கி-இல்லாள் ஆக விளக்கம் உற்று, மா மதுரை நகரின் ஆக்ஷி கை கொடுத்த-மதுரை மா நகரின் ஆட்சியை (அப் பெருமான்) திருக் கரத் தளித்த, மதுரை மீந அக்ஷி அம்பிகையே- மதுரையில் எழுந்தருளி யிருக்கின்ற, அம் கயல் கண்ணி அன்னையே, அன்று குதிரை கொண்டிட - அந் நாளில்

குதிரைகள் வாங்கும் பொருட்டு, அடைந்து (திருப் பெருந் துறையை) அடைந்து, உடல் ஆதி கொடுத்தவன் போல் கொடுப்பவர்க்கும் - (சீவ போதம் இழந்து சிவ போத மேலீட்டால்) உடல் பொருள் ஆவி மூன்றையும் (ஞானா சார்யனுக்குத்) தத்தம் செய்து கொடுத்த வாதவூர் அடி களைப் போன்று கொடுக்கும் மெய் அடியார்கட்கும், இதுவும் அத் தகைத்து என்று-இதுவும்(அம் மெய் அடி யார்) கொடுத்ததை யொத்ததே என்று எண்ணி, உடல் பொருள் ஆதி-உடல் பொரு ளாவி என்னும் மூன்றினையும், ஈயும் என் தனக்கும்-கொடுக்கும் அடியேற்கும், நன்கு அருள்வாய்-(வீட்டை) அநுக்கிரகஞ் செய்வாய். (எ று)

(வி-ரை) குதிரை கொண்டிட அடைந்த வரல் ஆறு:- அரிமர்த்தந பாண்டிய னிடம் மந்திரியாய் இருந்த வாதவூர் அடிகள், குதிரை வாங்கும் பொருட்டு, அவன் கொடுத்த பொருளைத் திருப் பெருந் துறையில் பரம சிவன் தந்த காட்சியைத் தரிசித்து உண்டான அன்பின் மிகுதியால் அச் சிவத் தொண்டில் அப் பொருள் முழுதும் செலவிட் டனர் என்ப தாம்.

வாதவூர் அடிகள் முற்றத் துறந்த முனிவ ராய், வினை ஒப்பு மல பரிபாகம் பெற்றோ ராய்த், தற் போத மிழந்த தலைவ ராய், ஞானாசார்ய னாகிய இறைவனுக்கு உடல் பொரு ளாவி மூன்றனையும் கொடுத்தமையை:— "அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லா மும், குன்றே யனையாய் என்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ." என்னும் (திரு வாசகம் உயிர் உண்ணி 7) திரு வாக்கா னுணர்க.

"கொடுத்த" என்று உரைப்பினும் அமையும் ஆயினும், சொல்லையும் பொருளையும் போன்று, ஒற்றித்து நிற்பவ ராகிய, இறைவி கொடுத்தற்கும், இறைவன் வாங் கற்கும், உரிமை யுடையர் என்பது தோன்ற, "கைக் கொடுத்த" என்றார்.

"கொடுப்பவர்க்கும்" "என் தனக்கும்" என்ற விடத்துள்ள உம்மைகள், முறையே, உயர்வையும், இழிவையும், சிறப்பிக்க வந்தன. "ஈயும்" என்பதில், 'ஈ' என் பகுதி, ஈண்டு இழிவி னேக்க மின்றிப் பொது வாக வழங்கன்மே னின்றது. 8

9. புதுமைதான் தாங்கச் சமணரை வென்று
பொலிவுடன் துலங்குசம் பந்தர்,
சதுர்மறை முடிவின் பொருளினை உரைக்கத்
தந்தனை அருளெனிற் புகழோ,
இதுநல்ல தருணம் என்றுனை அடைந்தேற்
கீயினன் றேபுகழ் ஆகும்,
மதுமலர்த் தாம நறவநீர் பாயு
மதுரைமீ னாக்ஷியம் பிகையே.

(இ-ள்) மது நறவ நீர் பாயும் மலர் தாமம்-மகரந்தம் பொருந்திய, தேன் ஒழுகும் மலர்களால் ஆகிய மாலை அணிந்த, மதுரை-மதுரையின்கண் எழுந்தருளியிருக்கின்ற, மீந அக்ஷி அம்பிகையே-அம் கயல் கண்ணி அன்னையே, புதுமை தான் தாங்க-அதிசயம் பொருந்த, சமணரை வென்று-சமணர்களை (வாதில்) வெற்றி கொண்டு, பொலிவுடன் துலங்கும்-(சிவ ஞானப்) பொலிவோடு விளங்குகின்ற, சம்பந்தர் - (திரு ஞான) சம்பந்த நாயனர், சதுர் மறை முடிவின் பொருளினை - (இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும்) நான்கு வேதங்களின் முடிவாய் உள்ள உபநிடதப் பொருளை, உரைக்க அருள் தந்தனை எனில் புகழோ-(தமிழ் மறையாகத்) திரு வாய் மலர்ந்தருள, திரு அருளைக் கொடுத்தாய், என்று கூறுமிடத்து (நினக்குப்) புகழ் உளதோ, இது நல்ல தருணம் என்று-(மாநுட உடலோடு வாழும்) இக் காலமே (தேவரீரை அடைவதற் குரித் தாகிய) நல்ல காலம் என்று கருதி, உனை அடைந்தேற்கு-நின்னை(பற்றுக்கோ டாக) அடைந்த அடியேற்கு, ஈயின் அன்றே புகழ் ஆகும்-அத் (திரு அருளை)அநுக்கிரகஞ் செய்தா லன்றே (நினக்குப்) புகழ் உள தாகும். (எ-று.)

(வி-ரை) ஞான சம்பந்தர், பாண்டி மா தேவியின் அழைப்பிற் கிணங்கி, மதுரை மா நகர் அடைந்து, பாண்டியற் குற்ற வெப்பு நோயைத் தளிர்த்து, அண்டிருந்த போது, சமணர்கள் பிள்ளையாரை வாதுக் கழைக்க, சைவ சமயக் கருத்தை ஏட்டிலே, தீட்டி, நெருப்பிலும், நீரிலும், இட, அவை வேவாமலும், எதிர் ஏறியும், சமணர்களை தோல்வி யடையச் செய்தமையால், "புதுமை தாங்கச் சமணரை வென்று" என்றார்.

பிள்ளையார் தம் மூன்றும் ஆண்டிலே, சீர் காழித் தீர்த்தக் கரையில் திருத் தோணிச் சிகரத்தைப் பார்த்து, "அம்மே அப்பா" என்று தம் முடைய புனித வாய் மலர்ந்து அழ, தோணி யப்பர் அருள் செய்யத் திரு உளங் கொண்டு, அம்மையாரோடு, இடபத்தில் எழுந்தருளத் தேவியார் திரு முலைப் பாலைப் பொன் வள்ளத்திலே கறந்து, சிவ ஞானத்தை அதிற் குழைத்துக் கையிற் கொடுத்துக் கண் ணீரைத் துடைத்து, ஊட்டி யருளினர் என்பது வர லாறுகையால், முற் பிறப்பின் வாதனையால் மூன்றும் ஆண்டிலேயே அம்மை யப்பரை நினைந்து, திரு அருள் பெற அழுதமையால், சிவ ஞானப் பால் ஊட்டித் தமிழ் மறை பாடுவித்தது முறைமையே ஆகும். அதனால், "புகழ் இல்லை" என்றும், "முற் பிறப்பின் வாதனை யின்றி ஆண்டு கள் பலவற்றை வீணுகக் கழித்துத் திரு அருள் பெறுந் தகுதி யின்றி வந் தடைந்த தன்னை, இரும்பைப் பொன் னுக்குவது போன்று பரிபாக மாக்கித் திரு அருள் அளிக் கின் புகழ் உளது." என்றும் கூறினார் அதுவும் அன்றிப், பிள்ளையாருக்குத் திரு அரு ளளித்தது செய்தற்கு எளிய செயல் என்றும், அதனால் புகழ் இல்லை என்றும், தனக் குத் திரு அருள் அளிக்கின் செயற்கு அரிய செயல் என்றும், அதனால் புகழ் உளது என்றும் கூறினார் எனினும் அமையும். "மது" என்பது ஈண்டு இலக்கணை யாகப் பரா கத்தை உணர்த்துகின்றது. 9

10. முன்னர்நான் மறைகள் முழங்கிடும் பொருளாய்
முத்திறத் தாபமு நீங்க,
மன்னிய யானு மறதியைப் பெற்றே
மயலுரு திருக்குமா றருள்வாய்,
செந்நெலும் கமுகும் கதலியும் திகழும்
தென்னவர் தலைவியாய்ப் பாண்டி,
மன்னர்கள் சூழ வீற்றிருந் தருளு
மதுரைமீ னாக்ஷியம் பிகையே.

(இ-ள்) செம்நெல்லும் கமுகும் கதலியும் திகழும் மதுரை - செந் நெற் பயிர்களும் கமுகுகளும் வாழைகளும் (நிறைந்த கழனிகளும் சோலைகளும்) விளங்குகின்ற மதுரையின்கண், தென்னவர் தலைவியாய் பாண்டி மன்னர்கள் சூழ - பாண்டியர்கட்குத் தலைவியாய்ப் பாண்டி மன்னர்கள் (தன்னைச்) சூழ்ந்திருக்க, வீற்றிருந்து அருளும் - (பெருமையோ) டெழுந்தருளியிருந் தரசாளும், மீந அக்ஷி அம்பிகையே - அம் கயல் கண்ணி அன்னையே. முத் திறத் தாபமும் நீங்க - மூ வகையான் வரும் துன்பங்களும் நீங்கும் பொருட்டு, மன்னிய யானும் - (நின் திரு அடியைப் பற்றுக்கோ டாக) அடைந்த அடியேனும், மறதியைப் பெற்று - (எனது பரமார்த்த வடிவத்தை) மறந்து, மயல் உருது - (ஐ வகைப்) பிராந்தியும் அடையாது, முன்னர் நான் மறைகள் முழங்கிடும் பொரு ளாய் - மேம்பட்ட (இருக்காதி) வேதங்கள் நான்கும் முடிந்த பொரு ளாகப் பேசுகின்ற பிரம்ம வஸ்து வாய், இருக்கும் ஆறு அருள்வாய் - இருத்த வண்ணமே இருந்திட அநுக்கிரகஞ் செவ்வாய், எ-று.

(வி-ரை) மூ வகையான் வரும் துன்பங்க ளாவன:- 1. தன்னைப் பற்றி வருவன:- உடலைப் பற்றி வரும் தலை நோய் முதலியனவும், உளத்தைப் பற்றிய காமம், கோபம், முதலியனவும். இவை ஆதி யாத்மீகம் எனப்படும். 2. பிற வுயிர்களைப் பற்றி வருவன:- மனிதர் விலங்கு பிசாசு முதலியவற்றால் வருபவை. இவை ஆதி பௌதிகம் எனப்

படும். 3. தெய்வத்தைப் பற்றி வருவன :- காற்று, மழை, இடி வெயில் முதலியவற்றால் வருபவை. இவை ஆதி தைவீகம் எனப்படும். இவற்றை வட நூலார் தாபத்திரயம் என்பர். ஐவகைப் பிராந்தியினையும் அடியில் வருமா றுணர்ந்து கொள்க:-

"நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையும், சத்தியம் இந்தச் சகமெனல் கருவி தணந்திடா துடலைநான் னென்னல், கத்தபோத்தாவும் தானெனல் தானும் கடவுளும் வேறெனக் கருதல், சித்துரு வாகி யிருந்தும்நான் ஆகேன் சிவனெனல் சிதடர்பால் அறியே." (சிவ ஞான வள்ளலார் அதி ரகஸியம்)

"ஏகமேவாத்துவிதீயம் பிரம்மம்" என்ற சுருதி வாக்கியங் கொண்டு, "நான் மறைகள் முழங்கிடும் பொருள்." என்றும், ' தத்துவ மசி " என்னும் சுருதி வாக்கியங் கொண்டு, "பொருளா யிருக்கும் ஆறு அருள்வாய் " என்றும் கூறினர்.

" பாண்டி மன்னர்கள் சூழ" என்பதற்கு, பாண்டிய நாட்டி லுள்ள குறுநில மன்னர் பலரும், பாண்டிய மன்னர் மரபிற் றோன்றிய அரச குடும்பத்தினர் பலருஞ் சூழ எனப் பொருள் உரைக்க. அங்ஙன மின்றி, அதற்கு பாண்டியில், திறை யளக்க வந்த, மற்றைய சேர சோழர் முதலிய பிற நாட்டு மன்னர்கள் சூழ்ந்து நிற்க என வுரைத்தல் பெருமைக் கேற்கு மாதலின், அங்ஙனம் முரைப்பினும் அமையும். 10

மதுரை - மீநாக்ஷி அம்பிகை தோத்திரமும்
பரிமள தீப உரையும் முற்றுப் பெற்றது.



தியாகமே இராஜசமாம். இந்தத் தியாகத்தாலே தியாக பலத்தை அவன் ஒருகாலும் அடையான்.

ஏ கௌந்தேய! முன் மொழிந்த மோகம் இல்லாவிடினும் மனத்தூய்மையை மருவாத கரும அதிகாரி சருவ நித்திய கருமங்களும் துக்கரூபமேயென்று நினைந்து அவற்றைச் செய்தலா லுண்டாகும் சரீரக் கிலேசத்தின் பயத்தாலே அவற்றை விட்டுவிடுதல் இராஜசத் தியாகமாம். அந்தத் துக்கம் இரஜோகுண ரூபமேயாம். மோகமில்லாவிடினும் இராஜசத் தியாகத்தாலே பயன் அடைய முடியாதாம். சாத்விகத் தியாகத்தின் ஞானநிஷ்டா ரூபமாகிய பயனை இராஜசத் தியாகி யடைவான்.

[முன்னிரண்டு சுலோகங்களாலே நித்திய கருமங்களின் இராஜச தாமத் தியாகங்களை விடவேண்டுமென்றருள, ஆயின் எக்கருமத் தியாகத்தை யதிகாரி யங்கீகரிக்க வேண்டும் என்று தெரிந்துகொள்ளும் விருப்பம் அர்ச்சுனனுக் குண்டாகியபோது சாத்விகத் தியாகமே கொள்ளத் தக்கதாம் என்று ஸ்ரீ பகவான் அதன் வடிவத்தை யருளுகிறார்.]

ஏ விஜய! இக்கருமம் செய்யத் தக்கதேயாம் என்றெண்ணி நித்தியகரும சங்கத்தையும் பலத்தையும் தியாகஞ் செய்வது சாத்விகத் தியாகமென்று பெரியோரால் அங்கீகரிக்கப்பெறும்.

ஏ பார்த்த! நித்திய கருமங்களை விதிக்கும் வாக்கியங்களில் அவற்றின் பயனைச் சொல்லாவிடினும் வேதவிதியாதலின் நித்திய கருமங்கள் அவசியம் செய்யத் தக்கவை என்று நிச்சயித்து, யான் செய்கிறேன் என்னும் அபிமானத்தையும், சுவர்க்காதி பலத்தையும் விட்டுச் சித்த சுத்தியுண்டாம் பரியந்தம் அவற்றைச் செய்தலாகிய தியாகத்தை

லானும், பொன்னின் மாற் றறிய உறை கல் வேண்டப்படு தல் போன்றுத் தாம் வெல்லு மாற்ற லுடையரா யிருந்தும் தம்மின் உயர்ந்தார் மாட்டு ஏற்றுக் கொள்ளும் பணிவை இழிந்தார்மாட்டு மேற்றுக்கோடல், சால்பின் மாற் றறியும் உறை கல் லாகிய செய லாகலானும், இன்னாதன செய் தார்க்கும் இனியன செய்தலே சான்றாண்மையின் பய னாக லானும், இன்னாதன செய்த நண்ணார் வெட்கித் தலை குனி யும் வண்ணம் அவர்க் கினியன செய்து, தாம் செய்த இனியவற்றையும், அவர் செய்த இன்னாதவற்றையும் உடன் மறத்தலே அவரை யொறுத்த லாகு மாதலானும். நண்பர், நொதுமல ராகியோரிடத்துச் சான் றாண்மை செல்லுதல் எளிதா யிருக்க, நண்ணாதாரிடஞ் செல்லுத லரிதாகலானும் "நண்ணாதவரும் நலம் பெறக் கருதும் நன்மையின் நற் கருத் தின்றி" எனவும்; சான்றாண்மைக் கெதிர் மறையாய தீய வெண்ணங்களை மனத்தா னெண் ணுங் கால் அவ் வழியே வாக்குக் காயங்களால் தீய சொற் களையும் செயல்களையும். சொல்லுதலும் செய்தலு மாகிய விரண்டும் நிகழு மாகலின். அவற்றால் துன்பக் கூறுபாடு களைத் தொடர்ந்து நுகர வேண்டுமாதலின், "என்னா தெணியே இளைப் புறும்" என்றும், பிறர்க் கின்னா செய்தலாற் பாவமும், அதனால் பிறர் கூறும் வசை மொழி யாகிய பழியும், உளவா மாகையால், "பண்ணிய பழி பாவங்களை" என் றும்; அவற்றைத் தன் கடைக்க ணோக்கா லொழிக்குங் கருணை நற் றாயாக லின், "கெடுத்து" என்றும்; கல்வி, செல்வம், ஞான மாகிய மூன்றனையும் முறையே, கலைமகள், அலைமகள், மலைமகள் வடிவங்களா யிருந் துதவலின், 'பத்தருக் கினிதிருந் தரு ளும்" என்றும் கூறினார். பழி பாவங்களுள் முதலில் வெளிப்படுவது 'பழி' யாதலின் 'பாவம் பழி' என்னாது 'பழி பாவம்' என்றனர், இவற்றை, "அன்புநா ணொப்புர வு கண்ணோட்டம் வாய்மையொ, டைந்துசால் பூன்றிய தூண்" (99-3) எனவும்; "சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி, துலையல்லார் கண்ணுங் கொ ளல்." (99-6) என

வும், "இன்னு செய்தார்க்கு மினியவே செய்யாக்கா, லென்னபய யத்தவோ சால்பு." (99-7) எனவும், "இன்னு செய் தாரையொ றுத்தலவர் நாண, நன்னயஞ் செய்துவி டல்." (32-4) எனவும் வரும் பொய்யா மொழிகளானும்; "எண்ணுத வெண்ணமெல்லா மெண்ணியெண்ணி யேழை நெஞ்சம், பூண்ணுகச் செய்ததினிப் போதும்ப ராபரமே." (பராபரக் கண்ணி 35) என்னுந் தாயுமானுர் திரு வாக்கா னும் உணர்க. "எண்ணுத வெணி" என்பது அகரந் தொக்கு, "எண்ணுதெணி" என நின்று குறிப்பால் தீய எண்ணங்களை யெண்ணி எனப் பொருள்படுமாறு கண்டு கொள்க. அருளும் உண்ணு முலை, யெனக் கூட்டிக் காண்க 1

2. விண்ணேர் போற்ற வீற்றிருந் தருளும்
விமலனற் பாரியா விளங்கித்,
தண்ணுர் குமரன் கணபதி யெனுஞ்சீர்த்
தநயரை யீன்றதன் மையினுன்.
மண்ணேர் எவரும் வந்தடி பணிய
வரந்தரு கருணையோ டிலங்கும்,
அண்ணல்சீர் அண்ணு மலையுண்ணு முலையின்
அடிகளை யநுதினம் பணிவாம்.

(இ-ள்) விண்ணேர் போற்ற - திருமால் முதலிய தேவர்களனைவருந் துதிக்க, வீற்றிருந் தருளும் விமலன்-தலைவனு யெழுந்தருளி யிருக்குஞ் சிவ பெருமா னுடைய, நல் பாரி ஆ(க) விளங்கி ஒப்பற்ற தலைவி யாக விளங்கி, தண் ஆர் குமரன் கணபதி எனும்-அருள் நிரம்பிய குமர வேளும் விநாயகனும் எனச் சொல்லப்படுகின்ற, சீர் தநயரை ஈன்றதன்மையினுல் - சிறப்புப் பொருந்திய புதல்வ ரைப் பெற்ற காரணத்தால், மண்ணேர் எவரும் வந்து அடி பணிய - மக்களனைவரும் வந்து திருவடிகளை வணங்க வரம் தரு கருணையோடு இலங்கும்-(அவர்கட்கு) வேண்டிய வரங்களை ஈந்தருளுங் கருணையோடு விளங்கு கின்ற, அண்ணல் சீர் அண்ணுமலை உண்ணு முலையின்-

திரு அண்ணாமலையில் எழுந்தருளி இருக்கின்ற உண்ணா முலை அன்னையாரின், அடிகளை அநுதினம் பணிவாம்-திரு வடித் தாமரைகளை நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) நிவிர்த்தி கலை, பிரதிட்டா கலை, வித்தியா கலை, சாந்தி கலை, சாந்தியதீத கலை என்னும் ஐ வகைக் கலைகளில் அடங்கிய ஐ வகைச் சங்காரத்துள், ஈண்டைக் கேற்புடையது இறுதிக்கண்ணதாகலின், ஈண்டு விமலன், என்றது சுத்த மாயா புவனாந்தஞ் சங்கரிக்குஞ் சங்கார காரணனாகிய பரமசிவனை யாகலானும், அயன் மாலொடுங் கூடக் குண தத்துவத்திற் பொருந்திப் பிரகிருதி புவனாந் தஞ் சங்கரிக்குஞ் குணி ருத்திரனை யன்றாகலானும், இம் மகா ருத்திரனாகிய விமலன் இலய போக வதிகார மென்று மூன்றவத்தையினும் முறையே அருவம், உருவம், அரு வுருவம், என்னும் மூன்று திரு மேனி கொண்டு, சிவன், சதா சிவன், மகேசன், எனப் பெயர் பெற்று நிற்பனாகை யாலும், இங்ஙனம் தொழிலான் வேறுபட்ட தன்றிப் பொருளான் வேறுபா டில்லை யாகலானும், அயன் மா லிருவருக்கு மேலாய் அவரால் வழிபடு கடவுளாயினு ராகலானும், திரு வருட் சத்தி சத்தனுக் கன்னிய மின்மை யின் அச் சத்தியே இங்ஙனம் காரிய வேறுபாட்டால் மேற் கூறிய ஐந்து பேத மாயிற் றாகலானும், "விண்ணோர் போற்ற வீற்றிருந்தருளும் விமலன் நற் பாரியா விளங்கி" எனக் கூறினார். இவற்றை, "தேவ ராயு மசுர ராயுஞ் சித்தர்செ ழுமறைசேர், நாவ ராயு நண்ணு பாரும் விண் ணெரிகா லீரு, மேவ ராய விரைம லரோன் செங்கண் மாலீ சனென்னு, மூவ ராய முதலொ ருவன்மே யதுமுது குன்றன்றே," என வரும் திரு ஞான சம்பந்தர் திரு வாக் கானும், "மூவரு ருத்தனதா மூலமு தற்கருவை." என வரும் சுந்தர மூர்த்திகள் திரு வாக்கானும், "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும் பொழில்கள் பயந்துகாத் தழித்து மற்றை, மூவர்கோ னாய்நின்ற முதல்வன்" (திருச்

சதகம் 30) என வரும் மணி வாசகத்தானும், "அரியாகிக் காப்பா னயனுய்ப் படைப்பான், அரனு யழிப்பவனுந் தானே" என வருந் திருக் கைலாய ஞாந வுலாவாலும், "தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்ற தோரார்" என வருஞ் சிவ ஞாந சித்தியா ராலும், "வீரன யனரி—யாருமறியாவகை யெங்க ளீசர் பரிசுகளே." என வரும் பொன் வண்ணத் தந்தாதியாலும் கண்டு கொள்க. ஒருவனேடு வாழ்க்கைப்பட்டுத் தநயரை யீன்ற தாய்மார்க்கே பிற மகாரிடத்து மருள் பிறக்கு மாதலின், 'பாரியாய் விளங்கி...... தநயனை யீன்ற தன்மை யினுல்" வரந்தரு கருணையோ டிலங்கும்" என்றனர். "விமல னற் பாரியா விளங்கி" எனவும், "தனயரை ஈன்ற தன்மையினுல்" எனவும். "கருணையோ டிலங்கும்" எனவும் கூறியதனுல், முறையே ஐந் தொழிற்கும் திருவருட் சத்தி வேண்டப்படு மென்பதும், அச் சத்திக் குறு துணை யாக வுள்ளார் பிள்ளையார் இருவரும் என்பதும், தந்தை யன்பினுந் தா யன்பு சிறந்த தென்பதும் பெற்ரும். 2

3. எண்ணுருதடியேன் இயற்றிடு பாவம்
இகந்திட அருடரு மனையாப்,
பண்ணுறு பாவாற் பதந்தினம் பரவும்
பான்மையை எண்ணியுள் உவந்து,
தண்ணுறு மதிகு டியபெரு மான்தன்
தலைவியா இடமமர்ந் துயர்ந்த,
அண்ணல்சீர் அண்ணு மலையுண்ணு முலையின்
அடிகளை அநுதிநம் பணிவாம்.

(இ-ள்) எண்ணுருது அடியேன் இயற்றிடு பாவம்-(முன்) ஆராயாது அடியேன் செய்துள்ள தீவினைகள், இகந்திட அருள் தரும் அனையாய்-நீங்கிடத் திருவருள் பாலிக்கும் அன்னையாய், பண்ணுறு பாவால் பதம் திநம் பரவும்-இசை பொருந்திய பாக்களினுல் திருவடிகளை நாடோறும் துதிக்கின்ற, பான்மையை எண்ணி உள் உவந்து-தன்

மையை நினைந்து மாமகிழ்ந்து. தண் ஊறு மதி சூடிய பெருமான் தன்-குளிர்ச்சி பொருந்திய சந்திரனை யணிந்த சிவ பெருமானுடைய, தலைவி ஆ(க) இடம் அமர்ந்து உயர்ந்த - தலைவி யாக இடப் பாகத் திருந்து உயர்ச்சி யுடைய, அண்ணல் சீர் அண்ணுமலை உண்ணு முலையின்-இறைவன் வடிவ மாகிய திரு வண்ணுமலையி லெழுந்தருளி யுள்ள உண்ணு முலை அன்னை யாரின், அடிகளை அநுதினம் பணிவாம்-திரு வடித் தாமரைகளை நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) நுண்ணிய பொருள்களை யுணர்த்தும் நூல் பலவற்றையுங் கற்றுப் பெருகிய செயற்கை யறிவைப் பேதைப் படுக்கும் போகூழானது, பின் விரங்குதற் காக்கிச் செயலுக்குத் தான் முற்படு மாதலாலும், ஊழ் மாறு கொள்ளா வழியே அறிவு, கற்ற அனைத்து மூறு மாகலாலும், கண்ணினுட் கிடந்த அஞ்சனம் அதற்குப் பயன் கொடாதது போல, ஆசை மிக்க விடத்து ஆபத்திற்குத் துணை யென்று கற்ற கல்வியும் பிறர் குற்றம் நீக்குதற் குதவுத லின்றித் தன் குற்றம் நீக்குதற் குதவா தொழிதலாலும், பகைவர் தாம் அறிந்த தொன்றனைக் காலம் பார்த்திருந்து செய்வ தல்லது, வறுமை, பழி, பாவம் முதலிய வற்றை எக் . காலத்தும் செய்யமாட்டாரா யிருக்கச், செயற்கை அறிவு பயன்படாவிடத்துத் தாமே தம்மை வருத்தும் வருத்தத்தை யாக்கிக்கோடலாலும், "எண்ணுதடியே னியற்றிடு பாவம்." என்றும், அறியாக் குழவி பொல்லாதன செய்ய அதனைத் தாய் ஒரோவழி முனிந்து தண்டித்தாலும், புக லிடம் வே றின்றி யவளையேயக் குழவி பற்ற, அதனால் மகிழ்ந்து முனி வடங்கி யணைத்தல் போல, அனைத் துயிர்க்கும் அனை யாகிய இறைவியும் அநுக்கிரக சத்தியாகலின், உயிர்களின் பாவ மகற்றி அவற்றிற் கருளுதல் அவட் கியல் பாகலின், "பாவம் இகந்திட அருள் தரும் அனையாய்" என்றும், அவ் வரு ளியல்பும், துயரந் தாங்காதடைந்தாருக் கபயம் ஈந்து அவரை மேற் றுயர மிலராய்ச்

செய் ததற்கு அறி குறியாகத் தண் மதி சூடிய தண் ணளி யாளன் இட னமர்ந்த பெருந் தகைமையா லுளதாகலின், "தலைவியா விட மமர்ந் துயர்ந்த." என்றும், குணியின் கண் ணுள்ள குணத்தை யெடுத்துப் பரவுதல், துதிக் கிலக் கண மாகலின், இறைவியின் கல்யாண குணங்களை யெடுத்துத் துதிக்குந் தோறும், காமுகர்க்கு இள மங்கையர் கொஞ்சிக் கூறும் சொற்க ளின்பந் தருதல் போல, அத் துதிக ளவட் கின்பந் தருதலான், "உள் ளுவந்து" என்றுங் கூறினர். இவற்றை, "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன், உண்மை யறிவே மிகும்." (ஊழ் 38-3) என்றும், "அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை, செறுவார்க்குஞ் செய்தல ரிது" (புல்லறி வாண்மை 85-3) என்றும் வரும் பொய்யா மொழியானும், "காதல் மிக்குழிக் கற்றவுங் கைகொடா, வாதல் கண்ணகத் தஞ்சநம் போலு மால்." என வரும் சீவக சிந்தா மணியானும், "பொல்லாத சேயெனிற் றய்தள்ளல் நீதமோ புகலிடம் பிறிது முண்டோ?" என வரும் தாயு மானுர் திரு வாக்கானும், "அரற்கவை விடர்க்கிளம் பாவைய ருரைபோலும்." என வரும் (49) வைராக்கிய சதகத்தானும் உணர்க. 3

4. பண்ணவர் போற்றும் பான்மையாற் பழைய
பருப்பதங் களிலுயர் வுடைத்தாய்க்,
கண்ணினுர் கார்த்தி கைமதி யதனில்
கார்த்திகைச் சோதியைக் காட்ட,
மண்ணினோர் கண்டு மனத்தினுல் நினைந்து
மாசினைப் போக்குதற் குரிய,
அண்ணல்சீர் அண்ணு மலையுண்ணு முலையின்
அடிகளை அநுதினம் பணிவாம்.

(இ-ள்) பண்ணவர் போற்றும் பான்மையால் - தேவர்கள் புகழுந் தன்மையால், பழைய பருப்பதங்களில் உயர்வு உடைத் தாய்-பழைமை யாகிய மலைகளைக் காட்டிலும் மேன்மை யுடைய தாய், கார்த்திகை மதியதனில் - கார்த்திகைத் திங்களில், கண் இன் ஆர் கார்த்திகை

சோதியை காட்ட—கண்ணிற்கு இனிமை பொருந்திய கார்த்திகை விளக்கைக் காண்பிக்க, மண்ணிரோர் கண்டு மனத்தினால் நினைந்து-உலகத்தவர் கண்டு மனத்தால் தியானித்து, மாசினை போக்குதற்கு உரிய-(தம்)அக இருளை நீக்குதற்குரிய, அண்ணல் சீர் அண்ணு மலை உண்ணு முலையின்-இறைவன் வடிவ மாகிய திரு வண்ணு மலையி லெழுந்தருளி யிருக்கின்ற உண்ணு முலை யன்னையாரின், அடிகளை அநுதினம் பணிவாம்-திரு வடித் தாமரைகளை நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) அஷ்ட குல மலைகளிற் சிறந்த மேரு மலையானது பொன் மலை யாகலானும், இந்திரன் முதலிய திக்குப் பாலர்களும், திரி மூர்த்திகளும், வசிக்குந் தானமா யிருத்தலாலும், அம் மலையினின்றும் வட திசை நோக்கிச் செல்லும் சாம்பூநத ஆற்றின் நீரைப் பருகினோர் சுவர்ண மயமாய்ப் பதின் மூ வாயிர வருடம் வாழ்வை ராகலானும், மற்றைய மலைகளும் பெருமை யுடையன வென்று புராணேதிகாசங்கள் கூறுதலாலும், இவற்றின் பெருமை எல்லாம் நினைத்த மாத்திரத்தில் வீடுபேற்றை யருளும் இறைவன் றிரு வுரு வாகிய அண்ணு மலையின் பெருமைக்கு நிகரல்ல வாகலானும், "பழைய பருப்பதங்களில் உயர்வுடைத்தாய்" என்றும், உலகத்து விளக்குக ளாகிய, சூரியன், சந்திரன், அக்கினி, முதலியன புற விருளை நீக்குமே யொழிய ஆன்மாக்களின் அக விருளை நீக்க முடியாதன வாக இருக்கத், திருக் கார்த்திகை விளக் கொன்றுமே தன்னைக் கண்டவர்க ளுடைய அக விரு ளாகிய ஆணவ முதலிய வற்றையுங் கெடுத்து, மெய்ஞ் ஞாந சோதி வடிவமா யிலகலின், "மாசினைப் போக்குதற் குரிய" என்றும், கூறினார். இவற்றை, "சேணுலா மதியந் தவழ்பெருங் குடுமிச் சிலம்புகள் சிறுதுரும் பாகத், தாணுவா யெழுந்து வளர்ந்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே." எனவும், "ஏற்றிடும் விளக்கின் வேறுபட் டகத்தி னிருளெலாந் தன்பெய ரொருகால், சாற்றினு மொழிக்கும் விளக்கெனுஞ் சோண

சைலனே கைலைநா யகனே.'' எனவும், ''கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து கண்டவ ரகத்திரு ளனைத்துஞ், சாய்த்து நின் றெழுந்து விளங்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே'' எனவும், வரும் சோண சைலமாலையா னுணர்க. இனி, மேருமலையானது தன்னிடத் தடைந்த காகத்தைப் பொன்னிற மாகச் செய்யும் அதிசயத்தை யுடைய தாயி னும். அவ்வண்ணாமலை தன்னிடத் தடைந்த எல்லாப் பொருள் களையும் பிறப் பிறப் பின்றிய தன் வண மாகச் செய்யும் அதிசய முடைமையால், அதனினும் அதிசய முடைய தென்பதூஉம் போதரும். இதனை, ''பொன்வணம் புரியுங் காகமொன் றினைப்பொற் பொருப்பென வடைபொரு ளனைத்தும், தன்வணம் புரியும் பொருப்பெனும் சோண சைலனே கைலைநா யகனே.'' என வரும் சோண சைல மாலையானும்,

''பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையும்,
மன்னுமா லிமய வரைப்புறஞ் சேர்ந்துழி,
யிருநிறப் பறவைக்கு மொருநிற னல்லதை,
நிறம்வே றுதெரிப் பதுண்டோ''

என வரும், சிதம்பர மும் மணிக் கோவையானு முணர்க. 4

5. திண்ணமார் தவத்தை இயற்றுவோர் கூட்டம்
திநந்திநம் தொழுதுநற் றுதியைப்,
பண்ணுதற் குரிய கலியுக மதனில்
பாருளார் விரும்பிய அளித்துக்,
கண்ணுறு களவைக் கனவிலுங் கருதாக்
கருத்தினை விருப்புடன் அளிகரும்,
அண்ணல்சிர் அண்ணா மலைஉண்ணா முலையின்
அடிகளை அநுதிநம் பணிவாம்.

(இ-ள்) திண்ணம் ஆர் தவத்தை - ஆற்றல் பொருந் திய தவத்தை, இயற்றுவோர் கூட்டம்-(இடையறாது) செய் கின்ற தவ முடையார் கூட்டத்தை, திநம் திநம் தொழுது

நல் துதியை-நா டோறும் வணங்கி நல்ல துதியை, பண்ணுற்று தற்கு உரிய-செய்தற்கு ஏற்ற தாகிய, கலி யுக மதனில் பார் உளார் விரும்பிய-கலி யுகத்தில் பூமியின்கண் ணுறுள்ளார் விரும்பிய பொருள்களை, அளித்து-அநுக்கிரகித்து கன்ன உறு களவை கனவிலும் கருதா கருத்தினை-(அறிவினர்) கருதுகின்ற களவை கனவிலும் நினையா மநத்தினை, விருப் புடன் அளிக்கும்-அன்போடு அநுக்கிரகிக்கின்ற, அண்ணல் சீர் அண்ணு மலை-இறைவன் வடிவாகிய திரு வண்ணு மலையில் எழுந்தருளி யிருக்கின்ற, உண்ணுமுலையின் அடிகளை-உண்ணு முலை யன்னையாரின் திரு வடித் தாமரை களை, அநு திநம் பணிவாம்-நா டோறும் (முக் கரணங் களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) மநம், பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக் கண் வெயிற்கண் ணிற்றலும், மழையினும் பனியினும் நீர் நிலைக்கண் ணிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவைகளாற் றம் உயிர்க் கெய்தும் இன்னல்களைப் பொறுத்துப் பிற வுயிர்களை யோம்புதல் தவத்திற் கிலக்கண மாகலானும், ஒன்னார் பெரிய ராயினும், உவந்தார் சிறிய ராயினும், அவர்கட்குக் கேட்டையும் ஆக்கத்தையுந்நினைந்த துணையானே செய வல்லார் அத் தவ முடையா ராகலானும், "திண்ண மார் தவத்தை." என்றும், மேற் கதி வீடு பேறு கள் தவத்தா னன்றிப் பிற வாற்ருனெய்தப்படாமையான், அதனை யுடையாரைச் சரணுகதி யடையின் அவ ருபதேசத் தான், அநித்த மாய், மூ வகைத் துன்பத்த தாய், உயிரின் வேருகிய உடற்கு வருந் துன்பங்களைப் பொருட்படுத் தாது தவத்தினைச் செய்ய, அறியாமைக் காலத்துப் பிறப் பிறப்புப் பிணி மூப்புக்களாற் ருென்று தொட்டுத் துன்பம் நுகர்ந்து வருகின்ற உயிர், ஞாநம் பிறந்து வீடுபெறு மாக லின், "கூடடங் திநங் திநங் தொழுது." என்றும், முன்னைய மூன் றுகங்களைக் காட்டிலும் கலி யுகம் பக்தி வைராக்கிய ஞாந சாதநங்களிற் குறை யுடையதாய், அவற்றிற் கெதிர்

மறைச் சாதநங்களைப் பழகுங் கால மாகலின், இக் காலத்தில் வேண்டப்படுவன துதி முதலியன வென்பார், "துதிமைப் பண்ணுதற் குரிய கலியுக" மென்றும், களவின்கண் மிக்க வேட்கை யுடையாருக்குக் காட்சி முதலிய அளவைகளான், உயிர்ப் பொருளையும், அதற் குற்ற இரு வினைக் குற்ற விளைவுகளையும், அவற்றாற் பிறந் திறந்து வருந்துதலையும், யோக ஞாந வீடுகளையும், அளந் தறிதல் கூடாமையால், "களவைக் கனவிலும் கருதாக் கருத்தினை" என்றுங் கூறினார். மக்கட்குப் போது மென்னு மெண்ணம் போதரலரிதாகலின் வேண்டியன வெல்லா மமைந்திருப்பினும் மேலு மீட்டற்குக் களவாடக் கருது மெண்ணந் தோன்றலவர்க் கியல்பாதலின், விரும்பிய வளித்தலோ டமையாது களவாடாக் கருத்தினையும் அளித்து என்பார் "விரும்பிய வளித்து...... விருப்புடனளிக்கும்" என்றனர். இவற்றை: "மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும் விளங்குமாகமவுணர்ச் சியினும், புத்தலர் கொடுகிற் பரவுபூ சையினும் பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்." என வரும் சோண சைல மாலையானும், "உற்றநோய் நோன்ற லுயிர்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு."(தவம் 27-1) என்றும், "ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும், எண்ணிற்ற வத்தான்வ ரும்" (தவம் 27-4) என்றும், "அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட், கன்றிய காதலவர்." (கள்ளாமை 29-6) என்றும் வரும் பொய்யா மொழிகளானும், "ஆக்கமுந் திறலுஞ் சீரும் ஆயவும் நலனு மேலாம், ஊக்கமும் வீடு மெல்லாந் தவத்தின தாற்ற மன்றே." (14 கய முகன் உற்பத்தி 59) என வரும் கந்த புராணத்தானும் உணர்க. "திநம் திநம்" என்றது இடைவிடாமையின் மேற்று. விரும்பியது—வினையா லணையும் பெயர். 'உரிய' 'அளிக்கும்' என்பன அண்ணுமலையோடு முடிந்தன.

6. மண்ணுளோர் வானோர் போற்றவீற் றருளும்
 மாதுமை ஊடலை அறுத்துத்,
தண்ணளி நந்தி நாயகன் உவந்த
 தலமதாய்ப் பெருமையுற் றிருக்கும்,
அண்ணினோர் கருதும் பதத்தினை எளிதின்
 அருளினாற் கொடுக்குநல் தேவி,
அண்ணல்சீர் அண்ணா மலைஉண் ணா முலையின்
 அடிகளை அநுதினம் பணிவாம்.

(இ-ள்) மண் உளோர் வானோர்-மண்ணுலகி லுள்ள அடியார்களும், திரு மாலாதி தேவர்களும், போற்ற வீற்ற ருளும் - வணங்க எழுந்தருளி யுள்ள, தண் அளி நந்தி நாயகன்-அருள் வடிவின னாகிய இறைவன், மாது உமை ஊடலை அறுத்து-தேவியின் பிணக்கத்தை நீக்கி, உவந்த தலமது ஆய் பெருமை உற்று இருக்கும்-(மாதொரு பாக னாய்த் தங்க) விரும்பிய புண்ணியத் தல மாகிப் பெருமை பொருந்தியிருக்கும், அண்ணல் சீர் அண்ணாமலை-இறைவன் வடி வாகிய திரு வண்ணாமலையின்கண் ணெழுந்தருளி யுள்ள, அண்ணினோர் கருதும் பதத்தினை-(தன்னைச்)சரணாகதி யடைந்த அடியார்கள் விரும்பிய பதவிகளை, எளிதின் அருளினால் கொடுக்கும் நல் தேவி-எளி தாகக் கருணையோ டளிக்கத் தக்க நல்ல தேவி யாகிய, உண்ணா முலையின் அடி களை அநுதினம் பணிவாம்-உண்ணாமுலை யம்மையாரின் திரு வடித் தாமரைகளை (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) நிலத்தொடு சேர்ந்த நீரும் நிலத்தின் தன் மைய தாதல் போல, மகளிரொடு கூடிய தலைவரும் அம் மகளி ரியல்பின ராவ ராகலின், அது பற்றி யத் தலைவரோடு ஊடல் நிகழ்தல் இயற்கை யாகலானும், அவ் வூடல் போல இன்பந் தருவ தொரு பொருள் தேவ ருலகினு மில்லை யாத லானும், முதிர்ந்த ஊட லாய, துனி யுண்டாய விடத்துத் துன்பம் பயத்தலானும், முதிராத ஊட லாய புலவி யுண் டாய விடத்துக் கலவி யின்பம் பயவாமையானும், இவ்

விரண்டற்கும் இடைப்பட்ட நிலைமையில் ஊடல் நிகழின் காம வின்பம் ஊட லின்ப மாகிய விரண்டு முண்டா மாக லானும், இவை யெல்லாம் மாற்ற மாங் கழிய நின்ற மறைப் பொரு ளாய அன்னை யப்பருக்குப் பரமார்த்த மாக வில்லை யாகலானும், போக மாருயிர்கள் பொருட்டுக் கற்பனை யாக அவர்கட்கு வேண்டப்பட்டன வாகை யானும், மண்ணவரும் விண்ணவரும் போற்ற நின்ற விம லன் அன்றோர்க்குப் படைத்த லாதிய வாற்ற லளித்து உலகியல் நடாத்த அருட் சத்தியின் ஆதரவை இன்றியமை யாது வேண்டி நிற்றலின், அதனைத் தன் வயப்படுத்துவான் ஆடல் செய்வான் என்பார், "மாறுமை ஊடலை அறுத்து" என்றும், கற்பக தருவும் கனலும் புனலும் ஆகிய மூன் றும் தம்மை யடைந்தவர்க்கே, வறுமையுஞ் சீதமும் தாகமு மாகியவற்றை நீக்குதல் போல, இறைவியும் தன்னைச் சரணு கதியாக வடைந்த வடியார்கள் விரும்புவனவற்றைப் பால் நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந் தளிப்ப ளாகையால், "அண்டியோர் கருதும் பதத்தினைக் கொடுக்கும்" என்றும் கூறினர். இவற்றை, "ஆதி பகவன் றனதூடல் தணிப்பான் பணிய வல்விறைவன், பாத மிறைஞ்சு மதற்குநெற்றிப் பகையு மக்குறிப் பகையுமாஞ், சீத மதியு மரவும்விழுஞ் செயற்கு முவகை செயாமலலை மாது பணியு மதற்குமாக மகிழ முறைமையை வணங்குவாம்." என வரும் பிரபு லிங்க லீலையானும், "புலத்தலிற் புத்தேணா டுண்டோநி லத்தொடு, நீரியைந் தன்னா ரகத்து." (83-3) என்றும், "ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம், கூடிமு யங்கப்பெ றின்." (183-10) என்றும் வரும் வள்ளுவர் வாக்கானும், "கற்பக மரங்கனல் புனல் மூன்றும், தனைய டைந்தவர் வறுமையும் சீதமும் தாகமுந் தவிர்த்தாளும், அனைய வீசனும் அடைந் தவர்க் கருள்செய்வ னகன்றவர்க் கருள் செய்யான்."(2-61) என வரும் கைவல்ய நவநீதத்தானும், "பேணுதா ரவர் தம்மைப் பேணுதானை" என வரும் அப்ப ரடிகளார் திரு வாக்கானும் உணர்ந்து கொள்க.

7. எண்ணரும் தவத்து யோகிகள் அமர
இருமுழை பலபல கொண்டு,
தண்ணிழல் அகலாச் சோலைசூழ்ந் தருவி
சலசலத் திழிதரத் திகழ்ந்து,
கண்ணருங் கவின்கொண் டெழுந்துவா னளாவிக்
கலிகெட அழிவுறு திலங்கும்,
அண்ணசீர் அண்ணு மலையுண்ணு முலையின்
அடிகளை அநுதினம் பணிவாம்.

(இ-ள்) எண் அரும் தவத்து-நினைத்தற் கரிய தவத்துடைய, யோகிகள் அமர-தவ யோகிகள் அமர்ந்து தவஞ் செய்யும் பொருட்டு, இரு முழை பல பல கொண்டு-பெரிய குகைகள் பலவற்றைத் தன்னுள்ளே கொண்டு, தண் நிழல் அகலா சோலை சூழ்ந்து-குளிர்ந்த நிழல் மிகுந்த சோலைகள் சூழப் பெற்று, சல சலத்து அருவி இழிதர திகழ்ந்து-சல சல என்னு மொலியோடு அருவிகள் ஒழுக விளங்கி, கண் அரும் கவின் கொண்டு-அளவிடற் கரிய அழகோடு, எழுந்து வான் அளாவி-உயர்ந்து ஆகாயத்தை அளாவி, கலி கெட அழிவு உறுது இலங்கும்-(கண்டராது) பிறவித் துன்பம் நீங்க அழியாது விளங்குகின்ற, அண்ணல் சீர் அண்ணு மலை - இறைவன் வடிவ மாகிய திருவண்ணுமலையில் எழுந்தருளி யுள்ள, உண்ணு முலையின் அடிகளை-உண்ணு முலை யன்னையாரின் திரு வடித் தாமரைகளை, அநுதினம் பணிவாம்-நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) மநத்தை யடக்கமாட்டாது ஐம் பொறிகட்கு வயப்பட்டு அல்லற்படுவோர் போலாது, தம் முயிர்க்கு நன்மை நாடித் தவஞ் செய்வாரே தம் முயிரைத் தமக் குரித் தாகப் பெற்றூ ராகலானும், இங்ஙன் தவ மாற்றித் தம் முயிரைத் தமக் குரித் தாகப் பெறுது ஆசையுட்பட் டவஞ்செய்வோர் அதனை நினைத்தற்குந் தகுதி யுடைய ரல்ல ராகலானும், "எண் ணருந் தவத்து யோகிகள்" என்றும், தனக் கொப்பதும் மிக்கதும் இன்றி விளங்கலின், "கண்ண

ருங்கலின் கொண்டு'' என்றும், தன்னைக் கண்டாரது ஆணவாதி மலங்களைப் போக்கி வீடுபே றடைவித்தலின், ''கலிகெட'' என்றும், திருக் கைலாய மலை போன்று, ஊழி தோறும் மேன் மே லுயர்ந்து அழிவுறாது நித்த மாக விலகலின், ''அழிவுறா திலங்கும்'' என்றும், மாலு மயனுந் தாந் தாம் பெரிய ரெனத் தத் தமக்குள் மயங்க அம் மயக்கத்தைத் தெளிவிப்பான் றிரு வுளங் கொண்டு இறைவன் அக்கினிப் பிழம் பாய் நின்றமையான், ''அண்ணலார் அண்ணாமலை'' என்றுங் கூறினார்.

'எண்ணரும்' என்பதை யோகிகட் கடையாக்கி மிகப் பல தவ யோகிகள் என வுரைப்பினு மமையும். ''தவக்கல நடத்த வளர்ந்தெழுஞ் சோணசைலன்.'' (சோண சைல மாலை) என்பதனால் நினைக் கருந் தவ மிக்கார் மிகப் பலர் வாழ்வதற் கிடமாவது அண்ணாமலை யென்பதை நிலையுறுத்துக. இவற்றை ''தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய, மன்னுயி ரெல்லாந்தொழும்'' (27-8) என்னும் பொய்யா மொழியானும்,

> ''புரந்த ராதிவா னவர்பதம் போதுரைப் புத்தேள்,
> பரந்த வான்பதம் சக்கரப் படையுடைப் பகவன்.
> வரந்த வாதுவாழ் பதமெலாம் நிலைகெட வருநாள்,
> உரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல்''

என வரும் திரு விளையாடற் புராணத்தானும்,

> ''அலவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்,
> நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதான் என்னேடீ?
> நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்,
> சலமுகத்தா லாங்காரந் தவிரார்காண் சாழலோ.''

(திருச் சாழல் 6) என வரும் திரு வாசகத்தானு முணர்க. 7

8\. எண்ணிறே டெழுத்தால் இலங்கிய ஞான
இருந்தமிழ்க் கடலுளே திளைத்து,
பண்ணமர் மொழிமா ணிக்கவா சகனார்
பாடுமெம் பாவையைக் கொண்டு,

தண்ணமர் பள்ளி யெழுச்சியும் புனைந்து
சகமெலாந் துதிக்கநின் றோங்கும்,
அண்ணல்சீர் அண்ணு மலைஉண்ணு முலையின்
அடிகளை அநுதினம் பணிவாம்.

(இ-ள்) எண்ணிணேடு எழுத்தால் இலங்கிய ஞான-ஐந் திலக்கணத்தாலும் தருக்கத்தாலும் விளங்கிய ஞான நூல்களாகிய, இரும் தமிழ் கடலுள்ளே திளைத்து - பெருமை பொருந்திய தமிழ் கடலின்கண்ணே மூழ்கி. பண் அமர் மொழி மாணிக்க வாசகனார் - இனிமை மிக்க பாக்களைப் பாடுகின்ற மணி வாசகனார், பாடும் எம் பாவையை கொண்டு-திரு வாய்மலர்ந் தருளிய திரு எம் பாவையை ஏற்றுக் கொண்டு, தண் அமர் பள்ளி எழுச்சியும் புனைந்து- சுவை மிகுந்த திரு பள்ளி யெழுச்சியினையும் அணிந்து, சகம் எலாம் துதிக்க நின்று-உலகத்தவரெல்லாந் துதிக்கும் படியாக நிலைபெற்று, ஓங்கும் அண்ணல் சீர் அண்ணுமலை- உயர்ந்த இறை வடிவாகிய திரு வண்ணு மலையி லெழுந் தருளி யுள்ள, உண்ணு முலையின் அடிகளை-உண்ணு முலை அன்னையாரின் திரு வடித் தாமரைகளை, அநுதினம் பணிவாம்-நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) எண் ணென்றது தருக்க நூலை. எழுத் தென்றது இலக்கணத்தை. எனவே அதனே டியை புடைய சொல்லும் பொருளும் யாப்பும் அணியும் அடங் கும். இறைவனல் வெளியிடப்பட்ட முதனூ லாகிய மறையைத் தவிர ஏனையவற்றை ஆராயப் புகுங்கால் அவை யொன்றோ டொன் றொவ்வாத தன்மை யுடையன வாத லால், அம் மறைப் பொருளை ஆராய மிடத்துத் தருக்க நூற் பயிற்சி இன்றியமையாது வேண்டப்படுதலாலும்; இலக்கண நூற் பயிற்சியால் மொழி ஞானம் பெறுதலும் அதனுற் சொற் பாகுபாடுகளின் குற்றத்தை யொழித்தலும் அதனுல் முதன்மை யாகிய வேதாகமங்களின் பொருளை ஆசிரியன் வாயி லாக அறிந்து பாச பந்தத்தை யொழித்து

முத்தி பெறுதலுங் கூடு மாகலானும், தமிழ் மொழியிற் செய்யுள் வடிவாக வுள்ள ஞான நூல்களெல்லாம் இலக்கண இலக்கிய வல்லுநராகிய முதுபெரும் புலவர் பெருமக்களான் யாக்கப் பெற்றவையா யிருத்தலால், அவற்றை யாராய இலக்கண நூற் பயிற்சியும், அவற்றுள் வருகின்ற வத்து நிர்ணயத்திற்குக் கருவிகளாய, காட்சி முதலாய அளவை இயல்புகளையும், அதிவியாத்தி முதலாய முக்குற்றங்களும் நீங்கிய இலக்கணங்களையும் அவற்றா லுணர்த்தப்படும் இலக்ஷியங்களையும் உள்ளவா றுணர்ந்து கொள்ளத் தருக்க நூற் பயிற்சியும் இன்றியமையா வாக வேண்டப்படுவன வாகலானும், மணி வாசகனர் இவ் விரு கருவிகளையுங் கொண்டு ஞான நூல்களை உணர்ந்தவராகலானும், "எண்ணேடெழுத்தா விலங்கிய ஞான விருந்தமிழ் கடலுளே திளைத்து." என்றும், சத்தியை வியந்து பாடியதாகலின், "எம் பாவையைக் கொண்டு" என்றும் கூறினர், இவற்றை, "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங், கண்ணென்ப வாழும்உ யிர்க்கு." (40-2) என்றும், "ஆற்றினளவறிந்துகற்கவவையஞ்சா, மாற்றங் கொடுத்தற்பொருட்டு."(73-5) என்றும் வரும் பொய்யா மொழிகளானும்,

"ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணில், நீதி வழுவாம் நிலைமையவால் — மாதே, யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின், திறமாமோ எண்ணிறந்தாற் செப்பு." எனவும், "எழுத்தறியத் திரு மிழிதகைமை தீர்ந்தான், மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும் — மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடுபெ றும்." எனவும் வரும் வெண்பாக்களானும், "எண்ணெழுத் திகழேல்.", "எண்ணும் மெழுத்துங் கண்ணெனத் தகும்." என வரும் ஔவையார் அமுத மொழியானு முணர்க. எண் - ஆராய்ச்சி, முதனிலைத் தொழிற் பெயர்; இது ஆராய்தலை யுடைய நூலுக்கு ஆகு பெயர். எழுதப்படுவது, எழுத்து; இதுவும் அதனிலக்

கணத்துக்கு ஆகு பெயர். சகமென்பதும் சகத்தவர்கு ஆகு பெயராம். 'பண்ணமர் மொழி' என்பது தாகு பெயராய் மொழியா லாகிய பாவை யுணர்த்துகின்றது. 8

9. தண்ணார் மதியம் முடிமிசைப் புனைந்து
தழலுருக் கொடியுருப் படர,
பிண்ணைப் பணிபல பெருகிநின் றூரப்
பெருமத்த மாபுலி அணிந்து,
விண்ணு டணியும் கைலையெம் பெருமான்
மெய்யுரு விதுவென மிளிரும்,
அண்ணல்சீர் அண்ணா மலையுண்ணா முலையின்
அடிகளை அநுதினம் பணிவாம்.

(இ-ள்) தண் ஆர் மதியம் தழல் உரு முடிமிசை புனைந்து-குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அக்கினி வடிவாகிய சிகரத்தின் மேல் அணிந்து, தழல் உரு கொடி உரு படர-சோதிக் கொடியானது தன்னிடத்தே படர்ந்து, பின் நா பணி பல பெருகி நின்று ஊர-பிளந்த நாவினை யுடைய பல பாம்புகள் நிறைந்து ஊர்தலைச் செய்ய, பெரு மத்தம் மா புலி அணிந்து-பெரிய மத ஜல முடைய யானைகளும் புலிகளும் வரிசை யாகத் திரியப் பெற்று, விண்ணாடு அணியும் எம் கைலை பெருமான்-தேவர்களால் அலங்கரிக்கப் பெற்ற எம் சிவ பெருமா னுடைய, மெய் உரு இது என மிளிரும்-சத்து வடிவத் திரு மேனி இது வென்று சொல்ல விளங்குகின்ற, அண்ணல் சீர் அண்ணா மலை உண்ணா முலையின் அடிகளை-இறை உருவாகி உயர்ந்த திரு வண்ணா மலையி லெழுந்தருளி யிருக்கின்ற உண்ணா முலை யன்னை யாரின் திரு வடித் தாமரைகளை, அநுதினம் பணி வாம்-நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) இறைவனுக்கும் மலைக்குஞ் செம் மொழிச் சிலேடை. "சந்திரனைச் செந் நிறம் பொருந்திய சடாபாரத்தின் கண்ணே அணிந்து, கொடி போன்ற உண்ணா முலை

யன்னையாரைத் திருமேனியில் திருவுளங் கொண்டு வைத்து, பாம்புகள் பல நிலைபெற்று நிறைந்து திருமேனியிற் பரவப் பெற்று, பெரிய மத ஜலம் பொழியும் யானையுரியினையும் புலி யுரியினையும் அணியப் பெற்று" என இறைவனுக்கும், அக்கினி வடிவாகிய சிகரத்தின் மேல் சந்திரனைத் தாங்கப் பெற்று, சோதியங் கொடி தன்னிடத்தே படரப் பெற்று, பாம்புகள் பல நிலைபெற்று நிறைந்து ஊர்ந்து செல்லப் பெற்று, மத ஜலம் பொழியும் யானைகளும் புலிகளும் தன்னிடத்தே வரிசையாகத் திரியப் பெற்று,' என மலைக்கும் சிலேடையாகக் கொள்க.

"கொடியுருப் படர்ந்து" என்பதற்குக் கொடி போன்ற கங்கை நீர் சிரத்தில் விரியப் பெற்று எனக் கொள்ளினும் அமையும். கொடி—உவமையாகு பெயர். மா, புலி, என்பன, அவற்றின் உரிகளை யுணர்த்தி நின்றன. இச் சிலேடையில் இயற்கை வடிவும், செயற்கை வடிவும் ஒத்திருத்தல் காண்க. தழ லுரு, என்பதை முடிக்குங் கூட்டுக. இவற்றை "ஆங்குறை மதியே தாங்கியென் றுலகம் அறைகுறை யற நிறை மதியுந், தாங்கிய முடியோ டோங்கிய சோண சைலனே கைலைநா யகனே" எனவும்., "பொங்குசோதியங் கொடிவி ரித்த, சடையெனப் படர்ந்து கிடந்தொளிர் சோண சைலனே கைலைநா யகனே." எனவும், "வங்தொரு களிறும் உழுவையுங் கொன்ற பலிபகை தவிர்ப்பவெண் ணிகந்த, தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே." எனவும். வரும் சோண சைல மாலையானும்,

> "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்,
> பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடி."
> (திருச் சாழல் 9) எனவும்,
> "மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி,
> சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது என்னேடி."
> (திருச் சாழல் ) எனவும் வரும் மணி வாசகத்தானும்

உணர்க.

'விண்ணாடு' என்பது ஆகு பெயராய்த் தேவர்களை யுணர்த்திற்று. தேவர்கள் இயற்கை அழகு மிக்கவராய் ஆடை யணிகளால் செயற்கை யழகும் பெற்று என்றும் வந்து வலங் கொண்டு இறைவனை வழிபட, காலம் பார்த்துத் தங்குதலின், "விண்ணு டணியு" மென்றனர். 9

10. அண்ணு மலையென அமரர்கள் போற்ற
அடியவர் தவங்களைச் செய்ய,
எண்ணுர் தேவ பதங்களை விரும்பி
எண்ணிலார் நோன்புகள் செய்ய,
மண்ணேர் வந்துநல் மலரடி வழுத்த
வாழ்வெனக் களித்தருள் செய்த,
அண்ணல்சீர் அண்ணு மலையுண்ணு முலையின்
அடிகளை அநுதிநம் பணிவாம்.

(இ-ள்) அமரர்கள் அண்ணுமலை என போற்ற-திரு மா லாதி தேவர்கள் அண்ணு மலை என்று துதிக்கவும், அடியவர் தவங்களை செய்ய-சிவ னடியவர்கள் துதிக்கவும், தவங்களை செய்யவும், எண்ணுர் தேவ பதங்களை விரும்பி-மதிக்கத் தகுந்த தேவ பதவிகளை விரும்பி, எண்ணிலார் நோன்புகள் செய்ய-அள வில்லாதவர்கள் கிருச்சிர சாந்திராயணுதி விரதங்களைச் செய்யவும்,நல் மலர் அடி மண்ணேர் வழுத்த-நல்ல திரு வடித் தாமரைகளை மக்கள் துதிக்கவும், வாழ்வு எனக்கு அளித்து அருள் செய்த-(இன்ப) வாழ்வை அடியேற்குக் கொடுத்துக் கருணை செய்த, அண்ணல் சீர் அண்ணு மலை யுண்ணு முலையின்-திரு வண்ணு மலையி லெழுந்தருளி யுள்ள உண்ணு முலை அன்னையாரின், அடிகளை அநுதிநம் பணிவாம்-திரு வடித் தாமரைகளை நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) முன் அறியாமையால் தாமே பரம் பொருளென மயங்கிப் பின் னிறைவ னுணர்த்த அவ னருளால் அவ னருளை வழிபட்டன ராகலின், "அமரர்கள் போற்ற." என்றும், தவங்க ளனைத்தும், மநத்தாலும் காயத்தாலு

மாகிய கிரியா விசேஷங்க ளாகலின், அவற்றிற் சிறந்தது ஞாந யோக மாகிய மௌந நிலை யென்பார், "தவங்களைச் செய்ய" என்றும், பரலோகாதி இச்சையும் மேன் மேலும் பிறப் பிறப்பினை உண்டு பண்ணும் வித்தாகலின். "பதங்களை விரும்பி." என்றும், வினை மாசு தீர்ந்து அந்தக் கரணந் தூய்தாதற் பொருட்டுக் காக்கப்படும் விரதங்கள், அவை தூய வாய வழி யுதிப்ப தாய ஞாந யோகத்திற்குக் காரண மாகலின், "நோன்புகள் செய்ய." என்றும், இறைமைக் குணங்கள் இலராயினுரை, உடைய ரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் மயக்க உணர்ச்சியின்பாற்பட்ட தாகலின், அவை முற்று முடைய இறைவியின் திரு வடியைப் புகழ்தலே வாக்கின் பயன் என்பார், "மலரடி வழுத்த" என்றும், இங்ஙன் முக் கரணங்களாலும் பேத மாகச் செய்யுங் கிரியைக ளனைத்தும் அபேத ஞாந யோக வின்பத்திற்குக் காரணங்க ளாகலின், இவற்றை நன் கியற்றி அபேத ஞாந வின்ப வாழ்வு பெற்றமையின், "வாழ்வு எனக்களித்தருள் செய்த" என்றுங் கூறினர். இவற்றை,

"ஞாலமதின் ஞாநநிட்டை யுடையோ ருக்கு நன்மை யொடு தீமையிலை நாடுவதொன் றில்லை, சீலமில்லை தவமில்லை விரதமொடாச் சிரமச் செயலில்லை தியாநமிலை சித்தமல மில்லை, கோலமிலை புலனில்லை கரண மில்லை குண மில்லை குறியில்லை குணமு மில்லை, பாலருடன் உன்மத்தர் பிசாசர்குண மருவிப் பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்." என வரும் சிவ ஞாந சித்தியாராலும், "தவமகந் தீர்த்தஞ் சேவை யருச்சனை தான மாதி, அவமயக் கத்தான் நீள்நாள் விலங்குபோ லவலத் தாழ்வார், பவமுறு மிவற்றை விட்டுப் பரிசுத்த பரம யோகம், கவர்வறப் பற்றி யெல்லாக் காதலும் நீங்கி நிற்பாய்."(5-உபசாந்தி பிரகரணம் 59) என வரும் ஞாந வாசிட்டத்தாலும், "தமர் பிற ரற்றார் சமயமு மற்றார் சகவியல் பற்றார் தமையொழி பற்றார், அமரிட மற்றார் அறமற மற்றார் அறிவயர் வற்றார் அவரடி யவரே" (11-உட் பரிவாரம் 12) என

வரும் அஞ்ஞ வதைப் பரணியாலும், "விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணர விரியாமல், ஒருங்கு நெஞ்சங் கருவியாந் தன்னை யுணர வொருங்காமல். விரிந்த நெஞ்ச முடையானை விடாது பிறவி யென்றுணர்க, வொருங்கு நெஞ்ச முடையானை யுறுது பிறப்பென் றுணர்கவே." என வரும், பிரபு லிங்க லீலையாலுங் கண்டு கொள்க. 10

திரு அண்ணுமலை-உண்ணுமுலை அம்மையார் தோத்திரமும், பரிமள தீப உரையும், முற்றுப் பெற்றது.

சிக்கல்-பொருள் வைத்த சேரி,

## ஸ்ரீ உகந்த லிங்க தேசிகர் தோத்திரமும்

பரிமள தீப உரையும்,

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. தெருளுறு வதற்காம் நித்தியா நித்தந்
 தெரிவிவே கத்தொடும் இகத்தின்,
மருளுறு பரத்தின் விராகசம் பத்தி
 மாமுமூட் சுத்துவம் அருள்வான்,
அருளொடு வைராக் கியம்பத்தி ஞானம்
 ஆகிய நான்குமோர் உருவாய்ப்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
 பொன்னடி களைத்தினம் பணிவாம்.

(இ-ள்) தெருள் உறுவதற்கு ஆம்-ஞான மடைவதற்குச் சாதன மாகிய, நித்திய அநித்தம் தெரி விவேகத் தொடும்-நித்தியாநித்திய வஸ்து விவேகமும், மருள் அறு இகத்தின் பரத்தின் விராகம் சம்பத்தி-மயக்கம் நீங்குதற் கேது வாகிய, இகாமுத்திரார்த்த பல போக விராகமும், சமாதிசட்கச் செல்வச் சேர்க்கையும், மா மூட்சுத்துவமும்-சிறந்த முமூட்சுத்துவமு மாகிய நான்கினையும், அருள்வான்-அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, அருளொடு வைராக் கியம் - (சீவர்களிடத்துக்) கருணையும், திருந்திய துறவும்,

பக்தி ஞானம் ஆகிய நான்கும் - (சிவ) பக்தியும், (மெய்ஞ்) ஞானமு மாகிய நான்கும், ஓர் உருவு ஆய் - ஒப்பற்ற திரு மேனி யாகக் கொண்டு, நல் பொருள்வை நகர் வாழ்- வளப்ப மிக்க பொருள்வை மா நகரில் எழுந்தருளியிருக் கின்ற, உகந்த லிங்க ஈசன் - உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை திநம் - பொன் போன்ற திரு வடித்தாமரைகளை, நாடோறும், பணிவாம்- (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜ நம், என்னும் அநுபந்த சதுட்டயத்துள்ளே முதற்கண் வைத் தெண்ணப்படுவது அதிகாரியே யாம் என்னை? அதி காரியைக் குறித்தே ஏனைய மூன்றும் எழுந்தமையால். இவற்றைத் தமிழ் நூலார் முறையே, கேட்போன், யாப்பு, நுதலிய பொருள் பயன், என்பர். இவை நான்கும் பாயிர மிரண்டனுள் சிறப்புப் பாயிரத்தின்பாற்பட்ட நாகிய, "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற் பெயர் யாப்பே நுதலிய பொருளே, கேட்போர் பயனொ டாயெண் பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே." என்னும் நன்னூற் சூத்திரத்துட் கூறிய எட் டனுள் உள்ள வாறு கண்டு கொள்க. நூல் கேட்கப் புகும் மாணாக்கன் இவற்றை முதற்கண் ஆராயா வழிக், குன்று முட்டிய குருவி போலும், குரிச்சி புக்க மான் போலும், இடர்ப்படுவன். இலக்கண நூல் கற்றுப் பயிற்சி பெற்ற வொருவன் மொழித் திறத்தின் முட்டறுத்த லாகிய பயனைப் பெறுவது போல, ஞான நூல் கேட்டு அநுபவம் பெற்ற வொருவன் வீடுபே றடைத லாகிய பயனைப் பெறுவா னுகையால், அதிகாரிக்கும், வீடுபேற்றிற்கும், பிராப்பிய பிராபக பாவ சம்பந்தம் உளது. (பிராப்பியம்-அடையப் படுவது) (பிராபகன்-அடைபவன்) (அடையப்படுவது வீடுபேறு, அடைபவன் அதிகாரி) மற்றைய சம்பந்தங்களை விரிக்காது விடுத்தனம். நிகண்டு கற்று இலக்கிய நூற் பயிற்சி பெற்றோர் இலக்கண நூல் கேட்க அதிகாரி யாவது

போலும், இராச சூய யாகத்திற்குச் க்ஷத்திரியன் அதிகாரி யாவது போலும், பிரகஸ்பதி சவநம் என்னும் யாகத்திற்குப் பிராமணன் அதிகாரியாவது போலும், மலதோடத்தை நிஷ்காம கர்மத்தாலும், விக்ஷேப தோடத்தை உபாசனையினாலும், ஒழித்துத் தனது பரமார்த்த வடிவத்தை மறைத்திருக்கின்ற ஆவரணத்தோடு கூடிய சாதந நான்குடையவனே ஈண்டு அதிகாரி யாவான். ஆகையால், அச் சாதநங்களே வேண்டுமென்பார், "அருள்வான்" என்றார். சாதந நான்கின் இலக்கணங்களை நூல்களிற் கண்டு கொள்க. சாதக நிலையில் சாதந நான்கினையும் அவதிபரியந்தம் அடையப் பெற்றுப், பின் சாத்திய நிலையில் ஞாந வாசாய் எழுந்தருளி யிருந்தமை குறித்து "நான்குமோர் உருவாய்" என்றார். 1

2. இருளினைப் போக்கிப் பொருளினைத் திகழ்த்தும்
இரவிபோல் பொருளினை மறைக்கும்,
இருளினைப் போக்கி ஞாநத்தை ஈந்தே
இன்பரு பத்தினை விளக்கி,
அருளினைப் பெறுமா ணவர்க்குமுக் காயம்
அகற்றியே வீட்டினை அருளப்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) அருளினைப் பெறும் மாணவர்க்கு - ஞாநாசாரியன் கருணையைப் பெறுதற்குத் தகுதி யுடை முமுட்சுகட்கு, இருளினைப் போக்கி பொருளினை திகழ்த்தும்-(பூத) இருளை நீக்கிக் (குட முதலிய) பொருள்களை விளக்கும், இரவி போல்-சூரியனைப் போன்று, ஞாநத்தை ஈந்து-(ஆந்ம) ஞாநத்தை அநுக்கிரகஞ் செய்து, பொருளினை மறைக்கும் இருளினை போக்கி - ஆந்மாவைத் (தெரியவொட்டாமல்) மறைக்கும் (அஞ்ஞாந) இருளைப் போக்கி, இன்பருபத்தினை விளக்கி-ஆந்மாவைத் தனது வடிவ மாக விளங்கும்படி செய்து, மு காயம் அகற்றி- தூல சூக்கும காரண உடல்

அபிமானத்தை நீக்கும்படி செய்து, வீட்டினை அருள-கைவல்ய பதத்தைத் தந்தருள, நல் பொருள்வை நகர் வாழ் - வளப்பம் மிக்க பொருள்வை மா நகரின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன்-உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை திநம்-பொன் போன்ற திரு வடிகளை நா டோறும், பணிவாம்-(முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) அருக்கன் பூத விருளை நீக்கிக் குட முதலிய பொருள்களை ஊனக் கண்ணிற்குக் காட்டு மாறு போல, குருபரன் அஞ்ஞான விருளை நீக்கி ஆன்மப் பொருளை ஞானக் கண்ணிற்குக் காட்டுவன் என்பதை, "இருள், பொருள். இரவி" என்னும் உவமைகளாற் கண்டு கொள்க.

"இன்ப ரூபத்தினை". என்றாரேனும், இனம் பற்றி, இருப்பு, ஒளி, ஆகியவற்றையுங் கொள்க. என்னை? "ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே." என்ப தோத்தாகலின். இதனை, "சச்சி தானந்த சங்கர குருவே, அச்ச நீங்குபு தன்னை அறிந்தவன்.' எனப் பிரபு லிங்க லீலை கூறுகின்றமையின், ஆன்மாவிற்குச் சச்சிதானந்தம் சொரூப விலக்கணமா மாறுங் கூறினாராயிற்று. மாணவர், என்ற தீண்டுச் சாதந நான்கு முடையாரை: என்னை? கேட்டல், சிந்தித்தல், தெளிதலுக் கவரே யதிகாரியாகலின், "முக் காயம் அகற்றி." என்றது அதத்வியாவிருத்தி இலக்கணங் கொண் டென்க. அதத்வியாவிருத்தி யாவது-ஆன்மா வல்லாதவற்றின் பேதம். இப் பொருளை, "ஆன்மா, ஏனையவற்றின் வேறு, சச்சிதானந்த வடிவ மாகலின். குடம் போல" என்னும் வெதிரேக அநுமானத்தின்கண் சொரூப இலக்கண மாகிய ஏதுவால் பேத அநுமிதி யுணர்வு தோன்றியமை கொண்டு தெளிந்து கொள்க. மாணவர்க்கு முக் காயம் அகற்றி, ஞான மீந்து, இருளைப் போக்கி, இன்ப ரூபத்தினை விளக்கி, வீட்டினை யருளல், ஞானாசாரியன் இயல்பு என்பதை இப் பாவால் தெரித் துணர்த்தினர். இதனை, "காட்சியை யெல்லாங்

கண்ணதாய்க் கரைத்துக் கண்ணுெழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்லவன் குருவாம் மாரி போல்மாறுவேண் டாதே, மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும் வித்தகக் குரவனே எவரும், தாழ்ச்சி செய் தேத் தற் குரியதத் துவமாஞ் சங்கர னென்றிடத் தகுவான்.'' என்னும் (12-21) பிரம கீதையானும்,

> "முன்னே ஞான முதற்றனி வித்தினேப்,
> பின்னே ஞானம் பிறங்குச டையனே,
> என்னே ஞானத் திருளறுத் தாண்டவன்.
> தன்னே ஞானத் தளையிட்டு வைப்பனே.''

என்னும் (தனித் திருக்குறும் தொகை 2) அப்ப ரடிகளார் திரு வாக்கானு முணர்க.

ஈண்டு, ஞானாசாரியன், ஐயந் தவிர்த்து நிலேத்த ஆசக லும் முத்தி யருள்பவனுகிய விகித குரு வாம். 2

3\. மருளினேப் பொருந்தி மாநுட ஆக்கை
மருவியு மயலினேப் போக்காப்,

பொருளினேப் பொருந்திப் புலான்மய உடலில்
பொழுதினேக் கழிக்குமெம் தமக்கும்,

அருளினே ஈந்தே அகங்கர நீங்கி
ஆத்மரு பத்தினே அடையப்,

பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களேத்திநம் பணிவாம்.

(இ-ள்) மாநுட ஆக்கை மருவியும் - (கிடைத்தற் கரிய) மாநுட உடல் கிடைக்கப் பெற்றும், மருளினே பொருந்தி - (தா னல்லாதவற்றைத் தா னெனக் கருதும்) பிராந்தியை யுற்று, மயலினே போக்கா பொருளினே-அது நீங்குதற்கு ஏது வாகாத மூ வாசையினேயும், பொருந்தி புலால்மய உடலில்-மேற்கொண்டு தசையா லாகிய உடலில் அபிமானம் வைத்து, பொழுதினே கழிக்கும் எம் தமக்கு-வா

ஞானவிஞ்ஞானாக்குகின்ற அடியேங்கட்கும், அகங்கரம் நீங்கி-அகங்கார மமகாரங்கள் நீங்கப் பெற்று, ஆன்ம ருபத்தினை அடைய-ஆன்ம வடிவமாகவே நிலைத்திருக்க, அருளினை ஈந்து நல் பொருள்வை நகர் வாழ்-திரு வருளை அநுக்கிரகித்து வளப்ப மிக்க பொருள்வை மா நகரின்கண் ணெழுந்தருளி இருக்கின்ற, உகந்த லிங்க ஈசன்-உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை நிதம் பணிவாம்-அழகிய திரு வடிகளை நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) அருளினை ஈந்து நகர் வாழ், எனக் கூட்டுக. மருள்-மயக்கம், பிராந்தி, அத்தியாசம், விபரீத வுணர்வு என்பன ஒரு பொருட் கிளவிகள். அத்தியாச மாவது:- ஒன்றன்கண் (பழுதையின்கண்) மற்றொன்றன் (பாம்பின்) அவபாசம் (தோற்றம்). அவ் வத்தியாசம். ஞானாத்தியாசம். அர்த்தாத்தியாசம், என இரு வகைத்து. அவபாச பதத்தால், ஞானாத்தியாச பக்ஷத்தில், பிராந்தி ஞானத்தினையும், அர்த்தாத்தியாச பக்ஷத்தில், பிராந்தி ஞானத்திற்கு விஷய மாகிய பாம்பு முதலிய பொருள்களையும் கொள்க. 1,ஞானாத்தியாச மாவது:- அத் தர்ம ரகித வஸ்துவில், அத் தர்ம சகித புத்தி யாம், என்னை? பாம்புத் தன்மை யில்லாத பழுதையின்கண் பாம்புத் தன்மைப் புத்தியும், ஆன்மத் தன்மை யில்லாத உட லாதியவற்றில் ஆன்மத் தன்மைப் புத்தியு மாம். அர்த்தாத்தியாச மாவது:- பிரமாண அஜந்நிய (பிரமாணத்தாற் றோன்றாத) ஞானத்திற்கு விஷயமும், பூர்வ திருஷ்டத்துவ தருமத்திற்கு (முன்னர் பார்த்துள்ள தன்மைக்கு) அநதிகரணமு (இட மில்லாதது) மான பொருள். எங்ஙன்? பழுதையின்கண் பாம்பை விஷயஞ் செய்யும் ''இது பாம்பு'' என்னு முணர்ச்சி அப்பிரமையானமையின், பிரமாணம் யா தொன்றுனும் ஜன்னிய மன்று. ஆகையால், அப் பாம்பு, பிரமாண அஜந்நிய ஞானத்திற்கு விஷய மாயும், தனது தோற்றரவிற்கு முன் னில்லையாதலின், பூர்வ திருஷ்டத்துவ தருமத்திற்கு அநதிகரணமாயு மிருத்தலைக் கண்டு

கொள்க. இவ் வர்த்தாத்தியாசம், பிராதிதிகம். வியாவ காரிகம், என இரு வகைத்து. பழுதையிற் பாம்பு, சுத்தியில் வெள்ளி முதலிய ஆகந்துக (செயற்கை) தோஷத்தாற் றோன்றுவன பிராதிதிக மாம். அத் தோஷம் பிரமாத்துரு தோஷ மெனவும், விஷய தோஷ மெனவும், கரண தோஷ மெனவும் மூ வகைத்து. இராகம், பயம், முதலியன பிரமாத்ரு (அந்தக் கரண விசிட்ட சைதந்யம்) தோஷம். சாதிருசிய முதலியன விஷய தோஷம். காசம், காமாலை, முதலியன கரண தோஷம் உடல் முதல் மூலப் பிரகிருதியீறாக உள்ள பொருள்கள் யாவும், பிராதிதிகப் பொருளினும் வே றாகிய, வியாவகாரிக அர்த்தாத்தியாச மாம். மேலும் அத்தியாசத்தின் பிரிவுகளையும், அவற்றின் உத்தேச இலக்கண பரீக்ஷைகளையும் பெரு நூல்களிற் கண்டு தெளிக.

"மாநுட வாக்கை மருவியும்" என்ற விடத் துள்ள உயர்வு சிறப் பும்மையால், அதன் பெருமையும். அது கிடைத்தற் கருமையும், கிடைத்த ஞான்றே அதனை முத்தி நெறி கூடுதற்குக் கருவி யாக்கு முறைமையும் அறி வுறுத்தி னா ராயினர். 3

4. இருண்மய ஆகும் மாயைவந் தெம்மை
ஈர்த்திடா திருக்குமா றருளித்,
தெருள்விழி யோர்கள் பார்வையிற் பட்டுச்
செயல்களை விலகிடச் செய்து,
உருண்மாம் ஒழிய உண்மையை உணர்த்தி
உயரடித் தாமரை ஈயப்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) இருள் மயம் ஆகும் மாயை வந்து-இருள் வடிவ மாகும் மாயையானது வந்து, என்னை ஈர்த்திடாது இருக்கும் ஆறு அருளி-அடியேங்களைப் பிறவிக் கடலில் இழுத்துத் தள்ளா திருக்கு மாறு அநுக்கிரகம் செய்து, தெருள் விழியோர்கள் பார்வையில் பட்டு - ஞானிகளின்

பார்வையில் படும்படி செய்து, செயல்களை விலகிட செய்து - கிருத கிருத்தியர்க ளாக்கி, உருள் மநம் ஒழிய உண்மையை உணர்த்தி-சலிக்கும் மநம் இறக்கும் வண்ணம் தத்துவப் பொருளை உபதேசித்து, உயர் அடி தாமரை யை - மேன்மை யுற்ற திரு வடித் தாமரையை அளிக்கும் வண்ணம், நல் பொருள்வை நகர் வாழ் - வளப்ப மிக்க பொருள்வை மா நகரின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன் - உகந்த லிங்க ஞாந தேசிக மூர்த்தி யினது, பொன் அடிகளை நிதம் பணிவாம் - அழகிய திரு வடிகளை நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக. எ-று.

(விசை) ஜகத் காரண இறைவனுக்கு வேறுகிய பரமார்த்த வடிவ மில்லாததும், ஆகாய முதலிய காரிய மாகிய ஏதுவால் அநுமிக்கத் தக்கதுமா யுள்ள, ஆகாயாதி காரியங்களைத் தோற்றுவிக்கும் அவ் விறைவனது சாமர்த் தியம் மாயை எனப்படும். எங்ஙனம்,? மித்தையா வஸ்து வோ ஜகத்து மாம்; அது காரிய மாகிய ஏதுவான் அறியத் தக்க தன்று, ஆனல், பிரசித்த மாயும், காரிய வடிவ மாயு மிருக்கின்றது இறைப் பொருள் காரிய மாகிய ஏதுவால் அறியப்படுவதாயினும், அது மித்தையும் தானே தனது சக்தியு மாகாது. ஆனல், பரமார்த்த வடிவமும், சக்தியின் ஆசிரயமும் ஆம். ஆகையால், மித்தையும் காரிய மாகிய ஏதுவால் அறியப்படுவது மாகிய இறைப் பொருளின் சக்தி மாயை யாம் என மாயையின் இலக்கணத்தை, அதிவி யாத்தி, அவ் வியாத்தி, அசம்பவ மாகிய முக் குற்றங்களும் நீங்கிய பரீக்ஷையால் உணர்ந்து கொள்க அநுமாநம் வரு மாறு:— ஆகாயாதி காரியம், தனது காரண மாகிய விவர்த்தோபாதாந இறைப் பொருளி லுள்ள சக்தியா லுண்டாகிய தாம். காரிய மாகையால், யாது யாது காரி யமோ, அது அது, தத் தம் உபாதாந காரணத்தி லுள்ள சக்தி யினு லுண்டாகிய தாம், அக்கினியி லுள்ள சக்தியினு லுண் டாகிய பொறி முதலிய காரியங்களைப் போல. தமம்,

மோகம், அவித்தை, பொய் யுருவி, பிரகிருதி, சக்தி, சத்யை மூலை, தூலை, யோகி, அவ்வியக்தம். அவ்வியாகிருதம், அஜை, அஞ்ஞானம், துச்சை, அநிர்வசநீயை, எனப் பரியா யப் பெயர்கள் மாயைக் குளந்த முண்மையால், சிவ சேத நத்தை மறைக்கின்ற காரணம் பற்றி மாயையை, "இருள் மய மாகும் மாயை". என்றார்.

மாயை யானது, சுருதி சம்பந்த மாய் விசாரிக்கின், ஆகாயத் தாமரை போல துச்சம் எனவும், யுக்தி சம்பந்த மாய் விசாரிக்கின் சுத்தியில் வெள்ளி போல, மித்தையா யிருத்தலின், அநிர்வாச்சியம் எனவும், உணர்ந்த யாங்கள், அம் மாயையால் மருளோம் என்பது தோன்ற, "மாயை வந் தெம்மை ஈர்த்திடா திருக்கு மா றருளாய்." என்றார். இதனை, "அனல்தம்பிக்கும் மந்திரம் போல்", "விளங்குறு மாந்ம வுருவமல் லாமல் ஆந்மாவின் வேறாத் தோன்றாது, உளங்கொள் வியதாதி காரியங்க டம்மைத் தோன்றமல் ஒடுக்கி நின்றும், துளங்கலக டிதகட நா சமர்த்தி யாகியும்மே தோன்று நின்ற, வளங்கடரு காரணமா யதுவாகுந் திரிசியமா மாயா சக்தி" எனவும், "உண்ணி லவு தமமாயை மோகமுட னவித்தைபொய் யுருவி." என வும், "சிவசே தநமறைத்துத் தமம்." எனவும், வரும், வேதாந்த சூடா மணியா லுணர்க. தத்துவப் பொரு ளாகிய வீட்டையே, 'உய ரடி' யென்றனர். இதனை, "சேவடி படருஞ் செம்ம லுள்ளம்" என்னுந் திரு முரு காற்றுப்படையாலும், நச்சினார்க்கினியருரையாலுங் காண்க, "மேலாஞ் சாதநங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம்" என்னும் அத்துவித வுண்மையா லுணர்க.

பிறவிக் கேது வாகிய அஞ்ஞான நீங்கித் தத்துவ ஞானம் பெற்று வீடடைய, வேண்டுவன வாகிய சாதந நான்கும் சாது சங்கத்தால் வரு மாதலின், "தெருள்விழி யோர்கள் பார்வையில்பட்டு" என்றார். படுவித்து எனற் பாலது. அந்தர்ப்பாவித நிச்சாயப் பட்டென நின்றது. 4

5 பொருளலாப் பொருளை பொருளென மருண்டு
பொய்புகல் உலகத்தில் இருந்தே,
பொருளறம் இன்பம் வீடெனு நான்கும்
பொருந்துதற் காசைமீக் கூரல்,
இருளினைக் கொண்டு ஒளியினைக் காண
இச்சைவைக் குதல்சமம் எனச்சொல்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பொருள் அலா பொருளை - அடையத் தகாத பொருளை, பொருள் என மருண்டு -அடையத் தக்க பொருளெனக் கொண்டு மயங்கி, பொய் புகல் உலகத்தில் இருந்து - பொய் கூறும் இவ்வுலகத்தி லிருந்து, பொருள் அறம் இன்பம் வீடு எனும் - (உண்மையான) அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் உறுதிப் பொருள், நான்கும் அடைவதற்கு ஆசை மீக்கூரல் - நான்கினையும் அடைதற்கு ஆசை மிகப் பெறுதல், இருளினை கொண்டு ஒளியினை காண - இருளைக் கருவியாகக் கொண்டு ஒளியைக் காணும் பொருட்டு, இச்சை வைக்குதல் சமம் என சொல் - ஆசை கொள்வதற்கு ஒப்பாகும் என உபதேசித்தருளிய, நல் பொருள்வை நகர் வாழ் - வளப்ப மிக்க பொருள்வை மா நகரின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன் - உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை திநம் பணிவாம் - அழகிய திரு வடித் தாமரை களை நாடோறும் (மநோ வாக்குக் காயங்களால்) வழிபாடு செய்வோமாக. (எ-று.)

(வி-ரை) மறு மாவனவற்றை அற மெனவும், திருடு சூதாட்டம் முதலிய வற்றால் வரும் பொருளை, நற் பொருளெனவும், இழி குல மகளிர் பிறன் மனையாள் முதலியோரால் வரு மின்பமே இன்ப மெனவும், தேகமே ஆன்மா போகமே மோக்ஷ மெனவும் இவ்வாறு பொருளல்லன (மெய்ப் பொருளல்லன) வற்றைப் பொருளென மயங்கி

என்பார், " பொருளலா......மருண்டு " என்றனர். இவ்வாறு பொய் கூறும் உலக மென்பார் 'பொய் புகல் உலக' மென்றார்.

அறம், பொருள், இன்பம், வீடு, என்பதே வைப்பு முறையாயினும், எதுகை நோக்கிப் பிறழ வைத்தார். இவ் வுறுதிப் பொருள் நான்கனுள், முன்னவை மூன்றும் பிர விர்த்தி நிலையாயும். பின்னது நிவிர்த்தி நிலையாயும் உள்ளன. அன்றியும், இரு வகை யறப் பகுதிகளுள், இல் லறப் பகுதி யிற் சேர்வன வான பொருள், இன்ப மென்னு மிரண்டி லும், பற்று விடுதலே,துற வாதலால்,இவை துற வறத்தின் வழிப்படுவன வல்ல. இதனை, " இம் மூன்றும் விட்டதே பேரின்ப வீடு. " என்னும் மூதாட்டியார் வாக்கா னுணர்க. அறம், இம்மை மறுமை வீ டென்னும் மூன்றையுந் தருத லானும், பொருள், இம்மை மறுமை என்னும் இரண்டை யுந் தருதலானும், இன்பம், இம்மை யொன்றையே தருத லானும், சிறப்பின் தகுதி பற்றி, அறம், பொருள், இன்பம், என முறையே வைக்கப் பெற்றன. இவற்றுள், பொருள், முன்ன தாகிய அறத்திற்கும், பின்ன தான இன்பத்திற்குங் காரண மாதல் பற்றிச் சிங்க நோக் காய் அவ் விரண்ட னிடையில் வைக்கப் பெற்ற தென் றுணர்க. 5

6 பொருளறத் துறந்து பிச்சையேற் றருந்தும்
  பூரண சாதந மிலதேல்,
அருளினை யடையா தவத்திலே திரிவாய்
  ஆசையைப் போக்குமா றறியாய்,
தெருளினைப் பெற்ற சாதுசங் கத்தாற்
  றெளிகுவை யெனப்புகல் குணமார்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
  பொன்னடி களைத்திநம் பணிவாம்,

(இ-ள்) பொருள் அற துறந்து - பொருட் சார்பை முற்றத் துறந்து, பிச்சை ஏற்று அருந்தும் - பிச்சை ஏற்று அருந்துத லாகிய, பூரண சாதநம் இலதேல் - முடிந்த கருவி

இல்லாவிடின், அருளினை அடையாது - திருவருணிலையை அடையாமல், அவத்திலே திரிவாய் - வீணே பிறப்பாகிய மார்க்கத்தில் அலைவாய், ஆசையை போக்கும் ஆறு அறியாய் - (அங்ஙனம் அலையும் போது) ஆசையை நீக்கும் வழியை உணராய், தெருளினை பெற்ற சாது சங்கத்தால் - (ஆகையால்) மெய் யுணர்வு அடைந்த பெரியோர்கள் சேர்க்கையால், தெளிகுவை என புகல் குணம் ஆர் - (நினது பரமார்த்த வடிவத்தை) தெளிந்து கொள்வாயாக என்று உபதேசித் தருளிய மைத்தரியாதி குணங்கள் பொருந்திய, நல் பொருள் வை நகர் வாழ் - வளப்ப மிக்க பொருள்வை மா நகரின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன் - உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை நிதம் பணிவாம் - அழகிய திருவடிகளை நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோமாக.
(எ-று.)

(வி-ரை) அருளுடைமை, புலான் மறுத்தல், தவம், கூடா வொழுக்க மின்மை, கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை முதலிய விரதங்களின் பயனாகிய, ஞானத்திற்குச் சாதனங்களாகிய, தோற்ற முடையன யாவும் நிலையுத லிலவாந் தன்மை எனப்படும் நிலையாமையும், புற மாகிய பொருளின்கண்ணும் அக மாகிய யாக்கையின்கண்ணு முளதாகிய பற்றினை அவற்றது நிலையாமை நோக்கி, விடுதல் என்னும் துறவும், பிறப்பு வீடுகளையும், அவற்றின் ஏதுக்களையும், ஐயந் திரிபின்றி மெய்மையான் உணர்த லாகிய மெய் யுணர்வும், சஞ்சிதமும், ஆகாமியமும், ஆகிய கருமங்களின் பயன்களை யொழித்தவர்க்கு மெய் யுணர்ந்த காலத் துள்ள இப் பிறப்பும், அதில் அநுபவிக்க வேண்டிய பிராரப்த கருமப் பயன்களும் எஞ்சி நின்றமையின், துறக்கப்பட்ட புலன்கள் மேல் பழைய வாசனையாற் செல்லும் நினைவும் பிறவிக்கு வித் தாகலின், அதனை இடைவிடாத மெய்ப் பொருளுணர்வால் நீக்குத லாகிய அவா வறுத்தலு மாகிய நான்கனுள்,

நிலையாமை யுணர்ச்சியோடு கூடிய துறவு பெற்றுழ லொழிய, பின்னைய விரண்டு முளவாகா வாகலானும், முதற்கண் ணொழிக்கத் தக்க தாகிய புறப்பற்றின் கூறுபாடாகிய உயிர்ச் சார்பு பொருட்சார் பாகிய விரண்டனுள், முன்னை யதை விடுக்கினும், பின்னையதை விடுத்தல் முற்றத் துறந்த முனிவர்க் கல்லது கூடா தாகலானும், அத் துறவுடையோர், "நகர்தனில் ஏகிப் பிச்சை நண்ணியே மனைக டோறும், அகமகிழ்ந் தங்கை ஏற்றே யவ்விடத் தருந்தி." நிட்டை கூடி ஜீவன் முக்தி விலக்ஷணானந்தத்தை அநுபவிப்பர் ஆகையாலும், அதுவே முடிந்த நிலை யுடைய சாதநம் என்ப துணர்த்துதற்கு, "பொருளறத் துறந்து பிச்சையேற் றருந்தும் பூரண சாதநம்." என்றார். இதனை, "யாதனின் யாதனின் நீங்கியா னோதல், அதனின் அதனி னிலன்." (15 துறவு 1) எனவும், "அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும், வேண்டிய வெல்லாமொ ருங்கு." (15-துறவு 3) எனவும் வரும், திருக் குறளானும்; "நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர், குழவி யிடத்தே துறந்தார்." என (இளமை நிலையாமை) வரும் நாலடியா லும்; "குடைகொண்டி டகல்லவைய மெலாங்குளிர் வித் தெரி பொற்றிகிரிப், படைகொண் டிகல்தெறும் பார்த் திவ ராவதிற் பைம்பொற்கொன்றைத், தொடைகொண் ட வார்சடை யானம்ப லத்தான்தொண் டர்க்கேவல் செய்து, கடைகொண்ட பிச்சைகொண் டுண்டிங்கு வாழ் தல் களிப்புடைத்தே." என வரும், பட்டினத்தடிகளார் திரு வாக்கானும் உணர்க. ஞானிகட் கமைந்த குணங்கள்:- மைத்திரி, கருணை முதிதை, உபேக்ஷை, என்பன. தெருள் பெற்ற பெரியோரே தெளிவிக்கத் தகுதி யுடையோ ராகையால், "தெருளினைப் பெற்ற சாது சங்கம்" என்றார். 6

7. உருவினைப் பெற்றும் உருவினால் உறுபயன்
உண்மையா வுளதிலை யானால்,
மருளினைப் பெற்று மறுமுறை பிறந்தால்
மாநுட ஆக்கையே வருமோ,

திருகம தடைதல் திருகரன் கிருபை
கிடைக்கினாம் இன்றெனில் இலையென்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்தினம் பணிவாம்.

(இ-ள்) உருவினை பெற்றும் - (கிடைத்தற் கரிய மாநுட) வுடலைப் பெற்று வைத்தும், உருவினால் உறு பயன் - அவ் வுடலா லடையத் தக்க வீடுபேறானது, உண்மை ஆக உள தில்லை ஆனால்-பரமார்த்த மாக வுண்டாக வில்லையானால், மாநுளினை பெற்று மறு முறை பிறந்தால்- அவித்தை காரண மாகப் பின்னும் பிறவி யுற்றால், மாநுட ஆக்கையே வருமோ - மாநுட வுடம்பே கிடைக்குமோ (கிடைத்தல் அரிதாம் என்றவாறு), திருகமது அடைதல்-வீடு பேறு அடைதல், திருகரன் கிருபை கிடைக்கின் ஆம்-சிவ பிரான் திருவருள் கிடைக்கப் பெற்றால் உண்டாம், இன்று எனில் இலை என்-அத் திருவருள் கிடைக்கப்பெறா விடின் இல்லையாம் என்று உபதேசித் தருளிய, நல் பொருள்வை நகர் வாழ்-வளப்ப மிக்க பொருள்வை மா நகரத்தின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன்-உகந்த லிங்க ஞாந தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை தினம் பணிவாம்-அழகிய திரு வடிகளை (மந வாக்குக் காயங்களால்) வழிபாடு செய்வோமாக. (எ-று)

(வி-ரை) நால் வகைப் பிறப்பு எழு வகைத் தோற்ற மாகி யுள்ள உடம்புக ளுள்ளே, மாநுட வுடல் பெற்ற வுயிர்களே சரியை கிரியை யோக ஞாந சாதநங்களிலே பயின்று பிறவா நெறி பெறுவன வாகையாலும், செய்யத் தக்கன இவை, செய்யத் தகாதன இவை, யெனப் பகுத் துணரும் விவேகம் பெற்று, விதித்தன செய்து, விலக்கியன நீக்கி பேரின்பம் எய்தும் தகுதி யுடையன வாகையாலும், அத் தகைய உயிர்கட்குக் கருவி யாய உடல்களும் நீரில் எழுத்தை நிகர்த்து நிலையுத லில வாகையாலும், அவ் வுடல் கிடைத்த ஞான்றே அதனாற் பெறத் தக்க வீடுபேறடை

யச் சாதநங்களிற் பழகி யப்பேற்றைப் பெறுவிடின், பின்னும் அவ் வுடலே கிடைக்கு மென்பது ஒருதலை யன்றாகையாலும், "உருவினை—வருமோ" என்றார். இதனை, "நாச்செற்று விக்குண்மேல் வாராமுன் நல்வினை, மேற்சென்று செய்யப்படும்." (34-5) எனவும், "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே, உடம்போ டுயிரிடைநட்பு" (34-8) எனவும் வரும் திருக் குறளாலும், "கையிற் லறையுண்ணும் பந்து போலக் காலன் லறையுண்டு கணக்கிலாத, மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும் விரகிலார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார்." (4-4-30) என்னும் ஞான வாசிட்டத்தாலும், "மந்திரவாட் பெற்றும் பகை வெல்லான் மற்றதுகொண்டு, அந்தோதன் மெய்யை அரிந்தான்போன்று,— இந்தவுடல் — கொண்டுமுத்தி செல்லுங்கு றிப்பின்றிச் சிற்றின்பம், கண்டுவினைக் காளாங்கணக்கு." என வரும் ஆநந்தத் திரட்டாலும் கண்டுகொள்க.

நான்கு சாதநங்களையும் அவதிபரியந்தம் பெற்ற அதிகாரிக்குச் சிவ பிரானே சற்குரு மூர்த்தி யாய் எழுந்தருளி வந்து தத்துவ உபதேசஞ் செய்து மல மாயை கன்மங்களை நீக்கி வீடுபே றடையச் செய்வன் ஆகையால், "திருகமதடைதல்—— இலை" என்றார். இதனை, "குருவே சிவமெனக் கூறினன் நந்தி, குருவே சிவமென் பதுகுறித்தோரார், குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும், குருவே யுரையுணர் வற்றதோர் கோவே" என வரும் (6. சிவ குரு தரிசநம் 9—1581) திரு மந்திரத்தாலும், "செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை, மும்மை மல மறுவித்து முதலாய முதல்வன்றான், நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த, அம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே." (51 அச்சோ பதிகம்) எனவும், "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமும், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ." (33 குழைத்தல் 7) எனவும்

வருமீ திரு வாசகத்தானும் உணர்க. "வருமோ" என்ற விடத் தோகாரம் ஐயப் பொருட்டு. 7

8. செருகல்செய் யாது பொறிகளைப் போற்றித்
திநகரன் போலவே விளங்கிச்,
சருவகம் அடக்கிச் சருவணம் பேசாத்
தன்மையைச் சாருமா றருளப்,
பொருந்தலர் இன்றிப் பொருந்தர்வாழ் புலங்கள்
பொலிவுறு மாண்பினை யுடைய,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) செருகல் செய்யாது - கர்வம் அடையாது, பொறிகளை போற்றி - பஞ்சேந்திரியங்களையும் (விடயங்களிற் செல்லாது) தடுத்து, திநகரன் போல விளங்கி - சூரியன் போல் விளக்க முற்று, சருவகம் அடக்கி - மந நிக்கிரகஞ் செய்து, சருவணம் பேசா தன்மையை - வாக்கு மௌநத் தன்மையை, சாரும் ஆறு - அடையும் வழியை, அருள - அநுக்கிரகஞ் செய்ய, பொருந்தலர் இன்றி - பகைவர் இல்லாது, பொருந்தர் வாழ் புலங்கள் - நெய்வோர் வசிக்கின்ற வீடுகள், பொலி உறும் மாண்பினை உடைய - விளங்குகின்ற பெருமையினை யுடைய, நல் பொருள்வை நகர் வாழ் - வளப்பம் மிக்க பொருள்வை மா நகரின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன் - உகந்த லிங்க ஞாந தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை - அழகிய திரு வடிகளை, திநம் பணிவாம் - நாடோறு (மநம் வாக்குக் காயங்களால்) வழிபாடுசெய்வோமாக. (எ-று)

(வி-ரை) விரதங்களால் உண்டி சுருக்கல் முதலாய தவத் துறையிற் செல்லும் முற்றத் துறந்த முநிவர்கள், யான் எனதென்னுஞ் செருக் கற்று அகக் கரண புறக் கரண தண்டஞ் செய்து, உடலைப் பேணல் விட்டு, ஊன்றிய செல்வம் விட்டு, விட லருஞ் சுற்றம் விட்டு, வேட்கைவேரோடும் விட்டு, உலகியல் முழுதும் விட்டு, வீடுபெற

வேண்டுதலின், " செருகல் செய்யாது பொறிகளைப் போற்றி " என்றும், சூரியன் காட்சிப் பொருளாய் உயிர்கட் கிதஞ் செய்து, அவற்றால் வழிபடு தெய்வமாய்ப் போற்றப்பட்டு, வெளி யிருளை நீக்கித் தானும் ஒளி வடிவனாய் விளங்குதல் போல, முற்றத் துறந்தாரும் உயிர்களின் காட்சிக் கெளியராய், அவற்றிற் கிதஞ் செய்து, அவற்றால் வழிபடு தெய்வமாய்ப் போற்றப்பட்டு, அகத் திருளை நீக்கி ஞான வடிவராய் விளங்குதலால், " தி ந க ர ன் போலவே விளங்கி," என்றார். இதனை, "அந்தக் கரணம் அடங்கத் துறப்பதுவே, எந்தத் துறவினுநன் றெந்தாய்பராபரமே." (பராபரக் கண்ணி 34) என்னும் தாயுமானவர் திருவாய் மொழியானும், "மெய்வாய் கண்மூக்குச் செவியெனப் பேர்பெற்ற, ஐவாய வேட்கை யவாவினைக்---கைவாய்---கலங்காமற் காத்துய்க்கும் ஆற்ற லுடையான், விலங்காது வீடுபெ றும்." (துறவு 59) என்னு நாலடியாலு முணர்க

மந வாக்குகளின் அடக்கத்தை கூறினாரேனும் இனம் பற்றி மெய் யடக்கத்தையும் கொள்க. மந வாக்குக் காயங்கள் அடங்கினா லல்லது சித்த விசிராந்தியும், அதனா லுளதாகும் விலக்ஷணாநந்தமும் உள வாகா வாகலின், "சருவக மடக்கிச் சருவணம் பேசாத் தன்மையைச் சாரு மாறு" என்றார். இதனை, "ஆக்கப் படுக்கும் அருந்தளைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகந் துய்ப்பிக்கும், காக்கப் படுவனவும் இந்திரிய மைந்தினும், நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே" என்னும் வளையாபதிச் செய்யுளான் உணர்க. மந வாக்குக் காயங்க ளடங்கப் பெற்றுக் கண் மூடி மௌனியாய்த் தனியே யிருக்கும் முநிவன் நல்லோராற் போற்றிப் புகழ்ப்படுவன் என்பதை இச் செய்யுளாற் கண்டு கொள்க. 8

9. மருளர்கள் கூறும் மாண்பிலா மொழியை
மதித்துமே நாளினைக் கழித்தேன்,
இருளர்கள் இன்றி இருக்குநல் தேசம்
எங்குள தெனத்திரிந் தலைந்தேன்,

அருளர்கள் கூறக் கேட்டுநான் அடைந்தேன்
அன்பினுல் ஆளுதற் காகப்,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) மருளர்கள் கூறும் மாண்பு இலா - புல் லறி லறிவாளர் கூறுகின்ற மாட்சியின்றிய. மொழியை மதித் தும் நாளினை கழித்தேன் - (பய னில்லாத) மொழிகளை (பய னுடைய) மொழிகள் எனக் கருதி நாளுளை வீ ணுக்கி னேன், இருளர்கள் இன்றி இருக்கும் நல் தேசம்- அறிவீனர்கள் இன்றி இருக்கின்ற நல்ல இடம், எங்கு உளது என திரிந்து அலைந்தேன் - எவ் விட முளது எனத் தேடி அலைந்தேன், அருளர்கள் கூற கேட்டு நான் அடைந்தேன் - (பின்) மெய்ஞ் ஞானிகள் கூறக் கேள்வி யுற்று, தேவரீரைச் சரணுகதி யாக அடைந்தேன், அன் பினுல் ஆளுதற்கு ஆக - (ஆகையால்) கருணையோடு ஆட் கொண்டருளும் வண்ணம், நல் பொருள்வை நகர் வாழ்- வளப்ப மிக்க பொருள்வை மா நகரின்கண் ணெழுந் தருளி யிருக்கின்ற, உகந்த லிங்க ஈசன் - உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை - அழகிய திரு வடித் தாமரைகளை (மந வாக்கு காயங்களால்), திநம் பணி வாம் - நா டோறும் வழிபடுவோமாக. (எ-று)

(வி-ரை) தோற்ற முடையன வாகிய, சிற் றின்பத் திற் கேது வாகிய செல்வத்தினையும், அதனை யநுபவிக்குந் தகுதி யுடைய இளமையோடு கூடிய உடம்பினையும், கேடில வென்று கருதி, அவற்றின் மேற் பற்றுச் செய்து பிறவித் துன்பத்தினை யெய்தும் புல் லறிவாளரே. ஈண்டு, "மருளர்கள்" எனப்பட்டார். இதனை, "நில்லாத வற்றை நிலையின வென்றுணரும், புல்லறி வாண்மை கடை." (34 நிலையாமை) என்னும் பொய்யா மொழியானும், "இள மையும் நில்லா யாக்கையும் நில்லா, வளவிய வான்பெருஞ் செலவமும் நில்லா." என்னும் மணி மேகலை யடிகளானும்,

"நீரிற் குமிழி இளமை நிறை செல்வம், நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்——நீரில்,— எழுத்தாகும் யாக்கை." என வரும் நீதி நெறி விளக்கத்தானும் உணர்க.

அவர் கூறும் மாண்பிலா மொழிக ளாவனவற்றை:—

"பரமேது வினைசெயும் பயனேது பதியேது பசுவேது பாச மேது, பக்தியே தடைகின்ற முக்தியே தருளேது பாவபுண் ணியங்க ளேது, வரமேது தலமேது விரதமே து ஒன்றுமிலை மனமிரும் புண வுண்டிகல், வத்திரம ணிந்துமட மாதர்தமை நாடிநறு மலர்சூடி விளையாடி மேற். கரமேவ விட்டுமுலை தொட்டுமகிழ்ந் தவரோடு கலந்துமகிழ் கின்ற சுகமே, கண்கண்ட சுகமிதே கைகண்ட பலன்." என வரும் திரு வருட் பிரகாசர் திரு வாக்கா னுணர்க.

சில் முட் காடு, தன்கண் காலை வைப்பார்க்கு யாண்டுந் துன் படைவிப்பது போல, உலகிற் பெரும்பான் மையும் மருளர் கூட்டமே மலிந்து கிடந்து சான்றோருக் குறுகண் செய்கின்றமையின், அக் கூட்ட மழிந்து, நல்லோர் கூட்டமே மலிந்து, மக்கட் டொகுதிக் கிதஞ் செய்தல் வேண்டும் என்னும் பெருந் தகைமை கொண்டு, "இருளர்க ளின்றி ——அலைந்தேன்" என்றார்.

ஈண்டு அருளர் என்றது, அறம், பொருள், இன் பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினையும் உலகிற் குள்ள வா றுணர்த்தி தன் னலங் கருதாது, பிறர் நலங் கரு தித் தியாக யோக சாமதி நிலைகளில் நிலைபெற்றிருக்கும் முற்றத் துறந்த முனிவரை யெனக் கொள்க. என்னை? ஒன்றை யொன் றொவ்வாத சமய நெறிகள் பலவற்றானும் போற்றப்படுவது அருளே யாதலின். இதனை, "நல்லாற் றுன் நாடி அருளாள்க பல்லாற்றாற், றேரினும் அஃதேது ணை" என்னும் (25 அருள் உடைமை 2) பொய்யா மொழி யா னுணர்க.

10. அருளுடை யோர்கள் அருளிலை என்றே
அன்பினால் அறைந்தனர் பொய்யைத்,
தெருளுடை யவனே அதனையுங் கேட்டுச்
செப்பருங் கையிலையில் இருந்தான்,
மருளுடை யானே மருளனென் றுண்மை
வாசகம் கூறவே வந்து,
பொருள்வைநன் னகர்வாழ் உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம் பணிவாம்.

(இ-ள்) அருள் உடையோர்கள்-அருளுடையோர் களாகிய சான்றோர்கள், அருள் இலை என்று-(தாம்) அருளுடையோர்கள் இல்லை என்று, அன்பினால்-(மிக்க) பக்தியினால், பொய்யை அறைந்தனர்-பொய்யைக் கூறினார். தெருள் உடையவனே-சச்சிதாநந்த வடிவனாகிய சிவபெருமான், அதனையும் கேட்டு-(அவர்கள் கூறும்) அப் பொய்யினையும் கேட்டு, செப்ப அரும் கையிலையில் இருந்தான் - சொல்லுதற் கரிய கைலாய மலையில் எழுந்தருளி யிருந்தான், மருள் உடை யானே - மயக்கத்தை யுடைய அடியேனே, மருளன் என்று உண்மை வாசகம் கூற-மயக்க முடையேன் என்று உண்மை வாசகங் கூற, வந்து-(எழுந்தருளி) வந்து, நல் பொருள் வை நகர் வாழ்-வளப்ப மிக்க பொருள்வை மாநகரின்கண் ணெழுந்தருளி யிருக் கின்ற, உகந்த லிங்க ஈசன்-உகந்த லிங்க ஞான தேசிக மூர்த்தியினது, பொன் அடிகளை - அழகிய திரு வடித் தாமரைகளை, நிநம் பணிவாம்-நா டோறும் (மன வாக்குக் காயங்களால்) வழிபாடு செய்வோமாக. (எ-று)

(வி-ரை) சான்றோர்கள் அருள் வடிவ ராயிருந்தும் தமக் கருளிலை எனக் கூறியது, அவ் வருளின் அடைதற் கருமை நோக்கியாதலால், அவ் வாறு கூறியதைப் பொய்ம்மை என்பது உபசார மன்றிப் பரமார்த்தம் அன்று என்பதும், அருள் வடி வாய அவர்கட்கு இறைவன் மீண் டும் அருளை யளிக்கும் பொருட்டு எழுந்தருள வேண்டிய தில்லை யாகையால் கைலைக்கண் ணிருந்தான் என்பதும்,

தாம் உண்மை யாகவே அரு ளின்றி அதனை வேண்ட அவ் விறைவனே ஞாநாசாரியத் திருக் கோலங் கொண்டு எழுந் தருளி வந்தான் என்பதும், குறை யுளார்க்கு அக் குறையை நிவிர்த்தி செய்வது. இறைவன் திரு வருள் நெறி யாகை யால், தமக்கும் அக் குறையை நிவிர்த்திப்பான் வந்தான் என்பதும் தோன்ற, "மருளுடை— வந்து, என்றுங் கூறி னார். இதனால் வேண்டுவார்க்கு வேண்டியன கொடுத்து அவர்க் கின் பருள்வது இறைவன் திரு வருளுக் கியல்பு என்பதையும் பெறப்படுத்தினார்." இதனை, "தாழ்ந்தடியே வணங்குவார்க்குச் சிந்தைகாண்" என வரும் அப்பர் அடிகளார் திரு வாக்கா னுணர்க. 10

சிக்கல்–பொருள் வைத்த சேரி,
உகந்த லிங்க ஞாந தேசிகர் தோத்திரமும்,
பரி மள தீப உரையும் முற்றுப் பெற்றது.

கோவிலூர் மடம்,

## ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் தோத்திரமும்,

பரிமள தீப உரையும்.

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. பாவலர் கூறும் பஞ்சகோ சத்தின்
   பான்மையைப் பகுத்துநன் குணர,
   ஆவலில் லாமல் இருக்கினும் அருளால
   ஆக்கையை வெறியினால் நீங்கி,
   நாவினால் வழுத்தா முத்தியை யெமக்கு
   நல்கியே பவந்தனைத் துடைக்கக்,
   கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
   குருபரன் தனைத்தினம் பணிவாம்.

(இதன் பொருள்) பாவலர் கூறும் - சாத்திர கர்த் தாவா யுள்ளோர் கூறியருளிய, பஞ்ச கோசத்தின் பான்

மையை - ஐந்து கோசங்களின் உத்தேசம், இலக்கணம், பரீக்ஷைகளை, நன்று பகுத்து உணர - ஐயந் திரிபின்றி விரித்து உணர்வதற்கு, வெறியினால் ஆவல் இல்லாமல் இருக்கினும் - (அப் பஞ்ச கோச) மயக்கத்தால் தீவிர இச்சை இல்லாமலிருக்கினும், அருளால் ஆக்கையை நீக்கி-கருணையால் பஞ்ச கோசங்களையும் நேதி களைந்து, நாவினால் வழுத்தா முத்தியை - வாக்கிற் கெட்டாத வீடுபேற்றை, எமக்கு நல்கி - அடியோங்கட்கு அநுக்கிரகஞ் செய்து, பவம் தனை துடைக்க - பிறவி நோயை நீக்கியருள, கோவில் ஊர் வாழும் - கோயி லூ ரென்னுந் தலத்தி லெழுந்தருளி யிருக்கின்ற, முக்தி ராம லிங்க-முக்தி ராம லிங்க னென்னுந் திருநாம முடைய, குருபரன் தனை - பரமாசாரியரின் றிரு வடித் தாமரைகளை, தினம் பணிவாம் - நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடுசெய்வாம். (எ-று)

(வி-ரை) அந்ந மயம், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம், ஆநந்த மயம், எனக் கோசம் ஐந் தாம்; பரு வுடல், அந்நமய, மெனவும், நுண் ணுடல், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம் ஆகிய மூன்றன் கூட்டம் எனவும், கார ண வுடல், ஆநந்த மயம் எனவுங் கொள்க. கோசம் என்பது - கத்தியி னுறைக்கும், திரவியப் பொக்கிஷத்திற்கும், கோசகாரம் என்னும் புழுவின் கூட்டிற்கும் பெய ராம். கத்தியையும், திரவியத்தையும் புழுவையும் முறையே உறையும், பொக்கிஷமும், கூடும். மறைப்பது போல, இவ் வைங் கோசங்களும் ஆந்மாவை மறைப்பதால் கோசம் எனப்பட்டன. தாய் தந்தையர் உண்ட உணவினா லுண்டாகிய சுரோணித சுக்கிலங்களால் தாயின் வயிற்றி லுற்பத்தி யாய், பிறந்த பின், பால் முதலிய உணவினால் விருத்தி யடைந்து, இறந்த பின் அந்ந காரண மாகிய பிருதிவி முதலியவற்றில் ஒடுங்கும் பரு வுடலே அந்ந மய கோச மாம். கர்மேந்திரியம் ஐந்துடன் கூடிய ஐந்து பிராணன், பிராண மய கோச மாம். ஞாநேந்திரியம் ஐந்துடன் கூடிய மநது, மநோ மய கோச மாம். ஞாநேந்

திரியம் ஐந்துடன் கூடிய புத்தி, விஞ்ஞான மய கோச மாம். சொரூபாஞ்ஞான மாகிய காரண வுடலே ஆநந்த மய கோச மாம்.

என துட லென்னும் அநுபவத்தால், உடையதும் உடைமையும் வேறு யிருத்தலின், அந்ந மயமும்; பிராணன் சுழுத்தியில் சடமா யிருத்தலின், பிராண மயமும்; காமக் குரோதாதி விருத்திகளோடு கூடி யிருத்தலாலும், நியம மில்லாத சுபாவ முடைய தாதலாலும், மநோ மயமும்; குட முதலியவற்றைப் போல, இலய முதலிய அவஸ்தைகளை யுடையதா யிருத்தலால், விஞ்ஞான மயமும்; மேக முதலிய பதார்த்தங்களைப் போல, ஒவ் வோர் காலத் துண்டாவ தாகிய க்ஷணிக மாதலால், ஆநந்த மயமும்; ஆன்மா வல்ல வென்று பகுத் துணர்ந்து, இக் கோசங்கட்கு வேறாகிய யாதொரு தர்மமு மின்றிய பிரத்யக் கபிந்ந பிரம்ம சொரூபத்தை யுணர வேண்டும் என்பார். "கோசத்தின் பான்மையைப் பகுத்து நன் குணர" என்றார். இதனை, "ஆற்றுமிவ்வுடம் பிற்பர மைம்புலன், மாற்று மைம்புல னிற்பர மாமநம், போற்றும் புத்திய திற்பரம் புத்தியிற், தோற்று கின்றது காண்பது தொல்பரம்." (3-25) என வரும், பகவத் கீதையா னுணர்க. நித்தியப் பிராப்தத்தின் பிராப்தி யாகிய சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், "நாவினுல் வழுத்தா முத்தி" யென்றார். என்றாரேனும் இனம் பற்றி மநத்தையும் கொள்க. 1

2. ஏவரும் விரும்பும் நான்மறை இயம்பும்
எண்ணரும் கருமநற் பத்தி,
தாவரு ஞானம் அடைந்துய்வான் அருளச்
சற்குரு மூர்த்தியாய் விளங்கி,
நாவில்வாழ் மாது தவனுமாய்ப் பொன்னின்
நற்றவன் உமைகொழு நனுமாய்க்,
கோவிலூர் வாழும் முத்திரா மலிங்க
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

(இ-ள்) ஏவரும் விரும்பும் நான் மறை - (தன்னை யடைந்தவர்கள்) சான்றோ ரனைவரும் விரும்புகின்ற நான்கு வேதங்களாலும், இயம்பும் - கூறப்படுவன வாகிய, எண்ண அரும் கருமம் - கருதுவதற் கரிய நிஷ்காம கர்மத்தையும், நல் பக்தி - நன்மை யாகிய பக்தியும், தாவு அரும் ஞாநம் அடைந்து - அழித லில்லாத (தத்துவ) ஞாநத்தையும் பெற்று, உய்வான் அருள - வீடுபே றடையும்படி அநுக்கிரகஞ் செய்ய, சற் குரு மூர்த்தி யாய் விளங்கி - ஞாநாசாரிய னாய் (புவிக்கண்) வந்து, நாவில் வாழ் மாதுதவனும் ஆய்-கலைமகள் நாயக னாகிய பிரம தேவ னாகியும், பொன்னின் நல்தவனும் ஆய்-அலை மகள் நாயக னாகிய திருமா லாகியும், உமை கொழுநனும் ஆய் - மலை மகள் நாயக னாகிய சிவபிரா னாகியும், கோவி லூர் வாழும்-கோயி லூரென்னுந் திருத் தலத்தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, முத்தி ராம லிங்க குருபரன் தனை - முத்தி ராம லிங்க னென்னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, நிதம் பணிவாம் - நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம்.

(வி-ரை) நான் மறை யென்றமையின், அவற்றின், வழியுஞ் சார்பு மாகிய, கண்ண பிரான் அருளிய பகவத்கீதை ஸ்மிருதிகளையும், ஸ்ரீ வியாச பகவான் அருளிய உத்தர மீமாஞ்ஸையையும், பதஞ்சலி பகவா னருளிய யோக நூலையும், கொள்க.

நிஷ்காம கரும மாவது:— பலனை விரும்பாது ஈசுவரார்ப்பண மாக வியற்றுஞ் சரியை கிரிகைக ளாம். இதனால், மல தோடம் நீங்கும். மல மாவது:— அந்தக் கரணத்தின்கண் ணுள்ள மலிந வாசனை. பக்தி யாவது:— இறைவனிடத்தில் செலுத்தப்படும் அன் பாம். அது, உத்தமம், மத்திமம், அதமம், எனவும், சாத்விகம், இராஜசம், தாமசம், எனவும், பரம், அபரம், எனவும், சிரவணம், கீர்த்தநம், ஸ்மரணம், பாத சேவநம், அர்ச்சநம், வந்தநம் தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதம் எனவும், பல திறப்

படும். ஸகுண பக்தியினால் நிர்க்குண ஞானம் அடையப் படுகின்றது, பக்தியா லடையப் படாத ஞானமுடமானது, அது போலவே பக்தியோடு கூடாத கருமமும் முட மானதே. கருமத்தோடு கூடிய பக்தியா லுளதாவது ஆத்ம ஞான மாகலின், அப் பக்தி, கரும ஞானங்கட் கிடையே சிங்க நோக் காக அமைக்கப்பட்டுளது. எனவே கரும காலம் ஞான கால மாகிய இரண்டிலும் பக்தி ஊடு ருவி யுள்ள தென்பதும் பெற்றாம். இனி ஆன்றோர் சிலர் ஆத்ம சொரூபத்தை இடைவிடாது சிந்தித்தலே பக்தியின் முடிந்த நிலையாம் என்பர், இதனை " நமது உண்மையான இயல்பை (சொரூபத்தை) அநுசந்தானம் பண்ணலே பக்தி யாகும் " என்னும் ஸ்ரீ ஆதிசங்கரர் (விவேக சூடாமணி) அருள் வாக்கால்; " பக்தியே எனது உண்மையான இயல்பு " என்னும் நாரேசுவரர் திரு வாக்காலும் உணர்க இவ் வநுசந்தானம் விட்சேப நீக்கத்தால் ஞானத் திற்கும் சீவன் முக்தியானந்தத்திற்கும் காரணமாதல் அறிக. கரும உபாசனைகளால் இரு வினை யொப்பு மல பரிபாகம் பெற்ற ஞானறு ஞானோதயம் உண்டாகும். இதனை, "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட அத்தன்" என்னும் (அச்சோ 1) திரு வாசகத்தா னுணர்க. இதனால், ஆவரண தோடம் நீங்கும்;— ஆவரண மாவது:— சொரூ பத்தை " நாஸ்தி நாபதி " யென மறைப்பது.

தன்னை யடைந்தவர்க்குக் கரும முதலிய மூன்றையு முள வாக்கலானும், அவற்றை நிலைபெறச் செய்தலானும், மல முதலிய முத் தோடங்களையு நீக்கலானும், பிரமா முதலிய மூவரும் ஞானாச்சாரிய வடிவு கொண்டன ரென்னு நயத்தைக் கண்டுகொள்க. 2

3. மூவிரு சமயம் ஆகிய மார்க்க
முத்தியை அடைவிக்கா தென்று,
நாவினால் உரைத்து நல்லதி காரி
நன்மையை நாடியே சடமாம்,

ஆவனல் ஆக்கை அனைத்துநீத் தெம்தம்
ஆன்மரு பத்தினை அருளக்,
கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திரம் பணிவாம்.

(இ-ள்) நன்மையை நாடி (அவர்கட்கு) நன்மையாவ தின்னதென எண்ணி, நல்ல அதிகாரியை நாடி-நல்ல அதிகாரியை ஆராய்ந்து, மூ இரு சமயம் ஆகிய மார்க்கம்-அறு வகையாகிய சமய நெறிகளும், முத்தியை அடைவிக்காது என்று-வீட்டினை அடையுமாறு செய்யாது என்று கூறி, நாவினால் உரைத்து-திரு வாயால் வெளியிட்டு, நல் ஆவல் சடம் ஆம் ஆக்கை-மிக்க விருப்பம் வைக்கத் தக்க சடமாகிய உடல்முதலாம், அனைத்தும் நீத்து - எல்லாப் பொருள்களையும் நீக்கி களைந்து, எம் தம் ஆன்ம ருபத்தினை-எம்முடைய ஆன்ம வடிவத்தினை, அருள-(உள்ளவாறு) உபதேசிக்க, கோவில் ஊர் வாழும்-கோயிலூ ரென்னுந் திருத் தலத்தின்கண் மேவுழுந் தருளியிருக்கின்ற, முக்தி ராம லிங்க குருபரன் தனை-முக்தி ராம லிங்க னென்னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, திரம் பணிவாம் - நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம்.

(எ-று)

(வி-ரை) சகல கேவலங்களுக்கு மத்திய மாகிய சுத்தாவத்தையே வீ டடைதற் கேது வென்று இருக்காதி வேதாகமங்கள் கூறுகின்றமையின் அந் நெறிச் செல்வோர்க்கு பிறப் பிறப்பு நீங்குமே அன்றி. ஏனைச் சமய நூல் கூறும் நெறி செல்வோர்க்கு அவை நீங்கா வாகையாலும்; காமம், வெகுளி, மயக்க மென்னும் முக் குற்றங்களையும் மேன்மே லாக்குகின்ற மேற் கூறிய விரண் டவத்தை களின் பகுதி யாகச் சமயத் தோர்கள், தங்கள் சித்த விகற்பத்தா லாக்கிய அறு வகைச் சமயங்களும், பிறவிப் படு குழியில் வீழ்த்து மாகையாலும், அச் சமயப் பற்றால் பிற சமயங்களில் வெறுப் பாதிய தீக் குணங்கள் மேலிட்டு

இருமை யின்பமும் இழக்கப் பிறப் பிறப்பு நேரிடு மாகை யாலும், "மூவிரு சமய மாகிய மார்க்கம் முத்தியை அடை விக்காது." என்றார்.

"நாலு வேதமு மொருசம நிலைசொல நவைசெயீ ரவத்தைப்பாற், கோலு மூவிரு சமயமா கியபடு குழியினூ டிழிகின்றாய்." என்னும் (14) வைராக்கிய சதகத்தாலும், "பொறிவழி சென்று மீளும வலம திகொடு பொருசம யங்க ளாறும றியவி ழுமதில், அறிவழி வொன்றி லாத பொருளதெனவுள வநுபவ வங்க மேறு மறிஞர கல்வரே." என வரும், (26) சசி வங்ச போதத்தாலும் உணர்க.

"உரைத்து" எனக் கூறினு மமையு மாயினும், தீய சொற் பயிலாமையும், ஆங்மோபதேசம் பயிலுதலும், அறி வித்தற்கு, "நாவினால்" என வேண்டாது கூறினார். சாதநம் நான்கு முடையான் என்பார், "நல் அதிகாரி" என்றார். "அனைத்தும் நீத்து" என்றது, அதத்வியாவிருத்தி இலக் கணம். வீடுபே றாகிய நன்மையைத் தரும் ஆங்மோப தேசத்தை, நன்மை என்றது இலக்கணை, சாதந நான்கும் அவதி வரையிலும் பெற்ற அதிகாரியே, சுரோத்திரிய பிரம்ம நிஷ்ட ராகிய ஞாநாசாரியன் கிடைக்கப் பெற்று, அவன் உபதேச வாயிலாக வீடுபே றடைவ துகையா லும், அத் தகைய அதிகாரியைச் சோதித்தே உபதேசிக்க வேண்டு மாகையாலும், அங்ஙனே அதிகாரியும் ஞாந வாசா னைச் சோதித்தே சர ணடைய வேண்டு மாகையாலும், "நல்லதி காரியைநாடி" என்றார். இதனை, "இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமம்நீ யென்னல் வேண்டும், வியப்புறவா சையிலுழல்வார்க் கிவ்வா றேதின் மீளாத நிரயகில் வீழ்த்த தாகும், தியக் குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தவனைப் போல் வார்க்கே திகழத் தோன்றும், மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனு மாங்கே." என வரும், (4-4 தார்குரன் 12) ஞாந வாசிட்

டத்தால் அறிக. நாடி யென்பதை, அதிகாரி நன்மை இரண் டனோடுங் கூட்டுக. நாடி நாடி, உரைத்து எனக் கூட்டுக.3

4. பூவில்வாழ் மாது கணவனல் கீதை
புகலுநற் சொருபத்தை உணர,
மேவுசா தநநான் கமைவரப் பெற்ற
மேன்மைசேர் மநமுடை யவர்க்குத்,
தூவில்சத் சொருப சுகத்தினை அளித்துச்
சுருதிகள் போற்றவீற் றிருந்து,
கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூவில் வாழ் மாது-செந் தாமரையில் எழுந் தருளியிருக்கின்ற திரு மகளுடைய, கணவன் நல் கீதை புகலும் நாயக னாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா திரு வாய் மலர்ந் தருளிய நல்ல கீதையிற் சொல்லப்படுகின்ற, நல் சொருபத்தை உணர சுத்தப் பிரம்மத்தைச் சாட்சாத்கரிப் பதற்கு, மேவு சாதநம் நான்கு அமைவர பெற்ற-ஏது வாகிய நான்கு சாதநங்களையும் அவதி வரைப் பெற்ற, மேன்மை சேர் மநம் உடையவர்க்கு-சிறப்புப் பொருந்திய மநத்தை யுடைய அதிகாரிகட்கு, தூவில் சத் சொருப சுகத் தினை அளித்து-சுத்த சித்து சத்து வடிவ ஆந்ம சுகத்தினை அநுக்கிரகித்து, சுருதிகள் போற்ற வீற்றிருந்து-வேதங்கள் போற்ற வீற்றிருந்து, கோவில் ஊர் வாழும்-கோயி லூ ரென்னுந் திருத் தலத்தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, முக்தி ராம லிங்க குருபரன்தனை-முக்தி ராம லிங்க னென் னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, திநம் பணிவாம்-நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம்.

(வி-ரை) கீதைகள் பல விருப்பினும் வேதத்தின் முக் காண்டப் பொருளையும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலோடு, ஐந் தாம் வேத மாகிய பாரதத்தின் சிரோ மணி யாக விளங்குவது ஸ்ரீமத்: பகவத் கீதையே ஆகலின், "நற் கீதை" என்றார். பிரம்ம வஸ்து மாயோபாதியால்

காரண காரிய முதலாய பல் வேறு நாமங்களைப் பெறு மாயினும், அவயவப் பகுப் பில்லதும், தன்னை யொத்த தில்லதும், தனக்கு வேருய தில்லது மாய அகண்டைக ரச சுத்தப் பிரம்மத்தையே,“ஏகமேவாத்துவிதீயம் பிரமம்” என்னும் வேத வாக்கியம் உணர்த்துகின்றமையாலும், அதனைத் தாருக வுணரவே, உணர வேண்டியவற்றை யெல்லாம் உணர்ந்த தாகு மாகையாலும், அதுவே ஈண்டு ஆசிரியரால் “நற் சொரூபம்” எனப் பட்டது இதனை,

“தன்னைச் சிவமென் றறிந்தவனே
யறிந்தான் றன்னை யுண்மையாய்த்,
தன்னைச் சிவமென் றறியாதா
னறியா னென்றுந் தன்னுண்மை,
தன்னைச் சிவமென் றறிந்த அன்றே
தாழ்வாம் பாசந் தனைநீப்பன்,
தன்னைச் சிவமென் றறியாதான்
றனக்குப் பிறப்பே துணையாகும்

என வரும் (24 மனோ லய கதி 16) பிரபு லிங்க லீலை யால் உணர்க.

சாதந நான்கினையும் அவதி வரைப் பெற்ற உத்தமாதி காரிகளே, சுத்த சத்துவாந்தக் கரணம் உடையராய் ஞாநா சாரியன் அருளால் சிரவணுதிகளும், சொரூப சாட்சாத்கார மும், அடையத் தகுதி யுடையர் என்பார், “மேன்மைசேர் மநமுடையவர்க்கு” என்ருர். சொரூப சுகம் தன் வடிவ மாயினும், குருபர னருளா லடையப் பெற்ற நித்தியப் பிராப்தத்தின் பிராப்தி யாகையால் “அளித்து” என்றும் ஞாநாசாரியன், துக்காபாவம், சர்வ காமாப்தி, கிருத கிருத்தியத்துவம், பிராப்தப் பிராப்பியத்துவம், என்னும் ஞாந பல சதுட்டய முடையருய்த் தனக் கொப்பாரும், மிக்காரு மின்றிச் சச்சிதாநந்த சிவ சொரூபமா யிலகலின், “வீற்றிருந்து” என்றும் கூறினர். இதனை,

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே."

என வருந் (ப் சிவ குரு தரிசநம் 1581) திரு மந்திரத்தா லுணர்க. வீற்றிருந் தென்பதற்கு, அதிதீவிர பக்குவிகட் குபதேசிக்கும் பொருட்டு அன்னார் வருகையைப் பால் நினைந் தூட்டுந் தாயினும் சாலப் பரிந்து, பெருந் துறையிற் குருந்தின் கீழ் வாதவூரர் பொருட் டிருந்த இறைவன் போன்று, எதிர் நோக்கி யிருந்து, எனினும் அமையும், வேதங்கள் "நாதனருளால் மேலியது கொண்டுதனை நல்க வரும்" என்பது போல, பல வாறாக ஞானிகளைப் புகழ்ந்து நிற்றலின், "சுருதிகள் போற்ற வீற்றிருந்து" என்றனர். 4

5. பாவிகள் தமது பாவத்தைப் பாறிப்
  பற்றினைப் பதைப்பறப் போக்கி,
நாவினால் வழுத்த யோக்கிதை செய்த
  நன்மையை நினைந் துநைந் துருகித்,
தேவிதே வனுமாய் வன்னிமா முகனாய்ச்
  செவ்விய வேலுடை யவனாய்க்,
கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
  குருபரன் தனைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பாவிகள் தமது பாவத்தை பாறி - பாவிக ளுடைய பாவங்களை நீக்கி, பதைப்பு அற பற்றினை போக்கி - (அவர்கள்) முத் தாபங்களும் நீங்கும்படி ஆசையை விலக்கி, நாவினால் வழுத்த யோக்கிதை செய்த - (தன்னை) நாவினாற் றுதிக்கும்படித் தகுதி யுடையராகச் செய்த, நன்மையை நினைந்து நைந்து உருகி - கருணையை நினைந்து(மநம்)நெகிழ்ந்து உருகப் பெற்று, தேவி தேவனும் ஆய் வன்னி மா முகன் ஆய் - சிவனுஞ் சிவையு மாகி வன்னி யைங்கர னாகி, செவ்விய வேல் உடையவன் ஆய் - சிறந்த வே லாயுத னாகி, கோவில் ஊர் வாழும் - கோயி லூ

ரென்னுந் திருத் தலத்தின்கண் ணெழுந்தருளியிருக்கின்ற, முக்தி ராம லிங்க குருபரன் தனை - முக்தி ராம லிங்க னென்னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, திநம் பணிவாம் - நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) உருகிப் பணிவாம். எனக் கூட்டுக. பாவிகள்-பஞ்ச மகாப் பாதகச் செய லுடையவர்கள், அவை, பொய் கொலை களவு கள் காமம். அப் பாவம், தன்னை ஆக்கினரை, ஆக் குழாத்துள் நின்ற தன் தாயைத் தேடி காணுங் கன்று போலப், பிறி தொரு காலத்தும், பிறி தொரு தேயத்தும், பிறி தொ ருடம்பினுஞ் சென்று, இருமைப் பயனையும் கெடுத்தற் கொடுமை யுடைய தாகை யாலும், இப் பாவிகள் செய் துள்ள தீவினையின் வலியால், இவர்கள் பெயரைச் சொல்வோரும், இவர்கள் குலத்திற் றோன்றித் தேவ பதத்தி லிருந்த பிதிர்க்களும்,எரிவாய் நரகம் புகுவா ராகையாலும், "பாவிகள் தமது பாவம்" எனருர். இவற்றை,

"எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை வீயாது பின்சென்ற டும்." என வரும் (21 தீ வினை அச்சம்) திருக் குறளானும்,

"பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று,
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லை,
பழவினையு மன்ன தகைத்தே தற்செய்த,
கிழவனை நாடிக்கொ ளற்கு." என வரும்
(பழ வினை 101) நா லடியாலும்,

"ஏமம் புருவா ருளபா தகரா மியாவர்க் குளுமிக் கவனு குமிவன், நாமம் புகல்வார் குலமும் எரிவாய் நரகம் புகுமா றுநடந் தனனே." என்றும், (6) "மலமே வியதீ வினையின் வலியால் மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்,

குலமே வியமெதன் புலவா ணர்களும் கொடிதாம் நரகம் குடியே றினரே.'' (7) என்றும் வரும் சசி வங்க போதத் தா லும் உணர்க.

ஞாந வாச ருகக், கருணை வடி வாகிய இறைவன் திருக் கோலங் கொண்டு வருதலின், அவன் கருணை நோக் கால் இரவி முன் இமம் போல, பாவ மெலாம் நீங்கு மாகை யால், "பாவத்தைப் பாறி" என்றூர். இதனைப், " புணர்ந்த பாவமெ லாம்பரி பூரணம், உணர்ந்த ஞாநிவி ழிபட வோ டுமே.'' என்னும் (2) சசி வங்க போத்தா லுணர்க.

மூத் தாப மாவன:- தன்னைப் பற்றி வருவன, பிற வுயிரைப் பற்றி வருவன, தெய்வத்தை பற்றி வருவன. "நாவினல் வழுத்த" என்றமையின், மநத்தால் நினைத்தலும், காயத்தால் வணங்கலும் கொள்க.

குருபரனே எல்லாத் தேவதை வடிவு மாவன் என் பதை, " பலன்கள் வேண்டிய பரிசெலாம் பலித்திடும் பரமதத் துவஞாநி, நலங்கொள் நாமமாம் மந்திரம் செபித் திடல் நயந்தவ ரொடும், சலங்கொள் தீர்த்தமாம் அவன் திரு மேனியே சகலதெய் வமுஞ் செவ்வாய், மலர்ந்த வாசக மறுபிறப் பெனவரும் மயற்பிணி மருந்தாகும்.'' என வரும் பாவால் உணர்க.

ஏவ விழையர் தாய் வயிறு என்பது போல, பாவி கள் பாவம் என்பது அமைவாய் நின்றது. அதற் கேற்பத் தமது என ஒருமை யுருபு வந்தது. 5

6. பூவில்வாழ் சிவர் போற்றவீற் றிருந்து
புநிதரின் பாவநீக் குதற்கு,
ஆவியோ டாக்கை தநமிகப் பெற்றே
யரியமா வாக்கியம் அருளி,
வீவரும் ஞாநம் அடைந்தன்பு பெறவே
வியன்குரு வாகிவந் தாண்ட,
கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
குருபரன் தலைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பூவில் வாழ் சீவர் போற்ற - உலகின்கண் வாழ்கின்ற மக்கள் வாழ்த்தும் வண்ணம், வீற்றிருந்து புரி தரின் பாவம் நீக்குதற்கு - எழுந்தருளி யிருந்து உத்தமாதி காரிகளின் வினைகளை நீக்குதற் பொருட்டு, ஆவியோடு ஆக்கை மிக தாம் பெற்று - உடல் பொருளாவி மூன்றை யும் (கர நீரால்) பெற்றுக்கொண்டு, அரிய மா வாக்கியம் அருளி - கிடைத்தற் கரிய (தத்துவமசி) மா வாக்கியத்தை உபதேசித்து, சீவ அரும் ஞானம் அடைந்து - (அவர்கள்) சொருப ஞானத்தை அடைந்து, அன்பு பெற - அன்புரு வாகிய பிரம்மமே தா மாகச் சாட்சாத்கரிக்கும்படி, வியன் குரு ஆகி வந்து ஆண்ட - ஞானாசாரிய ருகி வந்து அடிமை கொண்ட, கோவில் ஊர் வாழும் - கோயி லூ ரென்னுந் திருத் தலத்தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, முக்தி ராம லிங்க குருபரன் தனை - முக்தி ராம லிங்கன் என்னும் திரு நாம முடைய ஞானாசாரியனை, நிதம் பணி வாம் - நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) வீற் றிருந் தென்பதற்கு, நான்காம் பாவின் உரையை ஈண்டுங் கொள்க. பாவ புண்ணியங்கட்குக் காரண மாகிய இரு வினைகளையும், பாவம், என்றார், என்னை? நல் வினையும் பிறத்தற் கேது வாகலின். குருபரன் உடல் பொருள் ஆவி மூன் றனையும் பெறுதல் என்றது: அவற்றின் கண் ணுள்ள யா னென தென்னும் அகங்கார மமகாரங்களை விடுத லாம். இதனை, "அவி யேயடி யேன்செய்கை மாறு னக் கென்னெனிற், பாவி யேனது தானுமுன் னுடைய தாம் பண்டே." என்னும், (103) சசி வர்ண போதத்தானும். "அன்றே யென்றன் ஆவியு முடலு முடைமை யெல்லா மும், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ." (குழைத்த பத்து 7) என வரும், மணி வாசகத்தானும் உணர்க. ஈசுவர சாட்சி யாகிய பிரம்மமே சீவ சாட்சி யாகிய ஆத்மா வாதலைப் போதிக்கும்" தத்துவ மசி " மா வாக்கியமும், சீவ சாட்சி யாகிய ஆத்மாவே ஈசு

வர சாட்சியாகிய பிரம்ம மாதலைப் போதிக்கும் "துவந் தத் அசி" மா வாக்கியமும், ஓதப் புரோத பாவ மாக ஐக்கி கியங் கூறுதலால், முறையே பிரம்மத்தின்கண் பரோட்சத்து வப் பிராந்தியும், ஆத்மாவின்கண் பரிச்சிந்நத்துவப் பிராந்தி யும் நீங்கப் பெற்று, பிரம்மத்திற்கு, நித்தியாபரோட்சமா யுள்ள ஆத்மாவோடு அபேதமும், ஆத்மாவிற்கு, வியாபகமா யுள்ள பிரம்மத்தோடு அபேதமும் சித்திக்கின்றமையால், இவ் வகையில், சீவப் பிரம்ம அபேதத்தை விட்டு விடாத இலக்கணையாற் போதிக்கும், "தத் துவ மசி" மா வாக்கி யம் என்பார், "அரிய மா வாக்கியம்" என்றார், இதனை. "தானவ னாக அவனே தானாயிட, ஆனவி ரண்டில் அறி வன் சிவமாகப், போனவன்." (3 அருச்சனை 1011) என் னுந் திரு மந்திரத்தானும்,

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர், அந்தமொன் றில்லா ஆநந்தம் பெற் றேன்." என்னும் (கோயில் திருப் பதிகம் 10) மணி வாச கத்தானும், "நானுன்னை யன்றியி லேன்கண்டாய் நார ணனே, நீயென்னை யன்றியிலை." (நான் முகன் திரு அந்தாதி 7) என்னும் திரு மழிசை யாழ்வார் திரு வாக் கானும், "நல்ல குலத்திற் பிறந்து நல்லாரைச் சேர்ந் தொழுகி, நல்லறிவு பெற்றுடைய நன்மாணே—நல்ல, சிவம் வேறே யென்றெண்ணிச் சிந்தை கலங்காதே, சிவம் என்ற நீயேசிவம். "என வரும் ஞாந விளக்கத்தானும் உணர்க. 6

**7. ஓவரும் பரமாத் துவிதஞா நத்தை**
**உண்மையாய்ப் பெறவிருப் புடைய,**
**தாவரும் அதிகா ரிகளினைக் காணில்**
**தத்துவ மசிமுதற் பொருளை,**
**ஏவமில் லாமல் இயம்புவான் கருதி**
**எழில்மிகும் ஆக்கையைத் தாங்கிக்,**
**கோவிலூர் வாழும் முத்திரா மலிங்கக்**
**குருபரன் தனைத்தினம் பணிவாம்.**

(இ-ள்) ஓவு அரும் பரம அத்வைத ஞானத்தை - நீங்குதல் இல்லாத மேலாகிய அத்துவித சித் சொரூபத்தை, உண்மை ஆகப் பெற விருப்பு உடைய-தனது சத் சொரூபமாகப் பெறுதற்கு இச்சை யுடைய, தாவு அரும் அதிகாரிகளினை காணில்-துன்ப நீங்குதற் குரிய அதிகாரிகளைக் கண்டால், முதல் தத்துவ மசி பொருளை-முதன்மை யாகிய தத்துவ மசி மகா வாக்கியத்தின் அகண்டார்த்தத்தை, ஏவம் இல்லாமல் இயம்புவான் கருதி-ஐயந் திரிபின்றி உபதேசிக்க நினைத்து, எழில் மிகும் ஆக்கையைத் தாங்கி-அழகு மிக்க மானுட வுடலை யெற்று, கோவில் ஊர் வாழும்-கோயிலூரென்னுந் திருத் தலத்தி லெழுந்தருளி யிருக்கின்ற, முக்தி ராம லிங்க குருபரன் தனை-முத்தி ராம லிங்க னென்னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, தினம் பணிவாம்-நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம்.

(வி-ரை) சித் சொரூபம் நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாகலின், "ஓவரும்" என்றும்; அது உபநிடதங்களின் முடிந்த பொருளாதலின், "பரம" என்றும்; சித்தே சத்தும், சத்தே சித்து மாகலின், "உண்மை யாக" என்றும்; மேல் சர்வ துக்க நிவிர்த்திப் பரமானந்தப் பிராப்தி வடிவ வீ டெய்துவ ராகலின், "தாவரும்" என்றும்; பூத ஜந்மங்கள் கோடி புரிதராம் புருட ராகிய சாதந நான்கு முடைய அதிகாரிகள் கிடைத்தற் கரிய ராகலின், "காணில்" என்றும், உபதேச வாக்கிய மாகலின், "முதல்" என்றும், உத்தேசம், பரீக்ஷை, இலக்கணம், என்னும் உபதேசக் கிரமம் மூன்றனோடும் உபதேசிக்க வேண்டுதலின், "உப தேசிப்பான் கருதி", என்றும்; இறைவனே, மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை, யாகிய நாற் குணங்களு முடைய குருபரனா யெழுந்தருளி யிருக்கு மிட மாகலின், "எழில் மிகும் யாக்கை" என்றும், சாதந நான் குடைய அதிகாரிகட்கே இறைவன் குரு மூர்த்தி யாக எழுந்தருளியவன் ஆகலின், "தாங்கி" என்றுங் கூறினர்.

அத்துவிதம், என்பது பிரம்மத்திற்கு எதிர்மறை விஷேடணாம். இது, ந துவிதம். எனப் பிரிக்கப்பட்டு, ந என்பதன் நகர வொற்று "நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வரும் நகரம், சார்ந்த துடலாயிற் றன்னுடல் போம்." என்னும் இலக்கண விதிப்படி கெட்டு, 'அ' என நிற்கும், இந்த நகரம் ஈண்டு இன்மைப் பொருளுணர்த்துவதாம். சிலர் எண்ணுப் பெயர் மேல் வந்த நகரம் அன்மைப் பொருளை யுணர்த்துவதன்றி இன்மைப் பொருளை யுணர்த்தாதென்பர். அவர் கூற்று ஈண்டுப் பொருந்தாது. என்னை! "அஷ்டாநவம்" "அபஞ்சீகரணம்" என்னும் இடங்களில் எண்ணுப் பெயர் மேல் வந்த நகரம் இன்மைப் பொருள் உணர்த்துவதறிக "அத்துவிதம்" என்பதனுள் நகரம், "அநேகம்" (ஒன்றல்ல) என்பது போல, அன்மைப் பொருளையே உணர்த்தும் ஆயின், அது துவிதம் அல்ல (இரண்டல்ல) என்னும் மயக்கத்திற் கேது வாகிய பொருளையே யுணர்த்துவதாகும், என்னை? இரண்டல்ல, வென்னு மிடத்து, ஒன்று, மூன்று, நான்கு முதலிய பிற எண்களையும் உணர்த்துவதாக விருத்தலின் என்க இதனை, "அத்துவித மெனு மொழிக்குத் துவிதவிலக் காகக் கருதுபொருள் வருதலில்லை." என்னும் வேதாந்த சூடாமணியாலும்,

"துவித மிரண்டாகும் அத்துவித மொன்றாகும்,
துவிதமயல் கெட்டோய் துணி." எனவும்,

"அத்துவிதத்திற் கருத்தம் பலவென்னும்,
சிற்றறிவு கொண்டுசில கீழ்" எனவும் வரும், சித்தாந்த தெரிசநத்தாலும் உணர்க. பரம + அத்துவிதம் = பரமாத்துவிதம், வட மொழித் தீர்க்க சந்தி "ஓவரும்" "தாவரும்" என்றவிடத்து, அருமை, "மனக் கவலை மாற்ற லரிது" என்றாற் போல இன்மைப் பொருட்டு. துவிதம் எண்ணுப் பொருளில் வந்தது அன்று, எண்ணுடைப் பொருளில் வந்தது. துவி என்பது எண், த என்பது உடைமைப் பொருளைக் குறிப்பது. ஆகவே, துவிதம் என்பது

எண்ணுடைய பொருளை உணர்த்துவதை வட மொழி வியாகரண வல்லலார்வாய்க் கேட் டுணர்க 7

8. பாவிகள் செய்த பாவத்தைப் போக்கிப்
பாரினில் தடாகம்வீ திகளில்,
கூவியே அழைக்க இருக்குநல் குணமார்
குணேசநல் தயையினைப் பொருந்தி,
நாவினால் உறைக்க நல்லுப தேசம்
நவிலவே கருணையால் எழுந்து,
கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

(இ-ள்) பாவிகள் செய்த பாவத்தை போக்கி-பாவ முடையோர் செய்த பாவங்களை நீக்கி, பாரினில் தடாகம் வீதிகளில்-உலகின்கண் குளக்கரைகளிலும் தெருக்களிலும், கூவி அழைக்க இருக்கும்-(பக்தர்களை) வர வழைக்கும் பொருட் டெழுந்தருளி யிருக்கும், நல்குணம் ஆர் குணேச-உயர்ந்த குணம் பொருந்திய கணேசரது, நல் தயையினைப் (போன்ற தயையினைப்) பொருந்தி-சிறந்த கருணையை மேற் கொண்டு, உறைக்க-அதிகாரிகள் தம் சொருபத்தின் கண்ணே நிலைபெற்றிருக்கும் பொருட்டு, நாவினால் நல் உப தேசம் நவில-(தம்) திரு வாக்கால் சிறந்த உபதேசஞ் செய் தருள, கருணையால் எழுந்து-கருணையே திரு மேனி யாக எழுந்தருளி வந்து, கோவில் ஊர் வாழும்-கோயி லூ ரென் னும் திருத் தலத்தின்கண் வீற்றிருக்கும், முக்தி ராம லிங்க குருபரன்தனை-முக்தி ராம லிங்க னென்னும் திரு நாம முடைய பரமாசாரியனை, திநம் பணிவாம்-நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) எத் துணைப் பாவ காரியங்கள் செய் துள்ள பாவிகளாயினும், தன் பார்வையால் அவர் பாவங்களைப் போக்கிப் புட மிட்ட பொன் போலப் புநித ராக்கி, பே ரன்பால் இடையறாது தன்னை வழிபட்டு இரவும் பகலும் தியாநிக்கச் செய்து, அஞ்ஞாந விருளை நீக்கி, மெய்ஞ் ஞாந

வொளியை யளித்து, அய னரி வாழ்வும் ஒரு பொருளன் றெனும்படிச் சிவ மாம் பெரு வாழ்வைத் தரும் பொருட்டு முச் சந்தி, நாற் சந்தி, வீதிகள், தடாகக் கரைகள் முதலிய விடங்களிற் காட்சி யளிக்குங் கருணைக் கட லாக வுள்ளா னுகையாலும்; பிரணவாகார முழு முதற் கடவு ளாய் விளங்குதலால், தன்னை வழிபடின் எத் தேவதைகளையும் வழிபட்ட தாகு மாதலாலும், தன்னை வழிபடா தொழியின் பிற தேவதைகளால் பயன் பெற லரி தாகையாலும், இறைவ னுண குரு வாக எழுந்தருளி வருவா னென்பதனு லும், "குணேசநற் றயையினைப் பொருந்தி" என்று, அக் கணேசரது தயையினையே, குருபரன் றயையினுக் குவமை கூறினார். இதனை, "மிக்க பேரருள் வேலையை யோர்கொம் பார்த் றக்க வன்பர்க்கு தவுந்த ருவினை." என்னும் (விநாயகர் வணக்கம் 6) மகா ராசத் துறவாலும், "ஒருவா ரணத்தின் தாள்கள், உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே யிரவுபக லுணர்வோர் சிந்தைத், திருகோட்டு மயன்றிரு மால் செல்வமுமொன் றேயென்னச் செய்யுந் தேவே." என்னும், சிவ ஞாந சித்தியாராலும் உணர்க. "உபதேசம் நவில" என்றுமே அமைய மாயினும், சகல உபநிடதங் களின் முடிந்த பொரு ளாகிய "தத்துவமசி" மா வாக் கியத்தை உபதேசிக்கும் நா வென்பார், "நாவிறல்" என் றும், அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ வீடு பேற்றை பயக்குதலின், "நல்" என்றும் கூறினார்.

தான் பெற்ற பே ரின்பத்தை இவ் வையகமும் பெற வேண்டு மென்னுந் திரு வுளத்தோடு உத்தமாதிகாரிக ளிருக்கு மிடந் தேடி யுபதேசிக்குங் கருணை யுடையான் என்பார், "கருணையால் எழுந்து" என்றார். இதனை, "காக முறவு கலந்துண்ணக் கண்டீர், அகண்டா கார சிவ, போக மெனும்பே ரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய், ஏக வுருவாய்க் கிடக்குதை யோவின் புற்றிட நாமினி யெடுத்த, தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் செகத்தீரே." என்னுந் தாயுமானார் திரு வாக்கா னுணர்க.

9. மூவர்கள் போற்ற முதன்மறை புகழ
முநிவர்கள் கூட்டமே முழங்கத்,
தேவர்கள் புகழத் திருக்கரத் திலங்கும்
திரளுறு நெல்லியின் பழம்போல்,
சீவர்கள் உண்மைச் சொருபத்தைப் பெற்றுச்
சித்துரு வாகவே இருக்கக்,
கோவிலூர் வாழு முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

(இ-ள்) மூவர்கள் போற்ற - அயன் அரி அரன் ஆகிய மூவர்களும் புகழவும், முதல் மறை புகழ - சிறந்த வேதங்கள் புகழவும், முநிவர்கள் கூட்டம் முழங்க - முற்றத் துறந்த முநிவர்கள் புகழவும், தேவர்கள் புகழ் - (இந்திராதி) தேவர்கள் புகழவும், திரு கரத்து இலங்கும் திரள் உறு நெல்லியின் பழம் போல்-அழகிய உள்ளங் கையில் விளங்கும் உருண்டை வடிவ நெல்லிக் கனி போல், சீவர்கள் உண்மை சொருபத்தை பெற்று - சீவர்கள் (தமது) பரமார்த்த சொருபத்தை யடைந்து, சித்துரு ஆகவே இருக்க - சித் சொருப மாக விருந்தபடியே யிருக்கும் படி அநுக்கிரகஞ் செய்ய, கோவில் ஊர் வாழும்- கோயி லூ ரென்னுந் திருத் தலத்தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற, முக்தி ராம லிங்க குருபரன் தனை - முக்தி ராம லிங்க னென்னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, திநம் பணிவாம் - நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடுசெய்வாம். (எ-று)

(வி-ரை) குருபரன் றிரு வருளால், உபதேசம், புண்ணியம், ஆகிய திருஷ்டாதிருஷ்ட பலன்கள் கைவரப் பெறுதலாலும், அவனே அய னரி யர னென்னும் மூ வகை நாம ருப மாக விளங்குகையாலும், அவனை வழிபடில் மூவரும் வழிபடப் பெற்றவ ராகி மகிழ்வ ராகையாலும், அத் தகைய ஞாநாசாரியன் திரி வித வுலகத்தும் கிடைத்தற் கரிய னாகலின், அவனைக் காணப் பெறின், மூ வரும் புகழ்வர் ஆகையாலும் “ மூவரும் போற்ற ” என்றார். இதனை,

"சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனைய னெடுமா லான, மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சென்ம, பாவந மாறு மென்று பழமறை முழங்கும்." (1-95) என்னும் கைவல்ய நவநீதத்தாலும்,

"போற்ற வணங்கப் பூசிக்கப் புகழ வருந்திப் போய்க் காண, ஆற்ற அரியோன் எவனவன் பிறவி யறுப்போர்க் கநவரதம், சாற்று மகத்தாற் றீர்த்தத்தால் தவத்தால் ருநத் தாற்றிட்டா, ஏற்ற வறிவாற் பிறவியறுத் துயர்ந்தோன் பத்தி தரும்பயனே." (ப-13 இட்சுவாகு கதை ப5) என்னும் ஞாந வாசிட்டத்தாலும்,

"ஞால முண்டவன் றலைமிசை சுமப்பன்மெய்ஞ் ஞாநிவேண் டுவதெல்லாம், ஆல முண்டவன் அவன் பின்னே திரிகுவன் அவனடித் துகட்கன்றே, சில மன்ன ரும் மற்றுள தேவரும் திசைதிசை பணிந்தேத்தக், காலி ரண்டையும் தலைமிசை வைமெனக் கழறுவன் கமலத் தோன்." என்னுஞ் செய்யுளானும் உணர்க.

"தத்துவமசி" என்னும் மா வாக்கியத்தா லுண்டாய "அகம் பிரம்மாஸ்மி" என்னும் திட அபரோக்ஷ சொரூப ஞாந நிச்சயமானது, பேத வாதிகளின் கூட்டறவால் நழு வாது சுவாப மாக அடையப் பெறுதலின், "நெல்லியின் பழம் போல் பெற்று" என்றும், உடல், இந்திரியம், பிரா ணன், மநம், புத்தி, முதலிய அநாத்மப் பொருள்களை யெல் லாம் தனித் தனி, ஆத்மப் பொருளெனக் கொண்டு பேத வாதிக ளனைவரும் திரி புணர்ச்சியால் மயங்குவது போல மயங்காது, உண்மைப் பொரு ளாகிய தமது ஆத்ம சொரூப மாகவே தெளிவுறப் பெற்று என்பார்," "உண் மைச் சொரூபத்தைப் பெற்று" என்றும் கூறினர் இதனை, "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பத றிவு." என(36-மெய் உணர்வு5) வரும் திருக் குறளான் உணர்க.

இருக்க, என்னும் செய வென் னெச்சம், காரியப் பொருளில் வந்தது; அதற்குக் காரணம், உபதேச மாகிய

அநுக்கிரகம் செய்தல் எனக் கொள்க "அநுக்கிரகஞ் செய்ய" என்ப திசை யெச்சம். "போற்ற" வென்பது சீவர்களி னிருத்தல் வினைக்கும், ஆசாரியாரது வாழும் வினைக்கும் விசேடணமா யுள்ளது. மற்றைய, 'புகழ, முழங்க புகழ இருக்க என்பன வெல்லாம் வாழு மென்னு மாசாரியர் வினை விசேடமாய் நின்றன. 9

10. ஆவியம் இன்றி ஆவனப் புற்றே
ஆயிழை யார்களை விரும்பாக்,
காவிநல் ஆடை தனைத்திநம் அணிந்து
கருவில்வா ராவகை அருள,
ஓவுதல் இன்றி ஓவியம் போல
ஒளிருந்தன் அருளினைக் காணக்,
கோவிலூர் வாழும் முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம் பணிவாம்.

(இ-ள்) ஆவியம் இன்றி - சரீர பலம் இன்றி. ஆவலிப்பு உற்று - ஆசை மேலிடப் பெற்று. ஆய் இழை யார்களை விரும்பா - அழகிய அணிகள் அணிந்த மடவார்களை விரும்பாதிருத்தற் கேது வாகிய, நல்காவி ஆடைதனை-சிறந்த கல் லாடையை, திநம் அணிந்து - நா டோறும் அணிந்து, கருவில் வரா வகை அருள - இனிப் பிறவா நெறியினை அநுக்கிரஞ் செய்யவும், ஓவுதல் இன்றி ஓவியம் போல - நீங்குத லின்றி சித்திரம் போல, ஒளிரும் தன் அருளினை காண - விளங்காநின்ற தனது திரு வருளைக் காணவும், கோவில் ஊர் வாழும் - கோயி லூா ரென்னுந் திருத் தலத்தின்கண் ணெழுந்தருளி யிருக்கின்ற. முக்திராம லிங்க குருபரன் தனை-முக்தி ராம லிங்க னென்னுந் திரு நாம முடைய பரமாசாரியனை, திநம் பணிவாம்-நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) அஞ்ஞாந நிவிர்த்திக்கும் ஞாநோதயத்திற்கும் காரண மாகிய துற வறத் திரு நெறிக்குத் தடைகளாகிய, மண், பொன், பெண் எனப்படும் மூ வாசைகளுள்

பெண் ணாசையே, முன்னவற்றிற்குக் காரண மாகையா லும், உயிர்ச் சார்பு, பொருட் சார்பு, எனப்படும் புறப் பற்றும்; கரணப் பற்றும், காயப் பற்று மாகிய, உட் பற்றம், ஆகிய விரண்டனுள், உயிர்ச் சார்புள் முதற் கண்ண தாகிய, பெண் ணாசையே வீ டெய்துவார்க்குப் பெருந் தடையாகலாறும், அதனையே முன்னர்த் துறக்க வேண்டு மாதலின், பிரதானம் பற்றிக் கூறினார். கூறினரே னும் இரு வகைப் பற்று மற்றோரே, முற்றத் துறந்த முனிவ ராகலின், உபலக்கண மாக மற்றைய மண் ணாசையும், பொன் னாசையுங் கொள்க இதனை,

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க,
லுற்றார்க்கு டம்புமி கை." (35-5) என்னுந் திருக் குறளாலும், "மூவேடனை யென்றுமு டிந்திடுமோ." என்னும் அருணா கிரியார் திரு வாக்கா லும் கண்டு கொள்க. "மண்" என்றது மக்களை, "காணிக்குரிய மைந்தர்" (கை வல் யம்) என்று குறித்திருத்தலின், "பொன்னிலம்" என்ற விடத்து ஆகு பெய ராக நிலத்திற் குரிய மைந்தரை யுணர்த்திற்று. அது போல மண் ணாசை என்பது யாண்டும் மக்க ளாசையை யுணர்த்தி யாகு பெய ராக வருதல் காண்க. ஆதலின், யானு மண் என எழுத நேர்ந்தேன், மக்களை யுணர்த்து மாதலின். இரு வகைச் சார் பாகிய புறப்பற் றிருக்க, அகப் பற் றொழித லரி தாக லான், முன்னர் புறப்பற்றே யொழிக்க வேண்டுதலாலும், அகப் பற்றை யொழித்துப் புறப் பற்றோ டிருத்தல் கூடு மென்பது கூடா வொழுக்கத்தார் கூற்றாகலானும், காமம், வெகுளி, மயக்கம், ஆகிய முக் குற்றங்களும் நீக்கிய நின் மல சித்தர்கட்கு, முன்னர் புறப் பற் றொழிதலே உயர் நெறி யாகலானும், அங்ஙனம் முற்றத் துறந்த முனிவர்கள் தம் துறவிற் கறி குறியாகக் கல் லாடை புனைந்து காட்சி யளிப்ப ராகையானும், அன்னோர், கண்டோர் யாவரானும் வழிபாடு செய்யுந் தகுதி யடையா ராகையானும், "காவிநல் லாடை தனைத்தரித் தணிந்து" என்றார். இதனை, "அடல்

வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும், வேண்டிய வெல்லாமொ ருங்கு." (35 துறவு 3) எனவும், "தலைப்பட் டார் தீரத்து றந்தார் மயங்கி, வலைப்பட்டார் மற்றைய வர்." (3 துறவு 8) எனவும் வரும் திருக் குறளானும், "புத்திரர் மனையா ளாதிப் புறச்சுற்றப் பற்று நீக்கி, மித்திரன் மலவு டம்பா மிடைச்சுற்றப் பற்றும் விட்டே, யொத்துயிர் விடாத பாச கரணஉட் சுற்றும் ஒய்த்துத், தத்துவ மாயி ருத்தல் தவத்தவர் சரிதை யையா." என வரும் சமயாசாரத்தாலும் உணர்க. 10

கோவி லூர் மடம், ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் தோத்திரமும், பரி மள தீப உரையும் முற்றுப் பெற்றது.

---

## திருக் களர் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் தோத்திரமும்,

பரி மள தீப உரையும்,

எழு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

1. சீருறு நின்தா மரைமலர்ப் பதமே
   சேர்ந்தனர் முன்னம்வந் தநேகர்,
   நாருறும் அவர்கள் விளைந்தன எல்லாம்
   நன்களித் தின்பம தளித்தாய்,
   காருறும் எனையும் ஒருபொரு ளாகக்
   காத்தருள் செய்திருக் களர்வாழ்,
   பேருறு வீர ஞாநதே சிகநின்
   பிறங்கடி யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) திருக் களர் வாழ்-திருக் களர் என்னுந் திருத் தலத்தி லெழுந்தருளி யுள்ள, பேர் உறும் வீர ஞாந தேசிக-பெருமை பொருந்திய வீர சேகர ஞாந தேசிகனே, சீர் உறு நின் தாமரை மலர்ப் பதம்-சிறப்புப் பொருந்திய தேவரீ ருடைய தாமரை மலர் போன்ற திரு வடிகளை, முன்னம் அநேகர் வந்து சேர்ந்தனர்-முன்பு பலர் தேடி வந்து சரணாகதி யாக அடைந்தனர், நார் உறும் அவர்கள்

விழைந்தன எல்லாம்-அன்பு பொருந்திய அவர்கள் விரும்பிய அனைத்தும், நன்கு அளித்து இன்பமது அளித்தாய்-விரும்பிய வண்ணமே ஈந்து சுகத்தோடு வாழச் செய்தாய், கார் உறும் எனையும் ஒரு பொருளாக எண்ணி - மயக்கம் பொருந்திய அடியேனையும் ஒரு பொருளாகத் திருவுளத்தில் கருதி, காத்து அருள் செய் நின் பிறங்கு அடியினை-(பிறவிக் கடலில் வீழாவண்ணம்) தடுத்துத் திருவருள் பாலித்த தேவரீருடையவிளங்குகின்ற திருவடிகளை, நம் பணிவாம்-நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். எ-று.

(வி-ரை) "கஞ்சத் தாமரை"யென்றது, செந்தாமரையை, என்னை? அது வே ஞானாசாரியன் திருவடிகட்குச் செம்மை, மென்மை, அழகு முதலியவற்றால் உவமையாகலின் அவ்வடிகள் முன்னர் அறநெறி பிழையாத இல்வாழ்வார் பலருக்கும் தீக்ஷையளித்து அவர்கள் விரும்பிய வண்ணம் முறையே இகலோக வின்பத்தையும் சாதந சதுட்டய சம்பன்னராகிய துறவிகட்கும், பிறவா நெறியினையும், அளித்துக் காத்தமையின், "அவர்கள் விழைந்தனவெல்லாம் நன்களித்து இன்பமது அளித்தாய்." என்றும்; ஈண்டுக் கார் என்பது ஆகுபெயராய் மயக்கவுணர்ச்சியை வுணர்த்திற்று ஆன்மா வல்லாதனவற்றை ஆன்மாவாகக் காட்டி, மேன் மேலும் பிறவிக்கு வித்தாக விருத்தலின், அதனை (மயக்கவுணர்ச்சியை) நீக்கி மெய்யுணர்ச்சி யளிக்கக் கருணையால் ஆட்கொண்டருளினமையின், "காருறுமெனையும் ஒரு பொருளாகக் காத்தருள் செய்" எனவும், மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை, யாகிய குணங்களால் மேம்பட்டு விளங்கினமையின், "பேர் உறு" என்றும்: சீவன் முத்தர்க் குரிய, குரோதமின்மை, வைராக்கியம், பொறி புலன்கள் அடக்கல், சமை, தமை, சுசப்பிரியத்துவம், அலோபம், கொடை, அபயம், நிருமதம், என்னும் குறிகள் பத்தினையும் பெற்று ஒப்பாரு மிக்காரும் இன்றி வாழ்ந்த வீரமும், சீவப் பிரம்ம ஐக்கிய ஞானமும்,

சுரோத்திரியப் பிரம்ம நிஷ்டத் தன்மையும் உடைமையின், "வீர ஞான தேசிக" என்றும் கூறினார். பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், அடிக்குப் 'பிறங்' கெண அடைகொடுத்தார். 'இன்பமது' என்ற விடத்து "அது" பகுதிப் பொருள் விகுதி. "எனையும்" என்ற விடத் தும்மை இழிவு சிறப்போடு இறந்தது தழீஇயது, பிறங் கடி வினைத் தொகை. இதனால் ஞானாசாரியரின் சீர் பாதங்களை வியத்தல் தோன்றிற்று. இவற்றை,

> "இந்தவி டும்பையு டம்புறு மேது
> தந்தையெ னப்புகழ் கின்றிலர் தக்கோர்
> அந்தமி லாதவு கண்டமு நம்முன்
> தந்தவர் தந்தையெ னச்சமை வுற்றார்." என்னும்
> பிரம கீதையானும்,
> "பொருளல்ல வற்றைப்பொ ருளென்று ணரும்
> மருளானா மாணாப்பி றப்பு" என்னும் (36-துறவற
> இயல் மெய் உணர்தல் 1) திருக் குறளானும்.

"நித்தசிவார்ச் சனைமுதலாம் பத்தி செய்து நிகழமனே சுத்தியினைப் பெற்றவீரர், அத்துவிதப் பரசிவமே மறையின் முடி யனைத்திற்குந் தாற்பரியப் பொருளா மென்றும், சத்தி யமா மச்சிவமே நாமே என்றும் சலனமிலா வகைகண்டசிவ ஞானம் பெற்று, மித்தையதாம் பவபந்த மனைத்தும் நீக்கி மெய்யுணர்வா னந்தபர சிவமே யாவர்." என்னும் சிவ கீதை யானும் உணர்க.

2. உளர்விலா உளத்தால் உணர்ந்திடும் உண்மை
உணர்சக்தி யிலெற்குவெம் விடமார்,
களமுளான் மனைவி கங்கைநன் மதியைக்
கழற்றியே துறவியாய் வந்து,
கிளர்மிகு வேத வாக்கியப் பொருளைக்
கேட்டுய அருள்வடி வதிருக்,
களரில்வாழ் வீர ஞானதே சிகனின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) திருக் களரில் வாழ் - திருக் கள ரென்னுந் திருத் தலத்தி லெழுந்தருளி யுள்ள, வீர ஞாந தேசிக வடிவ- வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியே, உளர்வு இலா உளத்தால் - அசை விலாத மநத்தினால், உணர்ந்திடும் உண்மை (யை) - (தனது வடிவ மாகவே) உணரத் தக்க பரம் பொருளை, உணர் சக்தியில் எற்கு - உணருகின்ற ஆற்றல் இன்றிய அடியேனுக்கு, வெம் விடம் ஆர் களம் உளான்- கொடிய விஷம் பொருந்திய நீல கண்டத்தை யுடைய இறைவன், (தன்) மனைவி கங்கை மதியை கழற்றி - தன்னு டைய தேவி யாகிய உமையினையும் கங்கையினையும் சந்திர னையும் விலக்கி, நல் துறவி ஆய் வந்து - முற்றத் துறந்த ஞாநாசாரிய ராய் எழுந்தருளி வந்து, கிளர் மிகு வேத வாக் கியப் பொருளை-விளங்குகின்ற மேன்மை யுடைய "தத்துவ மசி"மகா வாக்கியப் பொருளை, கேட்டு உய அருள்- (அடி யேன்) கேட்டுப் பிறவா நெறி யடையும் வண்ணம் உப தேசித்தருளிய, நின் கழல் இணையினை நிதம் பணிவாம் - தேவரீருடைய இரண்டு திரு வடிகளையும் நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) நிஷ்காம கர்மாநுஷ்டாநத்தா லாகிய சம தமாதி சமஸ்கார சஹித சுத்த சத்துவாந்தக்கரணமானது, சலந மின்றி ஆத்ம வடிவ சிவத்தையே நோக்கி நின்று நெருப்பைச் சேர்ந்த இரும்பு, நெருப்பு மய மாக விளங்கு தல் போலச், சிவ மய மாக வே விளங்குதலாலும், அச் சிவம் ஊநக் கண் ணாகிய ரஜோ தமோ குணங்கள் மிக் குள்ள அசுத்த மநத்திற்கு விஷய மாகாமல், ஞாநக் கண் ணாகிய சத்துவ குண மிக் குள்ள சுத்த மநத்திற்கு விஷயமா கின்றமையாலும், "உளர் விலா வுளத்தா லுணர்ந்திடும் உண்மை." என்றும், அம் மந மிலார் அந்தர் முக திருஷ்டி யின்றி பகிர் முக நாட்ட முடையராய்ச் சிவத்தை யுணரும் வலியிலார் ஆகலின், "உணர் சக்தியில் எற்கு" என்றும், இக லோக பர லோக சிற் றின்பங்களை வேண்டினோர்க்கு உமா கங்கை சஹித ராய்க் காட்சி யளித் தநுக்கிரகிப்பதும்,

தா னவ ஞகிப் பிறவா நெறி யாகிய பே ரின்பம் பெற
வேண்டி முற்றத் துறந்த முநிவர்கட்குத் துற வறத் திருக்
கோல முடைய ஞய்க் காட்சி யளித் தநுக்கிரகிப்பதும்
வழக்கா ருதலின், "துறவியாய் வந்து" என்றும், ஞாநா
சாரியன் உபதேசித்த சாம வேத சாந்தோக்கிய முபநிடத,
"தத்துவமசி" மகா வாக்கியத்தின் தத்துவம் பதங்களின்
வாச்சியார்த்த மாகிய ஈசுவரனையும்,சீவனையும்,விட்டு விடாத
விலக்கணையால் விவேகித்து, முற் றறி வுடைமை, சிற் றறி
வுடைமை யாதி யாய விரோத பாகங்களை விடுத்து, அவி
ரோத மாய பிரம்ம கூடஸ்தர்களை லக்ஷியார்த்தங்க ளாகக்
கொள்ளுங்கால் உள தாகும், அகம் பிரம்மாஸ்மி என்னும்
அநுபவ ஞாநத்தால் ஜீவன் முக்தி நிலை கூடுதலால், "வேத
வாக்கியப் பொருளைக் கேட்டுய" என்றுங் கூறிஞர்.
இவற்றை, "ஊநக்கண் பாச முணராப் பதியை, ஞாநக்
கண்ணினிற் சிந்தை நாடி.' என்னும் சிவ ஞாந போதத்
தா லும், "முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்,
அகத்திற் கண்கொண்டு காண்பதே யாநந்தம்." என்னும்
(9 மோந சமாதி 2944) திரு மந்திரத்தா லும், 'காட்சியை
யெல்லாம் கண்ணதாய்க் கரைத்துக் கண்ணுழிங் கொரு
பொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்லவன் குருவாம்
மாரிபோல் மாறுவேண் டாதே, மீட்சியில் பதத்தைக் கரு
ணையா லளிக்கும் வித்தகக் குரவனே யெவரும்,தாழ்ச்சிசெய்
தேத்தற் குரியதத் துவமாம் சங்கர னொன்றிடத் தகுவான்"
(12-22) என வரும், பிரம கீதையா லும், "கற்றீண்டு
மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா
நெறி." (36 மெய் உணர்தல் 6) என்னுந் திருக் குறளா
லும் உணர்க. 2

3\. குளிர்முதற் படைகள் இன்றியஞ் ஞாநக்
கூர்பகை கெடுப்பதற் குவந்த,
நளிரினைப் பார்த்தோர் மிகவியந் திடவே
நானெனும் உடலின்மோ கத்தை,
எளிதிலே ஒழிய நீக்கிநின் விழியால்

ஏத்துதற் பதமளித் ததிருக்,
களரில்வாழ் வீர ஞானதே சிகநின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) குளிர் முதற் படைக ளின்றி-மழு முதலிய ஆயுதங்க ளில்லாமலேயே, அஞ்ஞானக் கூர் பகை கெடுப்பதற்கு-அஞ்ஞான மாகிய வலி மிக்க பகையை யழிப்பதற்கு. உவந்த நனிநினை விரும்பிய பெருமையை, பார்த்தோர் வியந்திட-கண்ட பெரியோர் ஆச்சரியங் கொள்ளும்படி, நான் எனும் உடலின் மோகத்தை-தேகங்களை யான்மா வெனக் கருதச் செய்யு மஞ்ஞானத்தை, நின்விழியால்-தேவரீரது திருவருட் பார்வையால், எளிதினில் ஒழிய நீக்கி-எளி தாக முற்று மற அழித்து, ஏத்து தத் பதம் அளித்த-(நின்னை யடைந்த என்னை யொத்த சாதந நிரம்பாத மாணவருக்கும் துவம் பத இலக்ஷியார்த்த கூடத்த ஞகிய யானே) மறை முடிவதனால் வழுத்தப்படுகின்ற தத் பத இலக்ஷயார்த்தப் பிரம மாயிருக்கிறேன் என்னு மநுபூதியினை யளித்த, திருக்களர் வாழ்- திருக் கள ரென்னுந் திருத் தலத்தின்கண் (துருவாச முநிவ ரம்ச மெனப் போந் தறி குறி காட்டி) சமாதி கொண் டெழுந்தருளி யிருக்கின்ற, வீர ஞான தேசிக- (ஸ்ரீ கோயி லூர்க் குருபர ராகிய) வீர சேகர ஞான தேசிகனே, நின் கழல் இணையினை- தேவரீ ருடைய திரு வடிக ளிரண்டனையும், நிநம் பணிவாம் - வைகலும் வணங்குவாம் (எ-று)

(வி-ரை) உலகினிற் பகைவரை ஆயுதங் கொண் டழித்து வெல்லுத லியல்பு. அவ் வா றின்றித் தன் வீரப் பார்வையால் பகைவ ரழிந்து கெட் டோடும்படி செய்தா னொரு வீரன் என்பது போல, வீர சேகர ஞான தேசிக மூர்த்திகளும் மாணவர்களின் அஞ்ஞானப் பகையைப் படை யின்றித் தன் னருட் பார்வையா லழிந் தொழியும் படி செய்தார் எனப் பெருமை தோன்றக் கூறியபடி.

குருபர னருட் பார்வை, கணியாத பவக் கடு வாக அநுபூதியினு னிகழும் விழிப் பார்வையாதலின், அது பார்க்

கப்படு மாணவன துள்ள மலத்தை யொழித்து சாதந நான்கும் கைவரச் செய்வித்தலின், அவற்குப் பிறவி துன்பமே யென்பது தோன்றும், தோன்ற ஆசாரியரிடத்துப் பிறவி துன்பமே வடி வாகத் திகழ்கின்றதே இத் துன் பொழிய இன்ப வடி வாக இருப்பதற் கியாது கருவி யோன்றும் என வினவுவன். வினவ அவர், ஐய! தேகாதிகளை யான் எனவும், எனது எனவு மபிமானித்தலால், பிறவி வருகின்றது, நீ தேகாதிகளுக்கு வேருகச் சச்சிதாநந்த வடிவ முக இருக்கின்றுய் எனத், தத் துவ மசி மகா வாக்கியப் பொருளை விரித்துரைத்துத். தத்துவ ஞாந மாகிய கருவியை யளித்து, அபிமாந காரண அஞ்ஞாநப் பகையை யழிப்பார். ஆதலின், "குளிர்முதற் படைக ளின்றி மோகத்தை நின் விழியா லெளிதினி லொழிய நீக்கி." என்றனர்.

பகையை அஞ்ஞாந மென்றதற் கேற்ப மழுவை ஞாந மென்னுமையால், இஃ தேக தேச உருவக வணி. குளிர் முதல் என்றமையால், விசாரத்தினையுங் கொள்க. காரண மின்றி யாண்டுங் காரியம் பிறத்தல் இல்லையாகையால், ஞாநோதய மாகிய காரண மின்றி அஞ்ஞாந நாச மாகிய காரியம் பிறக்க விரும்பியது, அறியாமையின்பாற் படு மாகலானும், ஞாநமே அஞ்ஞாநத்தை நீக்குதல் வாயிலாக முத்திக் கேது வல்லாமல், சரியை யாதிகள் ஏதுக்க ளல்ல வாகையாலும், அஞ்ஞாநத்தின் மிக்க பகை வேறில்லை யாகையாலும், "கூர் பகை கெடுப்பதற்கு உவந்த" என்றும், இங்ஙனம் விரும்பிய சிறுமையை யுணர்த்துகின்ற பெருமையைச் சான்றோர் காணின் எள்ளி நகையாடுவர் என்பது தோன்ற, "நளிரிலைப் பார்த்தோர்" என்றும், இப் பகை யொழியப் பெருது உடலை நானெனல் முத லாகிய மோக முற்றுழலுங்கால் ஞாநாசாரியன் கடைக்கண் பார்வைபட்ட ஞான்றே அம் மோக நீங்கு மாகலின், "மிக வியந்திடவே யெளிதிலே யொழிய நீக்கி." என்றும், தற் பத லக்ஷியார்த்த மாகிய பிரமமே, துவம் பத லக்ஷியார்த்த மாகிய நீ, யென மகா வாக்கிய

உபதேசம் செய்ய மெய் யுணர்வு பெற்று வீடுபெறுதல் கூடுமாகலின், "தற்பதத்தை யளித்த" என்றுங் கூறினார்.

இவற்றை, "பண்ணுறு கருமத்தால் பவக்க டற்கரை, நண்ணுவ னுனென நயந்தி ருத்தல்வாழ், எண்ணுறு புலிமி டைந் திருந்த காட்டிடைக், கண்ணிலன் கடந்திடக் கருதல் போலுமே" என வரும் பாகவதத்தாலும், "உரைசெயிற் பிரம ஞாந மொன்றுமே முத்திக் கேது, சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞாநம், மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கும் இந்தக், கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே." என வரும் பிரபு லிங்க லீலையாலும், "புணர்ந்த பாவமெ லாம்பரி பூரணம், உணர்ந்த ஞாநவி ழிபட வோடுமே." (2) என வரும் சிவ வன்ன போதத்தாலும், "இருள் நீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி, மாசறு காட்சிய வர்க்கு." என வரும் (36 மெய் உணர்தல் 2) திருக்குறளாலும், " பங்க மாகுமஞ் ஞாநத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக்கும், துங்க ஞாநமே கருமவஞ் ஞாநத்தைச் சுடுகின்ற நெருப்பாமே." (2-70) என வரும் கைவல்ய நவநீதத்தாலும், "போத மென்பதே விளக்கொவ்வும் அவித்தைபொய் யிருளாம், தீதி லாவிளக் கெடுத்திருள் தேடவுஞ் சிக்கா. தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை, யேது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்." என வரும் தாயு மானார் திரு வாக்கானு முணர்க (3)

4. அளிமலர் விட்டுவிட் டாய்ந்துநன் மதுவுண்
டகமகிழ்ந் திருப்பதே போலத்,
தளர்மிகு நறுந்தார் அணிந்தமார் புடனே
தரணியில் அருளொடு வந்து,
களிதரும் கருணை கைவரப் பெற்ற
கண்டரைக் கடவுளர் ஆக்கிக்,
களரில்வாழ் வீர ஞாநதே சிகனின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) தளம் மிகும் நறும் தார் அணிந்த மார்புடனே - இதழ்கள் மிகுந்த மணம் மிக்க மாலையை அணிந்த திரு மார்புடனே, தரணியில் அருளொடு வந்து - பூமியின் கண் அருளே திரு மேனியாக எழுந்தருளி வந்து. அளி விட்டு விட்டு மலர் ஆய்ந்து-வண்டு மாறி மாறி (பல) மலர் களை ஆராய்ந்து, நல் மது உண்டு அக மகிழ்ந்து இருப்பது போல - இனிய தேனைப் பருகி மன மகிழ்வுற்றிருப்பது போல, களி தரும் கருணை கைவரப் பெற்று - மகிழ்ச்சிக் குக் காரண மாகிய கருணை அதிகரிக்கப் பெற்று, அகண்டரைக் கடவுளர் ஆக்கி - அஞ்ஞானிகளை ஞானிகள் ஆக்கி. களரில் வாழ் வீர ஞான தேசிக - திருக் களரென்னுந் தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற வீர சேகர ஞான தேசிக, நின் கழல் இணையினை - தேவரீருடைய இரண்டு திரு வடிகளையும், தினம் பணிவாம் - நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடுசெய்வாம். (எ-று)

(வி-ரை) இரு வினை யொப்பு மல பரிபாகம் பெற்ற நின்மல சித்தர்க் குபதேசிக்கும் பொருட்டுத் திரு வருட் சத்தியை திரு மேனி யாகக் கொண்டு, குருவாகித் தரணிந்து காட்சி யளித்தல் வழக்காறு ஆதலின், "தரணியில் அருளொடு வந்து" என்றும், வண்டானது, பல மலர்களையும் தனித் தனியாக விட்டு விட்டு ஆராய்ந்து அவற்றி லுள்ள தேனைச் சிறிது சிறி தாக வெடுத்துக் கூட்டின்கண் பெருக்கி உண்டு மயக் குற்று இன்புறுவது போல. ஞானாசாரியனும் தனித் தனி உயிர்களிடம் தொடர்பு கொண்டு வைத்துள்ள அன் பாகிய தேனைத் தம் உள மாகிய கூட்டின்கண் அருள் வடிவாகப் பெருக்கி, அன்பின் முதிர்ச்சி அரு ளாகலின் அதனைப் பருகி, ஞான நிட்டை கூடி இன்புறுவ னாகலின், "மகிழ்ந் திருப்பது போலக் களி தருங் கருணை கைவரப் பெற்று." என்றும், ஐ வகைப் பிராந்தி காரண மாகத் தா னல்லாத தேக முதலியவற்றைத் தா னாகக் காணுதலும், தன தல்லாத பொன் னாதியவற்றைத் தன தாகக் காணுதலும் ஆகிய, அகங்கார மமகார அபேத வுணர்ச்சி யாகிய அகண்டத் தன்

மையால் வாழ்பவர் அஞ்ஞானிக ளாகலின் அவரை, "அகண்டர்" என்றும், அவர்களை, குளவி புழுவைக் கொட்டித் தன்வய மாக்குவது போலக், கடைக்கண் பார் வையாற் புனித ராக்கி, ஆமை மீன் பறவை போலக் கருதி நோக்கித் தடவி உபதேசித்து மெய்ஞ் ஞானியர் ஆக்குத லின், "அகண்டரைக் கடவுள ராக்கி" எனவுங் கூறினார். இவற்றை, "அருவ னாகிலும் அன்பர்க் குருவனாய், வருவ னென்பது மாமறை கூறுமே" என்னும் மோக வதைப் பரணியினாலும். "இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி, குருவென வந்து குணம்பல நீக்கி." (20 தீவிர தரம் 1527) என்னும் திரு மந்திரத்தாலும்; "படியில் வந்தப ரமகு ரவ னால், தடையறும்படி தன்னைய றிந்தவன்." என்னும்(12முத் தாயி அம்மை கதி 12) பிரபு லிங்க லீலையாலும்; "உள்ள மலமூன்றும் மாய வகுபெருந்தேன், வெள்ளந் தரும்பரி யின் மேல்வந்த வள்ளல்" என்னும்(48 பண்டாய நான் மறை 2) மணி வாசகத்தாலும், "அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னுஞ், செல்வச் செவிலியா லுண்டு." என்னும் (75 பொருள் செயல் வகை 7) திருக் குறளாலும் 'எலாம், நீங்கும் படிதன் னருள்பூ தியிற்றைஎ, நிகழும் — வைத் தனன்நின் மலனே.' (14)என்றும் "கணியா தபவக் கடுவா னதிருக் கண்வைத் தலும்விட் டனகா துகடும், பிணி யாவையும்." (15)என்றும் வரும் சசி வர்ண போதத்தாலும்; "ஐயன் ஆமை மீன் பறவைபோலத், தன்னகங் கருதி நோக் கித் தடவி." என்னும் (1-8) கைவல்ய நவநீதத்தாலும், உணர்க.

ஞானாசாரியனுக்கு வண்டினையும், கருவோலைக்குத் தேனையும், ஞான நிட்டை கூடி இன்புறுதலுக்கு, மகிழ்ந் திருப்பதையும் உவமைக ளாக்கிக் கொள்க. 4

5. வளர்பந்தம் நீக்க வந்திடு பவர்க்கு
வழங்குறு கருணையால் ஞானம்,
கிளர்தர மறைமா வாக்கியப் பொருளைக்
கிளத்திநன் கவரைமுன் னுற்ற,

தளைகளைப் போக்கிச் சச்சிதா நந்தத்
தன்தனிச் சொரூபமாக் குதிருக்.
களரில்வாழ் வீர ஞானதே சிகநின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) வளர் பந்த நீக்க வந்திடுபவர்க்கு - (அநாதியாக) வருகின்ற அஞ்ஞானத் தொடர்பை நீக்குவான் கருதி வந்த அதிகாரிகட்கு, ஞானம் விளர்தர - (ஜீவப் பிரம்ம ஐக்கிய) ஞானம் உதய மாகும் வண்ணம், கருணையால் வழங்குறு - கிருபையோ டருளிச் செய்யத் தக்க, மறை மா வாக்கியப் பொருளை நன்கு விளத்தி - வேதத்தின்கண்ணுள்ள மா வாக்கியப் பொருளை ஐயந் திரிபற உபதேசித்து, அவரை முன் உற்ற தளைகளை போக்கி - அவர்களிடத்து பூர்வ வாசனையாற் பொருந்திய அகங்கார மமகாரக் கிரந்திகளைப் போக்கி, தன் தனிச் சச்சிதாநந்த சொரூபம் ஆக்கு- தன் மய மாகிய(ஒப்பற்ற)சச்சிதாநந்த சொருப மாகச் செய்கின்ற, திருக் களர் வாழ் - திருக் களர் என்னுந் திருத்தலத்தி லெழுந்தருளி யுள்ள, வீர ஞான தேசிக - வீர சேகர ஞான தேசிகனே, நின் கழல் இணையினை - தேவரீருடைய இரண்டு திரு வடிகளையும் நிதம் பணிவாம்-நாடோறும், (முக் கரணங்களாலும்) வழிபாடுசெய்வாம் (எ-று)

(வி-ரை) விவேகாதி நான்கு சாதநங்களையும் அவதி பரியந்த முடைய உத்தமோத்தம அதிகாரி, ஆதியாத்மீக ஆதிபௌதிக ஆதிதெய்வீக மென்னுந் தாபத் திரயாக்கினியால் வெதும்பி, தலை ரோமத்தில் நெருப்புப் பற்றியவன் தடாகத்தை விரும்புவது போன்று, சம்சார தாபம் ஒழிதற் கேது வாகிய சுவாந்ம நீரின்கண்ணே நீராட விரைந்து விதிப்படி ஞானாசாரியனைச் சரண மடைதல் வழக்காறாதலின், "வளர் பந்தம் நீக்க வந்திடுபவர்க்கு." என்றும்; அதி தீவிர பக்குவ முடைய அதிகாரிகட்குக் கருணையே திரு மேனி யாக வுடைய ஞானாசாரியன் கால வரை யறையின்றி சீவப் பிரம்ம ஐக்கிய ஞானோபதேசஞ் செய்து, அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ வீடுபேற்றை

யடைவிப்பன் ஆகையால், "சச்சிதாநந்த சொரூப மாக்கு" என்றுங் கூறுஞர். இவற்றை,

"இவனதி காரி யாஞே னிந்திரி யங்க ளாலும், புவந தெய்வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும், தவனமுன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப், பவமறு ஞாந தீர்த்தம் படிந்திடப் பதறி ஞனே." என வரும் (1-5) கைவல்ய நவநீதத்தாலும், "தெருளு றுங்கலே பலவு ணர்ந்தொரு சிறித லம்பிறவா, வருளு றுங்குரு பரனி ருந்திட மறிய வென்றெழுமே." என வரும் (14-குறி 7) அஞ்ஞு வதைப் பரணியாலு மறிக.

ஈண்டுச் சச்சிதாநந்தம் பிரம்மத்திற்குச் சொரூப இலக்கணமாம்; இலக்கியத்தில் எப் போதும் இருந்து கொண்டு வேறு பிரித்தறிவிப்பது சொரூப இலக்கண மாம்; "செந் நிறத்தோடு கூடியது எக்ஞ தத்தன் வீடு" என்னு மிடத்து செந் நிறத்தோடு கூடிய தன்மை வீட்டின் சொரூபமா யிருத்தலால், எல்லாக் காலத்தும் வீட்டி லிருப்பதாய் மற் றைக் கருமை பொன்மை முதலிய நிறங்களோடு கூடிய வீடுகளி னின்றும் எக்ஞ தத்தன் வீட்டைப் பிரித் தறிவிப் பதா யிருத்தலால், செந் நிறத்தோடு கூடிய தன்மை வீட் டிற்குச் சொருப விலக்கண மாம். அவ் வாறே, "சச்சிதா நந்தப் பிரம்மம் இருக்கின்றது." என்னுங் கருதியிற் கூறிய, சச்சிதாநந்த வடிவத் தன்மை பிரம்மத்தின் சொரூப மா யிருத்தலால், எல்லாக் காலத்திலும் (ஞாந வஞ்ஞாந காலத்திலும்) பிரம்மத்தி லிருப்பதாய் அந்நிய மான அசத் துச் சட துக்க வடிவப் பிரபஞ்சத்தினின்றும் பிரம்மத்தை வேறு பிரித் தறிவிப்பதா யிருத்தலால், சச்சிதாநந்த வடிவத் தன்மை சொரூப இலக்கண மாம். 5

6. **விளர்பரு வத்தான் விவேகமில் லாது**
**விடயத்தில் விடனைப்போற் றிரிந்து,**
**தளர்வினைப் பொருந்திச் சாதநம் பெற்றுச்**
**சாதுசங் கத்தினைச் சாராக்,**

களவினைச் சார்ந்து கனிவிலென் மநதைக்
கனியினுங் கனிவுறுத் துதிருக்,
களரில்வாழ் வீர ஞாநதே சிகநின்
கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

(இ-ள்) விளர் பருவத்தால் - இளமை பருவத்தால் (அறியாமைப் பருவத்தால்), விவேகம் இல்லாது - விவேகாதி சாதந நான்கையும் பெருது, விடயத்தில் வினை போல் திரிந்து-(சந்தாதி) விடயங்களில் தூர்த்தனைப் போல் அலைந்து, தளர்வினை பொருந்தி - (அவ் வலைச்சலால்) முக்கரணங்களும் சோர் வடையப் பெற்று, சாதநம் பெற்று - (விவேகாதி) சாதநங்களை (அவதி வரையிலும்) அடைந்து, சாது சங்கத்தினை சாரா-பெரியோர் கூட்டத்தை யடையாதிருப்பதற்குக் காரண மாகிய, களவினை சார்ந்து - வஞ்சகத்தினை அடைந்து (அதனால்), கனிவில் என் மநதை - பரிபாகம் பெருத அடியே னுடைய மநத்தை, கனியினும் கனிவுறுத்து - கனியைக் காட்டிலும் மிகக் கனிவுறும்படி செய்து, திருக் களரில் வாழ் - திருக் களர் என்னுந் தலத்திலெழுந்தருளி யுள்ள, வீர ஞாந தேசிக - வீர சேகர ஞாந தேசிகனே, நின் கழல் இணையினை - தேவரீரது இரண்டு திருவடித் தாமரைகளையும், திநம் பணிவாம் - நா டோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடுசெய்வாம். எ-று

(வி-ரை) "விளர் பருவம்" என்னும் பண்புத் தொகையை, வெண்மை நிறப் பண்பின் தாற்பரிய மாகிய இழிவு பற்றி வந்த அறியாமை யுடைய பருவம் எனக் கொள்ளினும் அமையும், இதனை, "அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால், இன்மை யரிதே வெளிறு." (51-3) என்னுந் திருக் குறளானும்; "வெளிறிலாக் கேள்வியான்" என்னுந் சிந்தா மணியானும்; "என் வெள்ளறி வுரையிற் குற்றம் ஆயுமா றரிது அன்றேனும்." என்னும் திரு விளையாடற் புராணத்தானும் காண்க. விவேகம் என்ற விடத்து, உபலக்கணத்தால் வைராக்கியம், சட் சம்பத்தி, முமுட்சுத்துவ மாகிய பிற சாதநங்களையுங் கொள்க. விடய மாவன:-

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். மெய், வாய், கண், மூக்கு, செவி யாகிய பொறிகளைந்தும் சுவை முதலாய விடயங்களை நுகரும் பொருட்டு அலையுங்கால், அவை கிட்டாதாயின் துன்புற்றுக், கிட்டினும் அவற்றின் நுகர்ச்சியாற் பூரண திருப்தி யுறாது, மேலும் அவற்றையே நாடித் திரிந்து மொத்துண்ணுதலால், முக் கரணமும் சோர் வடையு மாதலால், "விடயத்தில் விடனைப்போற் றிரிந்து தளர் வினைப் பொருந்தி." என்றும்; சாதந நான்கினையும் அவதி வரைப் பெறுதாருக்கு ஞாநாசாரியன் தெரிசநமும், அவ னுபதேச வாயிலால் வீடு பேறும் கிட்டாதகலின், "சாதநம் பெற்று" என்றும்; சாது சங்கத் தொடர் பில்லார் ஞாந நெறி பெற்று; வீடுபேறுடையா ராகலின், "சாது சங்கத்தினைச் சாரா." என்றும்; அகம் புற மாகிய விரு வகைப் பற்றும் தன் கண்ணோ தோன்றி வருத்தவும், அவற்றின் இன்மை கூறி உலகோரை வஞ்சித்தலாலும், அப் பற்றறல்கள வுடையார் போல, பிறர் அறியாமற் கூடா வொழுக்கத்தை மேற் கொண் டொழுகலாலும், அவ் வொழுக்கத்தையும், அவற்றை மறைக்கின்ற வாற்றையும், ஐம் பெரும் பூதங்களும் அறிந்து தம் முளே பரிகசித்துச் சிரிக்கு மாகலானும், "கவலினைச் சார்ந்து" என்றுங் கூறினர். பரிபாக மின்றிய அசுத்த மநத்தைத் தன் கடைக் கண் பார்வையாற் பரிபாகப்படுத்திச் சுத்த மாக்கிய செயற் கருஞ் செயலை, "கனிவிலென் மநதைக் கனி வுறுத்து." என்றார். இவற்றை, "வஞ்ச மநத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள், ஐந்து மகத்தே நகும்." (28 கூடா வொழுக்கம் 1) என்றும் "செயற் கரிய செய்வார் பெரியார் சிறியார், செயற்கரிய செய்கலா தார்." (3 நீத்தார் பெருமை 6) என்றும் வரும் திருக்குறளாலும்; "கற்போலும் நெஞ்சம் கசிந்துருகக் கருணையினால், நிற்பானைப் போலவென் னெஞ்சினுள்ளே புகுந்தருளி, நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்ஙன், சொற்பால தானவா தோணோக்க மாடாமோ." என்னும் (திருத் தோள் நோக்கம் 4) மணி வாசகத்தாலும் உணர்க.

7. தளர்வுறும் பருவத் தைம்பொறி களுந்தஞ்
சத்தியற் றிருக்கும்போ தடியேன்,
உளர்தலில் லாமல் உன்னையே காண
உளத்தினில் நினைக்குமா றருள்வான்,
வளமுறு பத்தர் நின்சரண் அடைந்து
மதித்தன அருளிட வேதிருக்,
களரில்வாழ் வீர ஞானதே சிகநின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) வளம் உறு பத்தர்-பெருமை பொருந்திய அடியார்கள், நின் சரண் அடைந்து-தேவரீரது திருவடிகளைப் பற்றுக்கோடாகச் சார்ந்து (வழிபட்டு), மதித்தன அருளிடவே-(அவர்கள்) நினைத்த பொருள்களை அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு, திருக் களரில் வாழ்-திருக் களரென்னுந் திருத் தலத்தி லெழுந்தருளி யுள்ள, வீர ஞான தேசிக-வீர சேகர ஞான தேசிகனே, தளர்வுறும் பருவத்து-உடலை விட்டு உயிர் நீங்கும் காலத்து, ஐம்பொறிகளும் தம் சக்தி யற்று இருக்கும் போது-பஞ்சேந்திரியங்களும் தம் ஆற்றல் குன்றித் துன்புறும் போது, அடியேன் உளர்தல் இல்லாமல்-அடியேன் கலக்கம் இன்றி, உன்னையே காண-தேவரீரையே தரிசிக்கவும், உளத்தினில் நினைக்கும் ஆறு அருள்வான்-மநத்தின்கண் தியானிக்கவும் அநுக்கிரகஞ் செய்ய, நின் கழல் இணையினை-தேவரீருடைய இரண்டு திருவடித் தாமரைகளையும், திநம் பணிவாம்-நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) மரண வேதனைக் காலத்து, விக்குள் மேல் வருதல் ஒருதலையாகலானும், வந்த விடத்து முக் கரணங்களுஞ் செய லற்றுக் கிடத்தலானும், "தளர்வுறு பருவத்து" என்றும், அக் கரணங்கள் அங்ஙன் கிடக்குங் கால் காணுதலும் நினைத்தலும் கூடா வாயினும், "காண உளத்தினில் நினைக்கு மாறு." என்றும், விவேகாதி சாதந நான்கும் அவதிபரியந்தம் பெற்று, ஆப்தம், அங்கம், தாநம், சத்பாவம், ஆகிய குரு பணிவிடைகளை வழு வறச் செய்

யும் முமுட்சுக்களும், இக பர லோக போகங்களின்
பொருட்டு வழிபாடு செய்யும் அன்பர்களும், முறையே
நிவிர்த்தி வடிவ முக்தியினையும், பிரவிர்த்தி வடிவ போகங்
களையும், விரும்பிய வண்ணம் பெற, அவற்றை யளிக்குங்
கருணைக் கட லாகலின், "மதித்தன அருள்வதற்கு" என்
றுங் கூறினார். இவற்றை, "பரண மாகிய பெண்டிருஞ்
சுற்றமும் பண்டுதன் கையிற் றந்த, இரண மானவை
கொண்டிட இவரைவிட் டியம்பிடா திவணேகும், மரண
வேதனை யாவரா லறியலாம் மயங்கியையம் புலனந்தக்,
கரணம் யாவையும் கலங்கிட வருந்துயர் கடவுளே அறி
கிற்பான்." என வரும் குறுந் திரட்டினாலும், "வந்திடும்
மரணத் துன்பம் மறித்துரை செய்யப் போமோ, வுந்திமே
லையும் பித்தும் உணர்வொடு பொறிக லங்கி, நந்திடா
விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே, இந்தமா விறப்
பிற் றுன்பம் பவத்துன்பத் தென்ம டங்கே." என வரும்
மெய்ஞ் ஞான விளக்கத்தாலும், "நாச்செற் றுவிக்குண்மேல்
வாராமுன் நல்வினை, மேற்சென்று செய்யப்படும்." (34-
நிலையாமை 5) என்னுந் திருக் குறளானும் உணர்க.

அடைந்து என்னும் வினை யெச்சம் மதித்தன என்
னும் வினையா லணையும் பெயர் கொண்டது 7

8. பிளவிலா வேதப் பொருளினை எவர்க்கும்
பிழையற விளம்புதல் கருதிக்,
கொளவரும் பொருளைக் கரதலா மலகக்
கனியெனக் கொடுக்கக்கொண் டருளால்,
தளர்விலா அநுப வாநந்தம் உற்றவென்
றன்மையார் அறிவரிங் குதிருக்,
களரில்வாழ் வீர ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) திருக் களரில் வாழ் வீர ஞாந தேசிக-திருக்
களர் என்னுந் தலத்தி லெழுந்தருளி யுள்ள வீர சேகர ஞாந
தேசிகனே, பிளவு இலா வேத பொருளினை எவர்க்கும்-

மாறுபாடற்ற மறைப் பொருளை (அதிகாரிகள்) அனைவருக்கும், பிழை அற விளம்புதல் கருதி-ஐயந் திரிபின்றி உபதேசிக்கத் திரு வுளங் கொண்டு, கொளல் அரும் பொருளை-கிடைத்தற்கரிய அம் மறைப் பொருளை, கர தல ஆமலக கனி என-உள்ளங் கை நெல்லிக் கனி போன்று, கொடுக்க கொண்டு-உபதேசிக்க (அடியேன் அதனைப்) பெற்று, அருளால் தளர்வு இலா-(தேவரீரது) திருவருளால் தடையின்றிய, அநுபவ ஆநந்தம் உற்ற-சுபாநுபவப் பேரின்பத்தை யடைந்த, என் தன்மை இங்கு ஆர் அறிவர்-அடியேனுடைய நிலையை இவ்வுலகில் அறிவோர் யாவர், நின் கழல் இணையினை-(அத் தகைய நிலையை அடைவித்த) தேவரீருடைய இரண்டு திரு வடிகளையும், நிகம் பணிவாம்-நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வோம்.

(வி-ரை) இறைவன் தனது தடத்த சொரூப விலக்கணங்களைத் தானே மொழிதல் தற் புகழ்ச்சியாயினும், தன்னின் ஒப்பாரும் மிக்காரும் இன்மையின், தானே மொழியாவிடின் தன் னிலையினைத் தெளிந்து கூறுவாரின்மையின், தன்னுடைய ஆற்றலை உணராதாரிடத்துத் தன்னைப் புகழ்தல் தற்புகழ்ச்சிக் குற்றம் ஆகாமையால், எழுதாக் கிளவியாய் இறைவனது ஐயந் திரிபாகிய பழுதற்ற திரு வாக்கா யுள்ளதுவே வேதம் என்பார், "பிழையிலா வேதம்" என்றும், அறிவிலார் அவ் வேதப் பொருளைத் துணியும் பேரறிவுடைமை யின்றி, விளங்காத் தன்மையால், யானை கண்ட குருடர் போன்றுத் தத் தமக்குத் தோன்றிய வாறே இதுவே பொருள் என்று மயங்கி, நெறிச் செல்வா னொருவன் அந் நெறியைப் புணராது சென்ற தன் பிழையைத் திசை மேல் வைத்துத் திசை மயங்கிற் றென்று கூறுவது போன்று கூறுவர். அவர்களைப் போல் கூறாது, தளரா நிலைமைத் தாகிய அவ் வேதப் பொருளைத் தனது ஞானக் கண்ணுறு உள்ளவா றுணர்ந் துபதேசித்தலின், "பிழையற விளம்புதல் கருதி" என்றும், அவ் வுபதேசத்தால் உளதாகிய திட அபரோக்ஷ ஞானத்தால்

தான் அநுபவாநந்த வெள்ளத் தழுந்தினமையை, "தளர்விலா வநுபவாநந்த முற்ற" வென்றும், அப் பொருளை ஐயந் திரிபற உபதேசித்தமையும் கேட்டமையும் தோன்ற, கரதலாமலகக்கனி யென" என்றும் கூறினர். இதனை, "எழுதாக் கிளவியின் மொழியெனப் படுதலின், நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதல், மன்பெரும் புலமைத் தன்றே யும்பரின், நின்றோ ரன்ன ரின்மையின் நின்னிலை, கூறுய் நீயெனிற் றேறுந ரிலரால், தன்னுடை யாற்றல் முன்னோர் முன்னர்த், தற்புகழ் கிளவியும் தருமென் றம்ம, நிற்புகழ்ந் திசைத்தலை நீயே யாக, இருள்தீர் காட்சிப் பொருடுணிந் துணர்த்தாது, இயங்கா மரபின் இதுவிது பொருளென, மயங்கக் கூறுதல் மாண்புடைத் தன்றே, அளவில் காட்சியை ஐயமின் றுணர்த்தலிற், தளரா நிலைமைத் தென்ப என்றலிற், றன்னுடை மயக்கந் திசைமேல் வைத்துச், சென்னெறி பிழைத்தோன் றிசைமயங் கிற்றென, மொழிகுவ தேர்ப்ப முதுக்குறை வின்மையில், மறைமறை மயங்கிற்று என்று முழுவதும், எய்யா திசைக்குதும் போலும், ஐய நின் றன்மை யளப்பரி தெமக்கே." என வரும் திருவாரூர் நான் மணி மாலையா னுணர்க.

கரதல + ஆமலகம் = கரதலாமலகம், வட மொழித் தீர்க்க சந்தி. 8

9. வளமையார் உளத்தோய் கனவினில் வந்து
வழுக்கிலா "நற்கவி புனைக",
"அளவிலா நூற்கள் ஆக்குக" எனும்உன்
ஆக்ஞையை எளியனுக் கிட்டாய்,
களவிலா நின்தன் அருளினைக் கொண்டு
கனபனூல் இயற்றினன் சீரார்,
களரில்வாழ் வீர ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம் பணிவாம்.

(இ-ள்) சீர் ஆர் களரில் வாழ் வீர ஞாந தேசிக-சிறப்புப் பொருந்திய திருக் களரென்னுந் திருத் தலத்தி லெழுந்

தருளி யுள்ள வீர சேகர ஞான தேசிகனே, வளமையார் உளத்தோய் கனவினில் வந்து- (ஞான)வள மிக்க திரு வுளத்தை யுடையோனே சொப்பனாவஸ்தையிற் றோன்றி, வழுக்கு இலா நல் கவி புனைக - குற்றம் மற்ற இனிய பாக்களைப் பாடுவாயாக, அளவு இலா நூல்கள் ஆக்குக - எண்ணிறந்த நூல்களை இயற்றுவாயாக, என்று உன் ஆஞ்ஞையை - என்று கூறி தேவரீரது கட்டளையை, எளியனுக்கு இட்டாய் - அடியேனுக்குப் பணித்தீர், களவு இலா நின் தன் அருளினைக் கொண்டு - வஞ்சனை யற்ற தேவரீரது திரு வருட் டுணையால். கன பல் நூல் இயற்றினன் - சீர் அமைந்த பல நூல்களை இயற்றினேன், நின் கழல் இணையினை - ( அங்ஙனம் கட்டளையிட்டருளிய ) தேவரீருடைய இரண்டு திரு வடிகளையும், நிகம் பணிவாம் - நாடோறு (மூக் கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். எ-று

(வி-ரை) சிவப் பிரம்ம ஐக்கியா நுசந்தான முடைய வுள மாகலின், "வளமையார் உளம்" என்றும், உலக மக்கள், சரியை கிரியை, யோகம், ஞானம், என்னும் நால்வகை மார்க்கங்களைப் பயின்று வீடுபேறடையவேண்டு மென்னுந் திரு வுளத்தால் சீடரைக் கொண்டு நூல்க ளாக்கும் பொருட்டு ஞானாசாரியன் கனவிலும் நனவிலும் கட்டளையிட் டருளு தல் வழக்கா றாதலின், "ஆக்ஞையை யெளியனுக் கிட்டாய்" என்றும், நிகண்டு கற்று இலக்கியப் பயிற்சி பெற்று, எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, யாகிய ஐந் திலக் கணங்களும் ஐயந் திரி பறக் கற்று, ஆசு, மதுரம், வித்தாரம், சித்திரம், என்னும் நால் வகைக் கவிகளும் இயற்றுங்கால், தோல், இரத்தம், எலும்பு, இறைச்சி, சுக்கிலம் மேதை, மச்சை, ஆகிய எழு வகைத் தாதுக்களாலும் உயிர்க்கு இட மாக வியற்றப்பட்ட வுடம்பு போல, திசைச் சொல் இயற் சொல், திரி சொல், வட சொல், என்னும் நால் வகைச் சொற்களால், நுண்ணிய சிறந்த பொருளுக்கு இட மாக ஐந் திலக்கணங்களும் பொருச் செய்யுள் செய்ய வல்லாரால் செய்யப்படுவது செய்யு ளாக

லின், "வழுக்கிலா நற்கவி" என்றும், உயிர்க் குயிராய்த் தோன்றாத் துணையாய் உள்ளத் தமரும் கள்வ னாகிய இறைவன் அக் கள வகற்றிக் காட்டும் கருணையாளன் ஆகலின், "களவிளா நின் றன் அருளினை." என்றும், இட்ட கட்டளையைச் சிரமேற் றாங்கிச் செய லாற்றத் தொடங்கினும், அச் செயல் குரு வருட் டுணையா லல்லது தம்மா லாகா தென்னும் கருத்தால், அவை யடக்கம் கூறு முகத்தான், "அருளினைக் கொண்டு" என்றும் கூறினார், இவற்றை; "நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப், பேயேன துள்ளப் பிழை பொறுக்கும் பெருமயனைச், சீயேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளும், தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ." (கோத் தும்பி 12) என வரும் மணி வாசகத்தானும், "உள்ளத் திருந்து மொளித்தான்ப ரன்குரவன், கள்ளந்த னைத் தவிர்த்துக் காட்டினன்————வள்ளல், அருவான கோலமோ அக்கோலங் காட்டும், குருவான கோலமோ கூறு." (தத்துவ ராயர் அடங்கன் முறை 183) என்னும் வெண்பாவினானும், "பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல, சொல்லாற் பொருட்கிட னாகவு ணர்வினின், வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்" என வரும் நன் னூற் சூத்திரத்தானும், "அவை யடக்கியலே யரிறபத் தெரியின், வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென், றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே." என வரும் தொல்காப்பியச் சூத்திரத்தானும் உணர்க. 9

10. களகமூர்ந் தேகும் கணபதி என்கோ
கலாபியூர்ந் தேகுவோன் என்கோ,
இளவரம் உவணம் மழவிடை முறையின்
ஏறியூர்ந் திடுபவர் என்கோ,
களபமார் தேவி என்னுகோ நினைநேர்
காணுமா றருள்புரி வாய்சீர்க்,
களரில்வாழ் வீர ஞானதே சிகநின்
கழலிணை யினைத்திறம் பணிவாம்.

(இ-ள்) சீர் களரில் வாழ் வீர ஞான தேசிக- சிறப்புப் பொருந்திய திருக் களரென்னுந் தலத்தில் எழுந்தருளியுள்ள வீர சேகர ஞான தேசிகனே, களகம் ஊர்ந்து வருங் களபதி என்கோ - (நின்னை) பெருச்சாளி வாகனத்தில் எழுந்தருளி வருகின்ற விநாயகன் என்பேனோ, கலாபி ஊர்ந்து வருவோன் என்கோ - மயில் வாகனத் தெழுந்தருளி வருகின்ற முருகன் என்பேனோ, இள வனம் உவணம் மழ விடை - இளமை யுடைய அன்னம், கருடன், இளமை யுடைய எருது ஆகிய வாகனங்களில், முறையின் ஏறி ஊர்ந்திடுபவர் என்கோ- முறையே எழுந்தருளி வருகின்ற பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூவர்களும் என்பேனோ, களபம் ஆர் தேவி என்னுகோ - கலவைச் சாந் தணிந்த உமா தேவி இந்திரை நாமகள் என்பேனோ, நினை நேர் காணும் ஆறு - (இங்ஙன மெண்ணிய வாறு எல்லாக் கடவுளராயு மிருக்கும்) தேவரீரை அடியேன் கண்ணெதிரே காணு மாறு, அருள் புரிவாய் - அநுக்கிரகஞ் செய்வீராக. நின் கழல் இணையினை திநம் பணிவாம்-என்று தேவரீருடைய திரு அடிகள் இரண்டினையும் நாள் தோறும் (முக் கரணங்களாலும்) வழிபடுவோம். எ-று.

(வி-ரை) ஒரே விதையி லிருந்து பல் வேறு வகையான கிளை இலை முதலியவற்றோடு உண்டாகின்ற மரத்தைப் போல, ஒன்றாகிய இறைப் பொருளிடமிருந்து உலகனைத்தும் தோற்றுதலாலும், சத்துவ குணத்தால் அறமும், இராசத குணத்தாற் பொருளும், தாமத குணத்தா லின்பமும் ஆகிய புருடார்த்த நெறிகளில் உயிர்கள் கருமாநுசாரமாகச் சென்று, பின் இரு வினை யொப்பு மல பரிபாகம் பெற்று, வீடுபேறடைவான் வேண்டி, அவ் விறைப் பொருளே, பிரகிருதியின் சத்துவம் இராசதம் தாமத மாகிய குணங்களால், பிரபஞ்சத்தைப் படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத் தொழிற்படுத்துவது பற்றி, அக் குணங்களால் மூவராகிய அரி, அயன், அரன், எனக் கூறப்படுகின்ற காதலாலும், இக் கருத் தறியாதார், "உலகிற் கிறைவன் அரனே,

பிறரல்லர்' அரியே, பிறரல்லர்'' என வாளா வாது கூறித் தெய்வம் இகழ்வர் ஆகலானும், கணபதி முதல் தேவியரீருகச் சொல்லப்பட்ட உபாசநா மூர்த்திகளை யெல்லாம் தமது சொரூபமாகக் கொண்ட இறைப்பொருளே, பக்தர்கட்கும், முமுட்சுக்கட்கும், முறையே அவரவர் விரும்பிய போகங்களையும், (பதமுத்திகளையும்) வீடுபேற்றையும் அடைவிக்குமாகலானும், தடத்த இலக்கணங் கொண்டு அவ்வத் தேவதைத வடிவமாக ஞாந வாசாளை விதந் தோதினார். நாநா வடிவத்தோடு கற்பிக்கப்பட்ட மூர்த்திகளிலே விளங்கும் சச்சிதாநந்த வடிவ சொரூப விலக்கண முடைய அதிட்டாநமாகிய ஞாந வாசாளைத் தியாநித்து, அவனே தானாகக் கருதி, ''நினை நேர் காணுமாறு அருள்புரிவாய்'' என்றார். இவற்றை, ''எப்பொருள் களுக்கும் தோற்றமும் நிலையும் இறுதியுந் தன்கணே யாகி, யொப்பிட வொன்று மின்றியே யொன்று முன்னதா யுரையுணர் விறந்த, வப்பொருள் நேரே யறிந்தபோ தெல்லாப் பொருள்களும் அறிந்ததாமந்த, மெய்ப்பொருடானே யெப்பொருள் களுமாய் விளங்கலால் வேறிலா மையினால்.'' (7-2) என்னும் பிரமகீதையானும், ''படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை'' என்னும் ஆளுடைய பிள்ளையார் திருவாக்கானும் ''ஆதிபிரானும் அணிமணி வண்ணனும், ஆதிக் கமலத் தலர்மிசை யானும், சோதிக்கின் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றென்றார், பேதித் துலகம் பிணங்குகின் றாரே.'' (பாயிரம் 104) என்னுந் திருமந்திரத்தானும், ''குலவுமூவுருவமுங் கொண்டதே.'' என்னும் பாகவதத்தானும், உணர்க. ''தேவி'' என்பது ''மலவிளையர் தாய் வயிறு கறிப்ப'' என்பது போல நின்றது. 10

11. அளவிலா வன்பர் அன்புடன் வந்தே
அடியிணை போற்றிநின் றிறைஞ்ச,
வளமுறு பத்தர் தமைநல்ல வழியில்
வழங்குமா றருள்தரும் இறையாய்க்,
கிளர்தரு தெங்கு மாபலா ஆதி
கெழுமுகா உலவிடும் திருவாய்க்,

**களருறை வீர ஞானதே சிகநின்**
**கழலிணை யிணைநிதம் பணிவாம்**

(இ-ள்) அளவு இலா அன்பர்-எண்ணிறைந்த அடியார்கள், அன்புடன் வந்தே அடியிணை போற்றி-பக்தியோடு வந்து (இரண்டு) திருவடிகளையும் துதித்து, நின்று இறைஞ்ச - (முக் கரணங்களாலும்) ஒரு வழிபட்ட வழிபாடு செய்ய. வளம் உறு பத்தர்தமை - (பக்தி யாகிய) வளம் பொருந்திய அன்பர்களை, நல்ல வழியில் வழங்கு நால்-ஆறு-வேத நெறியின்கண்ணே செலுத்தும்படி, அருள் தரும் இறை ஆய்-அநுக்கிரகஞ் செய்கின்ற ஞானாசாரியனாய், கிளர்தரு தெங்கு மா பலா ஆதி செழும் - செழித்து விளங்கும் தென்னையும் மாவும் பலாவும் முதலியன துலங்கும், உகா உலவிடும்-சோலைகள் சூழ்ந்து விளங்கும், திருவாய் களர் உறை-திருத் தங்கிய திருக்களர் என்னுந் தலத்தி லெழுந்தருளி யுள்ள, வீர ஞான தேசிக-வீர சேகர ஞான தேசிகனே, நின் கழல் இணையினை நிதம் பணிவாம்-தேவரீருடைய இரண்டு திருவடிகளையும் நாடோறும் (முக் கரணங்களாலும்) வழிபாடு செய்வாம். (எ-று)

(வி-ரை) தேனைப் பருகி யின்புறக் கருதும் வண்டுகள், அத் தே னிறைந்த தாமரை மலர்களைத் தேடிக் கண்டடைந்து ஒலித்தல் போல, ஞான மடைந் தின்புறக் கருதும் அன்பர்கள், அந்த ஞானம் நிரம்பிய குருபரன் திருவடியைத் தேடிக் கண் டடைந்து துதித்தல் வழக்கா றாதலின், "அன்பர் அன்புடன் வந்து அடியிணை போற்றி." என்றும், தீவிரதர பக்தி யுடையார் அதன் பய னாகிய ஞான மடையுந் தகுதி யுடையா ராதலின், "வள முறு பத்தர்" என்றும், குருபரன் தன்னைச் சரணாகதி யாக வந் தடைந்த அன்பர்களைத் தீ நெறி யாகிய நாத்திகத்தினின்றும் விலக்கி, நன் னெறி யாகிய ஆத்திகத்தின்கண் செலுத்தும் பேரறி வுடையான் ஆகையாலும், அவ் வன்பர்கட்குத் தெய்வத் தா லாகை, மக்களா லாகை, வந்த துன்பங்களை, முறையே கடவுளரையும், மக்களையும், நோக்கிச் செய்யும் வைதிகச்

சடங்குகளாலும், சாம பேத தான தண்டங்க ளாகிய நால் வகை யுபாயத்தாலும் நீங்கும்படி செய்வித்தலாலும்; தெய் வத்தான் மேல் வருந் துன்பங்களை உற்பாதத்தா னறிந்து அச் சடங்குகளாலும், மக்களான் மேல் வருந் துன்பங்களை அவர் குறாம், இங்கிதம், செயல், முதலியவற்ற லறிந்து அவ் வுபாயங்களாலும் காத்தலாலும், "நல்ல வழியிற் பயிலு மாறு அருள் தரும் இறை." என்றார். இறைவனே அன்பர் கட்கு அநுக்கிரகஞ் செய்யும் வண்ணம் திருமேனி தாங்கி வருவன் ஆகையால், "இறை யாய் வளர்" என்றார். இவற்றை, "உள்ள மலமூன்றும் மாய வகுபெருந்தேன், வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த — வள்ளல்." (பண்டாய நான் மறை 2) என வரும் மணி வாசகத்தாலும், "தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல், வன்மையு ளெல்லாந் தலை." (45 பெரியாரைத் துணைக் கோடல் 4) என்னுந் திருக்குற ளாலும், "சாத்திரத்தை யோதச் சழக்கு மனமாறல், ஊர்த்தகுரு நாதனோடே யுன்" எனவும், "குருவுருவ முன்னக் கோதகன் றிட்டாலி, பரிபூரணத்துட்ப டும்." எனவும் வரும் சித்தாந்த தரிசனத்தாலும், "தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப், பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக், குருபக்தி செய்யவும் குவலயத் தோர்க்குத், தருமுத்தி சார் பூட்டுஞ் சன்மார்க்கந் தானே." (5 1479) என வருந் திரு மந்திரத்தாலும் நோக்குக. அருள்தரு, வளர்தரு, என்ற விடத்துத் "தரு" துணை வினைகள். "தெங்கு மா பலா" என்ற விடங்களில் எண் ணும்மைகள் தொக்கன. இறை யாய் வளர் வீர ஞான தேசிக, எனக் கூட்டுக. 11

12\. மாசிலா மணியே கருணைவா ரிதியே
மறுவிலா வாக்கினூற் றுதிப்பார்க்,
காசிலா முத்தி அன்புடன் அளிப்போய்
அன்பினால் சிந்தனை அடைந்தேன்,
தூசிலா தென்றன் சொருபம தளித்துச்
சுத்தமெய்ஞ் ஞானியாக் குதியால்,
காசிலாக் களர்வாழ் வீரசே கரனின்
கழலிணைக் கருத்தினில் வைப்பாம்.

(இ-ள்) காசு இலா களர் வாழ் வீர சேகர-குற்ற மற்ற திருக் களரென்னுந் திருத் தலத்தி லெழுந்தருளி யுள்ள வீர சேகர ஞான தேசிகனே, மாசு இலா மணியே-குற்ற மற்ற மணி போன்றவனே கருணை வாரிதியே-திருவருட் கடலே, மறுவு இலா வாக்கினால் துதிப்பார்க்கு-குற்ற மற்ற நாவால் துதிக்கின்ற அன்பர்கட்கு, ஆசு இலா முத்தி அன்புடன் அளிப்போய் - துன்ப மின்றிய வீடு பேற்றை அநுக்கிரகஞ் செய்பவனே, நின் தனை-தேவரீரை, அன்பினால் அடைந்தேன்-குரு பக்தியினால் சரணாகதி யாக வந் தடைந்தேன், என் தூசு இலாது நல் சொரூபமது-அடியேனுடைய குற்ற மற்ற இன்ப வடிவத்தை, அளித்து சுத்த மெய் ஞானி ஆக்குதி-கொடுத்து தூய்மை யாகிய மெய்ஞ் ஞானி ஆக்குவீராக, நின் கழலினை கருத்தினில் வைப்பாம் - தேவரீருடைய (இரண்டு) திரு வடிகளையும் மனத்தின்கண் வைத்துத் தியானிப்போம். (எ-று)

(வி-ரை) மணி யென்றது, சுண்டுப் படிக மணி, என்னை? அதுவே தூய்மையும் வெண்மையு மாகிய மாசி லாத் தன்மை யுடையதாகலின், குருபரன் காமம் வெகுளி மயக்க மாகிய முக் குற்றங்களும் இன்மை யாகிய தூய்மை யினையும், சதாசாரத்திற் சரித்தற் கேது வாகிய சுத்த சத்துவாந்தக் கரண மாகிய வெண்மையினையும் உடையனாகலின், அவனுக்கு மாசிலா மணி உவமை யாயிற்று. துன்பத்தின் நீக்கத்தினையும், இன்பத்தின் அடைவினையும், வடிவமாகக் கொண்டமையின், "காசிலா முத்தி" என்றும்; கருவுறல், பிறத்தல், வளர்தல், பருத்தல், குறைதல், அழிதல், ஆகிய அறு வித விகாரங்களும் இன்றியதும், அப்பு, தேயு, வாயு, ஆகிய பூதங்களால் அழி வின்றியதும், பாரமார்த்திக சச்சிதானந்த வடிவ கூடஸ்த பிரம்ம ஐக்கிய சொருப மாயது மாகலின், "தூசிலா சொரூபம்" என்றும், மாயை, மாயா காரியங்கள் பரமார்த்த மாகத் தன்கண் ணின்மை யால், "நற் சொரூபம்." என்றும், அதுவே தனது பரமார்த்த சொருப மாகலின், "என் சொரூபம்" என்றும், திட அப

ரோக்ஷ ஞானமும், மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை யாகிய உயர் குணங்களும் உடைமையால், "சுத்த மெய்ஞ் ஞானி" என்றுங் கூறினர். இவற்றை, "முழுதுமாய் முழுது டைத்தாய்ச் சத்தி முழுது முள்ள மூர்த்திதானே, பழுதிலா தெவ்விடத்தெப் படித்தோன்றும் அவ்விடத்தப் படியே தோன்றும்." (3-2 லீலை கதை 64) எனவும், "அதனுக் கிணையாய்ப் புகலரிதா யகன்று நிறைந்தாழ்ந் தமலமதாய்ச், சதமறாந்தோர் கருடமியல்பு சாற்றாற் கரிதாய்ச் சாந்தமதாய், திகமுற் றசையாக் கடலென்னத் தீப மென்னத் திகழ் கின்ற, ஏதமின்மைப் பிரமத் தொளிதானே முடிவில் பரமா கியசிவன்." (3-3 கற்கடி கதை 2) எனவும்; "அறிவதாய் அறிவே மெய்யா யமலமா யனந்தா யாறிப், பிரிவுறு வரவு போக்கில் பிரமமே யுளதாம்." (4-3-தாம வியாளகடர் கதை 43) எனவும் வரும் ஞான வாசிட்டத்தானும், "நிலவு மோர்விசீன யின்றியே சித்த மாகி, யுலகெ லாநிறைந் துயி ரென வொருமுத லென்ன, விலகு சித்தென வெண்ணறுஞ் சுத்தமா யிருக்கும். உடலில் சோதியை யறிவதற் கென்னரி தம்மா." என்றும் பாகவதத்தானும்; "ஊறுபட வொன் றினுளே பிறத்தல்பிறந் துளவாதல், வேறுபட வளர்தல் வளர்ந் தபலொன்றாய் விளிந்தமைதல், மாறுபடத் தேய் தலற மாய்தலெனா வருகின்ற, ஆறியல்பு முடம்பன்றி யறி வடையா வாதலினால்." (2-23) எனவும், "யானென தென்ப தின்றி யெவ்வகைப் பொருளும் விட்டான்." (2-59) எனவும், "அடங்கு கின்றபு லன்களொ டாசை போய், மடங்கு கின்றம னத்தின னவன்." (4-15) எனவும் வரும் பகவற் கீதையானும் உணர்க. மாசின்மை யும், காசின்மையும், தூசின்மையும், ஆகிய விஷேடணங் கள் இயற்கை யாக நின்றன. கருணை வாரிதி. இரு பெ ரொட்டுப் பண்புத் தொகை இலா வென்பன நான்கும் தகர வீறு குறைந்த பெய ரெச்சங்கள்.

எண் சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய விருத்தம்.

13. விளக்கமிலா நாற்கால்போற் றிரிந்த வென்னை
விரும்பியழைத் தருகிருத்தி வினயத் தாலே,
விளக்கமுற மதிகொடுத்துப் போத மூட்டி
விசுத்தபரப் பிரமமதாய் விளங்க வைத்து,
உளக்கவலை யிலாதிருக்கச் செய்தா யென்றால்
உன்பெருமை தனக்குமள வுரைப்பார் யாரே,
அளப்பறுசீர் வீரசே கரஞான தேசிகநின்
அடியிணைகள் அநவரதம் அநுசந் திப்பாம்.

(இ-ள்) அளப்பு அறு சீர் வீர சேகர ஞான தேசிக-வரையறை செய்ய வொண்ணாத சிறப்பினை யுடைய வீர சேகர ஞான தேசிகனே, விளக்கம் இலா நால் கால் போல் திரிந்த என்னை-பகுத் தறி வின்றிய விலங்கு போல் அலைந்த அடியேனை, விரும்பி அழைத்து அருகு இருத்தி - விருப்புற்று அழைத்து சமீபத்தில் இருக்க வைத்து, வினயத்தால் விளக்கம் உற மதி கொடுத்து-சதாசாரத்தால் அடியேன் விளங்கும்படி அறிவைக் கொடுத்து, போதம் ஊட்டி-ஞானோபதேசஞ் செய்து, விசுத்த பரப் பிரமம் அது ஆய் விளங்க வைத்து-சுத்த மாகிய மேலான பிரம்ம சொரூப மாய் விளங்கும்படி செய்து, உளக் கவலை யிலாது இருக்கச் செய்தாய் என்றால்-மனத்தின் தாபம் நீங்கப் பெற்று நிருவிகற்ப சமாதியின்கண் ணிருக்கும்படி செய்தா யென்றால், உன் பெருமை தனக்கும் அளவு உரைப்பார் யாரே-நினது பெருமைக்கும் அளவு கூறுவார் யாவர், நின் அடி இணைகள் (ஆதலால்)-தேவரீரது இரண்டு திருவடிகளையும், அநவரதம் அநுசந்திப்பாம்-நாடோறும் (முக்கரணங்களாலும்) வழிபாடு செய்வோம். (எ-று)

(வி-ரை) கிடைத்தற் கரிய மானுட வுடல் பெற்றும் அதனா லடையத் தகும் ஆன்ம ஞான சாதனங்களைச் சம்பாதித்து வீடுபே றடையாது உண்பதுவும் உறங்குவதுவும் ஆதியனவற்றையே பொரு ளாகக் கொண்டு திரிகின்ற

விலங்காதியனவற்றைப் போன்று, வாளா திரிந்து வாறுட் களை வீறுட்களாக்கிப் பிறப் பிறப்பையே காணியாட்சி யாகக் கொள்வேன் என்பார், "விளக்கமிலா நாற்கால் போற்றிரிந்த." என்றும், குருபரன், "தான் பெற்ற வின்பம் பெறுக இவ் வையகம்" என்னும் பெருங் கருணை யுடையா ருகலின், மார்ச்சால நியாயங் கொண்டு தானே வலிய வாட்கொண் டருளினமையின், "விரும்பி.........ஊட்டி" என்றும்; தத் பத லக்ஷியார்த்த மாகிய பிரம்மமே துவம் பத லக்ஷியார்த்த மாகிய தா னாகும்படி "தத்துவ மசி" மகா வாக்கிய உபதேசஞ் செய்தமையின், "விசுத்த......... வைத்து" என்றும்; அவ் வுபதேசத்தின் அநந்தரம் அநுப வம் விளைவுமான் கருதி நிருவிகற்ப சமாதியின்கண் நிலை பெறச் செய்தமையின், "துளக்கமிலா.........செய்தாய்" என்றும்; இங்ஙன் கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டைக் கருணையால் மேற் கொண் டருளிய ஞானாசாரியனுக்கு ஒப் பாரும் மிக்காரு மின்மையின், "உன்பெருமை........... யாரே" என்றும்; மும் மூர்த்திகளாலும் அளவிட முடியாச் சிறப்புடை ய ருகலின், "அளப் பறு சீர்" என்றுங் கூறி னர் இவற்றை, "உண்ட வின்பமே மீளவு முண்கின்ற தொருநாட் கண்ட காட்சியே மீளவுங் காண்கின்ற துவந்து, கொண்ட கோலமே மீளவுங் கொள்கின்ற தென்றால், விண்ட மேலவர் நானுரு தொழிவரோ வெறுத்து." (5-3 மாவலி கதை 16) எனவும், "கருதுநிலை வொழித்தொடுங் கிக் கார்வரையின் முழைமிடத்திற் கருங்கற் போல, நிருவி கற்ப சமாதியினுல் எக்கால மசைவற்ற நிலையி னிற்பன், ஒருமைபெறு தியானத்தால் இளைப்பாறு மென்னுடைய வுச்சி மீதே, குருவியினங் கூடமைத்துக் குடியிருப்ப தெக் காலங் குஞ்சியாலே." (5-6. உத்தாலகன் கதை 17) என வும் வரும் ஞான வாசிட்டத்தாலும்; "நானு ரெனவே ஞானசற் குருவை, விருவிடி வித்தகை விளங்கிய பிரமம், நீயே யென்று நிச்சய மாகத், தத்துவ மசிகொடு சாற்றி னன் அன்றே." என்னும் பிரமாநுபவ அகவலாலும்; "எழிலாரு ஞானி புகழென்னை கூற வுயர்வீடி வன்சொல்

வழிசெய், தொழிலாளர் சேர்கை.'' (3) என வரும் சசி வந்த போதத்தானும் உணர்க. 13

14. மாணிக்க வாசகநின் வாசகத்தைத் தான்கேட்ட
வண்செவியாம் மேலுலகம் புகுதலைநான் கண்டு,
நாணிக்கை கூப்பியுன் னற்சீர்கள் கேட்டு
நன்மையுறக் கரவொடுகீழ் நாடுறுமென் மநதைக்,
காணிக்கை யாத்தத்தம் கரஜலத்தாற் கொடுத்தேன்
கவினியநின் னருள்கொடாது மேனோக்கக் கருதாய்.
தோணிக்கொப் பவிருக்கநீ துன்னுகருக் கடலைத்
துணைவேறு தாண்டுதற்குத் தேடுவதொன் றுண்டே

(இ-ள்) கவினிய - மைத்திரி கருணை முதிதை, உபேட்சை யாகிய நால்வகைக் குணங்களாலும் அழகு பொருந்திய, மாணிக்க வாசக நின் வாசகத்தை தான் கேட்ட-மாணிக்கவாசகனே, நினது வாசகத்தைக் கேட்ட, வண் செவி யாம் மேல் உலகம் புகுதலை-வளவிய செவியினை யுடைமையால் (கேட்டவர்) சிவ லோகம் அடைதலை. நான் கண்டு-அடியேன் அறிந்து. நாணி கை கூப்பி உன் நல் சீர்கள் கேட்டு-வெட்க முற்று கைகளைச் சிரமேற் கூப்பி நினது அழகிய சிறப்புக்களைக் கேட்டு, நன்மை உற கரவொடு கீழ் நாடுறும் என் மநதை-வீடுபேறடைவதற் காக, வஞ்சகத்தையும் இழி குணங்களையும் விரும்புகின்ற எனது மனதை, காணிக்கை ஆக கர ஜலத்தால் தத்தம் கொடுத்தேன்-காணிக்கையாக கையின்கண் உள்ள நீரால் தத்தஞ் செய்து கொடுத்தேன், நின் அருள் கொடாது மேல் நோக்க கருதாய் - (ஆகையால்) நினது அருளைக் கொடுக்காது, (அடியேனைப்) பராமுக மாக எண்ணமாட் டாய், நீ தோணிக்கு ஒப்ப இருக்க - தேவரீர் புணைக்கு ஒப்பாக இருக்க, துன்னு கரு கடலை தாண்டுதற்கு-அநாதி யாகப் பொருந்திய பிறவிக் கடலைத் தாண்டுதற்கு, தேடு வது வேறு துணை ஒன்று உண்டே-தேடத் தக்கதாகிய வேறொரு துணை உளதோ? இல்லை. (என்றவாறு.)

(வி-ரை) தானடைந்த சன்மார்க்க சிவஞான நெறியால் உளதாகிய சாயுச்சிய நெறியாகிய வீடுபேற்றை உலக மக்களும் அடையும் பொருட்டுத் திருவுளங் கொண்டு தன்னுள்ளத்திருந்து ஊற்றாக வந்த இறையன்பை உருவாகக் கொண்ட தேனினும், இனிய தீந் தமிழ் மொழியாலாகிய திருவாசகத்தைப் பன்முறையும் கேட்டும் கூறியும் ஆய்ந்தும் அநுபூதி நிலையடைந்த பெரியோர்கள் எண்ணிறந்தோர் ஆகையாலும், திருவாசக வாயிலாக அவர் மணிவாசகன் என நாமம் பெற்றமையாலும், நும் புலன்களிலும் செவியே திருவாசகத்தைக் கேட்டற்கும் விரும்பியடைதற்குங் கருவியாகலானும் "நின்வாசகத்தை நான் கண்டு" என்றும்; அடைதற் கெளியன வாகிய வஞ்சகத்தையும் இராகத் துவேஷம் முதலிய கீழ்மைக் குணங்களையும் விரைவில் அடைதல் மாற்றுவனாகலின், "கரவொடு கீழ் நாடுறும் என் மனனை" என்றும், ஈசவாறு கருந் தாதைச் செந்தாதாக்குவது போன்று, தன் ஞான நோக்கினால் அசுத்த மனத்தையும் சுத்த மனமாக்கி யாட்கொண்டருளுவன் ஆகலின், "அருள் கொண்டு மேல் நோக்கக் கருதாய்" என்றுங் கூறினார்.

திருவாசகத்தின் பெருமையினை:-

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை,
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே,
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே."
என வரும், திருவருட்பிரகாச வள்ளலார் திருவாக்கானும்,

"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய முனிவன் மொழிந்தவா சகமே
வாசக மதுரம் வாய்ச்சியம்
தூசக லக்குல்லேய்த் தோளிடத் தவனே."
என வரும் நால்வர் நான்மணி மாலையானும் உணர்க. 14

திருக் களர் வீர சேகர ஞான தேசிகர் தோத்திரமும்,
பரி மள தீப உரையும் முற்றுப் பெற்றது.
ஆகத் தோத்திரம் 15-க்குச் செய்யுள் (155.)

---

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 31 | நனைவிற் | நனவிற் |
| 7 | 28 | வடிகளைத் | வடிகளை |
| 10 | 3 | தாரணி | தரணி |
| ,, | 14 | வாசிட்டகாலும் | வாசிட்டத்தாலும் |
| ,, | 17 | றுயதற் | றுய்தற் |
| 11 | 10 | பெருத | பொருத |
| 14 | 8 | நின்று | இருந்து |
| ,, | 18 | யொளி | வொளி |
| ,, | 21 | என்றும் | எனவும் |
| ,, | 24 | என் | தன் |
| 16 | 5 | கூடினமையாற் | கூடினமையால் |
| 20 | 16 | (1—57) | (1—5) |
| 21 | 7 | கழிறு | களிறு |
| 23 | 9 | 11 | 1 |
| 24 | 10 | ஓன் | ஓன் |
| ,, | 13 | சொறி | சொரி |
| 25 | 6 | பெற்றேன் | பெற்றான் |
| ,, | 8 | றுதனதோ | றுனதோ |
| 26 | 10 | பழரி | பழனி |
| ,, | ,, | லெழுந்தருனி | லெழுந்தருளி |
| ,, | 18 | புலங்களை | புலன்களை |
| ,, | 21 | புலங்களை | புலன்களை |
| 27 | 17 | கருணைமொழி | கருணைமொழி |
| ,, | 24 | இமைத்தன் | இமைத்ததன் |
| 28 | 22 | ஜங் | ஜுங் |
| 30 | 13 | எழுந்தருலி | எழுந்தருளி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 31 | 15 | சுதர்தாதி | சுமேகாதி |
| ,, | 16 | சுநாத்த லும் | சுதகததாலும் |
| ,, | 19 | ளிரிங்கோதை | ளிர்ங்கோதை |
| ,, | 20 | புகலி ளமுற | புகலி வளமுற |
| ,, | 28 | பதியினை | மதியினை |
| 32 | 1 | பண்புனை | |
| ,, | ,, | சாரங்கள் | சாரங்கள் |
| ,, | 3 | அநுக் சிரகஞ் | அநுக்கிரகஞ் |
| 33 | 9 | ஐய ங் | ஐயங் |
| 34 | 1 | (ஆ-ன்) | (ஆ-ள்) |
| ,, | 2 | வழங்கிய | வாங்கிய |
| ,, | 10 | யாய் | யாம் |
| ,, | 17 | சென்றுத் | சென்று |
| ,, | 22 | மெனபற்றின் | பென்பவற்றின் |
| 35 | 16 | நுவு | இவு |
| ,, | 17 | உபபத்தி | உபபத்தி |
| ,, | 26 | பதுட | பதுஉ |
| 36 | 5 | (ஆ-ன்) | (ஆ-ள்) |
| 38 | 26 | வருக்கித் | வருத்தித் |
| 39 | 7 | இயமைகன் | இயமைக் கண் |
| ,, | 20 | றுன்று | தோன்று |
| ,, | 21 | விட்டலுஞ் | விட்டகலுஞ் |
| ,, | 23 | மாயாதாதி | மாயாதாகி |
| 41 | 13 | ளாகலின | லாகலின் |
| ,, | 17 | அப்பாலாய்புன் | அப்பாலாயுன் |
| ,, | 26 | கற்பினைமாது | கறபினைமாத் |
| 42 | 12 | பதாதா | பாததா |
| ,, | 13 | (இ-ன்) | (இ-ள்) |
| ,, | 20 | கழி பெரு காய | கழி பெருங் காய |
| 43 | 10 | வாசனை | வாசனை |
| ,, | 28 | சிறுகு | சிறுகுழி |
| ,, | 32 | ஞெகிழி | ஞெகிழி |
| 45 | 29 | வம | கவம் |
| 46 | 9 | ஞார்ணைக்கு | ஞுணர்க்கு |
| ,, | 30 | (ஆ-ன்) | (ஆ-ள்) |

| | | | |
|---|---|---|---|
| 47 | 12 | எழுந்திருளி | எழுந்தருளி |
| ,, | 23 | பெறக் | பெறற் |
| 48 | 5 | இன்பக் | இனப |
| ,, | 7 | கூவிவித்தாரையுங் | கூவுவித்தாரையும் |
| ,, | 31 | 12 | 2 |
| 50 | 17 | ழுதலிய | முதலிய |
| 51 | 4 | வரும் | என வரும் |
| ,, | 27 | கலானும் | களானும் |
| ,, | 31 | டொழிஇய | டொழுஇய |
| 52 | 16 | ஞானுங் | ஞானான் |
| 54 | 3 | ஆகையால்னும் | ஆகையானும் |
| ,, | 6 | மயாசத்தி | மாயாசத்தி |
| ,, | 7 | வேறுபட்டாங் | வேறுபாட்டால் |
| ,, | 17 | நிலையில | நிலையில் |
| ,, | 33 | (14 சுணைநிதம் 5) | (குணைநிதம் 5) |
| 55 | 6 | என்னேடி | என்னேட |
| ,, | 21 | ஞஇய | ஞச |
| 59 | 31 | சொல்லுப்படி | சொல்லும்படி |
| 60 | 12 | துதியினைல | துதியினைல் |
| 61 | 12 | மறையீ | மறையு |
| ,, | 13 | தலம்இவார் | தலம்இலார் |
| 67 | 2 | வரிய வந்து | வலிய வந்து |
| ,, | 29 | க்ஷேத்திரத்திற் | க்ஷேத்திரக்திற்கு |
| 70 | 10 | சுருர்குதலாங் | சுருங்குதலால் |
| ,, | 19 | றன்றன் | றன் |
| ,, | 22 | இன்றி | இன்று |
| 71 | 17 | பற்றுகளை | பற்றுக்களை |
| 72 | 21 | அரும | அமரும் |
| 76 | 31 | வின்னேனர் | வின்னேனார் |
| 79 | 27 | மென்மை | மென்மை-வெமன்மை |
| 80 | 7 | வளங்கும் | விளங்கும் |
| 83 | 8 | என | (59) என |
| ,, | 9 | வர | வக்ர |
| ,, | 12 | என | (பதிகம் 9)என |
| 86 | 9 | மாதவின் | மாதவின் |
| ,, | 11 | னிப்பாருக் | ருக் |

| | | | |
|---|---|---|---|
| ,, | 12 | மோலி | மொலி |
| 94 | 20 | மூடிகள் | முடிகள் |
| 95 | 17 | நினையாதருக்கு | நினையாதாருக்கு |
| 97 | 2 | வசுராக | வசுரர்க |
| . | 31 | அளித்தால் | அளித்தலால் |
| 98 | 28 | மோக+கத்தை | மோக்கத்தைப் |
| 99 | 6 | காரணத்தின்கண் | கரணத்தின்கண் |
| ,, | 7 | மோகத்தை | மோக்கத்தைப் |
| ,, | 17 | வருடித் தாமரை | வடித் தாமரை |
| ,, | 25 | வருகாலனும் | வருகலானும் |
| ,, | 29 | விருப்பி | விரும்பி |
| 101 | 9 | மேப்பட்ட | மேம்பட்ட |
| ,, | 19 | பிரணவப் | விளங்குகின்ற [பிரணவப் |
| 102 | 5 | மற்றும் | முனிவர்கட்கும் [மற்றும் |
| 103 | 11 | என்றும் | என்னும் |
| 106 | 2 | நீக்குகின்ற | நீக்கி அருள்கின்ற |
| ,, | 6 | விளகிகுன்ற | விளங்குகின்ற |
| ,, | 14 | வாாது | வாரது |
| ,, | ,, | வழுத்தாரது | வழுத்தாதாரது |
| ,, | 23 | பெற்பதும் | பெற்றதும |
| 110 | 19 | மூடைய | முடைய |
| 111 | 19 | ஒன்றை | பெருமை மிக்க [மடாலயம் ஒன்றை |
| 112 | 1 | பெரியோர்களால் | பெரியோர்கள் |
| ,, | 16 | யிபற்றினன் | யியற்றினன் |
| 130 | 25 | நீக்+மில | நீக்கமில் |
| 132 | 16 | மாதினி | மாத்தனி |
| 135 | 27 | வன்னெஞ்சாக் | வன்னெஞ்சக் |
| 138 | 11 | கருக்துக்கள் | கருத்துக்கள் |
| 141 | 13 | இடரொளித் | இடரொழித் |
| 159 | 28 | ஒழிக்கிடுவோம் | ஒழித்திடுவாம் |
| 168 | 19 | னெங்களபி | னெங்கள்பி |
| ,, | 22 | ரான்பழ | ரான் மறைநான் குங்கல்லாகிழற் |

